

# வயல்காட்டு இசக்கி

## அ.கா. பெருமாள் (பி. 1947)

நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர். களத்தில் சிதறிக்கிடக்கும் வழக்காறுகளைச் சேகரித்து, ஆராய்ந்து எழுதுவது இவர் பணி. இதுவரை 48 புத்தகங்கள் எழுதியுள்ளார். 18 நூல்களைப் பதிப்பித் துள்ளார். தமிழக அரசின் சிறந்த நூலாசிரியர் விருதை இருமுறை பெற்றிருக்கிறார். ‘தென்னிந்தியத் தோல்பாவைக் கூத்து’ (2003), ‘தென்குமரியின் கதை’ (2004). அண்மையில் பிரசுரமான புத்தகங்கள்: ‘நாஞ்சில் நாட்டு மருமக்கள்வழி மான்மியம்’ (பதிப்பு, 2008), ‘தாணுமாலயன் ஆலயம்’ (2009), ‘சடங்கில் கரைந்த கலைகள்’ (2009), ‘இராமன் எத்தனை இராமனடி!’ (2010), ‘அர்ச்சுனனின் தமிழ்க் காதலிகள்’ (2012), ‘தென்குமரிக் கோவில்கள்’ (2014), ‘தமிழர் கலையும் பண்பாடும்’ (2015).

மனைவி : லேகா

மகள் : ரம்யா பகவத்

முகவரி : 471—53B2, ‘ரம்யா’,

தெ.தி. இந்துக் கல்லூரி தெற்கு,

நாகர்கோவில் 629 002.

தொடர்புக்கு : 9442077029

## ஆசிரியரின் பிற காலச்சுவடு வெளியீடுகள்

**நாட்டுப்புறவியல்**

* சடங்கில் கரைந்த கலைகள் (2009)
* இராமன் எத்தனை இராமனடி (2010)
* அர்ச்சுனனின் தமிழ்க் காதலிகள் (2012)

**சமயம்**

* சிவாலய ஓட்டம் (ஒரு பாதயாத்திரையின் ஆன்மீக வரலாறு) (2011)

**பதிப்பு**

* நாஞ்சில் நாட்டு மருமக்கள்வழி மான்மியம் – குறுங்காவியம் (கவிமணி), (2008)
* அய்யா வைகுண்டசாமி அருளிய அகிலத்திரட்டு அம்மானை – ஆன்மீகம் (சகாதேவன் சீடர் இரா. அரிகோபாலன்), (2009)

**வயல்காட்டு இசக்கி** / நாட்டார் வழக்காற்றுக் கட்டுரைகள் / நாட்டுப்புறயியல்/ ஆசிரியர்: அ.கா. பெருமாள் / © அ.கா. பெருமாள் / முதல் பதிப்பு: ஆகஸ்ட் 2015 / இரண்டாம் (குறும்) பதிப்பு: மே 2016 / வெளியீடு: காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்., 669, கே.பி. சாலை, நாகர்கோவில் 629001

**vayalkaaTTu isakki** / Essays on Folklore / Author: A.K. Perumal / © A.K. Perumal / Language: Tamil / First Edition: August 2015/ Second (Short) Edition: May 2016 /Published by Kalachuvadu Publications Pvt.Ltd., 669, K.P.Road, Nagercoil 629001, India / Phone: 91–4652–278525 / e–mail: publications@kalachuvadu.com

ISBN : 978–93–5244–110–5

# பொருளடக்கம்


முகவுரை

**அனுபவம்**

வயல்காட்டு இசக்கி

சின்னக்குட்டியும் கச்சவட முக்கும்

சின்னக்குட்டி பிடித்த பச்சைப்பாம்பு

ஊசியை ஓடித்தால் நிம்மதி கிடைக்கும்

கோமரத்தாடியும் நித்தியானந்தாவும்

சுடுகாட்டில் பட்டிமன்றம்

சிங்களக் காற்றுப் பட்டால் கர்ப்பமாகும்

தங்கள் வருகைக்கு நன்றி

தொடரும் புதையலைத் தோண்டும் ஆசை

குறவனுக்கு மரியாதை

குடிபெயர்ந்த ரங்கநாதன்

தண்டனைச் சிற்பங்கள்

அஞ்சலோட்டம் அவருக்கே ஆச்சு!

சுடலை கேட்ட படைப்புச் சோறு

என்ன ஆச்சு?

**ஆய்வு**

தமிழகப் பழங்குடிகள்

புதுச்சேரி வீரநாயக்கரின் நாட்குறிப்பு (1778 & 1792)

ஆண்டாளும் ஆமுக்த மால்யதவும்

கடல்சார் மக்களின் நாட்டார் வழக்காறுகள்

வேதாளக் கதைப்பாடல்

ஆய்வு நாகரிகம்

**சந்திப்பு**

நேர்காணல்

பண்பாட்டு வரலாறு திரும்ப எழுதப்பட வேண்டும்

# முகவுரை

களஆய்வு பற்றிய 'சுண்ணாம்பு கேட்ட இசக்கி' என்ற என் முந்தைய நூல் போன்றதுதான் 'வயல்காட்டு இசக்கி' என்ற இந்த நூலும். முந்தைய நூல் கதைசொல்லியின் உத்தி முனைப்புடன் இருக்கும். இந்த நூலில் அனுபவத்தின் மீதான பொது விமர்சனமும் உண்டு. அதோடு இதில் ஆய்வுக் கட்டுரைகளும் இரண்டு பேட்டிகளும் உள்ளன.

நூல் நிலையங்களில் புத்தகங்களைப் படித்துச் செய்தி சேகரிப்பது அல்லாமல் வேறு வழிகளில் தகவல்கள் திரட்டுவதைப் பொதுவாகக் களஆய்வு செய்தல் என்று கூறலாம். அறிவியல் ஆய்விலிருந்து சமூகவியல் ஆய்வு வேறுபடும் இடமும் இதுதான். வேதியியல்/இயற்பியல் தொடர்பான பொருட்களுடன் உறவாடுவதல்ல களஆய்வு. எலும்பும் சதையும் கூடிய உயிருடன் உள்ள மனிதர்களுடன் உறவாடுவது; அவர்களின் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ளுவது; அவர்களின் உணர்வுகளை மதிப்பது; இவற்றைப் பதிவு செய்வது. இதுவே நாட்டார் வழக்காற்றியல் ஆய்வின் சிறப்பு.

தென்ஆப்பிரிக்கப் பழங்குடியினர் ஒருவரின் வழிபாடு பற்றிய தகவல்களின் அடிப்படையில் உருவாக்கப்பட்ட கருத்தாக்கம் திருநெல்வேலி மாவட்டம், செங்கோட்டை வட்டம் புளியறை புலைமாடனுக்கு எப்படிப் பொருந்தும் என்று தெரியவில்லை. தமிழகத்தின் மூத்த நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர்கள் இந்தப் பிரச்சனையைப் பேசியிருக்கின்றனர்.

"லூத்தரன் திருச்சபையைச் சார்ந்த பார்த்தலோமியோ சீகன் பால்கு என்னும் ஜெர்மானியர் 'மலபார் (தமிழ்) மக்கள் கடவுளரின் குடிவழிப் பட்டியல்' என்ற நூலை 1713இல் எழுதினார். இது 1867இல் சென்னையில் வெளியிடப்பட்டது. இதுபோல பெர்சிவல், கோவார் எனச் சிலர் நாட்டார் வழக்காறுகளைச் சேகரித்துள்ளனர். இவர்களின் நோக்கம் மதங்களைப் பரப்புதல், இந்தியாவில் ஆங்கில ஆட்சியை நிறுவுதல் ஆகியன" என்கிறார் பேரா. ஆறு இராமநாதன் (நாட்டுப்புறவியல் ஆய்வு முறைகள் 1990 ப. 2)

ஜெர்மனி, பிரான்ஸ், போலந்து, அமெரிக்கா, பிரிட்டன் என மேலை நாடுகளிலிருந்து தமிழகம் வந்து நாட்டார் வழக்காறுகளைச் சேகரித்தவர்களில் சிலரின் ஆய்வு முடிவுகளைப் பரிசீலனை செய்ய வேண்டிய காலத்தில் இருக்கிறோம். மாதிரிக்கு பிளாக்பேர்னின் ஆராய்ச்சி முடிவுகளைப் பார்ப்போம்.

Stuart Blackburn என்ற அமெரிக்கர் கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் பதிவு செய்த பிஎச். டி ஆய்வு நாஞ்சில் நாட்டு வில்லிசைப் பாடல்கள் பற்றியது. (Performance as Paradiym The Tamil Bowsong Tradition (Ph.D. Thesis) University of California: Berkely USA 1980) இதே விஷயத்தை இவர் 'Singing of Birth and Death' என்ற தலைப்பில் நூல் வடிவிலும் வெளியிட்டிருக்கிறார். (University of Pennsylvania Press, Philadelphia, USA, 1988). பிளாக்பேர்ன் இவ்விரு நூல்களிலும் குறிப்பிடப்படும் சில செய்திகளின் முடிவுகளைப் பார்ப்போம்.

கன்னியாகுமரி மாவட்டக் கோவில்களை வில்லிசை நிகழும் கோவில் / நிகழாத கோவில் எனப் பகுக்கிறார் பிளாக்பேர்ன் (1980 p. 27). பெருநெறிக் கோவில்களையும் (வைதீகக்கோவில்கள்) நாட்டார் வழிபாட்டுக் கோவில்களையும் பாகுபாடு செய்ய வில்லிசை நிகழ்வு அளவுகோலல்ல. கலைகள்தாம் கோவில்களைச் சார்ந்து நிற்கும். கோவில்களோ / வழிபாடோ கோவில்களைச் சாராமலும் இருக்கலாம்.

கன்னியாகுமரி மாவட்டம் சுசீந்திரம் சிவன் கோவிலின் மூலவரின் பெயர் தாணுமாலயன் என்பது ஆகும். தாணு சிவனையும் மால் விஷ்ணுவையும் அயன் பிரம்மாவையும் குறிக்கும். இதற்குத் தலபுராணக் கதை உண்டு. இப்பெயர் தாங்கிய கதையும் / தலபுராணமும் தமிழகத்தில் வேறு கோவில்களுக்கும் உண்டு. பிளாக்பேர்ன், அயன் என்பதை அய்யன் / சாஸ்தா என்கிறார். (1988 p. 246) இது தவறான கருத்து.

நாஞ்சில் நாட்டுக் கோவில்கள் ஒவ்வொன்றிலும் 21 தெய்வங்கள் உள்ளன. மக்கள் இவற்றை அடையாளம் காட்டுகின்றனர் என்கிறார் பிளாக்பேர்ன் (1988 p. 229). இருபத்தொரு தெய்வங்கள் என பிளாக்பேர்ன் குறிப்பிடுவது வாதைகளை, 'வாதைகள் கதை' (மன்னராஜா கதை) என்ற கதைப்பாடல்

உண்டு. வாதைகள் என்பது பேய்களைக் குறிப்பது. இதற்கென்று தனிக் கோவில் மூன்று அளவில்தாம் உள்ளன. கன்னியாகுமரி மாவட்ட நாட்டார் தெய்வக் கோவில்கள் எல்லாவற்றிலும் வாதைகளுக்கு இடம் உண்டு என்பது தவறான தகவல்.

பிளாக்பேர்ன் "வில்லுப்பாட்டுக்கு மூலபாடல் முக்கியம். அதனால் கதை சொல்லல், சடங்கு, வழிபாடு ஒட்டிய நிகழ்ச்சிகள் எல்லாம் மூலபாடத்தை மையமாகக் கொண்டு இயங்குகின்றன. மூலப்பாடல் கதையை நிகழ்த்தும்போது அதற்குத் தகுந்தவாறு கோவில் சடங்கு நிகழ்ச்சிகள் நிகழும்" என்கிறார். (1980 p. 19)

இது பொருந்தாத கருத்து. இக்கருத்தைப் பொதுமைப்படுத்த முடியாது. குறிப்பிட்ட சில கோவில்களுக்கு (பிச்சகாலன் கோவில்) மட்டுமே இது பொருந்தும்.

சமூக வில்லுப்பாட்டுகளில் மக்கள்வழி, மருமக்கள்வழிப் பாகுபாட்டால் மணஉறவுகள் மறுக்கப்பட்டிருக்கின்றன என்கிறார் பிளாக்பேர்ன் (1980 p. 5). இதற்கு உதாரணமாகத் தோட்டுக்காரி அம்மன் கதையைக் காட்டுகிறார். இது முற்றிலும் தவறான கருத்து. ஆறுமுகப் பெருமாள் நாடார் பதிப்பித்த (1981) இக் கதைப்பாடலில் இப்படி ஒரு குறிப்பு இல்லை.

சுசீந்திரம் தலபுராணம் தொடர்பான செய்திகள் பாலுணர்வு முரண்பாட்டைக் காட்டுகின்றன. இதுவும் தமிழர் மலையாளி முரண்பாடும் வில்லுப்பாடல்களில் படிந்துள்ளன என்கிறார் பிளாக்பேர்ன் (1980 p. 74). இது கொஞ்சமும் பொருந்தாத கருத்து. மலையாள வில்லுப்பாடல்களில்கூட இந்த முரண்பாடு இல்லை.

பிளாக்பேர்ன் என்.எஸ். கிருஷ்ணனின் 'காந்தி மகான் கதைதான்' முதலில் (1950) அச்சில் வந்த வில்லுப்பாட்டு என்கிறார் (1980 p. 115). அதோடு வில்லிசைப் பனுவல் ஒரு அண்ணாவியிடமிருந்து இன்னொரு அண்ணாவிக்கு வருவது; இதன் கடைசித் தலைமுறையினர் ஆறுமுகப்பெருமாள் நாடார் என்கிறார் (1980 p. 27). இவர் மட்டுமே வில்லிசைப்பாடல் புனைபவரில்

உயிரோடு இருப்பவர் என்கிறார் (1980 p. 109) இக் கருத்துக்கள் பொருத்தமற்றவை.

நாகர்கோவில் ஜே.எ. ஹாமஸ் அச்சகத்தின்வழி 1933இல் முத்தாரம்மன் விற்பாட்டு உட்பட நான்கு பாடல்கள் வந்துள்ளன. இவற்றின் விற்பனை உரிமையைக் கிருஷ்ணாபுரம் மு. பெருமாள் நாடார் வைத்திருந்தார். 1943இல் திருவிதாங்கூர் அரசு 'திவான் வெற்றி' என்ற வில்லுப்பாட்டை வெளியிட்டிருக்கிறது. இப்படி நிறைய உதாரணம் காட்ட முடியும். வில்லுப்பாட்டு எழுதுவதற்குக் கடைசி வாரிசு ஆறுமுகப் பெருமாள் நாடார் என்பது தவறான தகவல். இதை நான் ஒருமுறை கன்னியாகுமரி மாவட்ட கிராமியக் கலைஞர்களின் சங்கத்தில் சொன்னபோது சிலர் சிரித்தார்கள். நம் சங்கத்திலேயே வில்லுப்பாட்டு எழுத பத்துபேர் தேறுவார்கள் என்றார் ஒருவர்.

இப்படியாக வேறு சில தகவல்களும் தவறாகவும் முரணாகவும் உள்ளன. இந்தச் செய்தியை நான் சொல்வதற்குக் காரணம் ஐரோப்பியரின் தமிழக நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகளைக் கொஞ்சம் மறுபரிசீலனை செய்யலாம் என்பதற்குத்தான்.

***

என் முந்தைய நூலான 'சுண்ணாம்பு கேட்ட இசக்கி'யில் களஆய்வு அனுபவம் ஆய்வாளனைப் பக்குவப்படுத்தும் என்று எழுதியிருந்தேன். இப்போது அது மிகச்சரியானது என்று தோன்றுகிறது. என் முன்னோடி ஆய்வாளர்களான நா. வானமாமலை, எஸ்.டி. லூர்து, அருள்தந்தை ஜெயபதி என சிலர் இதற்கு உதாரணங்கள்.

ஆய்வாளனின் பயணம் தன்னையும் மக்களையும் புரிந்து கொள்ளுவதற்குரிய அனுபவத்தைக் கொடுப்பது. ஆய்வாளனின் தனிப்பட்ட ஆணவம், பதவி / படிப்பு /அந்தஸ்து குறித்த தவறான நம்பிக்கைகள் களஆய்வில் கழன்றுவிட வாய்ப்புகள் அதிகம். இதனால் ஆய்வாளனின் தனி ஆளுமை சுயத்தோடு வாழ வழிவகுக்கும்.

சமூகத்தின்மேல் கரிசனம், விருப்பு வெறுப்பற்ற தன்மை உருவாகக் களஆய்வுப் பயணம் உதவி செய்யும். நான் சந்தித்த குமரேசன் என்ற தகவலாளி அடிக்கடி 'படிச்சவனுகளுக்கு விவரம் இல்லை' என்பார். அவர் விவசாயி. நல்ல பழுத்த அனுபவம் உடையவர். அதன் காரணமாக வேளாண் படிப்பு படித்த அதிகாரிகளிடம் அவருக்கு அவநம்பிக்கை இருந்தது.

ஒருமுறை காணிக்காரர் என்ற பழங்குடியினரின் வழிபாட்டு சடங்கு / விழா பற்றி செய்திகள் சேகரிக்கச் சென்றேன். அந்த இனத்தினர், கன்னியாகுமரி மாவட்ட கேரள எல்லையில் உள்ள பேச்சிப்பாறை அணை நீர்ப்பரப்பிற்கு அப்பால் மலையடிவாரத்தில் வாழ்கின்றனர். அரசு விவசாய அதிகாரி ஒருவர் அந்த மக்களுக்குப் பயிர் பூச்சிகளை அழிக்கப் பயிற்சி கொடுக்கப் போவதாகச் சொன்னார். நானும் அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டேன்.

பூச்சிகளை அழிப்பது பற்றிய உயர் படிப்பை அமெரிக்காவில் முடித்த இளைஞர் ஒருவரும் இருந்தார். பயிற்சிக்கு அந்த இன மக்கள் 50 அளவில் ஆணும் பெண்ணுமாகக் கூடினர். பயிற்சி முடிவில் சாப்பாடு, லுங்கி, பெண்களுக்கான உடை உண்டு என்ற செய்தி ஏற்கெனவே சொல்லப்பட்டிருந்தாலும் கூட்டம் குறைவாகவே இருந்தது.

பேராசிரியர் புளி, மா மரங்களில் அப்போது அங்கே அதிகமாகப் பரவிக்கொண்டிருந்த முசிறு (சிவப்பு நிறமுள்ள எறும்பு Formica Smaragdina) என்ற பூச்சியை அழிக்கத் தெளிக்க வேண்டிய மருந்து பற்றி விரிவாகப் பேசினார். அவர் தன் முன்னே இருந்த காணிக்காரர்களை இறுதியாண்டு விவசாயப் பட்டப்படிப்பு மாணவர்களாக நினைத்துப் பாடம் நடத்தியதாக எனக்குத் தோன்றியது.

எல்லாம் முடிந்தபின் சுவையான சிக்கன் பிரியாணி, சிக்கன் சாப்ஸ் பரிமாறப்பட்டபோது என் அருகிலிருந்த வயதான காணிக் காரர் ஒருவரிடம் முசிறை நீங்கள் எப்படி அழிப்பீர்கள் என்று கேட்டேன். அவர் "அது எளிதானது; முசிறுக்குப் பிடிக்காத செவினி என்ற எறும்பு உண்டு; எறும்பைப் பிடித்து முசிறு இருக்க இடத்துல விடணும். ஒரு மணிநேரத்துல முசிறு கூட்டம் ஓடிவிடும். செவினியைப் பிடிப்பதும் எளிது. ஒரு சிரட்டையில் (கொட்டாங்கச்சி)

கருப்புகட்டிப் பாகை ஊத்தணும்; அவை இருக்கும் மரத்து அடியில் சிரட்டய வைக்கணும். செவினி எறும்புகள் சிரட்டயில வந்து குவியும். அப்படியே முசிறு இருக்கும் மரத்தில் வைக்க வேண்டியதுதான்" என்றார்.

இதுபோன்ற தொழில்நுட்ப அறிவு பெரும் அளவில் பதிவு செய்யப்படவில்லை. பதிவு செய்யப்பட்டிருந்தாலும் தொழில் கல்விசார் நிறுவனங்கள் அவற்றை ஏற்றுக்கொள்ளுவார்களா என்று தெரியவில்லை.

***

கன்னியாகுமரி மாவட்ட கிராமியக் கலைஞர்கள் முன்னேற்றச் சங்கம் உருவான காலத்திலிருந்து (1986) இன்றுவரை அதன் ஆலோசகராக இருக்கிறேன். இந்தச் சங்கக் கலைஞர்களிடம் அடிக்கடி உரையாடும்போது கிடைத்த தகவல்கள் பல. அவற்றை எழுத்தில் கொண்டுவர முடியாது. குறிப்பாக கரகாட்டக் கலைஞர்களின் கலை நிகழ்த்தும் அனுபவம், பேச்சு எல்லாம் என்னைப் பல காலகட்டங்களில் நிலைகுலையச் செய்திருக்கிறது.

திருநெல்வேலி மாவட்டம் — தாமிரபரணி ஆற்றங்கரை நாட்டார் கோவில் விழாவில் ஆட வந்த கரகாட்டக்காரி ஒருத்தியை விழா முடிந்த இரவு மூன்று மணிக்குச் சந்தித்தேன். அது மறக்க முடியாத அனுபவம். அந்த ஆட்டக்காரி இளைஞர்களுக்காகச் சிறப்பாக ஆடுபவள். இந்தக் குழு நிகழ்ச்சி ஊரின் ஒதுக்குப்புறத்தில் / ஆற்றங்கரையில் நிகழும்.

அந்த நிகழ்வில் அவள் உடல் உறுப்புகளை அசைத்து ஆடிய விதம், இரட்டை அர்த்தத்தில் பாடிய பாடல்கள், உரையாடல்கள், கதைகள் ஆகியவற்றைப் பதிவு செய்தேன். கை கால்கள்வழி காட்டிய சைகைகள் மூலம் வெளிப்படுத்திய உடலுறவுக் காட்சிகளுக்கு மொழி தேவையில்லை என்பதை அவள் காட்டினாள். இவற்றிலும் வட்டாரச் சார்பு உண்டு. இதை எழுத்தில் கொண்டுவர முடியாது.

நான் அவளையும் துணைக்கு ஆடிய சிறுமியையும் சந்தித்துப் பேசியபோது அவள் வித்தியாசமான ஒரு பெண்ணாக இருந்தாள். தான் வெளிப்படுத்தியவை

எல்லாம் தொழிலின் ஒரு பகுதி என்றாள். அவள் காட்டிய சைகைகள், பாடல், உரையாடல்கள் எல்லாம் மூத்த கலைஞர்கள் சொல்லித் தந்தவை என்றாள். நான் மெதுவாக அவளது கணவனைப் பற்றிக் கேட்டேன். அவள் திரும்பிக் கையைக் காட்டினாள். அவள் குழுவில் ஆடிய கோமாளி அவன். அவள் சொன்ன பல விஷயங்களை இன்றைய நிலையில் எழுத்தில் கொண்டுவர வேண்டாம் என்று தோன்றுகிறது.

***

'வயல்காட்டு இசக்கி' என்ற இந்த நூல் முழுதும் கள ஆய்வு சார்ந்தது மட்டுமல்ல. இத்தொகுப்பில் அனுபவம், ஆய்வு, சந்திப்பு என்னும் பகுப்பில் 23 கட்டுரைகள் உள்ளன. அனுபவம் தலைப்பில் உள்ள 15 கட்டுரைகளும் நாட்டார் வழக்காறுகள் தொடர்பானவை மட்டுமல்ல. கல்வெட்டு, சிற்பம் தொடர்பானவையும்கூட. கதையாடல் மரபு தொடருகிறது என்பதைக் குறிப்பிடவே 'என்ன ஆச்சு' கட்டுரையையும் இதில் சேர்த்திருக்கிறேன்.

ஆய்வு என்னும் தலைப்பில் உள்ள ஆறு கட்டுரைகளில் 'கடல்சார் மக்களின் நாட்டார் வழக்காறுகள்' நான் மூன்று மாதங்களாகக் கன்னியாகுமரி கடற்கரைக் கிராமங்களில் நடத்திய களஆய்வுச் செய்திகளின் அடிப்படையில் எழுதப்பட்டது. 2004 டிசம்பர் 26ஆம் தேதி தமிழகத்தையே உலுக்கிய சுனாமி நிகழ்விற்குப் பிறகு கடற்கரை மக்களைப் பற்றி பல்வேறு செய்திகள் திரட்டப்பட்டன. நாகர்கோவில் கார்மல் மேல்நிலைப் பள்ளியிலிருந்த இயேசு சபை அருள்தந்தையர்கள் சுனாமிப் பணியில் முழுதுமாக ஈடுபட்டனர். அருள்தந்தை ஜெயபதி இதன் பொறுப்பை ஏற்றார். சுனாமிப் பணியில் நானும் பங்கு கொண்டேன். அப்போது கடல்வாழ் மக்கள் குறித்த புரிதலுக்காகப் பல ஆய்வுக் கூட்டங்கள் நடந்தன. கருத்தரங்கங்களுக்கு உதவி செய்தேன். 2005 மே 14 – 15இல் நடந்த ஒரு கருத்தரங்கில் கடல்சார் மக்களின் நாட்டார் வழக்காறுகள் பற்றி நான் பேசியபோது விவாதம் சூடு பிடித்தது. பேரா. ஆ. சிவசுப்பிரமணியமும்

பேரா. ஞா. ஸ்டீபனும் விரிவாக எதிர்வினையாற்றினார்கள். இவை என் கட்டுரைக்குத் தொடர்புடையன. ஆகையால் இந்நூலில் அப்படியே

தந்திருக்கிறேன்.

இந்நூலில் உள்ள ஆய்வுக் கட்டுரைகளும் நாட்டார் வழக்காற்றுச் செய்திகள் தொடர்பானவையால் இவை இந்நூலில் இணைக்கப்பட்டன.

நான் சேகரித்த செய்திகளை எல்லாம் இந்நூலில் தரவில்லை. பல விஷயங்களைப் பக்கங்களின் எண்ணிக்கை காரணம் என்பதைவிட இன்றைய சூழ்நிலை கருதித் தரவில்லை. பெருமாள்முருகனின் அனுபவம் பலபேருக்குப் பாடமாகிவிட்டது.நானும் பெ.மு. போல் லேசான சூடுபட்டவன்.

தமிழகத் தென் மாவட்டங்களில் வழக்கில் உள்ள 'அய்யாவழி' என்னும் வழிபாட்டு மரபு தொடர்பான அகிலத்திரட்டு பாடல்களைக் காலச்சுவடு பதிப்பகம்வழி பதிப்பித்தேன் (2009); இப்பதிப்பிற்காக நான் எடுத்துக்கொண்ட சிரமம், உழைப்பு, பதிப்பகம் மேற்கொண்ட முயற்சி எல்லாம் கணக்கெடுக்கப்படாமல் அப்பதிப்பு நிராகரிக்கப்பட்டது. அந்த நூலின்மேல் எனக்கிருந்த அபரிமிதமான மரியாதை மட்டும்தான் என்னை அந்நூலை வெளியிடத் தூண்டிற்று. ஆனால் நூல் வெளிவந்த சில நாட்களிலேயே அதற்கு எதிர்ப்பு கிளம்பியது; நான் மட்டுமல்ல, பதிப்பகம்கூட இதனால் பாதிக்கப்பட்டது. இது போன்ற நிலை களஆய்வில் சேகரித்த செய்திகளை எல்லாம் ஆய்வுக் கண்ணோட்டத்தில்கூட ஆதாரச் சான்றாகக் கொடுக்க முடியாததாகிவிட்டது.

இந்நூலில் உள்ள 'சின்னக்குட்டி பிடித்த பச்சைப்பாம்பு', 'சின்னக்குட்டியும் கச்சவட முக்கும்' என்ற இரு கட்டுரைகளும் பெருமளவில் தணிக்கை செய்துதான் வெளியிடப்படுகிறது. நாஞ்சில் நாட்டுக் கோவில்களில் பணிபுரிந்த தேவதாசிகளைப் பற்றி எழுதப்பட்ட ஒரு நூல் அவர்களைப் பற்றிய தவறான / முரணான கருத்துக்களைக் கூறுகிறது. அண்மையில் வெளிவந்த இந்த நூலில் கூறப்பட்டதற்கு முரணான தரவுகள் எனக்குக் கிடைத்தன. இதன் வெளிப்பாடு இவ்விரு கட்டுரைகளும்.

பெருமாள்முருகன் நிகழ்வு படைப்பாளிகளைப் பாதித்ததோ இல்லையோ நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர்களை மிகவும் பாதித்துவிட்டது. ஆய்வுக்

கண்ணோட்டத்தில் கருத்தாக்கத்தை உருவாக்கும் ஆதாரங்களைக் கூறமுடியாமல் ஆகிவிட்டது. ஐரோப்பிய நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர்கள் தமிழகத்தில் களஆய்வில் சேகரித்த செய்திகளை அப்படியே எழுதியதை இங்குள்ள ஆய்வாளர்கள் மேற்கோளாகக்கூடக் காட்ட முடியாது என்ற சூழ்நிலை உருவாகிவிட்டது.

சில கோவில்களில் சாமியாடிக்காக வில்லுப் பாட்டுக்காரர் வரத்துப்பாட்டு பாடும்போது நையாண்டி மேளக்காரர்களிடம் அடக்கிவாசி என்பார் சாமியாடி. நையாண்டி மேளம் உச்சமாய் ஒலித்தால் வில்லுப்பாட்டின் வரத்துப்பாடல் கேட்காது. அதனால் அடக்கி வாசிக்க வேண்டும். அடக்கி வாசித்தல் என்பது

நாஞ்சில்நாட்டு வழக்காறுகளுள் ஒன்று.

நான் இந்த நூலில் அடக்கித்தான் வாசித்திருக்கிறேன்.

***

களஆய்வில் தகவலாளிகளாக உடன்வந்து உதவியவர்கள் பலர். அவர்களின் பெயர்களைத் தனித்தனியாக பட்டியல் இட்டால் நீண்டுவிடும். கடந்த 35 ஆண்டுகளாக நாட்டார் வழக்காற்றுத் துறையில் ஈடுபாட்டுடன் களஆய்வு செய்து வருகிறேன். ஆரம்பகாலத்தில் ஜாதி தொடர்பான விஷயங்களை அட்டகாசமாகப் பேசியவர்களை இப்போது காணமுடியவில்லை. கண்டாலும் அடக்கி வாசிக்கிறார்கள்.

என் ஆய்வுக்கு எப்போதும் உதவிக்கொண்டிருப்பவர்கள் நாகர்கோவில் தெ.தி. இந்துக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் தெ.வே. ஜெகதீசன்; இக்கல்லூரி நூலகர் முனைவர் சி. மாணிக்கவாசகம்; செம்பவளம் ஆய்வுத்தளம் தலைவர் செந்தீ நடராசன்.

என் கட்டுரைகளை வெளியிட்ட பத்திரிகை, இதழ் ஆசிரியர்கள். என் முந்தைய நூல்களைப் படித்து கருத்துப் பரிமாறிய என் தம்பிகள் அ. ராதாகிருஷ்ணன் (கனரா வங்கி), ப. கோலப்பன் (The Hindu).

எப்போதும் என்னை அங்கீகரித்து ஆலோசனை வழங்கும் எழுத்தாளர் ஜெயமோகன்; இந்நூலை வெளியிடும் காலச்சுவடு கண்ணன்.

அச்சுப்பிழை திருத்திய எம்.எஸ். அண்ணாச்சி, சேலம் நடராஜன், அட்டைப்படம் தந்துதவிய செல்வதரன், என் மோசமான கையெழுத்துகளைப் பொறுமையுடன் தட்டச்சு செய்த வள்ளியூர் வி. பெருமாள், சுபா, மஞ்சு ஆகிய எல்லோருக்கும் என் அன்பான வணக்கங்களும் நன்றியும்.

இந்த நூலை என் நீண்ட நாளைய நண்பரும் ஆரம்ப காலத்திலேயே என் புத்தகங்களைத் தரமாக அச்சிட்டு வெளியிட்டவருமான 'தமிழினி' பதிப்பகம் வசந்தகுமாருக்குச் சமர்ப்பிக்கிறேன்.

**அ.கா. பெருமாள்**

நாகர்கோவில்
19.06.2015

# வயல்காட்டு இசக்கி

அந்த ராப்பாடி கிறிஸ்துவ சமயத்தின் உட்பிரிவுகளில் ஒன்றான இரட்சண்ய சேனையில் (Salvation Army) சேர்ந்துவிட்டார் என்று தெரிந்த பின்புதான் தெரிசனங்கோப்பிலிருந்து இரு சக்கர வாகனத்தில் அவரது மலையடிவாரக் கிராமத்துக்குச் சென்றேன். அன்று களஆய்வு செய்ய வேண்டும் என்ற திட்டமெல்லாம் கிடையாது. தெரிசனங்கோப்பு சாரதா ஆயுர்வேத மையத்தில் மருத்துவர் மகாதேவ அய்யரைப் பார்க்க வேண்டும் என்று ஜெகதீசன் சொன்னபோது துணைக்கு நான் போனேன். போன இடத்தில் சாலையோரத் தேநீர்க் கடையில் இட்டளி அளவான காரவடையை மெதுவாகத் தின்றுகொண்டிருந்தபோது அருமநல்லூர் என்னும் மலையடிவார ஊரை அடுத்த ஒரு குக்கிராமத்தில் ராப்பாடி ஒருவர் இருக்கிறார் என்ற செய்தி கிடைத்தது. எப்போதும் தயாராக இருக்கும் டைரி, பென் தவிர ஒலிப்பதிவுப் பெட்டி, புகைப்படக் கருவி எவையும் இல்லை. ஜெகதீசன் உற்சாகமாக இருந்தான். பத்து கிலோமீட்டர் தொலைவுதான் போகலாம் என்றான்.

நாங்கள் ராப்பாடியின் ஊரை அடையும்போது நேரம் இருட்ட ஆரம்பித்துவிட்டது. கார்த்திகை மாதப் பனி அந்த நேரத்திலும் பொழிந்தது. அந்த ஊரின் சிறப்பே அதுதான். பச்சைப் பசேலென்ற மரங்கள், செடிகள், வயல்வெளிகள், குளங்கள், வாய்க்கால்கள். ஆளரவம் இல்லாத சூழ்நிலை.

நாங்கள் ராப்பாடியின் வீட்டைக் கண்டுபிடித்து அவரிடம் பேசுவதற்குத் தயாராகும் முன்பே, அவரைப் பற்றிய துண்டுதுண்டான செய்திகளைத் தேநீர்க் கடையில் சேகரித்துவிட்டோம். அவருக்கு வயது 84 ஆகிவிட்டது. மதம் மாறிய பின்பும் செல்லப்பன் என்னும் பெயரை அவர் மாற்றவில்லை.

செல்லப்பன் நல்ல திடகாத்திரத்துடன் இருந்தார். அவரால் நன்றாகப் பேசமுடிந்தது. நிறைய நேரம் யோசித்துத்தான் பேசினார். வயது ஏறும்போது

சில தகவல்களைத் தந்திரமாக மறைத்துப் பேசவேண்டிய கட்டாயம் அவரிடம் இல்லை.

வீட்டுக்கு வெளியே கயிற்றுக் கட்டிலில் நானும் ஜெகதீசனும் அமர்ந்தோம். செல்லப்பன் வீட்டு முன்திண்ணையில் குந்தி உட்கார்ந்தார்.

ஒடுக்கப்பட்ட மக்களுக்கு மட்டுமே துணி வெளுத்த வண்ணானை நாஞ்சில்நாட்டுப் பகுதியில் புரத வண்ணான் என்று சொல்லுவார்கள். அதுபோலக் காவேரி நாவிதர் ஒடுக்கப்பட்டவர்களுக்குச் சவரம் செய்தவர்கள். எப்போதுமே உயர்வர்க்கம் சார்ந்த வண்ணார்களுக்கும் நாவிதர்களுக்கும் பிடிக்காதவர்களாய்ப் புரத வண்ணாரும் காவேரி நாவிதரும் இருந்தனர்.

இப்போதெல்லாம் நிலை மாறிவிட்டது என்றார் செல்லப்பன். புரத வண்ணார்களில் யாருமே இப்போது ராப்பாடிகளாக இல்லை என்று திட்டவட்டமாகச் சொன்னார். மதுரைப் பகுதியில் உள்ள ராப்பாடிகளையும் நாஞ்சில்நாட்டு ராப்பாடிகளையும் ஒன்றாக நினைத்து ஒருவர் கருத்தரங்கில் பேசியபோது அதை நான் மறுத்துப் பேசியது அப்போது நினைவுக்கு வந்தது.

கணிகர் சாதியில், மண்டிகர் தவிர்த்த பிற 11 உட்பிரிவுகளும் ராப்பாட்டாளியாக உடுக்கடித்துக் குறி சொல்லுகிறார்கள். இவர்கள் சட்டுவி ஆயி தெய்வத்திடம் அருள்பெற்று இரவு நேரத்தில் குறிசொல்லப் போகின்றனர். இவர்கள் உழவர்களை மட்டும் சார்ந்திருக்கவில்லை. அறுவடைக் காலத்தில் மட்டும் இரவில் வெளிப்படுவது என்ற வழக்கம் இவர்களிடம் கிடையாது. ஆனால் ராப்பாடிகளின் நிலை வேறு.

நாஞ்சில் நாட்டு ராப்பாடிகள் ஒரு வருடத்தில் கன்னிப்பூ, கும்பப்பூ என்னும் அறுவடைக் காலங்களில் இரவு நேரத்தில் வரும் யாசகர்கள். இவர்களை யாசகர் என்று சொல்வதும் கூடச் சரியில்லை; உழவர்களையும் உழவுத்தொழிலையும் வாழ்த்தி வெகுமதி பெறுகின்ற பாடகர்கள் அல்லது பாணர்கள் என்று சொல்லலாம். உழவர்களுக்கும் இவர்களுக்கும் உள்ள உறவே இதுதான்.

ராப்பாடி உடலைக் கருப்புநிற அங்கியால் மூடியிருப்பார். தலையில் சர்க்கஸ் கோமாளியின் கருப்புத் தொப்பி. அதன் உச்சி வளைந்திருக்கும். கையில் சிற்றுடுக்கு. அதை அடித்துக்கொண்டு உச்ச ஸ்தாயியில் பாடுவார். பாட்டின் மையம் நாஞ்சில் நாட்டு நெல் வகைகளின் பட்டியல், அவற்றின் பெருமை, அடுத்த பூவில் பெய்யப் போகும் மழையின் செழிப்பு, நீராதாரம் போன்றவைதாம்.

ராப்பாடிக்குத் துணையாக ஒருவர் வருவார். அவரது கையில் அரிக்கன் விளக்கும் கோணிப்பையும் இருக்கும். ராப்பாடி கிராமத்தின் ஒரு சந்தில் நின்று பாடி முடித்துவிட்டு அடுத்த சந்துக்குப் போகும்போது, இடை நேரத்தில் துணையாள், "ராப்பாடிக்கு படி போடுங்க, ராப்பாடிக்கு படி" என்று கேட்டுக்கொண்டே வருவார்.

ராப்பாடியின் பாட்டு தூரத்தில் கேட்க ஆரம்பித்ததும் வீட்டிலுள்ள பெண்கள் அவனுக்குப் படி கொடுக்க ஆயத்தமாவர். முறத்தில் நெல்லும் கரித்துண்டும் வைத்து உறங்கிக்கொண்டிருக்கும் குழந்தைகளின் தலையைத் திருஷ்டிகழியச் சுற்றி அதைக் கணவன் கையில் கொடுப்பாள் மனைவி. கணவன், வீட்டு வெளித்திண்ணையில் முறத்தை வைத்து வாசல்கதவை மூடி விடுவான். ராப்பாடியின் துணையாள் முறத்தில் உள்ள நெல்லைக் கோணிப்பையில் கொட்டிவிட்டு முறத்தைத் திண்ணையில் வைப்பான்.

ராப்பாடியின் முகத்தில் பெண்கள் விழிக்கக்கூடாது என்பது நடைமுறை. இது குறித்த கல்வெட்டுச் சான்றும் உண்டு.

கன்னியாகுமரி மாவட்டம் திருவிதாங்கோடு ஊரில் கிடைத்த கி.பி. 1690ஆம் ஆண்டுக் கல்வெட்டு புலைப்பேடி, மண்ணார் பேடி என்னும் வழக்கம் பற்றிக் குறிப்பிடுகிறது.

புலையருக்கும் மண்ணாருக்கும் ஒருவகையான சுதந்திரம் இருந்தது. மலையாளக் கற்கடக மாதத்தில் (தமிழ் ஆடி மாதம்) சூரியன் மறைவிற்குப் பிறகு வீட்டைவிட்டு வெளியே வரும் உயர்சாதிப் பெண்மீது புலையரோ வண்ணாரோ சிறிய கல்லை எறிந்தால் அவள் அவருக்கு

உரிமையாகிவிடுவாள். ஆண் குழந்தையுடன் செல்லும்போது கல்லெறிந்தால் மண்ணானுக்கு அவள்மேல் உரிமையில்லை.

இந்த வழக்கத்தை நிறுத்தும்படி வீரகேரள சிறைவாய் மூத்த தம்புரான் கல்குளத்திலிருந்து (இன்றைய பத்மநாபபுரம்) கட்டளை இட்டதை ஒரு கல்வெட்டு கூறும். தென்திருவிதாங்கூரின் வடபகுதியில் புலைப்பேடியைப் பறைப்பேடி என்றும் கூறுவர்.

ஒடுக்கப்பட்டவர்களுக்குத் துணி வெளுக்கும் வண்ணார்களைப் பெண்கள் பார்க்கக்கூடாது என்றதன் எச்சம்தான் ராப்பாடிகளின் கண்களில் பெண்கள் படக்கூடாது என்றிருக்கும் தடை.

செல்லப்பா, ராப்பாடியைப் பெண்கள் பார்க்கக்கூடாது என்ற தடை தீவிரமாகச் செயல்பட்டதைச் சொன்னார். ஆடி மாதத்தில் ராப்பாடிகள் பெரும்பாலும் மலைப்பகுதிகளுக்குச் சென்றுவிடுவார்கள். அப்போது மூலிகைச் செடிகளையும் வேறு மலைப்பொருட்களையும் சேகரிப்பது தொழில். ஆடி மாதத்தில் பகலில் வெளியே வந்தால்கூட உயர்சாதிக்குத் துணிவெளுக்கும் வண்ணார்கள் அவர்களை விரட்டும் வழக்கம் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இருந்ததை செல்லப்பா நினைவுகூர்ந்தார். 1950க்குப் பிறகு பழைய வழக்கம் தளர்ந்துவிட்டது.

சுமார் 20 ஆண்டுகளுக்கு முன்புவரை நஞ்சில் நாட்டுக் கிராமங்களில் ராப்பாடிகள் சாதாரணமாகப் பாடிவந்தனர். அப்போது வீட்டு வெளித்திண்ணைகளில் படுத்துக் கிடப்பவர்கள் எழுந்து உட்கார்ந்துகொண்டு, அந்த ஆண்டு மழை பெய்யுமா? பெய்யாதா? என்று கேட்டு உரையாடுவார்கள். 'எல்லாம் இப்போது சொப்பனம் மாதிரி' என்றார் செல்லப்பா.

நான் தேநீர்க் கடையில் கேட்டதுபோல செல்லப்பா நல்ல நினைவாற்றல் உடையவராய் இருக்கவில்லை. நான் திரும்பத் திரும்பக் கேட்ட கேள்விகள் மூலம்தான் அவரிடம் பதிலைப் பெற முடிந்தது.

குடுமல்லிகைச் சம்பா

மல்லிகைச் சம்பா

மணமுள்ள சம்பா

சிறு நெல்லுச் சம்பா

சீரகச் சம்பா

சோணகச் சம்பா

என்று அவர் சில வரிகளைப் பாடிவிட்டு நிறுத்தினார். பின் பழைய விஷயங்களை மறந்துவிட்டு இரட்சண்ய சேனையில் சேர்ந்த காரணத்தைச் சொல்ல ஆரம்பித்தார்.

நான் செல்லப்பாவின் போக்கில் பேசவிட்டேன். மறுபடியும் நெல்லுவகைப் பாடலை நினைவுபடுத்தினேன். அவரால் தொடர்ச்சியாகப் பாடமுடியவில்லை. என்றாலும் 60க்கும் மேற்பட்ட நெல்வகைகளைப் பற்றிய பாடலை விட்டுவிட்டுப் பாடினார். நான் அவர் பாடியதை அப்படியே எழுதிவிட்டு அவரிடம் படித்துக் காட்டித் திருத்திக்கொண்டேன்.

ராப்பாடிகளைப் பற்றி ஊரில் நிறைய நம்பிக்கைகள் இருந்தன. ராப்பாடி ஊருக்குள் வரும்போது நாய்கள் குரைக்கா. ராப்பாடியைச் சரியானபடி கவனித்து நெல் தானம் கொடுக்கவில்லை என்றால் வசை பாடுவார். அடுத்த பூவில் மழை பெய்யாது. பூச்சிகள் பயிர்களை அழிக்கும். இந்த நம்பிக்கைகளே ராப்பாடிகளைப் பாதுகாத்தன.

நான் செல்லப்பாவிடம் ராப்பாடி வந்தால் நாய்கள் எல்லாம் சப்தம் போடாமல் இருப்பதன் ரகசியம் என்ன என்று கேட்டேன். செல்லப்பா கண்ணைச் சிமிட்டிக்கொண்டு பெரிதாகச் சிரித்தார். எல்லாம் ஓநாய் மலம்தான் ரகசியம். ஓநாய் மலத்தைத் தண்ணீருல கலக்கி நானும் கூடவரப்பட்டவனும் மேலே தெளிச்சுக்குவம். அந்த வாடயச் சாதாரணத் தெருநாயால தாங்க முடியாது. அது பக்கத்துல வராது. காட்டுக்குள்ள இதுமாதிரி பல சங்கதிகள் உண்டு என்று சொல்லிக்கொண்டே போனார்.

செல்லப்பாவிடம் அன்று நான் சேகரித்த செய்திகளில் நாஞ்சில் நாட்டில் வழக்கில் இருந்த நெல்வகைகளின் பட்டியல் முக்கியம் என்று இப்போதும் படுகிறது. இந்தப் பட்டியலை வைத்துக் கொண்டு விவசாய அதிகாரிகளுடன் உரையாடியபோது புதிய செய்திகளை அவர்களால் தரமுடியவில்லை. செல்லப்பாவுக்கு நெல்லின் பட்டியலும் பயிர்களை அழிக்கும் பூச்சிகளின் பெயர்களும் மட்டும்தான் தெரிந்திருந்தன.

ராப்பாடி தந்த நெல் பட்டியலின் விபரத்தைச் சாதாரண விவசாயியிடம் கொடுத்து விளக்கம் கேட்கமுடியாது என்பதை அறியவே எனக்குச் சில மாதங்கள் ஆகிவிட்டன. நெல்லின் பெயர்களின் அடிப்படையில் சில விஷயங்களை ஊகித்துச் சொன்ன விவசாயிகள்கூட அபூர்வமாகவே இருந்தனர். நெல்வகைகளின் விளக்கம் கேட்டுப் போனபோதுதான் வேளாண் தொழிலை நன்கறிந்தவர்களுக்கும் இந்த விதைகளுக்கும் தொடர்பில்லை என்று தெரிந்தது.

அறுவங்குறுவா என்ற நெல்லை விதைத்து அறுபது நாட்களுக்குள் அறுவடை செய்துவிடலாம். இது குறித்த ஒரு களியலாட்டப் பாடல்:

அறுவங் குறுவா வெத வெதச்சு

அறுத்தடிச்சாச்சு — இனி

அறுபது நாள் என்ன செய்வோம்

மார்த்தாண்ட பெருமா

என்று கூறும். அறுவங்குறுவா என்ற நெல் பெரும்பாலும் நாற்றங்காலில் பயிரிடப்பட்டது. குறிப்பிட்ட வயலை நாற்றங்காலுக்காத் தேர்ந்தெடுப்பது வழக்கம்.

ஒரு குடும்பத்தைச் சார்ந்த வயல் உரிமையாளர்களோ நண்பர்களோ தங்களுக்கு வேண்டிய நாற்றுக்களை இந்த வயலில் பயிரிடுவர். நாற்றைப் பிடுங்கிய பிறகு, அந்த வயலுக்குரியவர் அதில் அறுவங்குறுவாவை விதைப்பார். நாற்றை நட்ட வயல்களில் பயிர்கள் வளருவதற்குரிய கால அவகாசமும்

இதுவும் ஒன்றாக இருக்கும். இந்த வயலுக்குரியவர் அறுவங்குறுவாவைப் பயிரிட்ட பின்பு விளைச்சலை வேண்டியவர்களிடம் கொடுத்துத் தமக்குத் தேவையான நெல்லைப் பெற்றுக்கொள்ளுவார். இதனால் இந்த நெல் வகையைச் சாதாரண விவசாயி பயிரிடவில்லை என்று தெரிகிறது. திருநெல்வேலி மாவட்டத்தில் இந்த நெல்லை மொழிக்கருப்பன் என்றனர்.

புளுதிபுரட்டி என்பது ஒரு நெல். இது குறுகிய பரப்புள்ள வயல்களில் பயிரிட ஏற்றது. இதைப் பொடிவிதையில் விதைப்பர். நிலத்தைக் கையாலேயே புரட்டிப் பருவம் செய்வர். இந்த நெல் வகையை மிகக் குறைவானவர்களே பயிரிட்டனர். குறிப்பாகக் காளிகோயில் இருந்த ஊர்களில் ஊர்த்தலைவராக இருப்பவர் இதைப் பயிரிட்டிருக்கிறார். இந்த நெல்லைக்கொண்டு ஒருவகை மது தயாரிக்கப்படும். இந்த மது காளியூட்டு விழா நிகழ்வில் காய்ச்சப்படுவது.

நாஞ்சில் நாட்டில் அழகியபாண்டியபுரம், பறக்கை, இரவிபுதூர் முதலிய ஊர்களில் உள்ள காளி கோவில்களில் நிகழும் விழா காளியூட்டு என்றே வழங்கப்படுகிறது. இந்த விழாவின் முக்கிய சடங்கு மதுப்பொங்கல். விழாவில் முக்கிய தெய்வம் ஊர்வலமாக வரும்போது, ஊரின் தென்திசையில் உள்ள ஒரு இடத்தில் மதுப்பொங்கல் நடக்கும். இந்தச் சடங்கு நிகழ்ச்சியை வைராவி சாதியினர் ஒருவர் நடத்துவார்.

பறக்கை என்ற ஊரில் வலிகொலி அம்மன் கோயில் காளியூட்டு மதுப்பொங்கல் நிகழ்ச்சியில் நான் சந்தித்த வைராவி அம்பாசமுத்திரத்திலிருந்து இந்த நெல்லைச் சிரமப்பட்டு வாங்கி வந்ததாகச் சொன்னார். அவர் அந்த நெல்லைப் பயிரிட்டவர்களைப்பற்றிச் சொன்ன விவரங்களை இந்தக் கட்டுரைக்காக மறுபடியும் களஆய்வு செய்தபோது குறுவை நெல்லைக் குறிப்பிட்ட ஊரில் குறிப்பிட்டவர்கள் பயிரிட்ட தகவல்கள்தாம் முனைப்புடன் நின்றதைக் கேட்டேன்.

சம்பா என்ற நெல்வகையின் உட்பிரிவுகளின் பட்டியல் எனக்கு முழுமையாகக் கிடைக்கவில்லை. நாஞ்சில் நாட்டில் பரவலாக அறியப்பட்ட சாதாரணக் குடிமகனின் ஒரு நேர உணவாக இருந்த சம்பாவின் உட்பிரிவு வகைகள் நிலச்சுவான்தார்களுக்கு மட்டுமே உரியனவாக இருந்தன.

சீரகச் சம்பா, கொத்துமல்லிச் சம்பா, புனுகுச் சம்பா போன்றவை மேல்தட்டுக்காரர்களுக்கு. இந்த அரிசி வகைகளின் நிறமும், இனிப்புச் சுவையும் தனி. சீரகச் சம்பா வித்தை விதைக்கும் முன்பு கருவேப்பிலைத் தழையைப் பொடியாகத் தறித்து வயலில்போட்டு மொழுக்குவது வழக்கம். கருவேப்பிலை இலையின் மணமும் சுவையும் சீரகச் சம்பா அரிசிச் சாதத்தில் குழம்பு விடும்போது தெரியும். இந்த அரிசி மீன் குழம்பிற்குத் தோதானதல்ல. புனுகுச் சம்பா சாதம் புனுகுபோல் மணக்கும்.

புட்டு அவிப்பதற்கென்றே ஒரு நெல் இருந்தது. இது பெரும்பாலும் சொர்ணவாரியாக இருக்கலாம். இந்த அரிசியைக் கொஞ்சநேரம் தண்ணீரில் ஊற வைத்துவிட்டுத் தேங்காய்த் துருவலைக் கலந்து புட்டுக்குழலில் போட்டு மூடிவைத்து அவிக்க வேண்டியதுதான். அரிசி அவிந்ததும் பொருபொருவென மாவாகிவிடும். அரிசியை இடித்து மாவாக்க வேண்டிய அவசியம் இல்லை. பெரும்பாலும் பயணத்தின்போது கொண்டு சென்ற அரிசி இது.

வடதிருவிதாங்கூரிலிருந்து குடிபெயர்ந்த சம்பா நெல் கொக்கிச் சம்பா எனப்பட்டது. இது மீன் குழம்புக்குத் தோதுவானது. நல்ல சிவப்பு நிறமுடைய வல்லரக்கன் அரிசி கொழுக்கட்டை செய்வதற்கு ஏற்றது. இந்தக் கொழுக்கட்டைக்கு சீரண சக்தி குறைவு. இதுவும் பயணத்தில் கொண்டுசெல்லப்பட்ட உணவு.

அழகியபாண்டியபுரம் முதலியார் ஓலை தொடர்பாக செய்தி சேகரிக்கச் சென்றபோது அந்தக் குடும்பத்தைச் சார்ந்த ஒருவர் முதலியார் குடும்பத்துக்குச் சொந்தமான ஒரு சாஸ்தாங் கோவிலுக்கு மூன்று ஏக்கர் நிலம் இருந்ததாகவும் அந்த நிலத்தில் வல்லரக்கன் நெல்தான் பயிரிட வேண்டும் என்று பழைய ஆவணத்தில் எழுதப்பட்டிருந்ததாகவும் சொன்னார்.

வல்லரக்கன் அரிசிமாவைப் பிசைந்து கொழுக்கட்டையாக உருட்டி தேக்கிலையில் பொதிந்து வன்னிக்கொடியால் சுற்றிக் கட்டித் தீயில் சுட்டு எடுத்து சாஸ்தாவுக்குப் படைப்பது என்ற வழக்கம் குறிப்பிட்ட கோவில்களில் இருந்தது.

பனங்குறுவா என்னும் நெல்லைக் குத்தினால் அதிக அளவு தவிடு கிடைக்கும். இந்த அரிசியின் சிறப்பே இதுதான். இந்த அரிசியைத் தீட்டுலக்கையால் தீட்டமாட்டார்கள். இதன் இன்னொரு முக்கியமான சிறப்பு பழைய சாதத்திற்குப் பொருத்தமானது இந்த அரிசி. பனங்குறுவா அரிசியைப் பொங்குவதற்கென்றே தனி முறை உண்டு. இந்த அரிசி சாதாரண டொப்பி அரிசியைவிட மூன்று மடங்கு பெரிதாக இருக்கும். பனங்குறுவா அரிசியைச் சமைக்கும் உலைப்பானையின்மேல் தண்ணீருள்ள சிறிய பானையை வைக்க வேண்டும். உலை கொதிக்கும் போது விடவேண்டிய தண்ணீரை மேல் பானையிலிருந்துதான் எடுக்க வேண்டும். உலைக்குத் தனியாகக் குளிர்ந்த நீரை ஊற்றக் கூடாது.

சாதம் பொங்கப்பட்ட பின்பு, உலைப்பானையின்மேல் வைக்கப்பட்ட பானைத் தண்ணீரைத் தனியாக எடுத்து வைக்க வேண்டும். இந்தத் தண்ணீரையே இரவு மீந்த பனங்குறுவ சாதத்தில் விடவேண்டும். இந்தப் பழைய சாதம்; கெட்டித்துண்டாக இருக்கும். துண்டுப் பழஞ்சியில் (துண்டுச் சாதம்) தயிரைவிட்டு மோர் மிளகாயைத் தொடுகறியாக வைத்துச் சாப்பிடுவது உடம்புச் சூட்டைப் போக்கும்.

இந்த மோர்மிளகாய்க்கும் தனித் தயாரிப்பு உண்டு. மோர் மிளகாயை அப்படியே எண்ணெயில் வறுப்பதில்லை. மோர்மிளகாயைப் பச்சைத் தென்னை ஓலை ஈர்க்கில் கோர்த்து அடுப்புக் கனலில் வாட்டி, பெரிய அளவில் கருகாதபடி எடுத்துச் சுத்தமான பச்சைத் தேங்காய் எண்ணெயில் போட்டுவிட வேண்டும். இது மூன்று மணிநேரம் ஊறிய பின்பு பயன்படுத்தலாம்.

நாகர்கோவில் கன்னியாகுமரிச் சாலையில் உள்ள பொத்தையடி என்னும் மலையடிவாரக் கிராமத்தில் வாழ்ந்த எ.ஆர். நாடாரைச் சந்தித்தபோது முண்டான் என்ற நெல் வாசிறை மீண்டான் என்று அழைக்கப்பட்டதற்கு வரலாற்று நிகழ்ச்சி காரணம் உண்டு என்றார்.

திருவிதாங்கூரின் அரசரான மார்த்தாண்டவர்மா காலத்தில் (1729 – 58) தளவாயாக இருந்த குமாரசாமிப் பிள்ளையை ஹைதிராபாத் நவாபின் திருநெல்வேலிப் பகுதி ஏஜென்ட் ஒருவர் திருக்குறுங்குடிச் சிறையில்

வைத்துவிட்டார். அவரை மீட்க நாஞ்சில்நாட்டு மக்கள் வண்டிவண்டியாக முண்டான் நெல்லைக் கொடுத்தார்கள். இதன் பிறகு அரசர் முண்டான் நெல்லை வாரிசிறை முண்டான் என அழைக்க வேண்டும் என்றாராம். இது பேச்சு வழக்கில் வாசிறை மீண்டான் ஆனது.

செல்லப்பன், பயிர்களை அழிக்கும் பூச்சிகள் பற்றிய பாடல் மறந்துவிட்டது என்று சொன்னார். ஆனால் பயிர்களுக்கு வரும் நோய்களின் பெயர்களைப் பட்டியலிட்டார். அந்தப் பட்டியலை வைத்துக்கொண்டு நான் சிலரிடம் விளக்கம் கேட்டபோது பதில் கிடைத்தது. அருமநல்லூர் ராகவன் பிள்ளை விரிவாகவே இதைச் சொன்னார்.

அன்னத்துப் பூச்சியால் பயிரைப் பாதிக்கும் செம்பநோய் (இது கவலைநோய் எனவும்படும்) வந்தால் வேப்ப விதையைப் பொடித்துத் தண்ணீரில் கலந்து வயலில் தெளிக்க வேண்டும். பன்றியின் மலத்தையும் நீரில் கலக்கித் தெளிக்கலாம். வீட்டுக் கொட்டிலில் தனியே அடைத்து வளர்க்காத ஊர்ச்சுற்றிப் பன்றியின் உரம் சாலச் சிறந்தது.

நான் ஊர்ச்சுற்றிப் பன்றிகளைப்பற்றி விவரம் சேகரிக்கப் போனபோது, பன்றி மேய்த்த சாதியினரான தெலுங்குமொழி பேசிய புல்லுக்கட்டி நாயக்கரைப் பற்றிய அபூர்வமான செய்திகள் கிடைத்தன. இவர்கள் பாண்டிப் பகுதியிலிருந்து நாஞ்சில் நாட்டிற்குக் குடியேறியது அன்னத்துப் பூச்சியால் பயிர்கள் பாழடைந்த ஒரு காலத்தில்தானாம். அப்போது வயல் உரிமையாளர்கள் இவர்களை ஊருக்கு ஒதுக்கமான பகுதியில் குடியமர்த்தினார்களாம்.

நெற்பயிரை வெட்டுக்கிளி கடித்தால் வருவது குருத்துநோய். இதுபற்றி நாஞ்சில் நாட்டு வரலாறு தொடர்பான முதலியார் ஆவணத்தில் சான்று உண்டு.

கி.பி. 1635ஆம் ஆண்டு ஆவணம் ஒன்று சம்பா, மணல்வாரி, அரிக்கிராவி முதலிய வித்துகள் ஒருவகைப் புழுவால் பாதிக்கப் பட்டதையும் பயிர்களைப் பூச்சி வெட்டியதையும் கூறும். இதனால் கார் பயிரிடவில்லை. நிலம் தரிசாகக் கிடந்தது. ஆகவே அரசர் நிலவரி விலக்கு அளிக்க வேண்டும் என்பது மக்களின் வேண்டுகோள். இதை முதலியார் ஆவணம் குறிப்பிடும்.

பொதுவாகக் குருத்து நோய்க்கு மிளகாய் வற்றல் பொடியை வயலில் தூவுவதுதான் மருந்து. இது ஆபத்தான செயல். காற்று வீசும் திசை, பக்கத்து வயல்களில் ஆள் இல்லாமல் இருப்பது போன்றவற்றைக் கவனித்தபடியே இந்த மருந்தைத் தெளிக்க முடியும்.

ஒட்டுண்ணிப் பூச்சியால் பயிர்களுக்கு அருவிளை நோய் என்னும் நோய் வரும். இதற்கு வீட்டுச் சாம்பல் சரியான மருந்து. வயலில் தூவும் அளவுக்கு வீட்டுச் சாம்பலைச் சேகரிப்பது நடைமுறையில் சாத்தியம் இல்லை. இதனால் பெரிய கோயில்களின் மடப்பள்ளி (சமையலறை), குயவரின் சூளை, செங்கல் சூளை முதலிய இடங்களிலிருந்து சாம்பலைச் சேகரிப்பர்.

பொதுவாக அடியுரமாக வேப்பந்தழையைப் போடுவது, மாட்டு மூத்திரத்தை வயலில் தெளிப்பது, நிலத்தைக் காயப்போடுவது போன்றன பயிர்நோய்கள் வராமல் தடுப்பதற்குரிய முன் எச்சரிக்கை நடவடிக்கைகளாகும்.

ராப்பாடியின் பாடல்களில் உள்ள தகவல்களிலிருந்து தொடர்ந்து நான் நடத்திய கள ஆய்வில் நெல்வகைகள், பயிர்களை அழிக்கும் பூச்சிகள் மட்டுமல்லாமல் மழைபெய்வது, பெய்யாமல் இருப்பது பற்றிய தகவல்களும் கிடைத்தன.

சூரியனையும் சந்திரனையும் ஒளிவட்டம் சூழ்ந்து நிற்பது மழை வருவதற்குரிய அறிகுறி. இதை வட்டம் கட்டுதல் என்பார்கள். இதைப் பார்த்துவிட்டு வித்தும் வைக்கோலும் காயவைப்பது என்ற மரபுண்டு.

பருந்து சிறகை விரித்து வெயிலில் நின்றாலோ, வெள்ளைக் கொக்கு பந்திபந்தியாக நெடுநேரம் உட்கார்ந்திருந்தாலோ, மேட்டில் வெள்ளெலி வளை தோண்டினாலோ, நாரை, வெள்ளைக் கொக்கு, நமுகு போன்ற பறவைகள் வடக்குநோக்கி வட்டமாகப் பறந்தாலோ மழைபெய்யும்.

புரட்டாசி ஐப்பசி மாதங்களில் ஈசல் பறப்பதும் கறையான்கள் புற்றைத் திறப்பதும் புரட்டாசி மாதம் 15ஆம் தேதிக்கு மேல் கீழ்க்காற்று அடிப்பதும் வடமேற்கிலும் காற்றடிப்பதும் மழை பெய்யும் என்பதற்கு அடையாளம்.

சூரியன் மறையும்போது கிழக்கே மூன்று பட்டையாய் நீலக்கோடு இருந்தாலோ வெண்ணிறமாக இருந்தாலோ குளிர் காற்று வீசும். பின் மழை பெய்யும். சூரிய உதயத்தின்போதும் மறைவின் போதும் பக்கச் சூரியன் தெரிவதும் மழைபெய்யும் என்பதற்கு அடையாளம்.

கார்த்திகை மாதம் மருளைமுத்துக் கொடி தழைப்பது, கோழிக்காளான் பூப்பது, நாரை, வெள்ளைக்கொக்கு முதலிய பறவைகள் தெற்குநோக்கி வலசை போவது, வெள்ளெலி பள்ளத்தில் புடை எடுப்பது போன்றவை மழை இல்லை என்பதன் அடையாளம்.

புரட்டாசி முதல் மாசிவரை உள்ள மாதங்களில் தென்மேற்கில் காற்றடித்தால் கிழக்கிலிருந்து வரும் மழைக்காற்று உலர்ந்து போய்விடும். அதனால் வறட்சி வரும். முழுநிலவில் நிலவைச் சுற்றி இடைவெளியுடன் வட்டம் தெரிவதும் (இது கோட்டை கட்டுதல் எனப்படும்) மழை பெய்யாது என்பதன் அறிகுறிதான்.

ராப்பாடியிடம் நான் சேகரித்த பாடல்கள்வழி ஏ.ஆர். நாடார். ராகவன் பிள்ளை முதலிய வயதான விவசாயிகளிடமும் கோவில் நிலக் குத்தகை ஆட்களிடமும் நடத்திய களஆய்வில் அபூர்வமான தகவல்கள் கிடைத்தன

நாஞ்சில்நாட்டில் அறுபதுக்கும் மேற்பட்ட நெல்வகைகள் இருந்தாலும் சாதாரணப் பாமர மக்களின் உணவாக இருந்த நெல் வகைகள் சம்பா, முண்டன், அரிக்கிராவி எனச் சில குறிப்பிட்டவைதாம். மற்றபடி எல்லா நெல் வகைகளையும் எல்லோரும் பயிரிடவில்லை.

நெல்வகைகளிலும் உயர்சாதி, ஒடுக்கப்பட்ட சாதிகள் இருந்தன. பணம் படைத்தவருக்குரிய நெல்வகைகள் தனியாகவும் பயிரிடப்பட்டன. சீரகச் சம்பாவையும் மல்லிகைச் சம்பாவையும் ஆனைக்கொம்பானையும் பயிரிட்டவர்களின் எண்ணிக்கை குறைவு. இவர்கள் இந்த நெல்வகைகளைத் தங்களைப் போன்ற வசதி உடையவர்களிடம் கொடுத்து, வேறு நெல்வகைகளை வாங்கிக் கொண்டார்கள். இந்த அரியவகை வித்துகள் குறிப்பிட்டவர்களிடம் மட்டுமே இருந்தன. இந்த வித்துகள் மறைந்து போனதன் காரணமும் இதுதான்.

அரிய வித்துகளையோ பொதுவான வித்துகளையோ விதைத்துத் தொழில் செய்வதில் பாகுபாடில்லை. அடிமட்ட விவசாயிகளில் பலர், முதலாளிகள் அல்லது குத்தகைக்காரர்களின் தொழில்நுட்பத்தின் அறிவுறுத்தலின்படிதான் வேலை செய்தார்கள். நான் சந்தித்த வயதான அடிமட்டத் தொழிலாளிகளில் சிலருக்கு விவசாயத் தொழில்நுட்பம் தெரியவில்லை. ஆனால் நில உடைமையாளர்கள் தெளிவாகவே அறிந்து வைத்திருப்பதைக் கேட்டேன். கடைநிலைத் தொழிலாளர்கள் எப்போதுமே நிலத்திற்கு விசுவாசிகளாக இருந்தனர்.

***

குமரி மாவட்டம், கல்குளம் வட்டம், ஆளூர் வீராணி என்னும் ஊரிலிருந்த என் உறவினர் வீட்டிற்குச் சென்றுவிட்டு இரு சக்கர வாகனத்தில் திரும்பிக் கொண்டிருந்தேன். என்னுடன் என் மகளும் உண்டு. ஊரின் எல்லையைத் தாண்டி பெருங்கல்விளை கிராமத்துக்கு வந்தோம். அந்த ஊரின் எல்லையில் உள்ள பிரம்மாண்டமான குளத்தின் கரைவழிப் பயணம் செய்வது சுகமான அனுபவம். ஒருபக்கம் பச்சைப் பசேலென்ற வயல்வெளி. இன்னொரு பக்கம் நீர் ததும்பி வழிந்த குளம். குளத்தின்மேல் படர்ந்து கிடந்த தாமரை இலைகள். இடையே அடர்த்தியாகக் கிடந்த தாமரை மலர்கள், அரும்புகள், இலைகளின்மேல் தாவிய கொக்கு, நாரைகள்.

மூன்று கிலோமீட்டர் நீளமுள்ள அந்தக் குளத்தின் எல்லையில் பெரிய வேப்ப மரங்களும் பூவரசு மரங்களும் நின்றன. மரங்களின் நிழலில் ஆணும் பெண்ணுமாய்ப் பத்துப் பதினைந்து பேர் நிற்பது தெரிந்தது. மரங்களை நெருங்கியபோது அங்கே ஒரு கிராம தெய்வக் கோவில் இருப்பதும் தெரிந்தது. அதற்குச் சிறப்பு வழிபாடு நடக்கிறது என்பதை ஊகித்துக்கொண்டேன்.

அன்று செவ்வாய்க்கிழமை. இது இசக்கியாக இருக்கலாம். இந்தக் கோவிலுடன் தொடர்புடைய செய்திகள் இருக்கலாம். இது போன்ற சந்தர்ப்பங்கள் கிடைப்பது அருமை. மகள் இருக்கிறாள். என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருந்தேன். அவளே கோவிலின் அருகே வண்டியை நிறுத்தினாள்.

எங்களைப் பார்த்ததும் கோவிலின் அருகே நின்றவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். நான் செருப்பைக் கழற்றிவிட்டுக் கோவில்பக்கம் போனேன். செருப்பு இல்லாத காலுடன், தெய்வத்தின்முன் நின்று பணிவாகக் கையெடுத்துத் தொழுதால் போதும், கோவில் கூட்டத்துடன் நெருங்கிவிடலாம். அன்னியத் தன்மையைக் கலைத்து விடலாம். மகளும் என்னைப் போலவே செய்தாள்.

அந்த பெரிய மரத்தின்கீழ் சிறிய திறந்தவெளி மேடை இருந்தது. அதன் நடுவில் முக்கோண வடிவில் ஓரடி உயரக்கல். அருகில் இன்னொரு சிறிய கல். மேடையின் ஓரத்தில் சிறிய விளக்குத்தூண். மொத்தக் கோவிலும் இவ்வளவுதான். அந்த முக்கோணக் கல்லும் சிறிய கல்லும் இசக்கியம்மனும் துணை அம்மன் சாமியுமாக இருக்கலாம். மூலச்சாமிக்குத் துணையாக ஒரு சாமியை வைப்பதும் அதற்கு மாடன் என்றோ பேச்சி என்றோ பெயர் வைப்பதும் இதுபோன்ற திறந்தவெளிக் கோவில்களில் இயல்பு. என் ஊகம் சரியாக இருந்தது.

கோவிலின் அருகே இரண்டு பெண்கள் பொங்கலிட்டுக் கொண்டிருந்தார்கள். பிச்சிப்பூ வாசனை மூக்கைத் துளைத்தது. சிறிய மேடையில் விரிக்கப்பட்டிருந்த ஓலைப்பாயில் பரந்து கிடந்த பாத்திரங்களில் அவியல், கிச்சடி, தோட்டல், சாம்பார் என குழம்பும் கூட்டுகளும் இருந்தன. படைப்புச் சாதத்தைப் போட இன்னொரு ஓலைப்பாய் தயாராக விரித்து வைக்கப்பட்டிருந்தது.

கோவில் பூசைக்கும் படையலுக்கும் நேரமிருந்தது. பொங்கல் சீக்கிரம் ஆகிவிட்டது. எல்லோரும் சாவகாசமாய் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். பூவரசு மரத்தின் அடியில் தனியே உட்கார்ந்திருந்த முதிய பெண்ணருகே நான் போனேன். என் மகள் இது என்ன சாமி? என்று அந்தப் பெண்ணிடம் கேட்டாள். அவள் ஒற்றைச் சொல்லால் இசக்கி என்றாள். நான் தொடர்ந்து அவளிடம், 'உங்க குலதெய்வமா?' என்று கேட்டேன். அவள் நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு பேச ஆரம்பித்தாள்.

அந்த முதியவளின் பாட்டிதான் அந்த இசக்கி. அவள் குடும்பத்தினர்தான் இப்போது வழிபாடு செய்கிறார்கள். அவர்கள் குமரி மாவட்ட கேரள

எல்லையில் ஒரு கிராமத்தில் இருக்கிறார்கள். அந்தப் பாட்டியின் பேச்சில் மலையாள நெடி வீசியது. நான் இசக்கியின் கதையைக் கேட்டேன். முதியவள் கதையைச் சொன்னாள்.

அவளுக்கு முப்பது வயது இருக்கும். பத்து வயதில் ஒரு மகனும் உண்டு. கணவன் கூலி விவசாயி. அவர்கள் இந்தக் குளத்தின் கரையில்தான் குடியிருந்தார்கள்.

ஒருநாள் கணவன் ஊரில் இல்லை. அன்று நல்ல மழை. அவள் குடிசைக்குள்ளும் சொட்டு சொட்டாய்த் தண்ணீர் வடிந்தது. அவள் மகனை நீர் சொட்டாத இடத்தில் உட்காரவைத்துவிட்டு வாசல் கதவைத் திறந்து வெளியே வந்தாள். குளம் நிரம்பி வழிந்ததைப் பார்த்தாள். குளம் உடைந்தாலும் அவளது குடிசைக்கு ஆபத்தில்லை.

குடிசை மேட்டுப் பகுதியில் இருந்தது. குளத்தின் வடக்குக் கரையையொட்டி இருந்த வயல்வெளியில் முற்றிய கதிர்கள் சாய்ந்து கிடந்தன. நாலைந்து நாட்களில் அறுத்துவிடலாம் என்று முதலாளி அவள் கணவனிடம் சொன்னது நினைவுக்கு வந்தது. குளத்தின் தெற்கே சுடுகாடு. குளம் வடக்கே உடைந்தால் அவ்வளவுதான். பத்து நிமிஷத்தில் மொத்தக் குளம் பத்து ஏக்கர் வயல்பரப்பில் நிறைந்துவிடும். மண்சாடி வயல் நிரம்பும். அப்புறம் அவள் வயிற்றிலும் மண்விழும்.

அவள் குடிசைக்குள் போனாள். நாணல் புல்லால் ஆன கொங்காணியைத் தலையில் போட்டுக் கொண்டாள். மண்வெட்டியை எடுத்துக்கொண்டு குளத்தின் தெற்குக் கரைக்கு வந்தாள். இரண்டே வெட்டுதான். குளம் தெற்கே உடைத்துவிடும். சுடுகாட்டைத் தாண்டி இருக்கும் வள்ளியாற்றின் கிளையாற்றில் வெள்ளம் போவதில் பிரச்சினை இல்லை. தன் முதலாளியின் வயலைக் காப்பாற்றிவிடலாம். இப்படிக் கணக்குப் போட்டாள்.

அவள் ஓங்கி வெட்டினாள். புதபுதவென இருந்த மண்ணில் கோடி மண்வெட்டி ஆழமாய்ப் பாய்ந்தது. உழைத்த உடம்பு. லாவகமாய் வெட்டிவிட்டு அந்த இடத்தை நீவிவிட்டாள். வழி திறக்கட்டும் என்பதுபோல் காத்திருந்த வெள்ளம்

சுடுகாட்டில் பாய ஆரம்பித்தது. அவள் இன்னும் ரெண்டு வெட்டு வெட்டலாமே என்று நினைத்துக் குனிந்தாள். பதமான மண் வழுக்கியது. வெள்ளம் அறுத்துக்கொண்டு ஓடியது. அவளைப் புரட்டிவிட்டுச் சுடுகாட்டுப் பரப்பில் தள்ளியது.

மகன் குடிசைக்குள் அம்மாவைத் தேடினான். காணவில்லை. களைத்துப் படுத்துவிட்டான். கணவன் காலையிலே வந்து மனைவியைத் தேடினான். சுடுகாட்டுச் சப்பாத்துக் கள்ளியில் படுத்துக்கிடந்தாள் அவள். அவளது உடலைக் கரையில் இறக்கினான். லேசாக மேடுதட்டிய அவள் வயிற்றைத் தடவிக் கதறிக் கதறி அழுதான். அவள் கர்ப்பமாய் இருந்தாளாம்.

அந்த முதியவள் ரசபாவத்துடன் இந்தக் கதையைச் சொன்னாள். கர்ப்பமாய்ச் செத்துப் போனவள் பேயாக அலைவாள் என்பது நம்பிக்கை. விசுவாசமாய் வயலைக் காப்பாற்றிய அவளுக்காக முதலாளியும் இரங்கினாராம். வயல் முதலாளியான செட்டியார் அவளைப் புதைத்த இடத்தில் மேடை அமைத்துக் கல்லை நட்டுவைத்தாராம். அவளுக்குச் சிறப்புப் படுக்கையும் போட்டுக் கொடுத்தார். ஓரிரு ஆண்டுகள் அதற்குரிய செலவையும் ஏற்றுக்கொண்டார்.

செத்துப்போன கர்ப்பிணி அந்தக் குடும்பத்துப் பெண்களின் தேவதை ஆகிவிட்டாள். அவளது உறவினர்கள் அந்த ஊரை விட்டுக் குடிபெயர்ந்தபோதும் அவர்களின் கனவில் வந்தாள். கொஞ்ச நாளில் அவள் இசக்கியம்மன் ஆனாள்.

இப்படியாக வயல்வெளியைக் காப்பாற்ற உயிரைவிட்டுத் தெய்வமானவர்கள் வேறு இடங்களிலும் உள்ளனர். அபூர்வமான நெல்வகைகளைப் பயிரிட்டுப் பரிமாறிக் கொண்டவர்கள் மட்டும் மனிதர்களாகவே செத்துப் போனார்கள்.

## பின் இணைப்பு

ராப்பாடிப் பாடல்வழித் தொகுக்கப்பட்ட நெல்வகைகள்

**சம்பா நெல் வகைகள் (16)**

அபிசேகச் சம்பா சிறியீர்க்குச் சம்பா

கட்டிச் சம்பா தெய்வீகச் சம்பா

கருடச் சம்பா நீர்க்குவளைக் சம்பா

கனமூட்டிச் சம்பா நீலமணிச் சம்பா

குறுஞ்சம்பா நெடுஞ்சம்பா

கொத்தமல்லிச் சம்பா புனுகுச் சம்பா

கொல்லன் சம்பா மல்லிகைச் சம்பா

சாடைச் சம்பா வெள்ளைக்கழுத்துச் சம்பா

**குறுவா குறுவை வகை (8)**

அருவருங்குறுவா பனங்குறுவா

கருங்குறுவா பீகா குறுவா

குட்டக்குறுவா முட்டைக்குறுவா

செங்குறுவா மைக்குறுவா

**முண்டான் வகை (6)**

ஐந்தராலி முண்டான்

காத்தாடி முண்டான்

குற்றால முண்டான்

பூமாரி முண்டான்

வாசர முண்டான்

வீரமுண்டான்

**பிற வகைகள் (32)**

அரிக்கிராவி செம்பிலி

ஆனைக்கொம்பன் செம்பகமார்த்தாண்டன்

ஓடாநரியன் செம்மிளகு

கட்டையன் சொர்ணவாரி

கட்டிவிரியன் தட்டார வெள்ளை

கடயரியன் தட்டுகாரி

அரும்பாறை பிளப்பான் தட்டுக் கருமிள்ளான்

கருமிளகு நெட்டையன்

கருப்புக்காரிவிரியன் நேத்திரம்பண்ணி

கல்லுண்டான் புழுதிபுரட்டி

காடைமுத்தன் பூம்பாளை

காடுதனக்காரி மணல்வரி

கோடவாரியன் முழுவெள்ளைக் குழிப்பான்

சித்திரைக்காரி வீதியடங்கான்

சிறுகண்டான்

# சின்னக்குட்டியும்

# கச்சவட முக்கும்

சின்னக்குட்டி அத்தையை நான் கடைசியாகச் சந்தித்த அடுத்த ஆண்டு இறந்துவிட்டதாய்க் கேள்விப்பட்டேன். திருநெல்வேலி மாவட்டம் சுரண்டை கிராமத்தின் அருகே ஒரு தோட்டத்தில் கோழிச்சண்டை பார்க்கப் போயிருந்தேன். அங்கு நான் நினைத்ததைவிட அதிகம் தகவல்கள் கிடைத்தன. தென்காசியில் தங்கும் விடுதி ஒன்றில் நான் இருந்தபோது தற்செயலாகத்தான் தேவர்குளத்துக்குச் சென்று சின்னக்குட்டி அத்தையைப் பார்க்கலாமா என்று நண்பனிடம் கேட்டேன். அவனுக்கு அதில் சுவாரஸ்யமில்லை. என்றாலும் அவளைப் பற்றிக் கொஞ்சம் சொல்ல ஆரம்பித்ததும் சம்மதித்துவிட்டான்.

சின்னக்குட்டி அத்தையின் இரண்டாவது மகள் வைரம் தேவர்குளத்தில் வாழ்க்கைப்பட்டிருந்தாள். அவள் கணவனுக்கு விவசாயம் தொழில். அந்தக் கிராமமே மானாவாரிப் பயிரை நம்பியது. கமலைகளுக்குக் குறைவில்லை. அவள் வீட்டைத் தேடிக் கண்டுபிடிப்பதில் சிரமம் இருக்கவில்லை. கிராமங்களில் ஒரு சௌகரியம். பெயரைச் சொல்லாமல் அம்மா / அப்பா அடையாளம், குழந்தைகள் எண்ணிக்கை என விவரங்களைச் சொன்னால் போதும். வீட்டின் முன்னே கொண்டு நிறுத்திவிடுவார்கள்.

சின்னக்குட்டி அத்தை என்னைப் பார்த்த சில நிமிடங்களில் அடையாளம் கண்டுவிட்டாள். அப்படியே கட்டிக்கொண்டாள். அவளுக்கு என்னைப் பார்த்ததுமே நாஞ்சில் நாட்டைப் பார்த்தது மாதிரி. அப்போது அவளுக்கு வயது 90க்குமேல் இருக்கலாம். நான் முன்பு கேட்ட பல தகவல்களின் அடிப்படையில் அவளது வயதைக் கணித்து வைத்திருந்தேன். அவள் வழக்கம்போல் வயதைக் குறைத்துச் சொன்னாள். எம்பது கழிஞ்சாச்சு என்று சொல்லிவிட்டுப் பேச்சை ஆரம்பித்தாள். இது நடந்து 33 வருஷங்கள் கழிந்துவிட்டன.

அவளுக்குக் கண் கொஞ்சம் மங்கிவிட்டது. காது பெரிய அளவில் மந்தமாக இல்லை. பேச்சில்கூடத் தளர்ச்சி இல்லை. ஞாபக சக்தி சொல்லும்படியாகக் குறையவில்லை. பதினாறு வயதுப் பிராயக் கதைகளை அன்று நடந்த மாதிரியே சொன்னாள். அவள் சொன்ன பல தகவல்களை எழுத்தில் கொண்டுவர முடியாது என்பது அப்போதே எனக்குத் தெரியும்.

சின்னக்குட்டி அத்தையை நான் சொந்தம் என்று சொல்லிக் கொள்ளலாம். இல்லை என்று முழுதாய் மறுத்தும் விடலாம். என் அப்பாவின் பெரியப்பா தொடர்பு வைத்திருந்த தேவதாசி ஒருத்தியின் மூன்றாவது மகள் சின்னக்குட்டி. அவளை என் அப்பா, பெரியப்பா எல்லோரும் அக்கச்சி என்றுதான் கூப்பிடுவார்கள். அக்கச்சி என்பது அக்காவின் மரூ. அம்மாவை அம்மச்சி என மலையாளத்தில் மதிப்பாய்க் கூப்பிடுவது மாதிரி.

சின்னக்குட்டி 14 வயதில் பறக்கை ஊர் மதுசூதனப் பெருமாள் கோவிலில் தேவதாசியாகப் பணியாற்றச் சென்றுவிட்டாள். அது 1902 அல்லது 1903 ஆக இருக்கலாம். எனக்குத் தெரிந்து திருவிதாங்கூர் தேவசம் துறையில் பென்ஷன் பெற்ற தேவதாசிகளில் கடைசி வாரிசு அவள்தான். அதோடு வெளிப்படையாக உரையாடியவளும் சின்னக்குட்டிதான் என்று நினைக்கிறேன்.

சுசீந்திரம் தாணுமாலயன் கோவிலைப் பற்றிய செய்திகளின் சேகரிப்பிற்காக கே. கே. பிள்ளை, 1935இல் கோயில் தேவதாசிகளுடன் உரையாடியபோது பல சமயங்களில் மௌனமே பதிலாகக் கிடைத்தது என்பதை அந்த உரையாடலின்போது கூடவே இருந்த கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை கூறியிருக்கிறார். இத்தனைக்கும் தேவதாசி ஒழிப்புச் சட்டம் அமலுக்கு வந்த (1930) ஐந்து வருஷங்களிலேயே கே.கே. பிள்ளை செய்திகள் சேகரிக்க ஆரம்பித்துவிட்டார். அப்போதே இந்த நிலை. அந்தக் காலங்களில் அவர் சந்தித்த தேவதாசிகளில் பலருக்கு 50 வயதுக்கும் குறைவு என்பதால் பல விஷயங்கள் சொல்லத் தடையாக இருந்திருக்கலாம்.

1926இல் நாஞ்சில் நாட்டு வேளாளர்களின் மருமக்கள் வழி ஒழிப்புச் சட்டம் வந்த காலத்தில் தமிழ்த் தேவதாசி குடும்பத்தினர் தங்களை மருமக்கள் வழி வேளாளர்களாகவும், மலையாளத் தேவதாசிகளும், இடநாட்டுக் கோவில்களில்

பணியாற்றிய அச்சிகளும் நாயர் சாதியின் ஒரு பிரிவிலும் தங்களை இணைத்துக் கொண்டதுமான காரியங்கள் மெல்லவே நடந்துகொண்டிருந்தன. தமிழ்நாட்டில் தேவதாசி ஒழிப்பிற்கு முன்பே தேவதாசி இனமக்கள் செங்குந்த முதலியார் சாதி போன்று வேறு சாதிகளுடன் கலந்துகொண்டது போலத்தான் இதுவும். இதனால் இதுபோன்ற செய்திகளைச் சேகரிப்பவன் எல்லாத் தகவல்களையும் சொல்ல முடியாது என்ற நிலை நாற்பதுக்களிலேயே ஏற்பட்டிருக்கலாம்.

நான் சின்னக்குட்டியைச் சந்தித்தபோது அவளுக்கு 90க்குமேல் வயது ஆகிவிட்டதாலும் 45 வயதுக்குப் பிறகு அவளின் கணவனின் ஸ்தானத்தில் இருந்த சிவஞானம் பிள்ளை இறந்துபோனதாலும் அவளது மனநிலை எதையும் மறைக்க வேண்டும் என்ற நிலையைத் தாண்டிவிட்டதை அவளது பேச்சில் தெரிந்துகொண்டேன்.

நான் அவளைச் சந்தித்தபோது எனக்கு வயது 30. அப்போது எனக்குத் திருமணமும் ஆகவில்லை. அவளிடம் எனக்கு சில விஷயங்களைக் கேட்கக் கூச்சமாகவும் இருந்தது. ஏற்கனவே நான் தேவதாசிகளின் ஆட்டங்களை நேரடியாகப் பார்த்த நாகேந்திர பிள்ளையிடம் சேகரித்த செய்திகளிலிருந்து தயாரித்த கேள்விகளைக்கூடக் கேட்கத் தயக்கமாக இருந்தது. ஆனால் அவளுக்குச் சொல்வதில் கூச்சம் இல்லை என்பதைவிட எல்லாம் கடந்த மோனநிலையில் இருப்பவளைப் போலப் பேசினாள்.

திருவிதாங்கூரில் தேவதாசி ஒழிப்பதற்காகப் பெரிய அளவில் போராட்டம் ஒன்றும் நடக்கவில்லை. திருவிதாங்கூரின் பகர அரசியாக இருந்த சேது லட்சுமிபாய் காலத்தில் (1925 – 31) 1930இல் தேவதாசி ஒழிப்புச் சட்டம் அமலுக்கு வந்தது. ஆனால் அதற்கு முன்பே ஸ்ரீ மூலம் திருநாள் அரசர் காலத்தில் (1885 – 1924) திருவிதாங்கூர் கோவில்களில் பெண்களைப் பணியில் அமர்த்த வேண்டாம் என்ற உத்தரவு (1920) வாய்மொழியாகவே சொல்லப்பட்டிருக்கிறது. அந்தச் சமயத்தில் கோவில்களில் தேவைக்கு அதிகமான பெண் பணியாளர்கள் இருந்தனர். இதனால் 1920க்கு முன்புகூட சிபாரிசில்தான் தேவதாசிப் பெண்கள் கோவில் பணியில் சேர்ந்திருக்கின்றனர்.

இங்கு சிபாரிசு என்பது ஒருவித சுயநலத்துக்கானது என்று எடுத்துக்கொள்ள வேண்டும். நாஞ்சில் நாட்டு நிலச்சுவாந்தரான ஒருவருக்கு வைப்பாட்டியாக இருந்த ஒருத்தியை அவருக்குப் பிடித்த ஊரில் குடியேற்ற வேண்டும் என்ற விருப்பம் காரணமாகத் தாசில்தாரிடம் செய்த சிபாரிசாக அது இருந்திருக்கிறது. 1905 — 20ஆம் ஆண்டுகளில் முறைப்படியாகச் சங்கீதம், நட்டுவாங்கம் படித்துத் தேவதாசியானவர்கள் மிகக் குறைவு என்று சொல்லிவிடலாம். நாஞ்சில் நாட்டுச் சுசீந்திரம் ஊர் இதில் விதிவிலக்கு. இதே காலகட்டத்தில் தஞ்சாவூர், திருவாரூர் கோயில் தேவதாசிகளின் நிலையைத் திருவிதாங்கூர் தேவதாசிகளுடன் ஒப்பிட முடியாது என்று சின்னக்குட்டி சொன்ன தகவல்களிலிருந்து நான் கிரகித்துக் கொண்டேன்.

தென்திருவிதாங்கூர் (இன்றைய கன்னியாகுமரி மாவட்டம்) கோவில்களில் இருந்த தேவதாசிகளில் பெரும்பாலோர் கோவில் பணியாளர்களாகவே இருந்தனர். இவர்கள் கலை வளர்ப்பதற்காகக் கோவில் பணியில் சேரவில்லை. இவர்கள் விழாக்காலங்களில் ஆடவும் செய்திருக்கிறார்கள். அந்த ஆட்டம் சதுர் நியதிக்கு உட்பட்டதில்லை. சின்னக்குட்டி 22 வயதில் ஆடிய ஆட்ட வகைகளை 90 வயதில் நினைவுப்படுத்திச் சுட்டிக் காட்டியபோதே தெரிந்துகொண்டேன். அவள் தன் இரண்டு மார்புகளையும் தொட்டு "இது ரெண்டும் நல்லா ஆடணும். அதுதான் அப்பம் ஆட்டம்" என்று சிரித்துக்கொண்டே சொன்னாள்.

திருவனந்தபுரம் பத்மநாப சுவாமி கோவில் திருவிழாவிற்கு நாஞ்சில் நாட்டுக் கோவில் பணிப்பெண்கள் மாட்டுவண்டியில் போன நிகழ்ச்சியைச் சின்னக்குட்டி ரசபாவத்துடன் சொன்னாள். அது ஸ்ரீமூலம் திருநாள் அரசர் (1885 — 1924) காலத்தில் நடந்திருக்கலாம். நாகர்கோவில், பூதப்பாண்டி, பறக்கை, திருப்பதிசாரம் போன்ற ஊர்களிலிருந்து 12 பேர் ஒரு தபால் வண்டியில் (தபால் கொண்டு செல்லப்படும் மாட்டுவண்டி) செல்வதற்கான தயாரிப்புகளை கட்டிவிடும்.

திருவனந்தபுரம் ஆரியசாலையில் அப்போது தமிழ் பேசுகிறவர்கள் பெருமளவில் இருந்தார்கள். ஆரியசாலையில் கச்சவடமுக்குப் பகுதியில் சுப்பையா

பிள்ளையின் கிட்டங்கிதான் தேவதாசிகளின் தாவளம். சுப்பையா பிள்ளைக்குத் திருவனந்தபுரம் கொட்டாரம் (அரண்மனை) அந்தப்புரத்துக்கு ஈஞ்சையும் பிற குளியல் சாதனங்களும் வினியோகிக்க வேண்டிய பொறுப்பு உண்டு. அதற்காகத் தென் திருவிதாங்கூர் மலைப்பகுதியில் நுழையும் உரிமை உண்டு. இதனால் அவர் லட்சமாகச் சம்பாதித்துவிட்டார்.

ஈஞ்சை, சீவைக்காய் என அவர் வண்டியில் கொண்டுவந்து கச்சவட முக்குக் கிட்டங்கியில் வைத்திருப்பார். அதோடு பத்மநாப சுவாமி கோயிலுக்கும் ஊட்டுப்புரைக்கும் வேண்டிய காட்டு நெல்லிக்காய், மாங்காய், புளி என மலைப்பகுதியில் கிடைத்தவற்றையும் வினியோகிக்கக் கிடைத்த உரிமையும் அவரைப் பிரபலமாக்கிவிட்டது. நாஞ்சில் நாட்டுக்காரரான அவர் தேவதாசிகளுக்காகக் கிட்டங்கியை ஒதுக்கிக் கொடுத்ததும் திவான் பேஷ்காரின் தயவு வேண்டித்தான்.

கச்சவட முக்குக் கிட்டங்கியில் சின்னக்குட்டியைப் பார்த்த சுப்பையாபிள்ளைக்கும் பிடித்துப் போயிற்று. 18 — 19 வயதில் அவள் எப்படி இருந்திருப்பாள் என்பதை என்னால் அனுமானிக்க முடிந்தது. சின்னக்குட்டி கோவில் பணியை ஏற்று ஆறு வருஷம் ஆயிருக்கும். இந்தக் காலங்களில் அவள் இரண்டு மூன்று மூத்த பிள்ளைகளிடம் தொடர்பு வைத்திருக்கிறாள். சுப்பையாபிள்ளையிடம் ஏற்பட்ட உறவும் அகஸ்தமாய் வந்ததுதான்.

தேவதாசிகள் பொட்டுக்கட்டிவிட்டு கோவில் டிரஸ்டிகளான யோகக்காரர்களிடம் அனுமதி வாங்கி முறைப்படியாகச் சங்கீதமும் நடனமும் படித்துவிட்டுத்தான் கோவிலுக்குள் நுழைய வேண்டும் என்பதெல்லாம் 1900இல்கூட முறைப்படியாக நடக்கவில்லை. திருவிதாங்கூரின் கிழக்கிந்தியக் கம்பெனிப் பிரதிநிதியாக இருந்த கர்னல் மன்றோ 1812இல் கோவில்களை அரசுடைமையாக்கியபோது யோகக்காரர்களின் கெடுபிடி கட்டுக்குள் வந்தது. இது தேவதாசிகளுக்கும் சில உரிமைகளைக் கொடுத்தது. இதன்பிறகு கோவில் பணியாளர்களாகவே பெருமளவில் நடத்தப்பட்ட தேவதாசிகளைக் கோவில் நிலங்களை நிர்வாகம் செய்த நாஞ்சில் நாட்டு வேளாளர்கள் சிபாரிசு செய்தனர்.

சின்னக்குட்டியைப் பறக்கைக் கோவிலுக்குச் சிபாரிசு செய்த மூத்த பிள்ளையும் சுயநலத்தோடுதான் செய்திருக்க வேண்டும். பலதார மணம் இருந்த காலம் அது. இந்தக் காலங்களில் சுசீந்திரம், கன்னியாகுமரி கோவில்களில் மட்டுமே முறைப்படி பாடுதல் ஆடுதல் என்னும் வழக்கம் இருந்தது. ஜெயதேவரின் அஷ்டபதியைச் சுசீந்திரம் கோயிலில் தேவதாசிகள் பாடினார்கள் என்ற செய்தியைக் கே.கே. பிள்ளையின் புத்தகத்தில் படித்துவிட்டு சின்னக்குட்டியிடம் கேட்டபோது அஷ்டபதியா? யாருக்குத் தெரியும். சுசீந்திரத்தில் அஷ்ட கோணலான நட்டுவாங்க அய்யர் இருந்தாரு; அவரத்தான் தெரியும் என்றாள். நாஞ்சில் நாட்டுக் கோவில்களில் கட்டியம் பாடிய தமிழ் பிராமணர்களின் பாட்டுக்கும் பேச்சுக்கும் குரவையிடுவது, கைதட்டுவது என்பதுடன் மட்டுமே அன்றைய தேவதாசிகளின் கலை ஆர்வம் இருந்தது.

சின்னக்குட்டியிடம் நான் சேகரித்த தகவல்களிலிருந்து ஒன்று புரிந்தது. தமிழகத்தில் இருபதாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் கோவில்களில் தேவதாசிகளாகப் பணியாற்றியவர்கள் எல்லோருமே கலை வளர்ப்பதற்காகக் கோவிலில் நியமனம் செய்யப்பட்டவர்கள் அல்லர். தென்திருவிதாங்கூர் கல்வெட்டுகளில் தேவதாசிகள் பற்றி வரும் செய்திகளுடன் சின்னக்குட்டி சொன்ன செய்திகளைக் கொஞ்சமும் ஒப்பிட முடியாது என்று அவள் பேசுகின்றபோதே தெரிந்து கொண்டேன்.

மலையாளத்தைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் திருவிதாங்கூர் கோவில்களில் பணியாளர்களாக நியமனம் செய்யப்பட்டபோது அச்சிகள் (வைப்பாட்டிகள்) என்னும் முத்திரையுடன்தான் இருந்தனர். இவர்கள் வெறும் சோற்றுக் கட்டிகளுக்காகப் பணிசெய்தவர்கள். கோவிலில் பெருக்கவும் பாத்திரம் தேய்க்கவும் தானியங்களைப் புடைக்கவும் செய்தார்கள். கோவில் நிர்வாக உறுப்பினர்களின் வைப்பாட்டிகளாக இருந்து பெற்ற உபரி வருமானமே இவர்களின் அந்தஸ்தை உயர்த்தியது. மலையாளப் பிராமணர்கள் இவர்களை வெறும் போகம் தரும் சாதனமாக வைத்திருந்தனர். நாயர்களும் வேளாளர்களும் சற்று ஒருபடி மேலே முறைப்படியான அச்சிகள் என்னும் அந்தஸ்தைக் கொடுத்திருந்தனர். அச்சி யாருக்கு வைப்பாக இருந்தாள்

என்பதைப் பொறுத்து அவளின் சமூக அந்தஸ்து மதிப்பிடப்பட்டது. தென்திருவிதாங்கூரில் ஒரு பகுதியான இடநாட்டுக் கோவில்களில் இருந்த இந்த நிலை நாஞ்சில் நாட்டுக்கும் ஓரளவு பொருந்தும்.

சின்னக்குட்டி திருவனந்தபுரம் சாலை கச்சவட முக்கு சுப்பையாபிள்ளையின் கிட்டங்கியில் இருந்த படுக்கையை அவருடன் பகிர்ந்துகொண்டதற்கு அவர் நாஞ்சில் நாட்டுக்கு வரும்போது தன்னைக் கவனித்துக்கொள்வார் என்பதற்குத்தான். சின்னக்குட்டியின் அம்மா சாடைமாடையாகச் சொன்னதால் ஏற்பட்ட கனவு அது. கடைசி வரை அது பலிக்கவில்லை. அப்போதெல்லாம் ஆறாட்டுக்காகக் கச்சவட முக்கில் தங்கும் தேவதாசிகளின் தலையில் கணிசமான அளவுக்கு மல்லிகைப் பூ இருக்கும். ஆரிய சாலையில் குடியிருந்த வேளாளர் வீட்டுப் பெண்கள் ஆறாட்டு முடியும் மட்டும் கவனமாகத்தான் இருப்பார்கள். தலையில் நிறையப் பூ வைத்தாலே கச்சவட முக்குக்காரி மாதிரி எனக் குத்திக்காட்டும் பேச்சு வழக்குகூட அப்போது உண்டு.

தென்திருவிதாங்கூர் கோவில்களில் பணிசெய்த பெண்கள் தேவதாசிகள் என்னும் முத்திரையுடன் கொத்தடிமைகளாக இருக்கவில்லை. இதுபற்றி பெரிய அளவில் பதிவு செய்யப்படவில்லை. கோவில் நிர்வாகத்தைப் பகைப்பது என்பது தேவதாசிகள் வாழும் வீட்டையும் கோவில் கட்டிச் சோற்றையும் விட்டுக் கொடுப்பதன் அடையாளம்தான். கோவில் நிலங்களைக் கவனித்த வேளாள நிலச்சுவாந்தார்கள், கோவில்களில் காராண்மையாகப் பணி செய்த பெண்களை வைப்பாக வைத்திருந்ததன் ரகசியமும் இதுதான்.

19ஆம் நூற்றாண்டின் பாதியில் தென்திருவிதாங்கூரில் அடிமைமுறைக்கு எதிராகக் கிறிஸ்தவ மிஷனரிகள் நடத்திய பிரச்சாரத்துக்குப் பலன் கிடைத்தது. இதே காலகட்டத்தில் கொத்தடிமைகளாக இருந்த தேவதாசிகளுக்குக் கோவில் நிர்வாக முறை மாறியதால் ஏற்பட்ட நிகழ்வு நெகிழ்வை ஏற்படுத்தியிருக்கிறது. சின்னக்குட்டியின் தாய்வழிப் பாட்டி கிருஷ்ணம்மா வழி கேட்ட செய்திகளின் சாராம்சம் இதுதான்.

1812க்கு முன் கோவில்களின் நிர்வாகப் பொறுப்பு நம்பூதிரிகளுக்கு இருந்தது. கோவில் நிலங்களை நாயர் அல்லது வோளாளர்கள் கவனித்தனர். இதனால்

இந்த மூன்று சாதிகளையும் அனுசரிக்க வேண்டிய சூழல் தேவதாசிகளுக்கு இருந்தது. இது திருவிதாங்கூரின் நிலை. 1812இல் திருவிதாங்கூர் கோவில்கள் எல்லாம் அரசு உடைமையாயின. கோவில்களின் பொறுப்பை வருவாய்த்துறை கவனித்துக் கொண்டது. இது 1922 வரை. ஆக 1812 முதல் 1922 வரையுள்ள 90 ஆண்டுகளில் நம்பூதிரி, நாயர், வேளாளர் ஆகிய மூவரும் கோலோச்சிய இடத்திற்கு வருவாய்த் துறை அதிகாரிகள் வந்தனர். இந்த அதிகாரிகளும் முன் குறித்த மூன்று சாதியினர்தாம். இந்த அதிகாரிகளும்கூட கோவில் பெண் பணியாளர்களை அடிமையாக நடத்தியதாகத் தெரியவில்லை.

நம்பூதிரிகள் எப்போதும் சாதிக் கலப்பற்ற நிலையைத் தக்கவைத்துக் கொள்பவர் ஆகையால் தேவதாசிகள் நாயர் அல்லது வேளாளர்களுடன் தங்களை இணைத்து சாதிய முத்திரையைக் குத்தவேண்டிய சூழ்நிலை 1812க்கு முன்பே ஆரம்பித்துவிட்டது. சின்னக்குட்டியிடம் நான் நாஞ்சில் நாட்டுத் தேவதாசிகளின் முந்தைய மரபினர் வேளாளர்கள் என்று தங்களைக் கூறிக்கொள்ளுகிறார்களே; இதற்கு என்ன காரணம் என்று கேட்டபோது அவள் கேள்வியைப் புரியாமலே சொன்ன நீண்ட பதில் எனக்குத் தெளிவைக் கொடுத்தது. இதே கருத்தாக்கத்தைத் தமிழகத்தின் பிற பகுதிகளுக்கும் பொருத்திப் பார்க்கலாம்.

கோவில்கள், வருவாய்த்துறையின்கீழ் இருந்த காலங்களில் உயர் அதிகாரிகளும் அவர்களின் குடும்பத்தினரும் நாஞ்சில் நாட்டுக் கோவில்களுக்கு வந்தபோது அவர்களைக் கவனிக்க வேண்டிய பொறுப்பு இளம் தேவதாசிகளுக்கு இருந்தது. திருவிதாங்கூரின் இரண்டாம் தலைநகராக பத்மநாபபுரம் ஆனபோது (1790இல் திருவனந்தபுரம் திருவிதாங்கூரின் தலைநகர் ஆனது) பத்மநாபபுரம் கோட்டைக்குள் இருந்த அரச குடும்பத்துப் பெண்கள் நாஞ்சில் நாட்டுக் கோவில்களுக்கோ கோவில் விழாக்களுக்கோ வரும்போது கோவிலை அடுத்த கொட்டாரத்தில் (சிறிய அரண்மனை) தங்கியபோது அந்தக் கோவில் தேவதாசிகளே அவர்களுக்குச் சிருஷை செய்தனர். அந்தப் பெண்களின் சர்வாங்க மஞ்சள் தேய்ப்பு — ஈஞ்சை தேய்ப்பு வெந்நீர் குளியலுக்கு உதவியதுமான பழைய கதைகளைச் சொன்னபோது,

தங்களுக்குத் திவானின் அந்தஸ்து இருந்த மாதிரியான பெருமையோடுதான் சின்னக்குட்டி என்னிடம் எழுபதுக்களில் பேசினாள்.

நாஞ்சில் நாட்டுக் கோவில்களில் தமிழ்த் தேவதாசிகள் பணியாளர்களாகப் பெருமளவில் இருந்தாலும் திருவிழாக் காலங்களில் வாகனத்தின் முன்னே பல கவர்கள் கொண்ட பந்தத்தின் வெளிச்சத்தில் ஆடும் மரபு இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இருந்தது. அந்த ஆட்டம் எப்படி என்று நான் கேட்டபோது சின்னக்குட்டி சுசீந்திரம் கோணல் நட்டுவாங்க அய்யர் முலைக் கச்சையைத் தூக்கிக் கட்டிற்று ஆடு என்று சொன்னதை நினைவுபடுத்தினாள். அவளது பேச்சிலிருந்து இன்றைய கரகாட்ட ரசிகர்களைப் போன்றுதான் அன்றும் விழா ஊர்வலத்துடன் சென்ற பிரமுகர்கள் இருந்தார்கள் என்று ஊகித்துக் கொண்டேன்.

சின்னக்குட்டி கச்சவட முக்கில் கடைசி முறையாகச் சுப்பையாபிள்ளையைச் சந்தித்தபோது கிடைத்த தங்கச் சங்கிலியை முப்பது வயதுவரை வைத்திருந்ததாகச் சொன்னாள்.

**உங்கள் நூலகம், ஏப்ரல் — மே 2008**

## சின்னக்குட்டி பிடித்த பச்சைப்பாம்பு

எனக்கு அறிவு தெரிந்த காலத்திலிருந்தே சின்னக்குட்டி ரவிக்கை அணிந்ததே இல்லை. அவளை நான் தேவர்குளம் ஊரில் சந்தித்த சமயத்தில் இதுபற்றிப் பேச்சுவாக்கில் கேட்டபோது நாற்பது வயதிற்கு முன்பே ரவிக்கை போடுவதை விட்டதாகச் சொன்னாள். அப்போது அது சாதாரணமான விஷயம்.

நாஞ்சில் நாட்டில் முன்கொசுவம் கட்டுவது, ரவிக்கை உடுப்பது என்பதும்கூட மகளுக்குக் கல்யாணமாகி மருமகன் வருவதுவரைதான். அதன் பிறகு 18 முழக்கண்டாங்கியைச் சுற்றிக்கட்டி நீளவாக்கில் மேலே போடுவதுதான். மாராப்பை இழுத்துக் கட்டுவதற்குத் தோதான கட்டு இது. இப்படி மாராப்பைக் கட்டியபடி இருப்பது ரவிக்கை போடுவதைவிட சௌகர்யம். அப்போது அடிப்பாவாடையும் மார்புக்கச்சையும் (Bra) அறிமுகம் ஆகவில்லை.

உண்பது நாழி உடுப்பது இரண்டே என்பது இலக்கியத்தில்தான். 18 முழக்கண்டாங்கியை ஒரே சுற்றாகச் சுற்றி மாராப்பைக் கட்டி மேலே போடுவதுடன் சரி. அப்படியானால் உடுப்பது ஒன்றுதான். ஆண்களுக்குத்தான் மேல்துண்டு, வேட்டி, கோவணம் என மூன்று.

கேரளப் பெண்கள் ஈரிழைத்துவர்த்தை இடையில் கட்டிவிட்டு அதன்மேல் முண்டு (வேட்டி) உடுப்பது பொதுவான முறை. இதை எல்லாம் விலாவாரியாக விவரித்த சின்னக்குட்டி அப்போ எல்லாம் வேதக்காரங்கதான் பேஷன் என்றாள்.

அன்று பாமர மக்களால் வேதக்காரர்கள் எனப்பட்ட புரட்டஸ்டென்ட் கிறித்தவம் தென் திருவிதாங்கூருக்கு வந்த (1805) ஐம்பது ஆண்டுகளுக்குள்ளேயே சின்னக்குட்டியின் சொந்த ஊரான பறக்கையை அடுத்துக் குளத்துவிளை கிராமத்தில் அறிமுகமாகிவிட்டது. தென்திருவிதாங்கூரின் இரண்டாவது மதபோதாகராகக் கருதப்பட்ட மீட் என்பவரின் மனைவி பெண்களின்

உள்ளாடை வடிவமைப்புத் தையல் நுட்பத்தை 1820 அளவில் சொல்லிக் கொடுத்திருக்கிறார்.

சின்னக்குட்டியின் பேச்சில் வேதக்காரங்க இரெந்தா தச்சுப் போடுவதைக் கூறினாள். இரெந்தா என்பது Lace என்பதைப் பிறகு தெரிந்துகொண்டேன். 19ஆம் நூற்றாண்டில் அடிப்பாவாடை அறிமுகமானபோது பாவாடையின் அடிப் பகுதியில் பூவேலைப்பாடுள்ள Lace வைத்துத் தைப்பது உச்சகட்ட நாகரிகம்.

தென்திருவிதாங்கூர் பகுதிகளில் புராட்டஸ்டென்ட் கிறித்தவர்கள் இருந்த கிராமங்களை அடுத்து வாழ்ந்த பிற சமயப் பெண்களின் உடையில் மாற்றம் வந்தது. இப்படித்தான். 1872 அளவில் தென் திருவிதாங்கூரிலிருந்து வெளிவந்த 'மாதர்போதினி' என்னும் தமிழ்ப் பத்திரிகையில் அடிப்பாவாடை பற்றி வந்த அறிவியல் ரீதியான கட்டுரையை நான் நாகர்கோவில் டையோசியஸ் நூல் நிலையத்தில் பார்த்தபோதுதான் (1993) சின்னக்குட்டி சொன்னதன் அர்த்தம் புரிந்தது.

அடிப்பாவாடை அறிமுகமானபோது சின்னக்குட்டியைப் போலப் பல பெண்கள் அதை உள்ளாடையாக நினைத்து ஒதுக்கியதற்கு மரபுவழிப் பழக்கவழக்கங்கள் காரணமாக இருந்திருக்கலாம். பெண்களின் தீட்டுக் காலங்களில் வீட்டின் ஒதுக்குப் புறத்தில் இருக்க வேண்டும். அவர்களைத் தொடுவதும் தீட்டானது. அவர்கள் அந்த மூன்று நாட்களிலும் குளிக்கக்கூடாது என்ற வழக்கங்களை அப்போது விமர்சித்த வேதக்காரச் சமயப் பணியாளர்கள், இக்காலங்களில் உடல் சுத்தமாக இருப்பது எப்படி என்றும் சொல்லியிருக்கின்றனர். 'மாதர்போதினி' இதழ் கட்டுரையின் சாராம்சமும் இதுதான்.

உடல் ரீதியான சுத்தத்துக்காக உடுப்பது அடிப்பாவாடை என்பதை ஏற்றுக்கொள்ளாத பலரில் சின்னக்குட்டியும் ஒருத்தியாக இருந்தாள். அப்போது முன்கொசுவம் உடுத்த பெண்கள் உள்ளாடையை உடுத்த பின்பு சாரி கட்டுவது என்ற பழக்கத்தைப் பின்பற்றியபோது, திருவனந்தபுரம் கச்சவடமுக்கு தேவதாசிகள் தலை நிறைய பூ வைத்த மாதிரி என்று முத்திரை குத்திப் பழித்து விமர்சித்தார்கள். என்றாலும் அது ஐம்பதுகளில் பரவலானது.

இரண்டாம் உலக மகாயுத்தத்தின்போது தென்திருவிதாங்கூரில் நிலவிய துணிப் பற்றாக்குறையால் அடிப்பாவாடை கட்டுவது என்பது நடுத்தரவர்க்கத்தினரிடம் பரவலாகவும் அதற்குக்கீழ் உள்ளவர்களிடம் முற்றிலுமாக இல்லாமலும் இருந்தது.

நான் சின்னக்குட்டியிடம் அந்தக் காலப் பெண்கள் மாராப்பு போடுவதைப் பற்றிய பழைய விஷயங்களைக் கிளறினேன். அவள் தன் சின்ன வயது நினைவுகளைத் துண்டுதுண்டாகச் சொன்னாள். சுற்றி வளைத்து வேறு விஷயங்களைக் கலந்து பேசுவது என்ற சின்னக்குட்டியின் பொதுவான பேச்சிலிருந்து எனக்குத் தேவையானதைப் பிரித்து ஒட்ட வைத்தபோது சில விஷயங்கள் புரிந்தன.

காலச்சுவடு பதிப்பகத்திற்காக கவிமணியின் 'மருமக்கள் வழி மான்மிய'த்தை வெளியிட நான் தகவல் சேகரிக்க அலைந்தபோது அரிய புகைப்படங்களும் கிடைத்தன. திருமணமானவுடன் பெண்ணும் மாப்பிள்ளையும் குடும்பத்தினரும் எடுத்த புகைப்படம் ஒன்றில் ஆண்கள், பெண்கள், உறவினர்கள் எனப் பலர் இருந்த படம் ஒன்றைப் பார்த்தேன். அவர்களில் இளைஞர்கள் பெரியவர்கள் என எல்லோருமே மேல்துண்டு மட்டும் போட்டிருந்தனர். இரண்டு பெண்களுக்கு ரவிக்கை இல்லை. அவர்கள் நாற்பது வயதுக்கு உட்பட்டவர்கள். இது 1920இல் எடுத்த படம். இதுபோல் மூன்று படங்களைப் பார்த்தேன்.

1900 – 1910இல் பெண்கள் மார்பை மறைக்காமல் அரையாடையுடன் இருந்தார்களா என்ற கேள்வியைச் சின்னக்குட்டியிடம் அவளது வயதை ஞாபகப்படுத்தி அவளது ஆச்சி சொன்ன செய்திகள் உண்டா என்பதையும் சொல்லிக் கேட்டேன். அப்போது சின்னக்குட்டி பரம்பரையாகக் கேட்டதும் தெரிந்ததுமான செய்திகளைச் சொன்னாள்.

அந்தக் காலத்தில் (அவள் கணக்குப்படி 19ஆம் நூற்றாண்டு) பருவமடைநத சிறுமிகளை வெளியே அனுப்பும்போது பனையோலை ரவிக்கையால் இரண்டு மார்புகளையும் மறைக்கும்படி கட்டிவிடுவார்களாம். ஒரு வகையில் இது துணியால் செய்யப்பட்ட பிரா போன்றது. இது குறிப்பிட்ட சாதிக்காரங்களுக்கு மட்டும்தான்.

என் நண்பர், கன்னியாகுமரி மாவட்ட மிஷனரி மருத்துவர் களின் தொண்டு பற்றி கேரளப் பல்கலைக்கழகப் பிஎச்.டி. ஆய்வுக்காகக் களஆய்வு மேற்கொண்டபோது, கல்குளம் வட்டம் கிராமம் ஒன்றில் ஒருவரின் வீட்டுப்பரணில் ஓலைப் பிராவைப் பார்த்ததாகச் சொன்னார். அந்த நண்பர் அதைத் தன்னுடைய வீட்டிற்கும் கொண்டு சென்றிருக்கிறார். அவருடைய இறப்பிற்குப் பிறகு அவர் சேகரித்த அபூர்வமான பொருட்களுடன் இந்த ஓலைப் பிராவும் திருவனந்தபுரம் ஆராய்ச்சியாளர் ஒருவரின் வீட்டிற்குச் சென்றுவிட்டது என்று அறிந்தேன்.

தென்திருவிதாங்கூர் தேவதாசிகள் முறைப்படியாக விண்ணப்பித்துக் காது தோடு கழற்றிய (கோவில் தேவதாசிப் பணியிலிருந்து ஓய்வு பெறுதல் தோடு கழற்றல் எனப்படும்) நிகழ்ச்சிக்குப் பின்னர், வெறும் ஈரிழைத் துவர்த்தால் மட்டுமே மார்பை மூடிக்கொண்டு கோவிலுக்கு வருவது என்பது 19ஆம் நூற்றாண்டின் கடைசியில்கூட நடைமுறையில் இருந்திருக்கிறது. இப்படியான தோடு கழற்றி ஓய்வு பெறும் நிகழ்ச்சிக்கு 58 வயதாக வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. 42 வயதானாலும் தேவதாசிப் பணியிலிருந்து ஓய்வு பெறப்போகிறேன் என யோகக்காரர்களிடம் (கோவில் நிர்வாகிகள்) விண்ணப்பித்து விட்டுத் தோடு கழற்றிவிடலாம். இந்த வயதிலும் வெற்று மார்பை வெறும் துண்டால் மறைத்துவிட்டு வருவது விகற்பமாய்க் கருதப்படவில்லை.

சுசீந்திரம் சிவன்கோவில் பற்றிய புத்தகம் எழுத, அந்த ஊரின் வயதான மனிதர்களைச் சந்தித்தபோது (2007) தேவதாசிகளின் வாழ்வு, ஆடை அணியும் முறை பற்றியும் செய்திகள் சேகரித்தேன். முப்பது ஆண்டுகளுக்கு முன்பு சின்னக்குட்டி சொன்ன தகவல்கள் 2007இல் கேட்ட செய்திகளுடன் ஒத்துப்போயின.

19ஆம் நூற்றாண்டின் கடைசியில்கூட வெற்று மார்பை வெறும் துண்டால் மறைப்பதும் தெப்பக்குளத்தில் அரையாடையுடன் குளிப்பதும் விகற்பமாய்க் கருதப்படவில்லை. இது மத அரசியலாக்கப்பட்டு கலவரத்திற்குரியதாகப் பெரிதுபடுத்தப்பட்ட பின்பு தீவிரம் அடைந்திருக்கிறது. குறிப்பிட்ட சாதியினர்

மேலாடை அணியத் தடை என்ற செய்தி மிகைப்படுத்தல் என்பது சின்னக்குட்டியிடம் நீண்ட நேரம் உரையாடி தகவல்களிலிருந்து அறிந்தேன். மேலாடையில்லாமல் பெண் இருந்தாள் என்பது பரவலாய் எல்லாச் சமூகத்தினரிடமும் உள்ள பழக்கம்தான். இது சூழல், பொருள் நிலை பொறுத்தது. எனக்குக் கிடைத்த தகவல்கள் இதை உறுதிப்படுத்தின.

சுசீந்திரம் கோவில் கோபுரத்தில் ஏழு நிலைகளிலும் உள்ள வண்ணச் சுவரோவியங்களை முழுதுமாகப் பத்துக்கு மேற்பட்ட முறை பார்த்துப் பதிவு செய்தபோது என் தகவல்கள் சரி என்று முடிவுக்கு வரமுடிந்தது. இக்கோயில் இரண்டாம் மாடியின் வாசல்படியில் இடது பக்கச் சுவரில் திறந்த மார்புடன் நிற்கும் பெண் ஓவியமும் அதையடுத்த வரிசையில் உள்ள சித்திரங்களும் இதை உறுதிப்படுத்துவன. இந்த ஓவியங்கள் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் வரையப்பட்டவை. இதுபோலவே, இந்த நூற்றாண்டில் செய்யப்பட்ட இக்கோவில் வெளிப்பிரகாரப் பாவைவிளக்குச் சிற்பங்களும் மேலாடை இன்றியே உள்ளன.

கன்னியாகுமரி மாவட்டம் பன்னிரு சிவாலயங்களில் ஒன்றான திருவிதாங்கோடு சிவன் கோவில் வெளிப்பிரகாரத் தூண்களில் உள்ள 70க்கும் மேற்பட்ட பாவைவிளக்குப் பெண் சிற்பங்களுக்கு மேலாடை இல்லை. இந்தச் சிற்பங்களின் வயது தெரியும்படியான தோற்றம் உள்ளது. இளம் பெண், வயதான பெண் குழந்தையைக் கையில் வைத்திருக்கும் நடுத்தர வயதுப்பெண் என எல்லாச் சிற்பங்களுக்கும் மேலாடை காட்டப்படவில்லை. முலைக்கச்சுக்கூட இல்லை.

இந்தச் சிற்பங்கள் 16, 17ஆம் நூற்றாண்டின. இவைபோன்று நிறைய உதாரணங்களைக் காட்ட முடியும்.

***

தருமபுரம் மடத்தில் சைவ சித்தாந்தமும் கைவல்லியச்சாமி என்பவரிடம் சித்தர் பாடல்களும் செய்குத்தம்பிப் பாவலரிடம் இலக்கணமும் படித்த பரதேசியாபிள்ளையின் 80ஆம் வயதில் நான் யாப்பருங்கலக்காரிகை பாடம்

கேட்டபோது இன்னிசை வெண்பாவின் உதாரணமாக 'கூத்தாள் விழிகள் நெடும் கூர்வேலாம்' என்ற பாடலைச் சொல்லி அதன் அர்த்தத்தை விளக்க ஆரம்பித்துக் கடைசியில் சின்னக்குட்டியின் கதைக்கு வந்து சேர்ந்தார்.

நான் கல்லூரியில் படித்த காலத்தில் என் ஊரில், குளத்தின் கரையில் இருந்த திருவாவடுதுறை ஆதீன மடத்திலேயே பெரும்பாலான நேரத்தைச் செலவழித்தேன். அந்த மடத்தின் தலைவரான முருகலிங்கத்தம்பிரானைச் சுற்றி 80 வயதுக்குக் குறையாத முதியவர் கூட்டம் எப்போதும் இருக்கும். அவர்களின் உற்சாகப் பேச்சில் வாழ்க்கையின் சலிப்பு வராது; எனக்கு அவர்களிடம் இருந்த கவர்ச்சியே அதுதான்.

அந்தக் கிழவர்களில் யாரோ ஒருவர் நடிகை டி.ஆர். ராஜகுமாரியைப் பற்றிப் பேச ஆரம்பித்தபோது எல்லோரும் நிமிர்ந்து உட்கார்ந்தார்கள். அவர்களின் கண்களில் பொங்கிய பரவசத்தையும் ஆர்வத்தையும் சின்னக்குட்டியைப் பற்றிப் பேசிய பரதேசியாபிள்ளையின் கண்களில் பார்த்தேன். அது பிள்ளைக் காதல் என்று பேச்சுவாக்கில் அவர் ஒருமுறை சொன்னார்.

மூத்த பிள்ளைகளுக்கு சின்னக்குட்டியிடம் இருந்த கவர்ச்சி, அவளது கட்டான உடம்பு வடிவத்தாலோ மினுமினுப்பான நிறத்தாலோ வந்ததல்ல. அவளின் கைமணச் சமையலுக்கும் தனி மவுசு இருந்தது. ஆண்கள் மட்டுமல்ல பெண்களுக்கும் அவளிடமிருந்த கவர்ச்சிக்கு இதுதான் காரணம். வாயில் வைக்க யோசிக்கும் குழம்பில் இரண்டு உப்புக்கல்லைப் போட்டு அகப்பையால் ஒரு கலக்குக் கலக்குவாள். அவ்வளவுதான். அந்தக் குழம்பின் சுவையே மாறிவிடும்.

நாஞ்சில் நாட்டுக் கறுத்தக்கறி, எண்ணெய்க் கத்திரிக்காய்த் தீயல், மொச்சைக் கொட்டைத் தீயல், மீன் புளிமொளம், சக்கா புளிக்கறி எனக் குழம்பு வகைகளையும் கூட்டவியல், இடிச்சக்கா துவரன், வறுத்தரச்ச துவையல், எரிசேரி என்னும் கறிவகைகளையும் சாப்பிடுவதற்கென்றே அவளிடம் தொடர்பு வைத்த வேளாண் நற்குடிப் பெருமக்கள் உண்டு.

சுற்றுவட்டாரப் பெண்களிடம் அவள் பச்சைப்பாம்பைக் கையால் உருவியவள் என்ற பேச்சுவாக்கும் உண்டு. நான் இதுபற்றிச் சின்னக்குட்டியிடம் கேட்டபோது அதை விரிவாகவே சொன்னாள். பெண் பருவமடையும் சமயத்தில் அல்லது அதற்கு முன்பே வலது கையால் பச்சைப் பாம்பை உருவிவிட்டால் அவளது கைபட்ட சமையலுக்குத் தனி ருசி வந்துவிடும்; இது வாழ்நாள் முழுக்க மாறாது. இப்படி ஒரு நம்பிக்கை உண்டு.

சின்னக்குட்டியின் அம்மாவுக்குச் செலவுக்குக் கொடுத்த சின்னத்தம்பியாபிள்ளையின் ஏற்பாட்டில் சுசீந்திரம் ஊர் ஆற்றங்கரையில் வசித்த மலையாண்டிக் குழுவன் பச்சைப் பாம்பைப் பிடித்து வந்தான். அதை அவளது வீட்டுப் பின்வாசலில் நீண்ட கயிற்றில் கட்டித் தொங்கவிட்டான். அப்போது சின்னக்குட்டி சிறுமி, அவளுக்கு 12 — 13 வயது இருக்கலாம். அவளைக் கோவில் தேவதாசியாக நியமனம் செய்ய சுசீந்திரம் சம்பிரதிப்பிள்ளை (இது ஒரு பதவி) சிபாரிசு செய்துகொண்டிருந்த காலம். இது 1910 — 12இல் இருக்கலாம்.

சின்னக்குட்டியின் கண்களைத் துணியால் கட்டி பின் வாசலுக்கு அழைத்துச் சென்று அவளது வலது கையைப் பச்சைப் பாம்பின் நடுக்கண்டத்தில் தொடும்படி செய்து மூன்று முறை உருவிவிடச் சொன்னாளாம். அவளும் பாம்பைக் கண்ணால் பார்க்காமல் அம்மா சொன்னதைச் செய்தாள்.

இதையெல்லாம் சொல்லிவிட்டுச் சின்னக்குட்டி கைமணக்கச் சமைத்த காலம் எல்லாம் போயி கட்டிச்சோற்றுக்கு உப்பு மிளகு நுணுக்கி எண்ணெய்விட்டுக் குழப்பித் தின்ன காலமும் போய் இப்ப தேவர்குளத்தில் சோளக்காடி குடிச்சுட்டு வாழுதேன். அந்தப் பகவான் இன்னும் என்னவெல்லாம் வச்சிருக்கானோ என்று சொல்லிக்கொண்டே வானத்தைப் பார்த்து இரண்டு கைகளைக் கூப்பித் தொழுதாள்.

அவள் என்னிடம் உரையாடியபோதெல்லாம் கோவிலில் தேவதாசியாகப் பணி செய்ததை உயர்வாகவே கருதிப் பேசினாள். தேவதாசியாகக் கோவிலில் ஆடிய நிகழ்ச்சியைச் சொன்னபோது தான் தயங்கினாள். மற்றபடி அவளுக்குப் பொதுவான கோவில் ஈடுபாடு இருந்தது. நான் சின்னக்குட்டி யைச் சந்தித்து 30

ஆண்டுகள் கழித்து திருவட்டாறு ஆதி கேசவப்பெருமாள் கோவிலில் பணிபுரிந்த வயதான பெண்ணிடம் (அவளும் நிலச்சுவாந்தாரான ஒரு நாயரின் அச்சியாக (வைப்பாட்டி) இருந்தவள்) பேசியபோதும் அதைக் கவனித்தேன்.

'தமிழகத்தில் அடிமை முறை' என்னும் நூலில் ஆ. சிவசுப்பிரமணியம், பிற்காலச்சோழர் காலத் தேவரடியார் நிலை பற்றிக் குறிப்பிடுகிறார். கோவில் அதிகாரிகள் தண்டனை என்ற பெயரில் தேவரடியார்களைச் சித்திரவதை செய்த வழக்கம் 12ஆம் நூற்றாண்டிலும் இருந்தது.

திருவிடைமருதூர் சிவன் கோவிலில் அரதத்தன் என்ற சைவ அடியவர் கண்ட காட்சியை உ.வே.சா. நினைவு மஞ்சரியில் விவரிப்பதை ஆ. சிவம் மேற்கோள் காட்டுகிறார். அரதத்தன் ஆலயத்தினுள் நுழையும்போது ஒரு பெண்ணின் குரல் கேட்டது. 'இல்லை இனிமேல் இல்லை' என்று அவள் சொல்லிச் சொல்லி அழுதாள். எங்கிருந்து அந்த அழுகுரல் வருகிறது என்று அவர் கவனித்தபோது ஆலய வாசலில் . . . மணியக்கார அதிகாரி ருத்திர கணிகையர் சிலரை தண்டித்துக் கொண்டிருப்பதைக் கண்டார்.

பிற்காலப் பாண்டியர், நாயக்கர் காலத்தில் கோவில்களில் பணிபுரிந்த தேவரடியார்கள் ஓரளவு அடிமைகளைப் போலவே நடத்தப்பட்டனர் என்று ஆ. சிவம் சான்றுகளுடன் கூறுகிறார்.

ஆனால் திருவிதாங்கூர் தேவதாசிகள் பற்றி 1935 – 40 அளவில் தகவல்கள் சேகரித்த கே.கே. பிள்ளை கோவில் அடிமைகளாக அவர்கள் நடத்தப்பட்டனர் என்று கூறவில்லை. தேவனடியார்களின் பல்வேறு நிலைகளைக் கூறி, அவர்களின் அந்தஸ்துக்கேற்ப மதிப்பும் பணிகளும் இருந்தன என்றே கூறுகிறார்.

சோழநாட்டுத் தேவதாசிகளின் நிலைக்குத் திருவிதாங்கூர் தேவதாசிகள் மாறுபட்டவர்கள்; கலை நிகழ்த்துதல் உட்பட. கோவில் பணியாளரான பெண்களைத் தேவதாசிகள் என்று குறிப்பிடுவது போல் ஆண்களை எப்படி அழைப்பார்கள் என்ற கேள்விக்குச் சின்னக்குட்டி கோவில்காரன், கோவில் ஆம்பிள என்று கூறிய பதிலுக்குக் கல்குளம் வட்டம் திருவிடைக்கோடு

சடைப்பயர் கோவிலின் கல்வெட்டும், கல்குளம் நீலகண்டசாமி கோவில் கல்வெட்டிலும் சான்று இருப்பதை அண்மையில்தான் கண்டுபிடித்தேன்.

கன்னியாகுமரி மாவட்டக் கோவில் கல்வெட்டுகளில் தேவதாசிகளின் வீட்டு ஆண்கள் தேவபுத்திரர் என்று குறிப்பிடப்படுகின்றனர். இச்சொல் அபூர்வமாகவே காணப்படுகிறது. சின்னக் குட்டி சொன்ன கோவில் ஆள் என்பது தேவப்புத்திரருக்குச் சமமானது.

கோவிலுக்குச் சொந்தமான நிலங்களில் இவர்கள் வீடு கட்டிக்கொள்ள அனுமதி வழங்கியது பற்றிய சரியான வரலாற்றுச் சான்றுகள் கிடைக்கவில்லை என்றாலும் இது வேணாட்டாரின் இறுதிக் காலத்தில் நடந்திருக்கலாம். திருவிதாங்கூர் அரசரான மார்த்தாண்டவர்மா கோவில் நிர்வாகத்தில் தலையிட்டபோதும் கூட தேவதாசிகள் தொடர்பாக எந்தக் கட்டுப்பாடும் வரன்முறையும் கொண்டுவரவில்லை.

தேவதாசிக் குடும்பங்களுக்குக் கோவிலை அடுத்த பகுதியில் ஒதுக்கப்பட்ட வீடுகள் இருந்த இடம்கூட, அவர்களின் எண்ணிக்கையால் குறிப்பிடப்பட்டது. (ஏழாங்குடி, ஒன்பதாம்குடி) இந்த அடையாளம் அவர்களைக் கோவிலை விட்டுப் பிரிக்க முடியாததாய் ஆயிற்று. சந்நிதித்தெரு, மாடத்தெரு என்ற அடையாளமும் இவர்களை அடையாளம் காட்டின.

இவர்கள் கோவிலின் பணிகளைச் செய்வதில் காலந்தாழ்த்திய போதும், கோவில்களில் சிறு திருட்டைச் செய்தபோதும் இவர்களின் வீடுகள் பறிமுதல் செய்யப்பட்டிருக்கின்றன. இதுவே இவர்களின் அதிகபட்சத் தண்டனை.

தண்டனை பெற்று ஒதுக்கப்பட்டு கோவில் வீடுகளிலிருந்து வெளியேற்றப்பட்ட தேவதாசிப் பெண்கள் புளுக்க என்ற முன்னொட்டைப் பெற்றனர். ஒவ்வொரு சாதியிலிருந்தும் சாதிப் பிரஷ்டம் செய்யப்பட்டவர்களின் அடையாளத்தைக் காட்டும் முன்னொட்டு இது. ஒருமுறை நான் சேகரித்த

மலைபோல் தேக்குமரம்

தேக்குமரக் கட்டிலிலே

என்னைப் பெத்த அய்யா — உன்னப்
போட்டுக் குளுப்பாட்டலியே
முத்துமுத்தாய்த் தண்ணீரை — நான்
சொரிந்து பார்க்கலியே
திட்டிவாசல் கதவெடுத்து — உன்ன
கிடத்தியே வெள்ளம் விட்டா

என்ற பாடலில், வீட்டுக்குச் சொந்தமான கட்டில் இருக்கும்போது வாசல் கதவைக் கழற்றிப்போட்டுப் பிணத்தைக் கிடத்திக் குளுப்பாட்டுவதாக வருவதன் காரணம் என்ன என்று கேட்ட சமயம் அது புளுக்க சாதியினரின் பாடல் என்ற விடை கிடைத்தது.

குறிப்பிட்ட சாதியிலிருந்து ஒதுக்கப்பட்ட புளுக்க வகையறாவிற்கு மறுதலிக்கப்பட்ட உரிமைகள் பற்றிச் சின்னக்குட்டி பேசியதன் பொருள் அண்மையில்தான் எனக்குப் புரிந்தது.

சின்னக்குட்டி, தன் கடைசிக் கணவனான சிவஞானம் பிள்ளையுடன் மனஸ்தாபம் கொள்ளும்போதெல்லாம் கோவில் கட்டிச்சோறும் ஒண்ட வீடும் உண்டு என்று சொல்லுவாள். அப்போது தொனித்த அகங்காரத்தை முழுமையாக உணர்ந்திருக்கிறேன். தேவதாசிகளுக்கும் கோவிலுக்கும் உள்ள பிணைப்பே இதுதான்.

கன்னியாகுமரி பகவதி அம்மன் கோவிலில் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் நடந்த ஒரு களவு நிகழ்ச்சி பற்றி வாய்மொழிச் செய்திகள் உண்டு. இதைச் சின்னக்குட்டி வாய்வழியே சிறுவயதிலேயே கேட்டிருக்கிறேன்.

திருநெல்வேலி மாவட்டம் களக்காட்டுப் பகுதி மறவர் சிலரும் திருச்சிப் பகுதியில் உள்ள முஸ்லிம்கள் சிலரும் மாட்டு வண்டியில் கன்னியாகுமரிக்கு வந்து குமரி அம்மன் கோவிலிலிருந்த தங்க ஆபரணங்கள், பட்டு போன்ற பொருட்களைக் களவு செய்தனர். இதற்கு அடுத்த நாள் காவலர்கள் கோவில்

சந்நிதித் தெரு தேவதாசிகளைப் பிடித்து விசாரித்தனர். கோவில் ஆண்களை அடித்து மிரட்டினர்.

காவலரின் கொடுமை தாங்கமுடியாத இவர்கள் திவான் பேஷ்காரிடம் கூட்டமாய்ச் சென்று முறையிட்டனர். அவரது தலையீட்டால் தேவதாசிகள் விடுதலை செய்யப்பட்டனர். அப்போது தேவதாசிகள் கட்டிச்சோறுக்கும் வீட்டுக்குமாகத் தான் தங்கள் உரிமையை விட்டுக் கொடுக்க விருப்பமில்லாது இருந்தனர். இந்த நிகழ்ச்சி நடந்து ஆறு மாதம் கழித்து கிழக்கிந்தியக் கம்பெனிக் காவலரின் உதவியுடன் திருவிதாங்கூர் காவலர் உண்மைத் திருடர்களைக் கண்டுபிடித்துத் திருட்டுப் பொருட்களை மீட்டனர்.

சின்னக்குட்டி சொன்ன இந்தக் கதை கதைப்பாடலாக வந்திருக்கிறது. நான் கதைப்பாடல்கள் தேடி அலைந்தபோது அகஸ்தீஸ்வரம் ஆறுமுகப் பெருமாள்நாடாரின் வீட்டில் திருப்பணி களவு மாலை ஏட்டைக் கண்டேன். அதைப் பிரதி செய்ய கேட்டபோது 1960இல் அது அச்சில் வந்துவிட்டதாகச் சொல்லி அதன் பிரதியைத் தந்தார்.

சின்னக்குட்டி சொன்ன நிகழ்ச்சிகள் சற்று மிகைப்படுத்தலுடன் அந்தக் கதைப்பாடலில் இருந்தன. என்றாலும் தேவதாசிகளுக்கும் கோயிலுக்கும் உள்ள உறவு உணவும் ஒண்டுவதற்குரிய இடமும் என்ற அளவில் இருந்ததைக் கதைப்பாடலும் குறிப்பிட்டிருந்தது. சின்னக்குட்டி சொன்னது சரியாகத்தான் இருந்தது. இவர்கள் சோழ நாட்டுத் தேவதாசிகளைப் போல் அடிமைகள் அல்லர்; வேறு வழியில்லாத திருவிதாங்கூர் விசுவாசிகள்.

**உங்கள் நூலகம், ஜனவரி 2009**

# ஊசியை ஒடித்தால் நிம்மதி கிடைக்கும்

கணியான் ஆட்டக் கலைஞரான வானுமாமலைக் கணியானைக் கடைசியாகப் பார்க்கப்போனபோது எனக்கு அவரை அடையாளம் காண முடியவில்லை. முதன் முதலில் நாங்குனேரியில் பார்த்தபோது சொல்லோடு சொல் உரசாமல் அட்சரச் சுத்தமாகப் பேசிய வானுமாமலை அல்ல நான் கடைசியாகப் பார்த்தவர். அவரை முதலில் நான் சந்தித்தபோது நான் கேட்ட கேள்விகளைப் புரிந்து விரிவாகவே பதில் சொன்ன விதமும் எனக்கு அவரிடம் பெரிய மரியாதையை உருவாக்கியிருந்தது.

நான் அவரை நாங்குனேரிக்குச் சென்று தேடிவிட்டுக் களக்காட்டுக்கு வந்ததைச் சொல்ல ஆரம்பித்தேன்; பதிலுக்கு அவரது மகனே பேசினான். அவர் கொஞ்சமாகத் தட்டுத்தடுமாறிப் பேசியதை மகன் மொழிபெயர்த்தான். அவரது தொண்டைக் குழாய் உடைந்து சரியான சிகிச்சை இல்லாமல் ஒரு மருத்துவரின் தவறான வழிகாட்டுதலுடன் மருந்து சாப்பிட்டதும் அதனால் வந்த விளைவும் பேச்சில் தெரிந்தது. பொதுவாகக் கணியான் ஆட்ட அண்ணாவிகளிடம் சொல் தெளிவு இருக்காது என்பது குற்றச்சாட்டு; விதிவிலக்கு இராமசுப்புக் கணியானும் வானுமாமலைக் கணியானும். இராமசுப்பு காலமாகிவிட்டார்; வானுமாமலையின் குரல் உடைந்துவிட்டது.

இப்போது அவர் திக்கித் திக்கிப் பேசியதை மகன் மொழிபெயர்க்க வேண்டிய நிலை ஆகிவிட்டது. கணியான் ஆட்டத்தில் ஸ்பெஷல் நாடகக்காரர்களின் செல்வாக்கு பற்றிச் சொன்ன அபூர்வத் தகவல்கள் எனக்கு முதலில் கிடைக்கவில்லை. நான் அவரைக் கடைசியாகச் சந்தித்தபோது கணியான் சாதியினரைப் பழங்குடியினர் (S.T.) பட்டியலில் சேர்த்துவிட்டார்கள் என்ற தகவலைச் சந்தோஷத்தோடு சொன்னார். அதனால் பள்ளி இறுதி வகுப்பு படித்த இளைஞர்களில் பெரும்பாலோர் அரசு வேலையில் சேர விண்ணப்பித்துக் கொண்டிருப்பதைப் பெருமையாகச் சொல்லிவிட்டு எதிர்காலத்தில் கணியான் குழுவில் பாட்டுக்கும் ஆட்டத்திற்கும் பங்கம்வர ஆரம்பித்துவிடும் என்றும் வருத்தப்பட்டார்.

கொஞ்சநேரம் ஓய்வெடுத்தார். தொடர்ந்து இப்போதெல்லாம் தோல்பாவைக் கூத்துக்காரப் பசங்க ஆட வந்துவிட்டார்கள். நல்லாவே ஆடுகிறார்கள். சுப்பையாராவ் இப்போ இங்கேதான் (களக்காட்டில்) இருக்கிறார். அவர் பேரன்கூட ஆடுகிறான் என்றார்.

நான் சுப்பையாராவைப் பார்க்க வேண்டும் என்று நினைத்திருந்தேன். அவர் இருக்குமிடத்தைத் தெரிந்துகொண்டேன். சுப்பையாராவுக்கு மனைவி இல்லை;

வயது 80க்கு மேல்; தம்பிகள் மகன்கள் உறவினர்கள் என்று யாருடனாவது இருப்பார். சுப்பையாராவிடம் முக்கியமாக நான் கேட்க விரும்பியது தோல்பாவைக்கூத்து நிகழ்ச்சிகளில் கம்பராமாயணப் பாடல்கள் சில பாடுவது பற்றிதான். தென் தமிழகத்தில் குறிப்பாகக் கன்னியாகுமரி மாவட்டத்தில் மட்டும்தான் தோல்பாவை நிகழ்ச்சியில் கம்பனின் பாடல்கள் பாடப்படுவதை நான் கேட்டேன். பரமசிவராவ் 30க்கும் மேல் பாடல்கள் பாடுவார். சுப்பையாராவுக்கு இன்னும் அதிகம் தெரியும். திருநெல்வேலிப் பகுதியில் கணபதிராவ் பாடினார். இங்கே மட்டும் கம்பனின் பாடல்கள் எப்படி வந்தன என்று கேட்டால் பதில் சொல்ல சுப்பையாராவ் அண்ணன் மட்டும்தான் உயிரோடு இருக்கிறார் என்றார் பரமசிவராவ்.

அன்று சுப்பையாராவிடம் அதிகம் பேசமுடியவில்லை. மிதமிஞ்சிக் குடித்திருந்தார். அவரது தம்பி ராமச்சந்திரராவிடம் பேசியதில் புதிய செய்தி கிடைக்கவில்லை. அவர் "அடுத்தமுறை மாவடி ஊருக்கு வாருங்கள்; அங்கே வீடு வாங்கியிருக்கிறேன்" என்றார்.

மாவடியில் ராமச்சந்திரனைப் பார்த்தால் மண்டிகர் சாதிபற்றி செய்திகளோ தோல்பாவைக் கூத்துக் கலையின் நுட்பங்களோ அதிகம் கிடைக்கா என்று தெரிந்துதான் போனேன். ராமச்சந்திரன் இப்போது மேல்நாட்டு இசைக்கருவிகள் இசைக்கும் குழுவுடன் டிரம்ஸ் அடிக்கப் போய்க்கொண்டிருந்தார். வாட்ட சாட்டமான உடம்பு. மராட்டியர்களுக்கே உரிய நல்ல முறுக்கிய மீசை. இசைக்குழுவின் சீருடையில் அவர் கச்சிதமாய் இருப்பார் என்ற ஒரே தகுதிதான் அவருக்கு; அந்தக் குழுவினர் அவரைச் சேர்த்துக்கொண்டதே அதனால்தான்.

ராமச்சந்திரனைப் பார்க்க ஐந்தாவது முறை போய்விட்டேன். தோல்பாவைக் கூத்துக்காரர்களைப் பற்றி 'நீ இன்று' என்னும் ஆவணப்படத்தை எடுத்த ரமணியுடன் இரண்டு முறை சென்ற பிறகும் மூன்றாம் முறையாக பரமசிவராவுடன் சென்றபோதும் எனக்கு கிடைத்த ஒரே லாபம் சுப்பையாராவ் அங்கே இருந்தார் என்பதுதான். அப்போதும் ஒருமுறைதான் அவரிடம் விரிவாகப் பேசமுடிந்தது.

நானும் பரமசிவராவும் மாவடி கிராமத்து பஸ் ஸ்டாப்பில் இறங்கியபோது ராமச்சந்திரன் எங்களை எதிர்பார்த்துக்கொண்டு நின்றார். ராமச்சந்திரன் வீட்டில் சுப்பையாராவ் இருந்தார்; முக்கூடலில் ராம்சேட் பீடி உரிமையாளர் வீட்டில் பத்துநாள் ராமாயணம் நடத்திய கோபாலராவுக்கு உதவியதை விவரித்து விட்டு "அப்பா திருநெல்வேலியில் தமிழ் படிச்ச அய்யங்கார்கள் சிலருக்கு ராமாயணக் கூத்து நடத்தினா. அவங்க வீட்டுப் பொம்பளகளும் உண்டு. நடத்த முன்னாலே சில கண்டிஷன் போட்டா. உச்சிக்குடும்பனோ உளுவத்தலையனோ கெட்ட வார்த்தை பேசக்கூடாது. இராமர், சீதை, லட்சுமணன், அனுமான் எல்லோரையும் உச்சிக்குடும்பன் கிண்டல் செய்யக்கூடாது. கதைய மட்டும்தான் நடத்தணும். தமாஷ் நிகழ்ச்சிகளை நீட்டக் கூடாது. இதக் கண்டிஷனாச் சொன்னாங்க. அப்பா குடிய நிறுத்துன சமயத்துலகூட அவ்வளவு கஷ்டப்படல்ல. உச்சியையும் உளுவனையும் நல்ல வார்த்த பேசவக்கிறதுக்கு அவரு பட்டபாடு; அதனால் அவங்கள அதிகம் பேசவிடாம காட்டுனாக. அப்போ கூத்து பார்த்த அய்யங்காருகள்ள ஒருத்தர் மூலமாத்தான் கம்பராமாயணப் பாட்டுக்கள அப்பா பாடுனாருன்னு ஞாபகம்" என்றார்.

நான் பிறகு அதுபற்றி விரிவாக வேறு சிலரிடம் விசாரித்த போது அந்த அய்யங்கார் பெரும்பாலும் பி. ஸ்ரீயாக இருக்கலாம் என்று ஊகிக்க முடிந்தது. அன்று எனக்குக் கணிசமான அளவு செய்தி கிடைத்தது. தோல்பாவைக் கூத்தின் எதிர்கால நிலை பற்றி, அன்று ராமச்சந்திரன் வீட்டிலிருந்து சுப்பையாராவ் தன் நீண்ட அனுபவத்துடன் கூடிய ஊகத்தை வெளியிட்டார்.

தோல்பாவைக்கூத்து நிகழ்த்திய மண்டிகர் ஜாதியினரில் 20க்கும் மேற்பட்டோர் கணியானாட்டம் குழுவில் ஆட்டக் காரர்களாக இணைந்துவிட்டனர். அவர்கள் எல்லோருமே முப்பது வயதுக்குக் கீழ்பட்டவர்கள். இசைத்தட்டு நடனநிகழ்ச்சி நடத்தச் செல்கின்றவர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. இவர்களில் பெண்களும் அடங்குவர். இப்படியாக ஆடுகின்றவர்கள் எல்லோருமே தோல்பாவைக் கூத்து நிகழ்ச்சியை நடத்தவும் விரும்பவில்லை.

ராமச்சந்திரனின் வீட்டிலிருந்து நான் விடைபெறும்போது மனவருத்தத்துடன்தான் திரும்பினேன். ராமச்சந்திரனின் மகள் கலாவிற்கு "கால்தக்கா தோடுதாலா" நடக்கப்போகிறது என்பதைப் பரமசிவராவிடம் அவர் சொன்னபோது எனக்கு அது சரியாகப் புரியவில்லை. அவர்கள் மராட்டியில் பேசியது குடும்பப் பிரச்சனை என்று புரிந்தது. பரமசிவராவுடன் நான் வீடு திரும்பும்போது "கலாவிற்கும் அவள் கணவனுக்கும் மனஸ்தாபம்; விவாகரத்து நடக்கப் போகிறது. அதற்கு மண்டிகர் பஞ்சாயத்தைக் கூட்டப் போகிறோம். நீங்களும் வரலாம்" என்றார்.

ஆய்வாளராக மட்டும் இருந்து செய்தி சேகரிக்கும் ஒருவனுக்கு விவாகரத்துப் பேசும் பஞ்சாயத்துக் கூட்டம் தகவல்கள் கிடைக்குமிடமாக இருக்கலாம். என் நிலை வேறு. பரமசிவராவ் என் குடும்பத்தில் ஒருவராக இருந்தார். ராமச்சந்திரனும் அப்படித்தான், என்றாலும் நோக்காளனாக இருப்பதில் பிரச்சனை இல்லை; சம்மதித்தேன்.

அன்று பகல் மூன்று மணிக்கு நானும் பரமசிவராவும் மாவடிக்குப் போனோம். நான்கு மணிக்குமேல் பஞ்சாயத்து. ராமச்சந்திரன், அவர் மனைவி, மகன் என குடும்பத்தினரும் பஞ்சாயத்தில் கலந்துகொள்ள வந்த மண்டிகர் அல்லாத கணிகர் பிரிவினர் சிலரும் இருந்தனர்.

கணிகர் உட்பிரிவில் அடங்கிய சவான் ஆள் என்னைப் பஞ்சாயத்தில் கலந்துகொள்ளப் பெரிய மனதுடன் சம்மதித்தார். ஆனால் பார்வையாளராக இருக்க வேண்டுமென்ற நிபந்தனையுடன். மாவடியில் ராமச்சந்திரனின் வீட்டு முன் முற்றத்தில் முடையப்பட்ட தென்னை ஓலையில் எல்லோரும் உட்கார்ந்திருந்தோம். எனக்கு முதல் முதலில் நாகர்கோவில் நீதிமன்றத்தில்

பார்த்த விவாகரத்து வழக்கு நினைவுக்கு வந்தது. அந்தத் தம்பதிகள் இருவரும் பேராசிரியர்கள். என் உறவினர்கள்.அவர்கள் பிரிந்து செல்ல நீதிமன்றம் அனுமதி கொடுக்க ஏழு ஆண்டுகள் ஆயின. அதுவும் பலமுறை அலைக்கழித்தபின். நிறைய பணம் செலவழித்தபின்.

ராமச்சந்திரனின் மகள் கலாவிற்கு 16 வயதுக்கு முன்பே திருமணம் ஆகிவிட்டது. இரண்டரை வயதில் ஒரு பெண் குழந்தை உண்டு. மாப்பிள்ளை நாலுசக்கர சைக்கிள் வாகனத்தில் ஒப்பனைச் சாதனங்கள் விற்பவன். அவன் கோவில்பட்டியிலிருந்து பஞ்சம் பிழைக்க வந்தவன். கணிகரில் சவான் பிரிவு. அம்மா அப்பா எல்லோரும் சின்னவயதில் போனதால் மானாவாரி மழையில் வளர்ந்தவன்.

வள்ளியூர் தெப்பத்திருவிழாவில் பலூன், விளையாட்டுப் பொருட்கள் வியாபாரம் செய்து கொண்டிருந்தபோதுதான் அவன் கலாவைச் சந்தித்தான். கலா அந்த விழாவிற்கு இசைத் தட்டு நடனக் குழுவுடன் சென்றிருந்தாள்.

சினிமா, கேபிள் டி.வியின் பெருக்கத்தால் தோல்பாவைக்கூத்து கலை நசிந்துபோனபோது மண்டிகர் ஆண்கள் பிழைக்க வழியில்லாமல் அலைந்த சமயத்தில் இசைத்தட்டு நடனம் கைகொடுத்தது. நடுத்தரப் பெண்களும் ஆண்களும் பலூன், ஒப்பனை சாதன வியாபாரம் என்று ஊரூராய்ப் போக வாலிப வயதுக்காரர்கள் இசைத்தட்டு நடனத்தைத் தேர்ந்தெடுத்தனர்.

மண்டிகர் பெண்களுக்கே உரிய முகக்களையும் மாநிறமும் வாளிப்பான உடலும் கொண்ட கலா 14 வயதிலேயே இசைத்தட்டு நடனம் ஆட ஆரம்பித்துவிட்டாள். பெரும்பாலும் இளவயது உறவினர்களுடன் ஆடுவது கணிகர்களின் வழக்கமாகிவிட்டது.

கோவில்பட்டிக்காரனை வள்ளியூரில் சந்தித்த ராமச்சந்திரன் பேச்சுவாக்கில் தன் வீட்டிற்கு வரும்படிச் சொல்லியிருக்கிறார். அவனும் மாவடிக்குப் போய் சில நாட்கள் இருந்தான். அந்தப் பழக்கம் கல்யாணத்தில் முடிந்தது.

அன்று பஞ்சாயத்தில் கணிகரின் பிரிவினராகிய வாகுடக்கர், சவான், டொர்க்கர் என்பவர்கள் இருந்தார்கள். அவர்கள் விவாகரத்து விஷயத்தை ஏற்கனவே பேசி முடித்துவிட்டார்கள். நான் பரமசிவராவிடம் மீண்டும் ஒருமுறை சொல்லிப்பாருங்கள் என்றேன்.

வீட்டு முற்றத்தில் தென்னை ஓலையிலும் கிழிந்த பாயிலும் எல்லோரும் உட்கார்ந்திருந்தார்கள். கலா என் அருகே இருந்தாள். கோவில்பட்டிக்காரன் பரமசிவராவின் பக்கத்தில் இருந்தான். சவான், மற்றவர்களிடம் ஏதோ மராட்டியில் சொன்னான். ஒருவன் துணி தைக்க உதவும் ஊசியைக் கலாவிடம் கொடுத்தான். இன்னொருவன் ஒரு முழம் நூலை கோவில்பட்டிக்காரன் கையில் கொடுத்தான். அவனே நூலின் முனையை ஊசியில் கோர்த்தான்.

ஊசியைத் தீயில் வாட்டி கணவன் மனைவி இரண்டு பேரின் உடம்பில் சூடுபோடுவது என்ற வழக்கம் இருந்தது. இப்போது அது வேண்டாம் எனப் பஞ்சாயத்தில் முடிவாயிற்றாம்.

பரமசிவராவ் மெதுவாக இரண்டு பேரிடமும் மராட்டியில் பேசினார். அவன் பதில் சொல்லவில்லை; கலா பேசினாள்; அவனைக் கட்டாயப்படுத்திய பிறகு உதிரியாக வார்த்தைகளைச் சொல்லிவிட்டு தலைகுனிந்து கொண்டான். (பஞ்சாயத்து முடிந்த பிறகு பரமசிவராவ், அவர்கள் பேசியதைத் தமிழில் சொன்னார்).

அந்தப் பெண்ணுக்கு அவன்மேல் உள்ள ஒரே குற்றச்சாட்டு அளவுக்கு மீறிக் குடிக்கிறான் என்பதுதான். பரமசிவராவ், குடிக்காத கணிகனின் பேரை ஒன்றைச் சொல்ல முடியாதே; பஞ்சாயத்து முடிந்ததும் எல்லோரும் குடிக்கத்தான் போகிறோம் என்றார். அவரது பேச்சை யாருமே கணக்கில் எடுக்கவில்லை என்றும் சொன்னார்.

அவன் கூறிய காரணம், அவள் இசைத்தட்டு நிகழ்ச்சியில் ஆடப்போவது; அதுவும் சொந்தக்காரர்கள் கூடத்தான் என்றாலும் பிடிக்கவில்லை என்றான். ஆனால் அவனுக்கு அவளிடம் வெறுப்பில்லை என்பதும் தெரிந்தது. அந்தக்

கூட்டத்தில் அவனை அவர்கள் மேலும் பேசவிடவில்லை. ஒருவிதத்தில் அவனுக்காகப் பேச அங்கு யாருமில்லை.

நான் ரமணியுடன் 'நீ இன்று' ஆவணப்படம் எடுக்க மாவடிக்குப் போனபோது இசைத்தட்டு நிகழ்ச்சியை நடத்துவது பற்றி விரிவாகச் சொல்லிவிட்டு, ஒரு பாட்டுக்கு ஆடியும் காட்டிவிட்டு, சார் எனக்கு சினிமாவில் வாய்ப்பு கிடைக்குமா? சென்னைக்கு வருகிறேன் என்று சொன்னபோது ரமணி சினிமா பற்றி சுருக்கமாகச் சொல்லி அவளது ஆசையை முளையிலேயே கிள்ளிவிட்டது ஞாபகம் வந்தது. இதை அவள் வேறு சிலரிடம் பேசி சினிமா வாய்ப்புக் கேட்டது கோவில்பட்டிக்காரனை உறுத்தியிருக்கலாம்.

சவான், கலாவிடம் ஊசியைப் பிடிக்கச் சொன்னான். கோவில்பட்டிக்காரனிடம் நூலின் இரு முனைகளையும் பிடித்து இழுத்துவிடு என்றான். அவனும் அப்படிச் செய்தான். நூல் அற்றுப்போனது. சவான் கலாவிடமிருந்து ஊசியை வாங்கி ஒடித்தான். அவர்களுக்குள் இருந்த உறவு அற்றுப்போனது.

கலா இப்போது வேறு ஒருவனைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு சந்தோஷமாக இருக்கிறாள்.

**இது பெரிய எழுத்து, மாதஇதழ், நவம்பர் 2010**

# கோமரத்தாடியும் நித்தியானந்தாவும்

நாட்டார் தெய்வக் கொடைவிழாவின் கலை நிகழ்ச்சிகளைவிட, பலி கொடுக்கும் நிகழ்ச்சிகளைவிட, சாமியாடிகளின் ஆட்டமும் அவர்கள் பக்தர்களுடன் உரையாடுவதும் எப்போதுமே எனக்கு உற்சாகத்தைக் கொடுத்திருக்கிறது. சாமியாடிகள் அருள் வழங்குவதும் பக்தர்களிடம் பேசுவதுமான நிகழ்ச்சிகளைப் பதிவு செய்ய முயன்று சில இடங்களில் வெற்றியும் பெற்றிருக்கிறேன்.

எனக்குப் பதிமூன்று வயதில் என் வீட்டின் அருகே இருந்த சங்கிலி மாடனுக்கு நண்பர்கள் எல்லோரும் சேர்ந்து கொடை நடத்தி ஒருவரைச் சாமியாட வைத்ததிலிருந்து தொடர்ந்து சாமி யாட்டம் பார்த்த அனுபவம் உண்டு.

சங்கிலி மாடனுக்கு எந்த உக்கிரபாண்டியனும் கோவில் கட்டவில்லை. சிறுவர்கள் ஒன்றுக்குப் போகத் தோதான இடத்தில் கட்டை மண் சுவரின் அடியில் குத்துக்கல்லாக அவர் நின்றுகொண்டிருந்தார். ஒரு பங்குனி மாதம்; அந்தக் காலத்தில் என் ஊரில் மின் விளக்கு எல்லா வீடுகளிலும் கிடையாது. ரேடியோ, பத்து ஏக்கர் நிலப் பண்ணையாருக்கு மட்டுமே சொந்தமாயிருந்தது.

சிறுவர்களுக்குச் சங்கிலி மாடன்மேல் அனுதாபம் பிறந்ததே ஒருமுறை எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து ஒன்றுக்குப் போனபோதுதான். மாடனுக்குக் கொடை நடத்த அப்போதே தீர்மானிக்கப்பட்டது. நாளும் நிச்சயிக்கப்பட்டது. விளையாட்டாக நடத்தப்படும் கொடை என்று தெரிந்தாலும் தெருமக்கள் கணிசமாகப் பணம் தந்தார்கள்.

கொடையில் சைவப் படைப்புதான் போடுவோம் என்று உறுதி சொன்னதால் வீடுகளிலும் எங்களுக்கு அனுமதி கிடைத்தது. கொடைக்குரிய எல்லா ஏற்பாடுகளையும் செய்தோம். எங்கள் கூட்டத்தில் 18 வயது அண்ணன் ஒருவனும் உண்டு. எல்லா வேலைகளையும் அவனே செய்தான். ஒன்றே

ஒன்றுதான் பாக்கி, சாமியாட ஆள் தேவை. கொடை நடத்தும் சிறுவர்கள் ஆட முடியாது. வீடுகளுக்குப் பதில் சொல்லியாக வேண்டும்.

எல்லோரும் யோசனை செய்தோம். பிள்ளையார் கோவில் ஆண்டியாக இருக்கும் ஒருவனைத்தான் தேர்ந்தெடுக்க முடியும். நாஞ்சில்நாடனின் இடலாக்குடி ராசா போல் அத்துபத்து இல்லாத ஒருவரைக் கேட்டோம். அவரும் ரெண்டு குப்பி சாராயத்துக்கு விலை தருவதாக இருந்தால் எந்த மாடனுக்கும் ஆடுவதாகச் சொன்னார். நாங்கள் மூணு குப்பிக்குப் பணம் தருகிறோம். ஆனால் ஒரு கண்டிசன் என்றோம். கண்டிசனைக் கேட்டார்.

சங்கிலி மாடனுக்கு ஆராசனை வந்ததும் ஏர்வாடி ஆச்சிக்கு அருள் சொல்ல வேண்டும். அவளுக்கு அடுத்த கொடைக்கு முன் குழந்தை பிறக்கும் என்று ஆவேசமாகச் சொல்ல முடியுமா? என்று கேட்டோம். அவரும் சம்மதித்தார்.

புதுமைப்பித்தனின் கடவுளும் கந்தசாமிப்பிள்ளையும் கதையில் வரும் கடவுள் மாதிரிதான் ஏர்வாடி ஆச்சியும். அவளுக்கு வயது 80ஆம் இருக்கலாம், 90ஆம் இருக்கலாம். அவளது உண்மையான பெயர் யாருக்கும் தெரியாது. காலங்காலமாய் அவளை ஏர்வாடிக்காரி என்றுதான் சொல்லி வந்தார்கள். வாயாடி ஏர்வாடிக்காரிக்கு ஊர் சிறுவர்களிடம் ஒரு எரிச்சல்; சிறுவர்களுக்கும் அவளிடம் இளக்காரம். அவளைப் பழிவாங்க சங்கிலி மாடன் கிடைத்தார்.

மாடனின் பூசை, படைப்பு எல்லாம் ஒழுங்காக நடந்தது. சாமியாடுபவரும் சொன்னபடி செய்தார். அவருக்குக் கோமரம் வந்து ஆட ஆரம்பித்ததும் கூட்டத்தின் முன்னே நின்ற ஏர்வாடி ஆச்சியின் அருகே போனார். திருநீற்றை அள்ளி வீசினார். அடுத்த பங்குனிக்குள் உன் வீட்டில் பிள்ளைச் சத்தம் கேட்கும் என்றார். அவ்வளவுதான். பெண்களிடம் குபீரென்று சிரிப்பு. சிறுவர்களின் ஆரவாரம். கொடைக்கு ஏற்பாடு செய்த சிறுவர்கள் அடுத்த நாள் வீடுகளில் பட்டபாடு தாளம் படுமோ தறிபடுமோ என்று ஆனது.

பலவருஷங்கள் கடந்தபின்பும் சங்கிலி மாடனுக்கு ஆடிய சாமியாடியைப் போன்றவர்கள் பலரைச் சந்தித்து இருக்கிறேன். ஏற்கனவே தயாரிக்கப்பட்ட

செய்திகளைக் கோவில் நிர்வாகிகள் சாமியாடிகள்வழி பரவவிடுவது என்றொரு நடைமுறை உண்டு.

இப்படியெல்லாம் இருந்தாலும் சாமியாடிகள் சிலரின்மேல் இருந்த மரியாதைக்கு அவர்கள் தனிப்பட்ட வாழ்க்கையில் மேற்கொண்ட கட்டுப்பாடும் ஒழுக்கமும்தான் காரணம் என்பதையும் அவதானித்திருக்கிறேன். கொடைவிழாக் காலங்களில் சாமியாடி தனிப்பட்ட முறையில் குடும்பத்திற்கு அன்னியனாக வாழ வேண்டும் என்ற நடைமுறையைப் பின்பற்றுதலையும் தனிப்பட்ட ஒழுக்கத்தைக் கட்டுப்பாட்டுடன் கடைப்பிடிப்பவர்களையும் எனக்குத் தெரியும். இவர்கள் சாமியாடிகள் என்பதைவிட ஒழுக்கமான சாமியாடிகள் என்பதற்காகவே மதிக்கப்பட்டார்கள்.

நாட்டார் தெய்வச் சாமியாடிகளின் Trance பற்றி எனக்கு இன்னும் பதில் சொல்லத் தெரியவில்லை. கொதிக்கும் நீரில் மஞ்சளைப் போட்டு வெறும் கையால் கலக்கிய சாமியாடிகளை— அனலில் கொதித்த இரும்புச் சங்கிலிகளைத் தோளில் தூக்கிப் போட்ட சாமியாடிகளை — பன்றியின் குருதியில் சிங்கம்பழத்தைப் போட்டுப் பிசைந்து தின்ற சாமியாடிகளை — இப்படி எத்தனையோ காரியங்களைச் செய்த சாமியாடிகளின் செயல்களை அருகில் நின்று பார்த்தபோதெல்லாம் இது எப்படி நடக்கிறது என்பதில் விடை கிடைக்காமல் ஆச்சரியப்பட்டிருக்கிறேன்.

பேரா. ஜெகதீசன் ஒருமுறை அவனது ஊர் சுடுகாட்டுச் சுடலைமாடன் கோமரத்தாடியைப் (சாமியாடி) பற்றிச் சொன்னான். அவருக்கு ஊரில் தனி மரியாதை இருந்ததாம். அவர் தெருவில் நடந்து சென்றால் குறும்புக்காரச் சிறுவர்கள் கூட அமைதியாகிவிடுவார்கள் என்றான்.

அந்த ஊர் மலையடிவாரத்தில் இருந்தது. ஊரை ஒட்டி ஓடிய பழையாற்றங்கரையில் வெட்ட வெளியில் நட்டமாய் நின்றார் கருங்கல் சுடலைமாடன். சாமியாடி பூசை செய்வதையும் அருள் வழங்குவதையும் கோமரம் சொல்வதையும் பெரிய யாகம் மாதிரிதான் ஊர்க்காரர்கள் நினைத்தார்கள். அவர் குடிக்கமாட்டார்; வெற்றிலை, பாக்கு, பொடி, புகை எல்லாம் கிடையாது. செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் இரவுகூட

பழையாற்றங்கரையே தஞ்சம் என்று இருந்தார். ஒடுக்கத்து (மாத இறுதி) வெள்ளிக்கிழமையில் அவர் கூறும் வாக்குப் பலித்துவிடும் என்பதால் ஆண்கள்கூட அவர் முன்னே முண்டியடித்துக் கொண்டு நின்றார்கள்.

இப்படியாக வாழ்ந்த அந்தக் கோமரத்தாடியிடம் சனீஸ்வர பகவான் ரப்பர் பால் வெட்ட வந்த நாப்பத்தஞ்சு வயது மலையாளப் பெண் வடிவத்தில் வந்து சேர்ந்தார். அந்த ஊருக்குப் பஞ்சம் பிழைக்க வந்தவர்களில் ஒருத்தியான மலையாளப் பெண்ணுடன் சாமியாடி பழையாற்றங்கரையில் சல்லாபித்துக் கொண்டிருந்தார் என்ற செய்தியை முதலில் சொன்னவரை ஊர்ப் பெண்கள் வட்டியிலே வாரிப்போட்டுத் தீர்த்துக்கட்டினார்கள். ஆனால் அது உண்மை என்று கொஞ்ச நாளில் தெரிந்துவிட்டது. அவர் அவளுக்குச் செலவுக்குக் கொடுக்கிறார் (வைப்பாட்டிக்கு கொடுக்கும் உதவித் தொகை) என்று பெண்கள் பேச ஆரம்பித்த பிறகு ஒடுக்கத்தி வெள்ளிக்கிழமையில் சுடலை கோவிலில் கூட்டம் குறைய ஆரம்பித்தது.

ஒரு வெள்ளிக்கிழமை; அவர் கோமரம் வந்து பெண்களின் முன்னே பேச ஆரம்பித்த போது கிழவி ஒருத்தி "ஓய் சிவதாணு, உம்ம வைப்பாட்டி மலையாடிச்சிகிட்ட போய்ச் சொல்லும்" என்றாள். அன்று முகத்தைத் தொங்கப் போட்டவர்தான் சாமியாடி. அதன்பிறகு தலை நிமிரவே இல்லை.

அந்தச் சுடலையின் பேரைச் சொல்லிப் பணம் சம்பாதித்த ஒருவர் சாமியாடிக்காகப் பரிந்து பேசினார். "சாமியாடி ஊர்ப் பொம்பளகள மேஞ்சாரா. இல்ல அந்த மலையாடிச்சிதான் ஒங்கள்ட்டு வந்து கோமரத்தாடி கெடுத்திற்றாருன்னு சொன்னாளா" என்று கேட்டார். ஒரு ஆணும் பெண்ணும் விருப்பத்துடன் பிணைவதில் தவறில்லை என்ற உயர்ந்த கொள்கை தெரியாத ஊரல்ல அந்த ஊர். அவர்களுக்குச் சாமியாடி அப்படிச் செய்யலாமா என்பதில்தான் ஆதங்கம்.

*

சுவாமி நித்தியானந்தாவின் பூர்வீகத்தை முழுதும் அறிய உதவியவர் நடிகை ரஞ்சிதாதான்.

புதிய பெயரைத் துறவி சூட்டுவதே பூர்வீக உறவைத் துண்டித்துக்கொள்வதற்குத்தான். இதனால்தான் பல துறவிகளின் பூர்வீகம், சாதி, ஆரம்பகாலப் பெயர் எல்லாம் கடைசிவரை தெரியாமலே ஆகிவிட்டது.

ரஞ்சிதாவின் புண்ணியத்தில் நித்தியானந்தாவின் ஜாதி, ஆரம்பகாலப் பெயர், சொந்த ஊர் என எல்லா விபரங்களையும் அறிய முடிந்தது. ராஜீவ்காந்தி கொலைப்பட்ட சமயத்தில் ஏற்பட்ட பரபரப்பை நித்தியானந்தா மீண்டும் ஒருமுறை உருவாக்கிவிட்டார்.

கோமரத்தாடிக்காக வக்காலத்து வாங்க வந்தவர்களைப் போல நித்தியானந்தாவுக்கும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

ஆன்மீகமும் தனி ஒழுக்கமும் பிரிக்க முடியாது என்பது காலங்காலமாக உள்ள இந்த எதிர்பார்ப்பு கோமரத்தாடிகளுக்குத் தெரியாமல் இருக்கலாம். நித்தியானந்தாவுக்கு?

**இது பெரிய எழுத்து மாதஇதழ், ஆகஸ்ட், 2010**

# சுடுகாட்டில் பட்டிமன்றம்

கல்லூரி ஒன்றில் பணிபுரிந்த என் நண்பரின் வயதான அம்மா இறந்த செய்தியைக் கேட்டதும் நான் அவரது ஊருக்குப் போனேன். அந்த ஊர் நகரத்துச் சந்தடியிலிருந்து தொலைவில் மலையடிவாரத்தில் இருக்கிறது.

நான் போன சமயத்தில் இறப்புச் சடங்குகள் நடந்துகொண்டிருந்தன. எல்லாம் முறைப்படி நடந்தது. நண்பன் அம்மாவுக்கு ஒரே மகன். வசதியான பெரிய குடும்பம், நண்பனின் அப்பாவும் உயிரோடு இருந்தார். ஊரில் செல்வாக்குடைய குடும்பம். அதனால் சடங்குகளை நீட்டித்துக்கொண்டே போனார்கள்.

எல்லாம் முடிந்து பிணத்தைச் சுடுகாட்டுக்குக் கொண்டு சென்று அங்கே செய்ய வேண்டிய சடங்குகளையும் முடித்து விறகை அடுக்கினார்கள். குழியிலிருந்து புகைவர ஆரம்பித்தது. பேராசிரியர் புல் தரையில் உட்கார்ந்தார். வயதான நாவிதர் அவர் முன்னே குந்தி இருந்தார். பேராசிரியரின் தலையில் தண்ணீரைத் தெளித்து நீவிவிட ஆரம்பித்தார்.

பேராசிரியருக்கு மொட்டை அடிப்பதில் விருப்பம் இல்லை. மொட்டையுடன் வகுப்புக்குப் போவதில் சங்கடம் உண்டு. ஏற்கனவே மாணவர்கள் அவருக்கு வைத்திருந்த பட்டப்பெயருடன் மொட்டை என்ற சொல் அடைமொழியாகவோ தனிச்சொல்லாகவோ முன்ஒட்டாகவோ பின்ஒட்டாகவோ நீட்டல் விகாரத்துடனோ வர வேண்டாம் என்ற யோசனை, அம்மா உயிருடன் இருக்கும்போதே அவருக்கு உண்டு. இதை அவர் தீர்மானித்து வைத்திருந்தார். அதனால் வயதான நாவிதரிடம் ஷேவ் மட்டும் போதும் என்று மெதுவாகக் குனிந்து சொன்னார். இதன் பிறகுதான் சர்ச்சை ஆரம்பமானது.

பேராசிரியர் மொட்டை போட வேண்டாம் என்று சொன்னதில் நாவிதருக்கு மகிழ்ச்சி. வேலை சுளுவாக முடிந்து விடும். அவர் பேராசிரியரின் முகத்தில் தண்ணீரைத் தடவினார். இதையெல்லாம் கவனித்துக்கொண்டிருந்த ஊர்க்காரர் ஒருவர் 'இது என்னடே அலுசுவம்; அம்மாவுக்கு மொட்டை இல்லாத கொள்ளி

தீக்கொள்ளி' என்றார். இன்னொருவர் நாவிதரிடம், 'அவன் சொல்லுவாண்டே நீ போடு மொட்டை, தாயிட்ட பாலக் குடிச்சவன் மயிரக் குடுக்காட்டி என்ன குடுப்பான்' என்றார். சொந்தக்காரர் ஒருவர் 'எப்பா அவன் வேல பாக்கப்பட்டவன்; நாலுபேர் முன்னால் நிக்கனும்; மொட்ட வேண்டாம்' என்றார்.

ஊர் டிரஸ்டி ஊர்க்காரர்களின் உரையாடலைக் கேட்டு, 'என்னடா வெண்டயம்; மொட்டையில்லாம கொள்ளியா?' என்று உரக்கச் சொன்னார். டிரஸ்டி இப்படிக் கேட்டதும் ஆளாளுக்குப் பேச ஆரம்பித்தனர்.

ஊர் வண்ணான் தரையில் விரித்திருந்த மாத்துத்துணியில் அமர்ந்து வெற்றிலை போட்டுத் துப்பிக்கொண்டிருந்த ஊர்க் காரர்களுக்கு அவல் கிடைத்த மாதிரி ஆனது. எழுந்து நாவிதர் பக்கத்தில் வந்தார்கள்.

இப்போது சலசலப்பு வாக்குவாதமானது. நாவிதர் சவரக் கத்தியை மடக்கிவிட்டுத் தரையில் வசதியாக உட்கார்ந்து கொண்டார். அவருக்குத் தெரியும் இந்த வாதம் முடியாது என்று.

பேராசிரியர் வாய் திறக்கவில்லை. அவரது அப்பா சலசலப்புக் கேட்காத இடத்தில் விச்சிராந்தியாய் உட்கார்ந்து கொண்டார். கூட்டம் இரண்டு பிரிவானது. விவாதம் உச்சத்துக்குச் சென்றது. அந்த ஊரில் அம்மாவைக் கவனிக்காமல் அவள் இறந்த பிறகு திதி கொடுத்தவர் — மொட்டையடிக்காமல் அம்மாவின் தாலிச் செயினுக்குப் பங்கு கேட்ட மகன் — அம்மாவை முதியோர் இல்லத்தில் சேர்த்துவிட்டு அவள் இறந்தபின் மொட்டையடித்த மகன் — என எல்லோரும் விவாதப் பொருளாயினர்.

நான் பார்த்த இந்த நிகழ்ச்சியை உறவினர் ஒருவரிடம் சொல்லிவிட்டு இதுபோன்ற நிகழ்ச்சி நாஞ்சில்நாட்டு முதலியார் ஆவணங்களிலும் வருகிறது என்றேன்.

நாஞ்சில் நாட்டில் பறக்கை என்ற ஊரில் பூலம்பிள்ளை என்பவரின் மகன் இறந்து போனான். அந்தச் செய்தியைச் சொந்தக்காரர்களுக்கு நாவிதர் அல்லாத சாதியினர் ஒருவர் சொல்லப் போனார். நாவிதரே சாவுச் செய்தியை

உறவினரிடம் சொல்ல வேண்டும் என்ற நடைமுறையை எப்படி மாற்றலாம் என்று பறக்கைக்காரரான நாகருபிள்ளை என்பவர் அர்ச்சித்தார். அவரைச் சமாதானப்படுத்திவிட்டுச் சடங்குகளைச் செய்தார்கள்.

பிணம் சுடுகாட்டுக்குப் போனதும் சடங்குகள் தொடங்கின. இறந்தவரின் மகன் கொள்ளி வைக்க ஆரம்பித்ததும் மீண்டும் சிக்கல் தொடங்கியது.

கொள்ளிவைப்பவர் மண்குடத்தைத் தலையில் சுமந்து பிணத்தை மூன்று முறை சுற்றிவர வேண்டும். அப்படிச் சுற்றும் போது ஒவ்வொரு முறையும் பிணத்தின் தலைமாட்டில் நிற்கும் நாவிதர் கொண்டி மூக்கால் குடத்தின் உடல்பகுதியைக் கொத்துவார். மூன்றாம்முறை குடத்தைக் கொத்திவிட்டு அதைப் பிணத்தின் தலைமாட்டுப் பகுதியில் தரையில் போட்டு உடைத்து, எஞ்சிய நீரை உடைந்த ஓட்டில் சேகரித்துக் கொள்ளி வைப்பவரிடம் நாவிதர் கொடுக்க வேண்டும். அவர் அதைப் பிணத்தின் வாயில் விடுவார். இந்தச் சடங்கை நாவிதரே முன்னின்று நடத்த வேண்டும்.

இப்போது பூலம்பிள்ளையின் மகனின் இறப்புக் கொள்ளிச் சடங்கை நாவிதர் அல்லாதவர் செய்துவிட்டார். நாகருபிள்ளைக்கு இது பொறுக்கவில்லை. சுடுகாட்டில் இது விஷயமாய் அவர் மறியல் செய்தார். அதோடு விடவில்லை. நாஞ்சில் நாட்டின் 12 பிடாகைகளின் தலைவராக இருந்த அழகியபாண்டியபுரம் பெரிய வீட்டு முதலியாருக்கும் தென்திருவிதாங்கூர் சர்வாதியக்காரர் என்ற அதிகாரிக்கும் எழுத்துப் பூர்வமாகப் புகார் செய்திருக்கிறார். இந்தப் புகரை முதலியார் பதிவு செய்திருக்கிறார். இது நடந்தது 1770 – 1800க்கும் இடைப்பட்ட காலத்தில்.

இதையெல்லாம் நான் சொன்னதும் அந்த உறவினர் "மரபுமுறையும் சடங்கும் மாறும்போது எதிர்வினையாற்றியது 200 வருஷங்களுக்கு முன்பு மட்டுமல்ல; இப்போதும் தொடர்கிறது என்பது இந்தச் சாதியின் கட்டுப்பாடா? இல்லை கோமாளித்தனமா? நீதான் நாட்டுப்புற வழக்காறு சேகரிப்பாளனாயிற்றே. சொல்லு" என்றார். உண்மையில் இதுபோன்ற சடங்குகளில் பல மௌனமாகவே நிறுத்தப்படுவது எல்லோருக்கும் தெரியும். இதற்கு என்று

தனியான காரணம் கூற முடியாது. சூழ்நிலையும் பணவசதியும் படிப்பும்தான் காரணம்.

அந்த உறவினர் 'சரி, பேராசிரியருக்கு மொட்டையா எப்படி?' என்ற கேட்டார். 'வேறு வழி? மொட்டைதான்; நாவிதர் தான். இவருக்குத் தலையில் எண்ணி அஞ்சு முடி, இத மழிக்க இவ்வளவு கூத்து, நல்ல ஜனங்க என்று முனங்கிக்கொண்டே போனார்' என்றேன்.

**இது பெரிய எழுத்து, ஜனவரி 2010**

## சிங்களக் காற்றுப் பட்டால் கர்ப்பமாகும்

கவிஞர் பெருந்தேவியுடன் மண்டைக்காடு பகவதி கோவிலுக்குப் போய்விட்டு குளச்சல் கடற்கரை மீன்பிடி பகுதிக்குப் போனேன். கன்னியாகுமரி கடற்கரையைச் சுனாமி பாதித்து ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டாலும் குளச்சலில் இன்னும் மௌனம் நீடித்தது. 200க்கும் மேற்பட்ட சடலங்களைப் புதைத்த இடத்தில் நின்றுகொண்டிருந்தோம்.

பெருந்தேவி கட்டுமரத்திலிருந்து இறக்கப்பட்ட மீன்கூடையைத் தூக்கிச் சென்ற மீனவரின் எதிரே போனார். வயதான ஒருவர் பெருந்தேவியை ஒதுங்கி நிற்கச் சொன்னார். மீன் குட்டைக்காரர் போனதும் பெருந்தேவியிடம், "நீங்கள் போகலாம்" என்றார் அந்த முதியவர். பெருந்தேவிக்கு அவரின் பேச்சுக்கும் செய்கைக்கும் காரணம் புரியவில்லை.

அந்தக் கடற்கரையில் கொஞ்ச தூரம் நடந்து போனபோது நான் சொன்னேன். கடற்கரைப் பகுதியில் உள்ள நம்பிக்கைகள் சாதாரண கிராமத்து நம்பிக்கையைத் தூக்கிச் சாப்பிட்டுவிடும். மீனவர்கள் கட்டுமரத்திலிருந்து மீன்குட்டைகளை எடுத்துச் செல்லும்போது பெண் எதிரே செல்வது அபசகுனம் என்ற நம்பிக்கை உண்டு. உங்களை ஒதுங்கச் சொன்னதும் அதனால்தான் என்றேன்.

சுனாமி வந்த பின்பு கடற்கரையில் கடல் அன்னை, கடல்மாதா, கடலம்மா என்ற சொற்களின் மேல் உள்ள மரியாதை — அவள் மக்களை அழிக்க மாட்டாள் என்ற நம்பிக்கை — இறை நம்பிக்கை எல்லாம் ஊஞ்சலாடிய நிலையில் இருந்தது. கடல் அழிவுகள் கொஞ்சம் கொஞ்சமாகச் சரியானபின் அந்த நம்பிக்கைகள் மறுபடியும் உள்ளே நுழைய ஆரம்பித்ததை எங்கள் பேட்டியின்போது கண்டுகொண்டேன்.

நாங்கள் கடியப்பட்டணம், கொட்டில்பாடு, புத்தன் துறை, மணக்குடி என கடற்கரைக் கிராமங்களுக்குச் சென்றபோது கிடைத்த தகவல்களில்

பெருந்தேவியை அசர வைத்தது ஈழக்காற்று பற்றிய செய்திதான். அதுபற்றி முதலில் கடியப்பட்டணம் ரேஷன் கடைக்காரர்தான் சொன்னார். அவரிடம் மீண்டும் கேட்டபோது மேலும் விவரங்கள் சொல்ல ஒரு பெண்ணை அழைத்து வந்தார்.

குறிப்பிட்ட மாதங்களில் கடற்கரையில் ஈழக்காற்று வீசும். அப்போது பருவமடைந்த கன்னி கடற்கரைக்குச்சென்று ஈழக்காற்று வீசும் திசையில் நின்றால் காற்று அவளின் கர்ப்பப்பைக்குள் நுழைந்துவிடும். அடுத்த மாதம் அவள் கர்ப்பமடைவாள். இப்படி ஒரு நம்பிக்கை கடற்கரைக் கிராமங்களில் இருந்தது என்றார் அந்தப்பெண்.

குறிப்பிட்ட காற்று கன்னியின் உடம்பில் பட்டால் அவர் கர்ப்பமாகிவிடுவாள், ஆண்கள் நீராடும் துறையின் எதிர்த்துறையில் நீராடும் கன்னியின் கர்ப்பபைக்கு, யோனி அல்லது வாய்வழி விந்து புகுந்துவிடும் என்ற நம்பிக்கைகள் புராணங்கள்வழி நாட்டார் வழக்காற்றுக்கு வந்தவையா? நாட்டார் வழக்காற்றிலிருந்து புராணத்துக்குச் சென்றவனவா? விரிவாக ஆராய வேண்டியது.

ஈழக்காற்று பற்றி விசாரிக்கப் போன இடத்தில்தான் குரு மக்கள் கதை பற்றிக் கேட்டேன். ஈத்தாமொழிக் கடற்கரைக் கிராமத்தில் இந்தக் கதைப்பாடலின் பிரதி கிடைக்கும் என்றார்கள். பத்து தடவைக்குமேல் அலைந்துதான் கடைசியில் முழுக் கதையைக் கேட்டேன். அது மகாபாரதக் கதைதான் என்றாலும் வித்தியாசமான கதை. பீமன் பார்வையில் அமைந்தது. வியாசரின் முற்பிறப்பிலிருந்து கதை ஆரம்பமாகி பீமன் பாரதப் போருக்குத் தயாராவது வரை உள்ள நிகழ்ச்சிகளை விவரிப்பது.

இந்தக் கதையில் திருதிராஷ்ட்டிரனின் மனைவி காந்தாரி எதிர்த்தலைவியாக வருகிறாள். பீமனைக் கொல்ல பெரும் சூழ்ச்சி செய்பவளே இவள்தான். கடைசியில் எல்லா முயற்சிகளிலும் தோல்வி கண்ட இவள் நொந்துபோய் ஒதுங்கிவிடுகிறாள். இந்தக் கதை பாடப்படும் பஞ்சபாண்டவர் கோவிலில் பஞ்ச பாண்டவர்கள் மட்டுமல்ல துரியோதனன், காந்தாரி, நூற்றுவர்கள் எல்லாருமே வழிபடு தெய்வமாக இருக்கிறார்கள். பாண்டவர்களுடன் கடைசியாகச்

சொர்க்கத்துக்குச் சென்றதாகக் கருதப்படும் சாளுவன் என்னும் நாய்கூட வழிபடும் கூட்டத்தில் உள்ளது. எல்லாம் சுவர் ஓவியங்கள்.

குருமக்கள் கதை ஏட்டுப்பிரதிகளின் பிற்பகுதியைத் தந்தவர்கள் கதையின் தொடக்கப்பகுதி இல்லை என்று சொல்லிவிட்டார்கள். அதைச் சொல்லவும் மறுத்துவிட்டனர். பஞ்சபண்டவர் கோவில் குறிப்பிட்ட குடும்பத்தைச் சார்ந்த அறுபது பேர்களுக்கு மட்டுமே உரியது. பெரும்பாலும் இந்தக் குடும்பத்தினர் எல்லாரிடமும் இந்தக் கதை இருக்கும் என்று கேள்விப்பட்டேன். ஆனால் யாருமே ஆரம்பப்பகுதி பற்றிப் பேசவில்லை.

ஆறுமாத முயற்சிக்குப் பின்னர் அந்த ஊர் முக்கிய அரசியல் பிரமுகர் ஒருவரின் உதவியுடன் மிகப் பழைய தாள்பிரதி ஒன்றைப் பெற்று ஒரு நாளில் திருப்பித் தருவதாக வாக்குறுதி கொடுத்துப் படித்துப் பார்த்தபோது அவர்கள் ஆரம்பப்பகுதி இல்லை என்று சொன்னதன் காரணம் புரிந்தது.

வியாசரின் மகாபாரதக் கதை சத்தியவதி என்னும் செம்படவப் பெண்ணின் தோற்றத்திலிருந்து ஆரம்பமாகும். இப்பெண்ணுக்கு நறுமணத்தைக் கொடுத்ததும் திருதிராஷ்ட்டிரன், பாண்டு இருவரின் மனைவிகளுக்குப் புத்திர பாக்கியம் அளித்ததும் வியாசர் என்னும் மூலக்கதையிலிருந்து குருமக்கள் கதை வேறுபடுகிறது.

ஒரு முனிவருக்கு (வியாசராக இருக்கலாம்) அழகான தங்கை இருந்தாள். இவள் செந்தாமரை மலர் போன்ற நிறமுடையவள். அவள்மேல் அந்த முனிவருக்கு ஆசை. இருவரும் கணவன் மனைவியாக வாழ விருப்பம் கொண்டனர். ஒரு நாள் அவள் ஆற்றில் குளித்துக் கொண்டிருந்தாள். அப்போது அந்த முனிவர் சென்றுவிட்டார். அவளது வாளிப்பான உடல் அவரை நிலைகுலையச் செய்தது. அதனால் அவரின் விந்து வெளிப்பட்டது. அது நீரில் மிதந்து அவள் பக்கம் சென்றது. அவள் அதை விழுங்கினாள். இவளுக்குப் பிறந்த வம்சமே பாண்டவ வம்சம் என்ற செய்திகள் எனக்குக் கிடைத்த ஒரு பிரதியில் இருந்தன.

இன்னொரு பிரதியில் அந்த முனிவர் பிரம்மாவிடம் என் தங்கையை மனைவியாக அடைய வேண்டும் என்று கேட்க அவர் முனிவரையும் தங்கையையும் ஆண்பறவையாகவும் பெண்பறவையாகவும் சபிக்க அந்தப் பறவைகள் புணர்ந்து பெற்ற வம்சமே பாண்டவ வம்சம் எனப்பட்டது என்றும் உள்ளது.

இந்தக் கதைப்பிரதிகளில் விந்து நீர்வழி மிதந்து பெண் வயிற்றுனுள் புகுந்துவிடும் என்ற செய்தி புராணத் தன்மையுடன் காட்டப்படுகிறது. விக்கிரமாதித்தன் கதை, மதனகாமராசன் கதை போன்ற கதைகளிலும் பொதுவான நாட்டுப்புறக் கதைகளிலும் இளவரசி அல்லது பேரழகி ஒருத்தி ஆற்றிற்குக் குளிக்கப் போவது, ஆற்றில் நீராடுவது, எதிர்த்துறையில் இளவரசன் அல்லது வீரன் ஒருவனின் விந்து தானாக வெளிப்படுவது அல்லது வெளிப்படுத்தப்படுவது, அது மிதந்து இளவரசி அல்லது பெண்ணின் வாய் அல்லது யோனிவழி வயிற்றுனுள் செல்வது என்று கூறப்படுவதான கதைச்செய்தியின் தொடக்கம் பழைய புராணங்கள் என்றும் எடுத்துக்கொள்ளலாம்.

அனுமானின் பிறப்பு பற்றிய செய்தி விஷ்ணு புராணம், ராமாயணம் போன்றவற்றிலும் மயில் ராவணன் கதை என்ற நாட்டார் கதைப்பாடலிலும் வருகிறது.

அஞ்சனா மலையில் அல்லது ஒரு மலையில் அஞ்சனாதேவி என்ற தேவகன்னி உலாவிக்கொண்டிருந்தாள். காற்று சற்று வேகமாக வீசுகிறது. இதனால் இவளது ஆடை நெகிழ்ந்தது. இவளது வாளிப்பான உடலைக் கண்ட வாயு தேவனின் விந்து வெளிப்படுகிறது. அது காற்றுவழி மிதந்து அஞ்சனையின் வயிற்றில் புகுந்தது. அவள் அந்தப் பலனால் பெற்ற பிள்ளை ஆஞ்சனேயன் எனப்பட்டான்.

ராவணனின் தம்பி மயில் ராவணன் என்பவன் இராமனை ரகசியமாகக் கவர்ந்து கொண்டுபோய்ப் பாதாள உலகில் மறைத்து வைக்கிறான். அவனைத் தேடிப்போன அனுமன் பாதாள உலகின் காவலனான அனுமாவிந்தன் என்பவனுடன் மோதிச் சண்டையிட்டுத் தோற்றுப் போய் நீ யார் எனக்

கேட்கிறான். அவன் அனுமனின் மகன் என்கிறான். அப்போது அனுமன் யோசித்துப் பார்க்கிறான். "நான் பிரம்மச்சாரி, இதுவரை ஒரு பெண்ணையும் தொட்டதில்லை. அப்படியானால் இவன் எப்படிப் பிறந்தான், ஒருவேளை சீதையைத் தேடிப்போனபோது ராவணனின் அந்தப்புரத்துக்குப் போனேன். அங்கே பெண்கள் அலங்கோலமாகக் கிடந்தார்கள். அவர்களின்மேல் என் வீரியம் தெரியாமல் பட்டுவிட்டதா? என்றெல்லாம் நினைத்தான். கடைசியில் அனுமாவிந்தனிடமே "உன் தாய் யார்? நீ எப்படிப் பிறந்தாய்?" எனக் கேட்கிறான்.

அனுமாவிந்தன் அதற்குப் பதில் சொல்கிறான். "என் தந்தை சீதாபிராட்டியைத் தேடி கடல்வழி பறந்து சென்றார். அப்போது அவர் உடல் வியர்த்தது; அதைக் கையால் வழித்துக் கீழே எறிந்தார்; வியர்வை கடலில் மிதந்த மச்ச கன்னி ஒருத்தியின் வாயில் விழுந்தது. அதனால் அவள் கர்ப்பமடைந்தாள். அவளுக்குப் பிறந்தவன் நான்" என்றான்.

அனுமன், அனுமாவிந்தனிடம் தன்னை அறிமுகப்படுத்திவிட்டு மகனே என்று அன்புடன் அணைத்தான். அனுமாவிந்தன், "தந்தையே நான் உன்னுடன் வருகிறேன்; ராம ராவணப் போரில் பங்குகொண்டு ஒரேயடியாக ராவணனை அழிப்பேன்" என்றான்.

அனுமன் "மகனே நீ என் அம்சத்தில் பிறந்ததை மறுக்க வில்லை; ஆனால் நான் பிரம்மச்சாரி என்று பெயர் வாங்கியவன்; உன்னை மகன் என்று எப்படிச் சொல்வேன்? நான் காமசுகத்தை ஒழித்தவன்; பெண் உடம்பைத் தீண்டாதவன்; என் வியர்வையை வழித்து எறியும்போதுகூட இந்த எண்ணம் எனக்கில்லை" என்கிறான்.

காற்றுவழி விந்து பரவும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் உருவான ஒரு கதைப்பாடல் உண்டு. புருஷாதேவி என்ற இக்கதைப் பாடலின் தலைவியான புருஷாதேவியின் கோட்டைவழிச் செல்வதற்கு செம்பன்மாமுடி மன்னன் அனுமதி கேட்டபோது அவளது தோழி,

"அரசனே என் நாடு பெண்களுக்கே உரியது; பெண்கள் ராஜ்யத்திலிருக்கிறோம்; இது பெண்ணால் ஆளப்படுவது; என் கோட்டைக்குள் ஆண்களே கிடையாது. என் சமூகத்தில் ஒரு பெண் பருவமடைந்ததும் தனக்குத் துணையாக என் நாட்டில் வாழும் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ளுவர். பின் அடுத்த ஆண்டு சிங்களத்துக் காற்று (ஈழக்காற்று) வீசும் பருவத்தை எதிர்பார்த்து வீசும் இடத்துக்குச் செல்வாள்; அங்கே நின்று காற்றை உள்வாங்குவாள். பத்தாம் மாதம் குழந்தை பிறக்கும்; சிங்களக்காத்து பட்டால் பெண் குழந்தை மட்டும்தான் பிறக்கும்; எங்கள் அரசியும்,

"இருந்து அரசாளும் நாளில் எழுந்த சிங்களர்கள்

இங்கே பிறந்ததோ பன்னிரண்டு பருவமும் திகைத்தபோது

நிரந்தரமாகி வீசி நிற்கும்நாள் கெற்பம் தோன்ற

வரந்தாரும் சிவனே என்று மெல்ல பெண்ணரசி வாழ்ந்தாள்"

ஆகவே செம்பன்மாமுடி மன்னா என் நாட்டில் நுழைய உனக்கு அனுமதி கிடையாது என்றாள்.

இங்குக் குறிப்பிடப்படும் செய்திகள் நாட்டார் வழக்காற்றுக்குப் புராணங்களிலிருந்து சென்றிருக்க வேண்டும். பெண் தெய்வங்கள் ஆண் புணர்ச்சியின்றிக் கர்ப்பமடைகின்றன. அதே சமயம் யோனிவழி குழந்தை பெறவில்லை; குழந்தைகள் பெற்ற தெய்வங்கள் கன்னியாகவே கருதப்படும் என்பதற்குப் பொதுவான காரணங்கள் உண்டு (கருத்தரிய கடலாடை உலகுபல கர்ப்பமாய்ப் பெற்ற கன்னியின் காலடி பணிந்தே நான்). இந்தத் தொன்மம் குறித்த செய்திகள் இன்னும் விரிவாக ஆராயப்படவில்லை. புராணங்களுக்கும் நாட்டார் வழக்காற்றுக்கும் உள்ள இந்த ஒப்பீட்டுத் தகவல்களை இப்போதும் தேட முடியும்.

**இது பெரிய எழுத்து, ஜனவரி — ஏப்ரல், 2011**

# தங்கள் வருகைக்கு நன்றி

என் நண்பரின் அச்சகத்திற்குத் தற்செயலாகப் போனபோது அச்சக உரிமையாளரின் மேசை மேல் இருந்த பாலிதீன் கவரைப் பார்த்தேன். அது அச்சுப்பிழை திருத்துவதற்காக வைக்கப்பட்டிருந்த கவர். அதில் 'தங்கள் வருகைக்கு நன்றி' என்னும் தலைப்பு இருந்தது. கல்யாண வரவேற்பில் மாலையில் எலுமிச்சம்பழமோ தேங்காயோ கொடுப்பதற்காக உள்ள கவர் அது என்று நினைத்தேன். மணமக்கள் யாவர் என அறிய அதை எடுத்தேன்.

தங்கள் வருகைக்கு நன்றி என்ற தலைப்பின் கீழ் 'நாகர்கோவில் பெரிய தெரு கொலுசம்மாளின் இறப்புச் சடங்குக்கு வந்து துட்டி விசாரித்த உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் நன்றி' என்ற குறிப்பு இருந்தது. இந்த வாசகத்தின்கீழ் நெற்றியில் திருநீறு துலங்க, காதுகளில் தொங்கும் பாம்படத்துடன் கொலுசம்மாளின் காபினட் சைஸ் படம் மெஜந்தா கலரில் காட்சி அளித்தது. படத்தின்கீழே பேரன் பேத்திகள் எனச் சில பெயர்கள் BE, MCA எனும் பட்டங்களுடன், அவர்கள் இருக்கும் USA, UK என வெளிநாட்டுப் பெயர்கள் அடைப்புக்குறிக்குள் இருந்தன.

நான் அந்தக் கவரைப் பார்த்துக்கொண்டிருந்த போது அச்சக உரிமையாளர் செத்துப்போன ஆச்சி பற்றிய விபரங்களைச் சொன்னார். ஆச்சிக்குச் சாகும்போது 90 வயது. பேரன் பேத்திகள் படித்து வெளிநாட்டில் இருக்கிறார்கள். அவர்கள் ஆச்சியின் கிழமையையும் அடியந்திரத்தையும் அமோகமாகக் கொண்டாட வேண்டும்; துக்கம் கேட்டு வருபவர்களுக்குக் கணிசமான அன்பளிப்பு கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்களாம். திருநெல்வேலி இருட்டுக்கடை அல்வா, டிரை குலோப்ஜாம், லாலாக்கடை பர்வின் மிட்டாய், ஜிலேபி என இருநூறு ரூபாய் பட்சணங்களைப் பாலிதின் கூட்டில் போட்டு எல்லோருக்கும் வினியோகிக்க வேண்டும் என்று மெயிலில் செய்தி அனுப்பினார்களாம்; விஸ்தாரமாகச் சொன்னார் நண்பர்.

ஆச்சி உயிரோடு இருந்தபோது மருமகளிடம் ஒருவாய்க் கஞ்சிக்காக என்னதான் அலப்பறையாய் நின்றாலும் அவளது ஆன்மா சாந்தியடைய பேரன் பேத்திகள் மிகவும் சிரமப்பட்டிருக்கிறார்கள். விஜயநகரப் பேரரசர் கிருஷ்ணதேவராயரின் அம்மா கடைசி காலத்தில் மாம்பழம் தின்ன ஆசைப்பட்டாள்; அரசரால் அதைக் கொடுக்க முடியவில்லை. மாம்பழம் வரும்முன் இறந்துவிட்டாள். அதனால் தங்கத்தில் மாம்பழம் செய்து பிராமணர்களுக்குத் தானம் செய்தாராம் அரசர். கிருஷ்ணதேவராயரின் மனைவிக்கும் அவரது மாமியாருக்கும் இருந்த உறவு பற்றி சத்தியநாத அய்யரைப் போன்ற வரலாற்றாசிரியர்கள் பதிவு செய்யவில்லை. பேரரசரின் அம்மாவுக்கும் பெரிய தெரு கொலுசம்மா ஆச்சிக்கும் நிலை ஒன்றுதான்.

பொதுவாக ஒருவரின் இறப்பு நிகழ்வில் துக்கம் விசாரிக்கச் செல்பவர்கள் வீட்டுக்காரர்களிடம் "போகட்டுமா" என்றோ "போய் வருகிறேன்" என்றோ சொல்லி விடைபெறக்கூடாது; போய் வருகிறேன் என்பதற்கு அடையாளமாய் தலையை அசைத்தோ கைகளால் சைகை செய்யவும் கூடாது.

காலங்காலமாய் நாஞ்சில் நாட்டில் பின்பற்றப்படும் வழக்கம் இது. துக்கம் விசாரிக்க என்று அந்த வீட்டிற்கு மீண்டும் யாரும் வரக்கூடாது என்பது தொடர்பான நம்பிக்கை அது. அச்சக உரிமையாளரிடம் வருகைக்கு நன்றி என்ற வாசகத்தின் கீழ் தயைகூர்ந்து "மீண்டும் வருக" என்று சேர்த்துக்கொள்ளுங்கள் என்றேன்.

இந்த விஷயத்தைச் சமூகவியல் படித்த நாட்டுப்புறவியல் ஆய்வாளர்களான என் நண்பர்களுடன் பகிர்ந்து கொண்டபோது இந்தத் தகவல்கள் கவனிக்கப்பட வேண்டியவை என்று ஒருமித்த குரலில் சொன்னார்கள். இதன் காரணமும் விவாதிக்கப்பட்டது.

பொதுவாக நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர்கள் நாட்டார் தெய்வம் அல்லது வழிபாடு பற்றிய செய்திகளைச் சேகரித்து இவற்றின் சமஸ்கிருத வயப்படுத்தல் / பிராமணமயமாதல்/ மேல்நிலையாக்கம் பற்றி விரிவாக ஆராய்வது என்பது நடைமுறையில் உள்ளது. ஆனால் சாதி வாரியாக

வாழ்க்கைவட்டச் சடங்குகளின் மேல்நிலையாக்கம் பற்றிய சரியான தகவல்கள் சேகரிக்கப்படவில்லை என்று தோன்றுகிறது.

நாஞ்சில் நாட்டு வேளாளரின் வாழ்க்கைவட்டச் சடங்குகளில் மாதிரிக்காக இறப்பு நிகழ்வில் நடக்கும் நீர்மாலைச் சடங்கு, திருமண நிகழ்வில் நடக்கும் ஏழாநீர் சடங்கு, உறுமா கட்டும் நிகழ்வு மூன்றையும் எடுத்துக்கொண்டு இவற்றின் பழையநிலை, இன்றைய மாற்றம் பற்றிய செய்திகளைச் சேகரித்தேன். எனக்குச் சுவையான தகவல்கள் கிடைத்தன.

என் சேகரிப்பின்வழி, சடங்குகளின் தோற்றம் குறித்துக் கூறமுடியாதபடி உருவானதைப் போலவே மாற்றமும் நிகழ்ந்தது என்பது தெரிந்தது. இந்த மாற்றத்திற்குப் பொருளாதார நிலையும் சூழ்நிலையும் பெரும்பாலும் காரணங்களாக இருந்திருக்கலாம் என்பதும் தெரிந்தது.

பிணத்தை முழுக்காட்ட நீர் எடுக்க உறவினர்கள் செல்வதும் பிணம் எடுக்கும் முன்பு அதற்குரிய பூமாலை வாங்க இறந்தவரின் மகன் செல்வதுமான சடங்கு நீர்மாலை எனப்படும். பிணத்தைக் குளிப்பாட்ட வேண்டிய நீரை ஊர்க்குளத்திலிருந்து / நீர் நிலையிலிருந்து உறவினர்கள் எடுத்துவர வேண்டும். இறந்தவரின் மகன் ஊரின் எல்லையில் உள்ள (கோவிலுக்குச் சொந்தமான குளம் அல்ல) குளத்தில் முப்புரிநூலணிந்து கோடித்துணி உடுத்து வருவதும் இந்தச் சடங்குதான்.

இதே சடங்கு நகரத்தில் நடப்பதில்லை. இறந்தவரின் வீட்டின் முன்முற்றத்தில் சிறிய செம்பில் தண்ணீரை வைத்து சடங்கைச் செய்யச் சொல்வர். சடங்கைச் செய்பவர், உள்ளங்கையில் கொஞ்சம் நீரை எடுத்து தலையில் லேசாகத் தெளித்துக் கொள்ளுவார். அது குளித்ததற்கு அடையாளம். தண்ணீரால் உடலைக் கழுவுவது பிணத்தின் தீட்டிலிருந்து காப்பாற்றும் என்ற பழைய வழக்கம் மாறி ஒரு டீஸ் ஸ்பூன் தண்ணீரைத் தலையில் தெளித்தால் போதும் என்ற வழக்கம் நகரம்வழி கிராமத்திலும் இப்போது புகுந்துவிட்டது.

பிணத்துக்குப் போடப்படும் மாலையை ஊர் அம்மன் கோவில் பூசாரியிடமிருந்து பெறும் சடங்கும் நீர்மாலைதான். இறந்தவரின் மகன் ஊர் முச்சந்திக்குச்

சென்று இந்த மாலையைப் பெறுவார். இந்த மாலை வைத்திருக்கும் பானையை இறந்தவரின் மகனின் தலையில் வைக்கும் உரிமை அவரது அத்தானுக்கு.

இந்தச் சடங்கு பற்றிய செய்தியை நான் ஆய்வாளர் செந்தீ நடராசனிடம் பகிர்ந்துகொண்டபோது நீர்மாலை என்பதற்கு ஒரு விளக்கம் கொடுத்தார். ஊர் அம்மன்கோவில் சாமிக்குப் போட்டுக் கழற்றிய மாலையைப் பெறுவதுதான் இந்தச் சடங்கு என்றார்.

நிர்மால்ய மாலையைப் பெறுவதுதான் இந்தச் சடங்கின் தாத்பரியம். 'நிர்மால்யம்' என்பதற்குப் பூசித்து கழித்த பொருள் என்பது பொருள். இதே பொருளைத் தக்கயாகப்பரணி உரை கூறுவதைத் தமிழ் லெக்சிகன் குறிப்பிடும். நாஞ்சில்நாட்டுப் பேச்சுவழக்குச் சொல் நிர்மால்ய தரிசனம். இதற்கு அதிகாலையில் (உஷஷ் நேரம்) முந்தின நாள் புனைந்த அலங்காரத்துடன் மூலவருக்குச் செய்யும் பூசையைப் பார்ப்பது என்று பொருள்.

நிர்மால்யம் என்பதிலிருந்துதான் நீர்மாலை வந்தது. சாமிக்குச் சூட்டிய மாலையைப் பிணத்துக்குப் போட வேண்டும் என்பது பழைய மரபு. இந்தச் சாமி நாட்டார் தெய்வமாகத்தான் இருக்க வேண்டும். நிறுவன தெய்வங்களுக்குச் சூட்டிய மாலையைப் பிராமணர் அல்லாதார் பிணத்திற்குப் போடும் வழக்கம் இல்லை. ஊர் அம்மன் அல்லது பிற நாட்டார் தெய்வக் கோவிலுக்கும் இறப்புச் சடங்குக்கும் உள்ள உறவு இது. ஊரிலிருந்து விலக்கப் பட்டவர்களுக்கு இந்தச் சடங்கு நிகழாது. இது ஒருவகை தண்டனையும்கூட.

இந்தச் சடங்கு நகரங்களில் பெரும்பாலும் நிகழ்வதில்லை. நாகர்கோவிலில் புதிதாக வந்த காலனிகளில் இருப்பவர் இறந்து போனால் நீர்மாலைச் சடங்கை மறக்க வேண்டியதுதான். யாரோ ஒருவர் பூக்கடையிலிருந்து வாங்கி வந்த ரோஜாமாலையை இறந்தவரின் வீட்டின் முன்னே நின்றபடி வாங்கிப் பிணத்துக்குச் சூட்டுவார்கள். இதோடு நீர்மாலைச் சடங்கு முடியும்.

நாஞ்சில் நாட்டு வேளாளரின் திருமணத்தின் இரண்டாம் நாள் நிகழ்வது ஏழாம்நீர்ச் சடங்கு. இந்த நாளில் மணமக்களின் காப்பை அறுத்தல், மணமகள்

பொங்கலிடுதல், பிள்ளை மாற்று போன்ற சடங்குகள் நிகழும். இத்துடன் இன்னொரு சடங்கும் உண்டு. ஏழாம்நீர்ச் சடங்கில், தண்ணீர் நிறைந்த பானையில் போடப்பட்டிருக்கும் கத்தியையும் மோதிரத்தையும் எடுப்பதற்கு மாப்பிள்ளையும் பெண்ணும் போட்டி போட்டுக்கொண்டு பானையில் கைவிட்டுத் துளாவும் நிகழ்வு அது.

இருபது ஆண்டுகளுக்கு முன்பு இப்படி ஒரு சடங்கில் நான் கலந்துகொண்டபோது பெரியவர் ஒருவரிடம் பானையில் கத்தியையும் மோதிரத்தையும் போட்டு எடுக்கச் சொல்லுகிறார்களே ஏன் என்று கேட்டேன். இதற்கு எனக்கு விடை தெரியும். இருந்தாலும் மேலும் விளக்கம் கிடைக்கலாம் என்று ஆசை.

பெரியவர் சிரித்துக்கொண்டே சொன்னார். "பானையில் எழுத்தாணியும் மோதிரமும்தான் போட வேண்டும்; மாப்பிள்ளை எழுத்தாணியை எடுக்கணும். பொண்ணு மோதிரத்தை எடுக்கணும். இது முறை. வேளாளர்கள் திருவிதாங்கூரில் கணக்குப்பிள்ளைகளாக இருந்தவர்கள். இதன் அடையாளம் எழுத்தாணி. செல்வத்துக்கு அடையாளம் தங்கம் (மோதிரம்) எழுத்தாணி இப்போ யாரு கிட்டே இருக்கு. ஏட்டுல எழுதுன காலத்தோட அது போச்சு. அதனால் யாரோ எழுத்தாணிக்குப் பதில் பானையில் கத்தியப் போட்டிருப்பா. இது இப்போ பழக்கமாயிடுச்சு" என்றார்.

நான் அண்மையில் கலந்து கொண்ட ஏழாம்நீர்ச் சடங்கில் பானையில் இரும்புத் துண்டையும் மோதிரத்தையும் போடுவதைப் பார்த்தேன். ஒரு வயதான பெண் அந்தக் காலத்தில் பேனாக்கத்தி (Pen Knife) தான் போடுவார்கள். இப்போது யாருட்ட மடக்குக் கத்தி இருக்கு. காய்கறி வெட்டப்பட்ட கத்தியப் போட முடியாது. அதனால் இரும்புத் துண்டு போடலாம் என்றாள். இப்படி இரும்புத் துண்டைப் போடுவதன் தாத்பரியம் என்ன என்று ஒருவரிடம் கேட்டேன். அந்தப் பேராசிரியர் பழைய காலத்தில் யாரோ மாப்பிள்ளைக்குக் காக்காவலிப்பு வந்திருக்கும். இரும்புத் துண்டைக் கொடுத்திருப்பார்கள். அதன் அடையாளம் இது என்றார் சீரியசாக.

இப்படியாக வேளாளரின் வாழ்க்கைவட்டச் சடங்குகளில் பல பழைய வடிவத்தை இழந்து வசதிக்கேற்ப மாறிக்கொண்டிருப்பது அல்லது மாற்றப்படுவது வேகமான வாழ்வில் கவனிக்கப் படாமலேயே ஆகிவிட்டது. ஆனால் பணம் அல்லது அன்பளிப்புப் பொருள்கள் பெறும் சடங்குகள் பெரும்பாலும் தன் சுயத்தை இழக்கவில்லை (எ.கா: பிள்ளை மாற்றுச் சடங்கு, மாமியார் சுருள்).

நாஞ்சில் நாட்டு மருமக்கள்வழி வேளாளரின் திருமண வாழ்வில் உறுமா கட்டுதல் என்ற நிகழ்வுகள் உண்டு.

உறுமா அல்லது உருமா என்பதற்கு அங்கவஸ்திரம், டர்பன் எனப் பொருள்கள் உள்ளன. இது தமிழ்ச்சொல் அல்ல. உருது மொழியிலிருந்து தமிழிற்கு வந்தது. தலைப்பாகை என்னும் பொருளில் சாதாரணமாக அழைக்கப்படும் இந்தத் துணி, அங்கவஸ்திரமாக இருக்கும்போதும் உறுமா எனப்பட்டிருக்கிறது. வேளாளர் அல்லாத சாதிகளில் சிலர் தலைப்பாகையை உறுமா என்று அழைத்திருக்கின்றனர். நாயர் தொடர்பான காணிசாவு என்ற கதைப்பாடல் திருவிதாங்கூர் வீரர்கள் பத்மநாபபுரத்திலிருந்து வடதிருவிதாங்கூர் செல்லும் காட்சியை வருணிக்கும்போது,

உன்னிகுளம் ஊருமிட்டு ஊருவிட்டு

உருமாக்கட்டு வீரரெல்லாம். . .

என்று கூறுகிறது. நாஞ்சில் நாட்டின் தென்பகுதியில் உள்ள புத்தளம் ஊரில் வரிப்பிரிக்கும் உரிமை பெற்றிருந்த சிதம்பர நாடார், தலையில் கட்டிய உருமாவுடன் வெள்ளைக் குதிரையில் வந்தார் என்ற செய்தி சிதம்பர நாடார் வில்லிசைப் பாடலில் காணப்படுகிறது. இக்கதை 18ஆம் நூற்றாண்டினது.

அச்சில் வராத முதலியார் ஆவணம் ஒன்று ஆரல்வாய்மொழி அருகே ஒரு குக்கிராமத்தில் செட்டியார் சாதியைச் சார்ந்த ஒருவர் பல்லக்கில் ஏறவும் உறுமாக் கட்டவும் அரசரிடம் அன்பளிப்புக் கொடுத்து அனுமதி பெற்றதையும் கூறும். இது போன்று வேளாளர் அல்லாத சாதிகள் உறுமா என்னும் தலைப்

பாகையை அந்தஸ்துக்காகவும் மரபு வழியும் கட்டிய செய்தியைக் கதைப்பாடல்களும் வழக்காறுகளும் சொல்லுகின்றன.

நாஞ்சில் நாட்டு வேளாளரின் திருமணத்தில் மாப்பிள்ளை பெண்ணுக்கு முகூர்த்தப்பட்டை (தாலிகட்டு நிகழ்ச்சியில் உடுக்க வேண்டிய பட்டு) கொடுத்தபின்பு பெண் அதை உடுக்கச் செல்வாள். இந்த நேரத்தில் மாப்பிள்ளைக்கு உறுமாக்கட்டும் நிகழ்ச்சி (இது சடங்கு அல்ல) நடக்கும். வேளாளர்கள் இதைத் தங்கள் சாதி அந்தஸ்தின் அடையாளமாகக் கருதும் நிலை இப்போது ஆகிவிட்டது.

வேளாளரின் உறுமாகட்டும் வழக்கம் குறித்த செய்திகளை நான் சேகரிக்கத் தொடங்கியபோது அறுபது அல்லது எழுபது ஆண்டுகளுக்கு முன்பு புகுத்தப்பட்ட வழக்கம் அது என்பது உறுதியாகத் தெரிந்தது. நாஞ்சில் நாட்டின் முதுபெரும் புலவரும் ஆரம்பகாலத்தில் (1948) நாஞ்சில் நாட்டின் வரலாற்றை எழுதியவருமான சதாசிவம்பிள்ளை (1908 – 2004) தன் திருமணத்தின்போது (1934)கூட உறுமாக்கட்டு நிகழவில்லை என்பதைச் சொல்லியிருக்கிறார்.

நாற்பதுகளில்கூட தாய்மாமன் மணமகனுக்கு ஈரிழைத் துவர்த்தைக் (வெள்ளைத்துண்டு) கட்டும் நிகழ்ச்சி மட்டும்தான் நடந்தது. மாப்பிள்ளை பெரியவனாகிறான் என்பதன் அடையாளம் அது. மருமக்கள்வழி ஒழிந்த பின்பும் (1926) காரணவனான மாமாவிற்குத் திருமணம், இறப்புச் சடங்குகளில் கொடுக்கப்பட்ட மரியாதை தொடர்ந்தது. நிலஉரிமை பறிபோன பின்பு இதுபோன்ற அந்தஸ்தைக் காப்பாற்றிக் கொள்ளுவதில் காரணவர்கள் முனைப்புடன் இருந்திருக்கிறார்கள். நடைமுறைச் செயல்பாடுகள் சட்ட ரீதியாக நிறுத்தப்பட்டாலும் அது தொடர்பான சடங்குகளும் வழக்காறுகளும் தொடருவதற்கு அந்தச் சட்டம் தடையாக நிற்காது என்பதற்கு வேறு சான்றுகள் உண்டு. (எ.கா. கோவில் சடங்குகளுக்கும் நம்பூதிரிகளுக்கும் உள்ள தொடர்பு)

பெண்கள் ரவிக்கை அணியும் வழக்கம் பரவலான பின்பு பல வண்ணத் துணிகளுக்கும் கிராக்கி வந்தது. இந்த ரவிக்கைத் துணி ஈரிழைத் துவர்த்தின்

இடத்தைப் பிடித்துக் கொண்டது. வாலு போய் கத்தி வந்தது டும் டும் கதை மாதிரி. எழுத்தாணி போய் கத்தி போய் இரும்புத்துண்டு ஆனதுடன் உறுமாவையும் சேர்த்துக் கூறலாம்

மாமன், அத்தான் முறை உள்ளவரே உறுமா கட்டவேண்டும் என்று புதிதாகக் கற்பிக்கப்பட்ட வழக்கமும் குலைந்து நண்பர்களும் வேண்டியவர்களும் கட்டலாம் என்ற நிலை ஆன பின்பு ஆளும் கட்சி அரசியல் தலைவனுக்குச் சால்வை போடுவதற்காக முண்டியடிக்கும் கூட்டத்தைப்போல் வேளாளப் பிரமுகர்கள் மணமேடையில் நெருக்கிக் கொண்டு நிற்பது இன்று சகஜமாகி விட்டது.

இப்படியாக வேளாளரின் திருமணச் சடங்கு, இறப்புச் சடங்கு, குழந்தை பிறப்புச் சடங்கு போன்ற எல்லாவற்றிலுமே பழையன கழிந்து புதியன புகுந்துள்ளன. பழையன கழிவதற்கும் புதியன புகுவதற்கும் சடங்கு நடத்தபவரின் பொருளாதாரநிலை, அவர் இருக்கும் இடத்தின் சூழ்நிலை, தாமாகக் கற்பனை செய்துகொண்ட அந்தஸ்து, காலத்தால் அழிந்துபோன பழம் பெருமை ஆகியவற்றையும் காரணங்களாகக் கொள்ளலாம். இந்த மாற்றங்கள் சூழ்நிலையால் ஏற்படுகின்றன என்பது ஒருபுறம் இருந்தாலும் பணம் படைத்தவர்கள் இதற்கு முக்கிய காரணமாக இருக்கின்றனர் என்பதைப் பல செய்திகளின் அடிப்படையில் கூற முடியும்.

பொதுவாக வேளாளரின் வாழ்க்கை வட்டச் சடங்குகளில் அசைவ உணவுக்கு இடம் கிடையாது. (விதிவிலக்கு குழந்தைக்குப் பெயரிடும் சடங்கு). ஆனால் 10 ஆண்டுகளுக்கு முன்பு திருமண நிகழ்வு ஒன்றில் பணக்காரர் ஒருவர் சிக்கன் பிரியாணி பரிமாறிய பிறகு அது பழக்கமாகிப் பின் வழக்கமாகிவிட்டது. எதிர்காலத்தில் அது நம்பிக்கை ஆகிச் சடங்காக மாறலாம்.

**இது பெரிய எழுத்து, ஏப்ரல் 2010**

# தொடரும் புதையலைத் தோண்டும் ஆசை

தங்கத்தை மண்ணிலே புதைத்து வைப்பது என்பது புதிய செய்தி அல்ல. பாடலிபுத்திரம் சோனை நதிக்கரையில் தங்கத்தைப் புதைத்து வைத்திருந்தார்கள் என்ற செய்தியைச் சங்கப்பாடல் ஒன்று கூறும்.

இரும்பைப் பொன்னாக மாற்றும் பச்சிலை மூலிகை உண்டு என்ற நம்பிக்கையின் வேகம் இப்போதும் மனிதனை ஆலாய்ப் பறக்க வைக்கிறது. மெத்தப் படித்தவர்களும் இதற்கு விதிவிலக்கு இல்லை. அதன் விளைவுதான் உ.பி.யில் சாமியார் பேச்சைக் கேட்டு அரசாங்கமே தோண்டத் தொடங்கியிருக்கிறது.

ஸ்ரீரங்கநாதன், கோவில் பூசகர்களுடன் கொண்ட மாறுபாட்டால் சங்கிலிபூதம், ஈஸ்வரகால பூதம் என்னும் இரண்டு பூதங்களுடன் திருவிதாங்கூருக்குக் குடிபெயர்ந்தது பற்றிய ஒரு கதைப்பாடல் உண்டு. அதில் ஒரு நிகழ்ச்சி,

". . . ரங்கநாதன் கிலுகிலுப்பைக் காட்டின் நடுவே அமர்ந்தான். புலைச்சி ஒருத்தி அவனை அடையாளம் கண்டு பசியாற்றினாள். அந்த ஊர் அரசன் ரங்கனைக் கனவில் கண்டு கோவில் கட்டினான். கோவில் கருவறையில் ஒரு துவாரம் இருந்தது. அதன்வழி கடல்நீர் பொங்கி வழிந்தது. பணியாளர் துவாரத்தை அடைத்துப் பார்த்தனர். முடியவில்லை.

திருவனந்தபுரம் அரசன் வலிய நம்பூதிரி ஒருவரை வரவழைத்துப் பூஜை செய்தான். அவர் பொன் ஆபரணங்கள் நிறைந்த பாத்திரத்தைத் துவாரத்தில் போட்டார். உடனே துவாரம் அடைத்துக்கொண்டது. ஒருநாள் இளம் நம்பூதிரிப் பூசகர் அந்தத் துவாரம் இருந்த இடத்திலிருந்த கல்லைப் பிடுங்கினார். பாதாள அறையைக் கண்டார். அதன்வழி இறங்கினார்.

நம்பூதிரி அங்கே பானை பானையாய்த் தங்கப்பாளங்கள் இருப்பதைப் பார்த்தார். அவர் திகைத்து நின்றபோது 'சீத்' என்ற சப்தம் கேட்டது. நம்பூதிரி

ஓட்டமாய் வெளியே வந்தார். பாதாள அறையை அடைத்துவிட்டா¢¢. அதற்குச் சங்கிலி பூதத்தைக் காவல் வைத்தார்!' இப்படி ஒரு கதை உண்டு.

இதை எல்லாம் கதை என்றே முடிவு செய்து நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர்கள் ஆராய்கின்ற சமயத்தில், இந்தியப் பத்திரிகைகள் எல்லாவற்றிலும் திருவனந்தபுரம் பத்மநாப ஸ்வாமி கோவிலில் புதையல் கண்டுபிடிப்பு என்னும் செய்தி வந்தது. இதெல்லாம் ஓய்ந்து போன விஷயம் என விட முடியவில்லை. தமிழகக் கோவில்களின் கும்பாபிஷேகப் பணியின்போது கோவில் நிர்வாகிகள் விழிப்புடன் இருக்க ஆரம்பித்துவிட்டார்கள். எதாவது கிடைக்கலாம் என்ற நம்பிக்கை தொடருகிறது.

இருபதாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் தென் திருவிதாங்கூரில் தென்மீதிப் பகுதி மலையடிவாரத்தில் குறத்தியறை என்ற ஊரில் உள்ள குடைவரைக் கோவிலின் அருகே ஒரு வட்டெழுத்துக் கல்வெட்டைத் திருவிதாங்கூர் தொல்லியல் துறையினர் கண்டுபிடித்தார்கள். படி எடுக்க முடியாத அளவுக்கு அது மங்கிக்கிடந்தது.

அந்தக் கல்வெட்டு முதல் பராந்தகன் காலத்தது. அமர்ந்தகோலப் பெருமாளுக்கு நிவந்தம் கொடுத்த செய்தி அது. அக்காலத்தில் அது ரசவாதக் கல்வெட்டு, இரும்பைத் தங்கமாக்கும் பச்சிலை மூலிகை பற்றிய தகவல் உள்ளது என்ற செய்தியும் பரவியது. அதனால் சித்தவைத்தியர்கள் பத்திரம் எழுதுபவர்களின் (Document writers) உதவியுடன் அந்தக் கல்வெட்டைத் தேடிப்போனார்கள். இது 1925 – 30 ஆண்டுக்கால நிகழ்வு. இப்படியெல்லாம் நடப்பதற்கு மரபுவழியே பேசப்பட்ட ஒரு கதையும் காரணம்.

கல்வெட்டு இருக்கும் இடத்தில் உள்ள குடைவரைக் கோவிலைக் கதவடைச்சான் பாறை என்கின்றனர். இந்த ஊர் மக்களுக்குத் திருமண நிகழ்வில் தங்க ஆபரணங்களைக் கடன் கொடுத்து வாங்கிய அவ்வை ஒருத்தி இருந்தாள். இக்குடைவரையில் நிறைய ஆபரணங்கள் இருந்தன. ஒருமுறை அவ்வையைப் பார்க்க ஒருவர் முயற்சி செய்தபோது கதவு தானாக அடைத்துக்கொண்டதாம். இன்னொரு கதையும் உண்டு.

நாஞ்சில் நாட்டு மலைக்குறவன் ஒருவன் காட்டில் ஒரு செடியை இரும்புக்கத்தியால் வெட்டியபோது கத்தி தங்கமாக மாறியதைக் கண்டான். அந்தச் செடியின் இலைச் சாறுக்கு இரும்பைத் தங்கமாக்கும் சக்தி உண்டு என்பதை அறிந்துகொண்டான். வீட்டிலிருந்த பழைய இரும்புப் பொருட்களின்மேல் அந்த இலைச்சாற்றைத் தேய்த்தான். எல்லாம் தங்கமாயின. அவன் பணக்காரரானான். ஆயுத வீரர்கள் அடங்கிய ஒரு படையை வைத்துக்கொண்டான்.

குறவன் நாஞ்சில் நாட்டின் அரசனானான். மக்கள் வரிப்பணமாக இரும்புத் துண்டுகளைக் கொடுத்தால்போதும் என்றான். மக்களுக்கும் சந்தோஷம். குறவ அரசன் நாஞ்சில் நாட்டில் உயர்சாதியரான ஒரு அதிகாரியிடம் பெண் கேட்டான். அவருக்குப் பெண் கொடுக்க விருப்பமில்லை. அவர் அவனைச் சூழ்ச்சியால் கொன்றுவிட்டார். குறவன் தான் அறிந்த ரகசியத்தைக் கல்லில் வெட்டிவைத்தான். அது பரிபாஷையாக உள்ளதாம். அந்த நம்பிக்கை இன்னும் தீர்ந்தபாடில்லை.

சோழநாட்டுக்காரன் இலங்கைக்குப் போய் தங்கம் சம்பாதித்த கதை ஒன்று உண்டு. சோழஅரசன் ஒருவனுக்கு அண்ணன் தம்பிகள் ஏழுபேர் பணியாளராக இருந்தனர். ஒருமுறை அரசனுக்கும் சகோதரர்களுக்கும் மாறுபாடு வந்தது. அரசன், ஒருவனின் தலையை எடுத்துவிட்டான். மற்றவர்கள் சோழநாட்டிலிருந்து பல்வேறு இடங்களுக்குக் குடிபெயர்ந்தனர்.

ஒருவன் இலங்கையில் குடியேறினான். ஒருநாள் அவன் வீட்டில் இல்லாதபோது, சித்தர் ஒருவர் அவன் வீட்டிற்கு வந்தார். அவருக்குக் குடிக்கப் பதநீர் கொடுத்து உபசரித்தாள் சோழநாட்டுக்காரனின் மனைவி. சித்தர் அவன் வீட்டில் கிடந்த இரும்புத் துண்டில் பச்சிலையைத் தேய்த்து தங்கமாக ஆக்கி அவளிடம் கொடுத்தார்.

சித்தர் கொடுத்த தங்கத்தில் ஒட்டியிருந்த மூலிகையை அடையாளம் கண்ட சோழநாட்டுக்காரன் இரும்புகளைச் சேகரித்துத் தங்கமாக்கினான். பெரும் பணக்காரன் ஆனான். கோட்டையும் கட்டிக்கொண்டான். இதை எல்லாம் எப்படியோ அறிந்த வெள்ளைக்காரன் (போர்ச்சுக்கீசியன்) ஒருவன் சோழ

நாட்டுக்காரனிடம் இரும்பைத் தங்கமாக்கும் மூலிகை பற்றிக் கேட்டான்; சோழதேசத்தான் உங்கள் நாட்டு நாணயத்தில் என் பேரைப் போட்டால் அந்த ரகசியத்தைச் சொல்லித் தருகிறேன் என்றான். அதற்கு வெள்ளைக்காரன் இசைந்தான். சோழ நாட்டுக்காரனும் ரகசியத்தைச் சொல்லிக் கொடுத்தான். உடனே அவனைக் கொன்றுவிட்டான் வெள்ளைக்காரன்.

ஆனால் வெள்ளைக்காரனால் அந்த மூலிகையை இனம் காணமுடியவில்லை. அதனால் அவன் கோட்டையைத் தரைமட்டமாக்கித் தோண்டினான். தங்கப்பாளங்கள் கிடைத்தன. வெள்ளைக்காரர் ஆட்சி முடிந்தபின்பும் அவனது கோட்டை இருந்த இடத்தைப் பிரிட்டிஷ்காரர்கள் தோண்டிப் பார்த்தார்களாம்.

இதுபோல மதுரையிலும் வெள்ளைக்காரர்கள் தங்கத்தைத் தேடி கோவில் வளாகத்தைத் தோண்டிய கதை உண்டு.

விக்கிரமாதித்தனும் அவன் மந்திரி பட்டியும் காட்டுவழிச் சென்றபோது ஒரு காளி கோவிலைக் கண்டார்கள். அது பாழடைந்து கிடந்தது. பட்டி அதைப் புதுப்பித்து வழிபாடு நடத்த வேண்டும் என்றான். கோவிலைப் புதுப்பிக்க ஆரம்பித்தபோது பாதாள அறையில் தங்கங்கள் குவிந்து கிடப்பதைப் பார்த்தனர். பட்டி அவற்றை ஒழுங்காக அடுக்கி வைத்துப் பாதாள அறையை மூடச்செய்துவிட்டான்.

இதெல்லாம் நடந்து பல வருஷங்களுக்குப்பிறகு அந்தக் கோவிலுக்குப் பூசை செய்ய வந்தான் நம்பியான் ஒருவன். அவனுக்குத் தன் மகளுக்குத் திருமணம் செய்யப் பணம் இல்லையே என்ற ஆதங்கம். காளியிடம் முறையிட்டான். காளி, 'பாதாள அறையில் தங்கப்பாளங்கள் உள்ளன. எடுத்துக்கொள்; மகளின் திருமணத்தை நடத்து' என்றாள். நம்பியான் அந்த அறையைத் திறந்து ஒரு தங்கக் கட்டியை எடுத்துக் கொண்டான். அதை மதுரையில் விற்கப் போனான்.

நம்பியான் தெருவழியே போகும்போது குதிரையில் சென்ற வெள்ளைக்கார துரை குழல் கண்ணாடி (பைனாக்குலர்) வழி நம்பியானின் தங்கக்கட்டியைப் பார்த்தான். நம்பியானைப் பிடித்து விசாரித்தான். நம்பியான் காளிகோவிலில்

எடுத்ததாகச் சொன்னான். பாதாள அறையைப்பற்றி வாய் திறக்கவில்லை. வெள்ளைத்துரை பட்டாளத்துடன் காளி கோவிலுக்குப் போனான். கோவிலைச் சுற்றித் தோண்டினான். இந்தச் சமயத்தில் காளி பேய்ப் படைகளை அனுப்பி வெள்ளைப் படைகளைக் கொன்றாள்.

இவையெல்லாம் கதைகள் என்று ஒதுக்க முடியாது. கதைகளுக்குப் பின்னால் ரகசியம் உண்டு என்று சொல்லிவிட்டுத் தங்கம் தேடிய ஆராய்ச்சியாளர்களும் இருந்தனர்.

தென்மாவட்டங்களைக் கலக்கிய கொள்ளைக்காரன் செம்புலிங்கம் போலீஸாரால் சுட்டுக்கொல்லப்பட்ட (1922) பின்பு அவன் மறைந்து வாழ்ந்த மலைக்குகைகளுக்குத் தங்கம் தேடி அலைந்தனர் பலர். அவன் கொள்ளையடித்த பெருமளவு தங்க ஆபரணங்களைக் குகைகளில் மறைத்து வைத்திருக்கிறான் என்ற செய்தி பரவியது அப்போது. இதனால் வருவாய்த் துறையினர் இதைக் கண்காணிக்க வேண்டியதாயிற்று.

பணத்தைப் புதைத்து வைப்பது பழைய வழக்கம். "பாடுபட்டுத் தேடி பணத்தைப் புதைத்து வைத்த மானிடரே" என்பது பழைய பாடல். புதைப்பது என்பதற்கு ஒளித்துவைத்தல் என்று பொருள் உண்டு. இதே சொல் திருமந்திரத்தில் வரும்; கம்பனில் வரும். தமிழ் இலக்கியங்களில் பரவலாக இது பற்றிக் குறிப்புகள் உண்டு.

பொருளாதார நிபுணர்கள் தங்கத்தை வெறும் உலோகமாகக் கருதினால் அதற்கு மதிப்பிருக்காது என்பர். வள்ளலாரும் பரமஹம்சரும்கூட இதை வேறு வடிவில் கூறினர். ஆனால் எல்லாக் காலத்திலும் 'தங்கம்' உயர்ந்த பொருளாகக் கருதப்பட்டது. அதனால் தேடுதல் வேட்கை முடிவடையாது.

**குமுதம் தீராநதி, 2013 டிசம்பர்**

## குறவனுக்கு மரியாதை

மேலும் இல்லாமல் கீழும் இல்லாமல் இரண்டுங்கெட்டான் நிலையைக் குறிப்பிட "திரிசங்கு சொர்க்கம்" என்று சொல்வதுண்டு. இது ஒரு கதைவழி வந்த வழக்காறு.

சூரிய வம்சத்தில் திரிசங்கு என்ற அரசன் இருந்தான். அவனுக்குத் தன் சொந்த உடலுடன் சொர்க்கலோகம் போக ஆசை. அவன் தன் குருவான வசிட்டரிடம், "நீர் யாகம் செய்து உம் தவ வலிமையால் என்னை சொர்க்கத்துக்கு அனுப்பும்" என்றான். வசிட்டர் அதற்கு இணங்கவில்லை.

திரிசங்கு வசிட்டரின் மக்களிடம் "யாகம் செய்து என்னைத் தூல உடம்போடு சொர்க்கத்துக்கு அனுப்புங்கள்" என்றான். அவர்கள் "எங்கள் தந்தை மறுத்த பிறகு நீ எங்களிடம் எப்படி வரலாம். அதனால் சண்டாளனாகப் போவாய்!" என சாபம் கொடுத்தனர்.

பாகவதர்களான கதாகால க்ஷேபக்காரர்கள் கூறும் இதுபோன்ற கதைகளில் சண்டாளன், புலையன், பாணன், சாம்பவர் போன்றோர் மெத்தப் படித்தவர்களுக்கும் ஞானம் உரைத்த செய்திகள் கூறப்படுகின்றன. இந்தக் கதைகள் மிகைப் படுத்தப்பட்டதும் பிற்காலத்தில்தான்.

இந்தச் சாதி வரிசையில் குறவர் சாதிக்கு இடமில்லை. ஆனால் தென்மாவட்டக் கோவில்களில் குறவன் குறத்திக்கு மட்டும் பெரிய அளவில் ஆளுயரச் சிற்பங்கள் உள்ளன. இப்படி அமைத்ததற்குரிய செய்திகளும் கதைகளும் சேகரிக்கப்படவில்லை.

திருநெல்வேலி நெல்லையப்பர் கோவில், கிருஷ்ணாபுரம் வேங்கடாசலபதி கோவில், குமரி மாவட்டம் ஆதிகேசவப் பெருமாள் கோவில், சுசீந்திரம் தாணுமாலயன் கோவில் போன்றவற்றில் குறவனின் அற்புதமான ஆளுயரச் சிற்பங்கள் உள்ளன.

கிருஷ்ணாபுரம் கோவில் திருமண மண்டபத்தில் இரண்டாம் தூணில் குறத்தி இளவரசனைக் கவர்ந்து செல்லும் சிற்பமும் ஐந்தாம் தூணில் குறவன் இளவரசியைக் கவர்ந்து செல்லும் சிற்பமும் உள்ளன. குறவனின் இடதுபுறம் அரசகுமாரன் ஒருவன் குதிரைமேல் வருகின்றான். குறவனின் விலாப் பகுதியில் ஈட்டியால் குத்துகிறான். அவனது விலாவிலிருந்து ரத்தம் வடிகிறது. குத்துப்பட்ட குறவன் துடிக்கிறான். குறவனின் இடதுபுறமிருந்து இன்னொரு வீரன் வாளுடன் வருகிறான். குறவனின் தோளிலிருக்கும் இளவரசியின் மேலாடை காற்றில் பறக்கிறது. அவன் குடுமியைப் பற்றி இழுக்கிறது.

திருவட்டாறு ஆதிகேசவர் கோவிலில் ஸ்ரீபலிக் கல்மண்டபத்தில் ஐந்தாம் தூணில் குறவனின் பெரிய அளவு சிற்பம் உள்ளது. இங்கு குறவன் சமபங்க நிலையில் நிற்கிறான். அவனது வலது கையில் நீண்ட வாள்; இடது கையில் ஊது கொம்பு; அதை அவன் தூக்கிப் பிடித்திருக்கிறான். கழுத்தில் நீண்ட மாலை. காதில் நாலுமுக்குக் கடுக்கன். முடித்து வைக்கப்பட்ட தலைமுடி; நெற்றியில் தென்கலை நாமம்.

பிற கோவில்களிலும் இதுபோன்ற சிற்பங்கள் உள்ளன. கோவில் சித்திரசபையிலோ முகமண்டபங்களிலோ வெளிப்பிரகாரங்களிலோ தூண்களிலோ இவை புடைப்புச் சிற்பங்களாக உள்ளன. சண்டாளன், பறையர், சாம்பவர் போன்ற சாதிகளில் பக்தி முற்றி ஞானம் அடைந்தவர்களைப் பற்றிய புராணங்கள் சில இருந்தாலும் குறவர்களுக்கு மட்டும் சிற்பங்கள் ஏன் அமைக்கப்பட்டுள்ளன. கோவில் தேர்களில் கூட இவர்களுக்குச் சிற்பங்கள் உள்ளன. குறவர்களுக்கும் கோவில்களுக்கும் இருந்த உறவு என்ன? இதுபற்றி விரிவான செய்திகளை அறிய முடியவில்லை.

கன்னியாகுமரி, திருநெல்வேலி மாவட்டங்களில் பெரிய கோவில்களில் குறவனுக்கு ஆளுயரச் சிற்பம் இல்லாவிட்டாலும் சிறிய சிற்பங்கள் அமைக்கப்படுவது என்ற வழக்கம் பொதுவாக இருந்திருக்கிறது. குறவன் சிற்பம் இருக்கும் மண்டபத்தின் கட்டுமானம் அவற்றின் கல்வெட்டுக்கள் அடிப்படையில் இச்சிற்பங்களின் காலம் கி.பி. 17ஆம் நூற்றாண்டிற்குப் பின் என ஊகிக்க முடிகிறது.

கன்னியாகுமரி மாவட்டத்திலும் திருநெல்வேலி மாவட்டத்திலும் குறவர் சிற்பங்கள் இருப்பது தொடர்பாகக் குறைந்த அளவில் வாய்மொழிச் செய்திகள் கிடைத்துள்ளன. குறவர்கள் நாட்டின் குறுநில மன்னர்களாய் இருந்திருக்கின்றனர். கோவில்களுக்குச் சொந்தமான மலையடிவாரச் சொத்துக்களை நிர்வகித் திருக்கின்றனர். சோழ, பாண்டியர் உள்ளாட்சிச் சண்டையில் பாண்டியர் பக்கம் இருந்தனர் என்னும் செய்திகள் அவை.

நாஞ்சில் நாட்டில் அழகியபாண்டியபுரத்தை அடுத்துள்ள மலையில் கோணங்கிக் குறவன் என்பவன் இருந்தான். அவன் மலையில் மூங்கிலை வெட்டிக் கூடை முடைந்து வாழ்க்கை நடத்தினான். ஒருநாள் கோணங்கிக் குறவன் மலையில் மூங்கிலை வெட்டிக்கொண்டிருந்தபோது அவனது இரும்பு அரிவாள் தங்கமாகியது. இதற்கு அந்த மூங்கில் பக்கம் ஊறிக் கிடந்த திரவமே காரணம் என்று குறவன் அறிந்துகொண்டான். அந்த இடத்தில் ஒரு அடையாளம் வைத்துவிட்டு வீட்டிற்குச் சென்றான்.

குறவன் வீட்டில் கிடந்த இரும்புப் பொருட்களை எடுத்தான். அந்தத் திரவத்தில் காட்டித் தங்கமாக்கினான். பெரும் செல்வந்தனானான். தனக்கெனப் படை ஒன்று வைத்துக் கொண்டான். நாஞ்சில் நாட்டுக் குறுநில மன்னனானான். மக்கள் அரசனுக்கு வரியாகப் பழுதுபட்ட கலப்பைக் கொழுவைக் கொடுத்தால் போதும் என அறிவித்தான்.

நாட்டு நிர்வாகப் பொறுப்பில் தனக்கு உதவிய முதலியாரின் மகளைத் தன் மகனுக்குத் திருமணம் செய்விக்க விரும்பினான் கோணங்கிக் குறவன். முதலியாருக்கு அதில் விருப்பமில்லை. ஆனால் நேரடியாக மறுக்கவில்லை. திருமணம் செய்ய இசைந்து விட்டுத் தந்திரமாகக் குறவனைக் கொன்றுவிட்டார். இதன்பிறகு வேணாட்டு அரசர்கள். குறவன் ஆண்ட பகுதியை தங்கள் நாட்டுடன் சேர்த்துவிட்டனர்.

இதுபோல இன்னொரு கதை உண்டு. தென் பகுதிப் பாண்டியன் ஒருவனின் மகளின் தீராத காதுவலியை ஒரு குறவன் தீர்த்து வைத்தான். அதனால் பாண்டியன் பொதியமலையின் தென் பகுதியைக் குறவனுக்குக் கொடுத்தான். குறவன் அந்தச் சிறுநாட்டை நிர்வகிக்க திருநெல்வேலி மாவட்டம்

களக்காட்டிலிருந்து சைவ வேளாளர் ஒருவரை அழைத்து வந்தான். கொஞ்ச நாளில் அந்த வேளாளரின் மகளை மணக்க விரும்பிக் கேட்டான். வேளாளர் குறவனைத் தந்திரமாகக் கொன்றுவிட்டார்.

இந்தக் கதைகளை வரலாற்றுச் சான்றாகவும் திருவிதாங்கூர் வரலாற்றாசிரியர்கள் எடுத்துக்கொள்ளுகின்றனர். சோழ பாண்டியர் தகராறில் குறவனின் பங்கு குறித்த ஒன்று செய்தி வழங்குகிறது. சோழ அரசன் ஒருவன் பாண்டி நாட்டு அரச குடும்பத்துப் பெண்ணைத் திருமணம் செய்ய விரும்பினான். பாண்டியனிடம் பெண் கேட்டான்; அவன் தர மறுத்தான். அதனால் சோழன் பாண்டியப் பெண்ணைக் கவர்ந்து வரும்படி குறவனுக்குப் பணம் கொடுத்து ஏற்பாடு செய்தான். பாண்டி நாட்டு எல்லையைத் தாண்டியதும் சோழ நாட்டு வீரர்கள் குறவனைப் பாதுகாத்துக் கொள்வார்கள் என்பது சோழனின் திட்டம். ஆனால் பாண்டிநாட்டு எல்லைக்குள்ளேயே குறவன் அகப்பட்டுவிடுகிறான். இளவரசியும் காப்பாற்றப்படுகிறாள்.

இதன் பின்னர் சோழ நாட்டிற்கும் பாண்டி நாட்டிற்கும் தீராத பகை உண்டானது. குறவன் இளவரசியைக் கவர்ந்து சென்ற நிகழ்ச்சியைச் சிற்பமாகச் செய்து வைத்துச் சோழனை அவமானப்படுத்த வேண்டும் எனறு பாண்டியன் சிற்பிகளுக்குக் கட்டளை இட்டானாம்.

திருவட்டாறு ஆதிகேசவப் பெருமாள் கோவில் குறவன் சிற்பத்தின் பெயர் 'சங்க சூடன்' என்று ஊர்மக்கள் சொல்கின்றனர். இது எழுதியும் வைக்கப்பட்டிருக்கிறது. சங்க சூடன் என்ற பெயருள்ள குறவன் கோவிலுக்குச் சொந்தமான மலையடிவாரத் தோட்டங்களை நிர்வகித்தான் என்ற வாய்மொழிச் செய்தியும் இங்கு வழங்குகிறது.

குறவர்கள், அரச குடும்பத்துப் பெண்களுக்குரிய ஒப்பனைச் சாதனங்களையும் (சந்தனம், மஞ்சள், சீகைக்காய், ஈஞ்சை) கோவில் மூலவரின் நைவேந்தியத்துக்குரிய மலைப்பொருட்களையும் (மா, வடு, தேன்) சேகரித்துக் கொடுக்க வேண்டும் என்ற கட்டாயம் இருந்திருக்கிறது.

குறவர்கள் மட்டுமல்ல; பறையர் இனமக்களும் இதுபோன்ற செயல்களைச் செய்ததற்கு நாஞ்சில்நாட்டு முதலியார் ஆவணங்களில் சான்று உண்டு. நாஞ்சில் நாட்டில் பூதப்பாண்டி தெப்பத் திருவிழாவிற்குரிய தெப்பம் கட்ட வேண்டிய ஈறலைப் பறையர்களே கொடுக்க வேண்டும் என்று அரசர் அனுப்பிய நீட்டோலை முதலியார் தொகுப்பில் உள்ளது (முதலியார் ஆவணங்கள்: அ.கா. பெருமாள், 2003, பக்கம் 17). குறவர்களுக்கு இதுபோன்ற உத்தரவு இருந்ததற்கு வாய்மொழிச் செய்திகளே இப்போது சான்றுகள். கன்னியாகுமரி மாவட்டம், மேற்குப் பகுதியில் குறத்திக்களி என்ற நிகழ்த்துகலை வழக்கில் இருந்தது. மலையாளம், தமிழ் என இருமொழி கலந்த நாடக வடிவிலான இக்கலை மலைக்குறவர்கள் பற்றியது. குறவஞ்சி இலக்கியத்தின் சாயல் இதில் உண்டு.

குறத்திக்களி நிகழ்வில் குறவன் தன் பெருமையைக் கூறும் போது கோவில் சொத்துக்களை நிர்வகிப்பவன் நான். நானும்தான் 'அங்ஙத்தை' (நிர்வாக அதிகாரி) என்று சொல்கிறான். இந்த நாடகத்தில் வரும் மிராசுதார், குறவனிடம் உங்களை நம்ப முடியாது; குழந்தைகளைக் கவர்ந்து செல்லும் இனமல்லவா நீங்கள் என்று பரிகாசமாகக் கூறும் நிகழ்ச்சி வருகிறது.

இந்தச் செய்திகளின் அடிப்படையில் பார்க்கும்போது குறவர்கள் கோவில் நிலங்களைப் பராமரித்தார்கள்; குறுநில மன்னர்களின் வாரிசுகள் தங்கள் உள் பகையாளிகளை அழிக்க குறவர்களைப் பயன்படுத்தினர்; குறுநிலத் தலைவர்களாகவும் இருந்திருக்கின்றனர் என்னும் கருத்துக்களை ஊகிக்க முடிகிறது.

இவர்களுக்குக் கோவில்களில் ஆளுயரச் சிற்பம் வைத்தது இதனால்தான் என்றும் சொல்லிக்கொள்ளலாம்.

**இது பெரிய எழுத்து, மே 2010**

# குடிபெயர்ந்த ரங்கநாதன்

திருநெல்வேலி மாவட்டம் சாம்பூர் வடகரையிலிருந்து கிளாங்காடு ஜமதக்னீஸ்வரர் கோவிலுக்குப் போகும் வழியில் ஆலமரங்கள் நிறைந்த சாலை ஓரத்தில் சதிக்கல் ஒன்றைப் பார்த்து காரை நிறுத்தச் சொன்னார் செந்தீ நடராசன். அந்தக் கல் வழிபடு தெய்வமாகவும் இருந்தது.

சதிக்கல் தெய்வத்தை அடுத்து இருந்த ஆலமரச் சோலையின் நடுவே ஒரு கோவில் இருந்தது.தெய்வத்தின் பெயர் பிணமாலை சூடும் பெருமாள். பெயரைக் கேட்டதும் முழுக்கவும் இது நாட்டார் தெய்வம் என்று கணிக்கக்கூடாது என்பதற்கு இது உதாரணம். உண்மையில் இக்கோவிலின் முக்கிய தெய்வம் விஷ்ணு, கல் விக்கிரகம்; அமர்ந்த கோலம்; ஜடா மகுடம்; ஒருகை அபய முத்திரை. இன்னொரு கையில் கதை; முகத்தில் பெரிய மீசை.

இந்தத் தெய்வம் விஷ்ணுவாகப் புனையப்பட்ட கதை உருவான காலம் தெரியவில்லை. ஆனால் இதற்கென்று ஒரு நிகழ்ச்சியைக் கதையாகக் கூறுகின்றனர்.

திருவிதாங்கூர் நாட்டின் கீழே திருநெல்வேலி மாவட்டம் களக்காட்டுப் பகுதி அடங்கி இருந்த காலம். திருவிதாங்கூர் அரச குடும்பத்து இளவரசி ஒருத்தி சாம்பூர் வடகரை ஊருக்கு வந்துவிட்டு களக்காட்டுக்குப் போய்க்கொண்டிருந்தாள். ஏதோ காரணத்தால் வழியில் இறந்துவிட்டாள். உடன் வந்த அரசன் அவள் உடலை அந்தப் பகுதியிலேயே அடக்கம் செய்ய ஏற்பாடு செய்தான். எல்லாம் முறைப்படி நடந்துகொண்டிருந்தபோது சித்தன் ஒருவன் வந்தான். அவன் திருவரங்கத்திலிருந்து குடிபெயர்ந்து வருவதாகத் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான்.

அந்தச் சித்தன் "இறந்த பெண்ணை எழுப்பித் தருகிறேன்; அவளை எனக்கு மணம் செய்விக்க வேண்டும்; முடியுமா? இது நிபந்தனை" என்றான். அரசன் யோசிக்கவில்லை; சம்மதித்து விட்டான். சித்தன் மயானக் குழியில்

உறங்குவது போல் கிடந்த பெண்ணின் பிணத்தை எழுப்பி உட்கார வைத்தான். பிறகு அந்தப் பிணத்துக்கு மணமாலை சூட்டினான். அவள் சித்தனுக்கு மனைவியாக ஆன பின்பு மந்திர நீரை அவள்மேல் தெளித்தான். உடனே அந்தப் பெண் எழுந்து நின்றாள். சித்தன் இன்று முதல் இவள் பூரணவல்லி என அழைக்கப்படுவாள் என்றான்.

இதன் பிறகு சித்தன் பூரணவல்லியை அழைத்துக்கொண்டு மாயமாகிவிட்டான். அப்போதுதான் சித்தனாக வந்தவன் திருவரங்கத்திலிருந்து குடிபெயர்ந்து வந்த ரங்கன் எனத் தெரிந்தது. இச்செய்தி மணமாலை சூடும் பெருமாள் கதையுடன் சேர்த்து முனைப்புடன் கூறப்படுகிறது. ரங்கனின் குடிப்பெயர்ச்சி தென் மாவட்டங்களில் பரவலாக வழங்குகிறது.

ஒடுக்கப்பட்ட மக்கள் சிலரிடம் வழக்கில் உள்ள காஞ்சிபுரத்திலிருந்து திருவரங்கன் குடிபெயர்ந்த கதை குருபரம்பரைப் பிரபாவம், திவ்ய சூரி சரிதை போன்ற வைஷ்ணவ சரித்திரங்களில் இல்லை. ஆனால் இக்கதை கன்னியாகுமரி, திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களில் உள்ள நாட்டார் தெய்வக் கோவில்களுடன் தொடர்புடைய ஒன்பது வில்லிசைப் பாடல்களில் வருகிறது.

இந்தக் கதைப்பாடல்களில் பெருமாள்சாமி கதை1 (பதிப்பு 1961, 1971, 1992) குருகேந்திரன் கதை (1991) பத்திரகாளி கதை (1980) முப்பிடாதி கதை (1995) ஆகியன அச்சில் வந்துவிட்டன. சோமாண்டி கதை, பூதத்தான் கதை, காபாலக்காரன் கதை, வண்டி மலையான் கதை ஆகியன ஏட்டு வடிவில் உள்ளன. கருமறத்தி கதை வாய்மொழியாக உள்ளது. இக்கதைகளில் பெருமாள்சாமி கதை, சோமாண்டி கதை, பூதத்தான் கதை ஆகியன ஸ்ரீரங்கன் குடிபெயர்ந்த செய்தியை நேரடியாகக் கூறுகின்றன. பிற கதைகளில் இச்செய்தி மேற்கோளாகக் காட்டப்படுகிறது.

இந்தக் கதைகளுக்கு எல்லாம் அடிப்படையான கதை பெருமாள்சாமி கதை. இது பெரும்பாலும் 19 ஆம் நூற்றாண்டில் புனையப்பட்டிருக்கலாம்.2

திருவரங்கம் கோவில் பூசகர்களில் ஒருவன் தர்ம சிந்தனை உடையவனாக இருந்தான். அவனது நேர்மை மற்ற பூசகர்களுக்குப் பிடிக்கவில்லை. அவன்மேல் அவர்களுக்குப் பொறாமை வந்தது; அவனை அவர்கள் இம்சித்தார்கள். அதனால் அவன் திருவரங்கத்திலிருந்து தென் தமிழ்ப் பகுதிக்குக் குடிபெயரப் போவதாக ரங்கனிடம் முறையிட்டான். அப்படியானால் நாம் இருவருமே செல்லலாம் என்றார் ரங்கன். பூசகரும் ரங்கனும் திருவரங்கம்விட்டு மெல்ல நடந்து திருநெல்வேலியில் தங்கினர்.

ரங்கன் தென் மாவட்டங்களில் பயணம் செய்தபோது சில ஊர்களில் தங்கி இளைப்பாறினான். அப்போது அந்த ஊர் மக்கள் அவனுக்குப் பெருமாள்சாமி எனப் பெயர் கொடுத்து வழிபாடு நடத்தினர்.3 இறுதியாக அவன் திருவனந்தபுரத்தில் நிலையாகத் தங்கினான்.4 இக்கதை சில மாறுதல்களுடன் சோமாண்டி கதைப்பாடலில் வருகிறது.

கைலைமலையில் நடந்த வேள்வியில் சங்கிலிபூதம், சேத்திரபாலபூதம், ஈஸ்வரகாலபூதம் என்னும் பூதங்கள் பிறந்தன. கைலைப் பணியாளர்களால் பூதங்களுக்குச் சாப்பாடு போட்டுக் கட்டுப்படியாகவில்லை. அதனால் சிவன் மூவரையும் திருவரங்கத்துக்கு அனுப்பிவிட்டான். இந்தச் சமயத்தில்தான் ரங்கன் தென் மாவட்டத்துக்குப் பயணம் செய்யப் புறப்பட்டுக் கொண்டிருந்தான்.

மூன்று பூதங்களும் "ரங்கா நீ எங்கே செல்கிறாய்? நீ இல்லாத இடத்தில் நாங்களும் இருக்கமாட்டோம் எங்களையும் உன்னுடன் அழைத்துச் செல்" என்றன. ரங்கன் "பூதங்களே என் பக்தன் ஒருவனை இந்த நாட்டு அரசன் விரட்டிவிட்டான். அதனால்தான் நானும் அவனுடன் குடிபெயர்ந்து திருவிதாங்கூருக்குச் செல்கிறேன். என்னுடன் நீங்களும் வரலாம்" என்றான்.5

ரங்கனும் பூதங்களும் மதுரை, திருச்சி எனப் பல தலங்களைக் கடந்து திருக்குறுங்குடி வந்தனர். அப்போது ரங்கன் "நீங்கள் இங்கேயே தங்கிவிடுங்கள்; உங்களை அழைத்துக்கொண்டு திருவனந்தபுரம் செல்ல முடியாது; நீங்கள் அங்கே வந்தால் அவ்வூர் மக்கள் என்னைப் பழிப்பார்கள்" என்றான்.6 அதனால் பூதங்கள் மூன்றும் குறுங்குடி மலையில் குடிகொண்டன. ரங்கன் தன் பயணத்தைத் தொடர்ந்தான்.

அய்யா வைகுண்டர் அருளிய அகிலத்திரட்டு நூலில் திருவரங்கம் கோவிலின் பூசைகளின் மாறுபாட்டால் ரங்கன் குடிபெயர்ந்ததாக ஒரு நிகழ்ச்சி வருகிறது.7

தென் மாவட்டங்களில் வாய்மொழியிலும் கதைப் பாடல்களிலும் நாட்டார் வழிபாட்டு முறைகளிலும் காணப்படும் வைணவத் தாக்கத்தின் ஒரு கூறுதான் ரங்கனின் குடிப்பெயர்ச்சி.

பொதுவாக தென் மாவட்ட நாட்டார் தெய்வ வழிபாட்டுக் கூறுகளில் சைவச்சார்பு அதிகம் என்றாலும் வைணவம் தொடர்பான கதைப்பாடல்கள் கிடைத்துள்ளன.8 தென் மாவட்ட நாட்டார் நிகழ்த்து கலைகளில் (எ.கா: தோல்பாவைக்கூத்து, கண்ணன் ஆட்டம், ஒயிலாட்டம்) ராமாயண பாரதத் தாக்கம் உண்டு.

ராமானுஜர் திருவிதாங்கூருக்கு வந்தார் என்றும், அங்குள்ள வைணவக் கோவில்களின் பூஜை முறைகளை மாற்றியதால் நம்பூதிரிகள் அவரைத் தென் திருவிதாங்கூரில் உள்ள (இன்றைய கன்னியாகுமரி மாவட்டம்) திருவெண்பரிசாரத்து (திருப்பதிசாரம்) ஊர்ப் பாறையில் கிடத்தினர்9 என்றும் அவர் இங்கே சூத்திரர்களையும் சூத்திரர் அல்லாத ஒடுக்கப்பட்ட சாதியினர் சிலரையும் வைணவர்களாக்கினார் என்றும் கூறும் வாய்மொழி மரபு உண்டு. முப்புரிநூல் அணிந்தவர் (சாத்தியவர்) நூல் அணியாதவர் (சாத்தாதவர்) என்னும் வைணவப் பிரிவும் இக்காலத்தில் ஏற்பட்டது என்பர்.

திருவரங்கத்திலிருந்து தென் மாவட்டத்திற்கு ரங்கன் குடிபெயர்ந்த கதை திருமழிசை ஆழ்வாருடன் தொடர்புடையது.

ஆழ்வார்களில் திருமழிசை ஆழ்வாருக்குத் தனி இடம் உண்டு. இவர் பாமர மக்களின் மனதில் இடம் பிடித்தவர். திருமழிசை என்ற ஊரில் பிறந்தவர்; மலைக்குறவன் ஒருவனால் காட்டில் கண்டெடுக்கப்பட்டு வளர்க்கப்பட்டவர்; இவர் பார்க்கவ மகரிஷிக்கும் கனகாங்கி என்னும் அப்சர அழகிக்கும் பிறந்தவர்; பிறந்த உடனேயே பெற்றோரால் கைவிடப்பட்டவர் என்பன போன்று பல்வேறு கதைகள் இவரைப் பற்றி வழங்குகின்றன. ஆனால் இவரோ "குலங்களாய ஈரிரண்டில் ஒன்றில் பிறந்திலேன்" என்கிறார்.10

திருமழிசை ஆழ்வார் நான்கு வருணத்தில் அடங்காத கீழ்க்குலத்தில் பிறந்தவர்; இவர் வளர்ந்த குலமும் ஒடுக்கப்பட்டது என்னும் கதைகள் உள்ளன. இவர் தன் வளர்ப்புத் தந்தையான குறவனின் சாதித் தொழிலைச் செய்தவர்; பல ஊர்களில் அலைந்து திரிந்து அனுபவத்தைத் தேடிக் கொண்டவர். சித்தராகி பேயாழ்வாரைக் கண்டு ஞானம் பெற்று பக்திசாரர் என்னும் பெயரைப் பெற்றவர். முதலாழ்வார்கள் இவரைக் கண்டு உரையாடினர்.11

திருமழிசை ஆழ்வார் தன் குருவான பொய்கையாரின் ஊரான காஞ்சிபுரத்தில் கொஞ்ச நாள் இருந்தார். அங்கே இவருக்கு கணிகண்ணன் என்ற சீடன் இருந்தான்;12 அவன் பாடல் இயற்றுபவன்; காஞ்சிபுரத்தில் ஆழ்வாரின் பாடல்களில் ஈடுபாடு கொண்ட தாசி ஒருத்தி இருந்தாள். அவள் ஆழ்வாரைப் பற்றியும் கணிகண்ணனைப் பற்றியும் காஞ்சிப் பல்லவனிடம் சொன்னாள்.

காஞ்சி அரசன் கணிகண்ணனை அழைத்தான். என்னைப் புகழ்ந்து ஒரு பாட்டுப் பாடும்படி உன் குருவிடம் சொல்வாய் என்றான். கணிகண்ணனோ "நானே நாக்கொண்டு மானிடம் பாடமாட்டேன். என் குருநாதர் எப்படிப் பாடுவார்" என்றான்.

மன்னனுக்குக் கோபம். உன்னைத் தேசப்பிரஷ்டம் செய்கிறேன் என்றான். கணிகண்ணன் ஆழ்வாரிடம் நடந்த விஷயங்களைச் சொன்னான். அப்படியா செய்தி. நீ இல்லாத ஊர் எனக்கு வேண்டாம் என்றார் திருமழிசை. இருவரும் ஊரைவிட்டுப் பெயர முடிவு செய்தனர். திருமழிசை கோவிலுக்குப் போய், "கணிகண்ணன் போகின்றான்; காமருபூங்கச்சி மணிவண்ணா நீ கிடக்க வேண்டா — துணிவுடைய செந்நாப் புலவன் யான் செல்கின்றேன்; நீயும் உன் தன் பைந்நாகப் பாய் சுருட்டிக்கொள்" என்று பாடிவிட்டுச் சீடனைப் பின் தொடர்ந்தார்.

பெருமாளும் பாயைச் சுருட்டிவிட்டு ஆழ்வாரின் பின்னே நடந்தார். இதைப் பார்த்த பக்தர்களும் ஊரைவிட்டுக் கிளம்ப ஆரம்பித்தனர். மன்னன் இச்செய்தியைக் கேள்விப்பட்டான்; கணிகண்ணனிடம் வந்தான். தன் செயலுக்கு மன்னிப்பு கேட்டான். ஆழ்வார் உடனே,

கணிகண்ணன் போக்கொழிந்தான்; காமருபூங் கச்சி

மணிவண்ணா நீ கிடக்க வேண்டும் — துணிவுடைய

செந்நாப் புலவனும் செல்லொழிந்தேன்; நீயும் உன்தன்

பைந்நாகப்பாய் விரித்துக் கொள்.

என்று பாடிவிட்டுக் காஞ்சிபுரம் திரும்பினார்.

இதன் பின்னர் திருமழிசை ஆழ்வார் கும்பகோணம் சென்றார். வழியில் பெரும்புலியூர் என்ற ஊரில் தங்கினார். அங்கே இருந்த பிராமணர்கள் இழிகுலத்தவரான இவரைப் பார்த்து ஒதுங்கினார்கள். அதனால் அவர்களுக்கு வேதங்கள் மறந்தன; ஆழ்வாருக்குச் செய்த அவமரியாதையே அதற்குக் காரணம் எனத் தெரிந்ததும் பிராமணர்கள் திருமழிசையிடம் மன்னிப்பு கேட்டனர். இதன் பின்னர் ஆழ்வார் வேறு பிராமணர்களாலும் துன்புறுத்தப்பட்டார்; அங்கிருந்து கும்பகோணம் சென்றார். அங்கேயே சமாதி ஆனார்.

இப்படியாக இலக்கிய மரபு கூறும் திருமழிசையின் கதையும் நாட்டார் மரபு கூறும் பெருமாள்சாமி கதையும் தென் மாவட்டங்களில் பல்வேறு வடிவங்களில் வழங்கின.

திருமழிசை ஆழ்வார் தொடர்பான வைஷ்ணவ மரபு திருமால் காஞ்சிபுரத்திலிருந்து குடிபெயர்ந்ததாகக் கூறும். வாய்மொழி மரபு திருவரங்கத்திலிருந்து குடிபெயர்ந்ததாகக் கூறும். ஆழ்வார்களின் இலக்கிய மரபின்படி அரசனிடம் கோபித்த அடியவருக்காகத் திருமால் குடிபெயருகிறான். அரசன் தவறுக்கு வருந்தியதும் திருமால் மறுபடியும் காஞ்சிபுரத்துக்குப் போய்விடுகிறான். கதைப்பாடல் மரபின்படி திருவரங்கம் பூசகர், வேறு ஒரு பூசகரிடம் கொண்ட மாறுபாட்டால் ஊர் விட்டுப் பெயருகிறான். திருமால் மறுபடியும் திருவரங்கம் திரும்பவில்லை. திருவனந்தபுரத்திலேயே தங்கிவிடுகிறான். திருவரங்கத்தில் இருப்பது திருமாலின் மாயையே.

நாட்டார் மரபின்படி திருமாலின் குடிப்பெயர்ச்சி, வழிபாட்டு முறைகள் தொடர்பான தகவல்கள், கதைகள் எல்லாம் பிராமணர் அல்லாதவர்களிடம் வழங்குகின்றன.

காஞ்சிபுரம், திருவரங்கம் ஆகிய இரு ஊர்களிலிருந்தும் தென் மாவட்டங்களில் குறிப்பாகத் தென் திருவிதாங்கூருக்கு வைணவர்களும் குறுநிலத் தலைவர்களும் பெயர்ந்து வந்ததற்கு வாய்மொழிக் கதைகள் உண்டு.13 இந்தக் குடிப்பெயர்ச்சி அரசியல் சார்பானதல்ல. மதத்தின் உள்பிரிவுகளுக்கிடையே உள்ள மோதலால் (தென் கலை வடகலை சைவ வைணவம்) பெயர்ந்திருக்கின்றனர். இப்படிக் குடிபெயர்ந்தவர்கள் எல்லோருமே பிராமணர் அல்லாதவர் என்பதுதான் இதில் குறிப்பிடத்தகுந்த செய்தி.

**அடிக்குறிப்புகள்**

1. தென் மாவட்டங்களில் திருமால் வழிபாட்டை மையமாகக் கொண்ட கதைப்பாடல்கள் வேறும் உள்ளன. இரணிய சம்ஹாரம், கிருஷ்ணசாமி கதை இரண்டும் அச்சில் வந்துள்ளன. இவற்றில் பெருமாள்சாமி கதையின் செல்வாக்கு உண்டு.

2. அ.கா.பெருமாள், நாஞ்சில் நாட்டு வில்லிசைப் பாடல்கள், அச்சில் வராத பிஎச்டி ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 1986 ப.86.

3. பெருமாள்சாமி வழிபாடு கன்னியாகுமரி, தூத்துக்குடி, திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களில் குறிப்பிட்ட சில ஊர்களில் உள்ளது. கன்னியாகுமரி மாவட்டம் அகஸ்தீஸ் வரம் வட்டம் இலந்தவிளை கிராமத்தில் பெருமாள் சாமிக்குத் தனிக் கோவில் உள்ளது. இக்கோவிலின் தெய்வம் 40செ.மீ. உயரமுள்ள பஞ்சலோகத்தால் ஆனது. இதன் பின் இரு கைகளில் சங்கு சக்கரமும் முன் கைகளில் அபய வரத முத்திரையும் உள்ளன. ஆனால் இதன் வழிபாடு முழுக்க நாட்டார் சமயத் தாக்கம் உடையது. பிராமணர் அல்லாதார் இதற்குப் பூசை செய்கிறார். பங்குனி மாத இறுதியில் இக்கோவிலில் நடக்கும் விழாவில் ஆடு பலி கொடுக்கப்படுகிறது. இதுபோன்ற கோவில்கள் வேறு இடங்களிலும் உள்ளன (புல்லு விளை).

4. திருவனந்தபுரம் பத்மநாபசுவாமி கோவிலின் தலபுராணம் இலுப்பை மரக்காட்டில் குடியிருந்த கிருஷ்ணன் பத்மநாபனாக உருமாறினான் எனக் கூறும். இது தொடர்பான மலையாள வாய்மொழிக் கதையும் உண்டு.

அனந்தன் காட்டில், கிலுகிலுப்பைத் தோப்பில் புலைச்சி ஒருத்தி விறகு பொறுக்கச் சென்றாள். அப்போது மரங்களின் நடுவே அழகான குழந்தை ஒன்று ஓடி விளையாடுவதைக் கண்டாள். அவள் குழந்தையின் அருகே சென்றாள்; எடுத்து மார்போடு அணைத்தாள். குழந்தை புலைச்சியின் முலையில் வாயை வைத்துப் பாலைக் குடித்தது. புலைச்சியின் முகம் பார்த்துச் சிரித்தது; அவள் குழந்தையைத் தரையில் விட்டாள். உடனே அது ஐந்து தலைப் பாம்பாக மாறியது. புலைச்சி அதைக் கண்டு பயந்து அப்புறம் போனாள்.

இந்த அதிசயத்தைக் கணவனிடம் சொன்னாள் புலைச்சி. அவன் மனைவியை அழைத்துக்கொண்டு அந்த இடத்திற்கு வந்தான். அங்கே ஒரு சயன படிமத்தைப் பார்த்தான். அவர்கள் அதை வணங்கிவிட்டு ஒரு சிரட்டையில் (கொட்டாங்கச்சி) பாலும் சாதமும் படைத்து வழிபட்டனர்.

அன்று இரவு அனந்தங்காட்டுப் பகுதியை ஆண்ட அரசன் கனவு கண்டான். அதில் கிருஷ்ணன் வட தமிழ்நாட்டிலிருந்து அனந்தங்காட்டில் குடியேறி சயனப் பெருமாளாகக் கிடப்பதையும் புலைச்சி வழிபடுவதையும் கண்டான். உடனே அந்த இடத்தை அடையாளம் கண்டு சென்றான். கோவில் கட்டினான்.

கிருஷ்ணனுக்கு முதலில் வழிபாடு செய்த புலைச்சிக்கு வெகுமதி கொடுத்தான்; பயிர் செய்ய நிலம் கொடுத்தான்; அந்த நிலம் புத்தரிக்கண்டம் என்னும் பெயரில் 19ஆம் நூற்றாண்டு இறுதிவரை வழங்கப்பட்டது. இந்த வயலில் உள்ள நெல்லையே திருவனந்தபுரம் பத்மநாப சுவாமி கோவில் நிறை சடங்கிற்குக் கொண்டு செல்லும் வழக்கம் இருந்திருக்கிறது. பிற்காலத்தில் இக்கோவில் வில்வமங்கலம் நம்பூதிரியுடன் தொடர்பு கொண்ட பிறகு சில வழக்கங்கள் மாற்றப்பட்டன.

5. அச்சில் வராத சோமாண்டி கதையில் வரும் திருவரங்கன் பூதங்களுடன் உரையாடும் வரிகள் இவை:

பூதங்கள் மாயனைத் தொழுதுமே நிற்க

புகழுடன் மாயன் இனிதாய் இருக்க

பல நாளும் மும்முறை பூசை நடத்தி

பார்ப்பார்கள் தானும் இனிதாயிருக்க

இன்றைய முறை என்முறை என்றொரு மறையோன்

இனிதாகவே பூசை தானுமே செய்ய

தள்ளுண்டு ஒரு கூறு பூசித்த மறையோன்

ராசாவொரு அணிய முரைத்தான்.

. . . . . . . . .

ராசனுமே என்முறை கேட்கவில்லை

கன்மமிது என்று ஒரு கூறு மறையோன்

ஸ்ரீரங்க நாதருடன் பணிவாகவே நின்று

சேவித்து நிற்கிற வேளையிலே மாயன்

செப்புவானந்த மறையவனோடு

தட்சணா பூமியாம் திருவனந்தபுரத்துக்கு

சீக்கிரம் போகிறேன் திடமுடனே வா நீ

அங்கு வந்தால் திருமுன்பு உனக்கு

அடைக்கலம் தருகிறேன் என்று உரைத்து

ஸ்ரீரங்கம் விட்டுத் திருமாலும் போனான்.

6. சீரான மலை நாட்டிலே

திருவனந்தபுர மதிலே

நேராக நான் போறேன்

நீங்கள் அங்கே வந்த துண்டால்

நல்லோர்கள் நமை நகைப்பார்

7. திருவரங்கம் கோவிலின் பூசகர்கள் நெறிமுறை தவறினர்; ஒருவன் மட்டும் ஒழுங்காக முறைப்படி பூசை செய்தான். இதனால் அவனை மட்டும் அழைத்துக்கொண்டு ரங்கன் தென் தமிழ்ப் பகுதிக்குக் குடிபெயர்ந்தான் என அய்யா வைகுண்டர் அருளிய அகிலத்திரட்டு கூறும்.

8. தென் தமிழ் மாவட்ட நாட்டார் தெய்வங்களில் மிகப் பெரும்பாலானவை சிவனிடம் வரம் வாங்கியோ சிவனின் அம்சமாக இருந்தோ வழிபாடு பெறுவன. இத்தெய்வங்களின் வழிபாட்டுக் கூறுகளிலும் வழிபாடு தொடர்பான சொற்களிலும் சைவச் சார்பைப் பார்க்கலாம். இப் பகுதியில் நாட்டார் தெய்வங்களின் வழிபாடுகளிலும் நிகழ்த்துகலை தொடர்பான பாடல்களிலும் வைணவத் தாக்கம் குறைவு. என்றாலும் விஷ்ணு வழிபாட்டில் தீவிரமானவர்களும் உள்ளனர் என்பதற்குச் சில சான்றுகள் கூறமுடியும்.

கன்னியாகுமரி மாவட்டம் அகஸ்தீஸ்வரம் வட்டம் புதூர் பஞ்சாயத்தில் உள்ள புதூர் என்ற ஊரில் குருகுல மக்கள் கோவில் உள்ளது. இக்கோவில் குறிப்பிட்ட சில குடும்பத்தினருக்கு உரியது. இக்கோவிலில் உள்ள முக்கிய தெய்வம் திருமால்; ஆதிசேஷன்மேல் பள்ளிகொண்ட கோலம். முக்கிய தெய்வம் இருக்கும் அறைச்சுவரில் தருமர், குந்தி, திரௌபதி, திருதுராஷ்டிரன், காந்தாரி, பீமன், அர்ஜுனன் ஆகியோரின் ஓவியங்கள் உள்ளன.

இக்கோவிலின் வழிபாடும் அவை தொடர்பான பிற செய்திகளும் இதை நாட்டார் தெய்வக் கோவிலாகக் காட்டுகின்றன. திருமாலுக்கும் பஞ்சபாண்டவருக்கும் சாமியாடுகின்றவர் உள்ளனர். இக்கோவில் தொடர்பாக வில்லிசைக் கதைப்பாடல் உள்ளது. இதில் பீமனே முக்கிய பாத்திரமாக உள்ளான். வில்லிசை நிகழ்ச்சியில் சாமியின் அருள் கூடுவதற்குப் பாடுகின்ற வாழ்த்துப் பாடலில் காந்தாரி பாண்டவர்களைக் கொல்ல அனுப்பி வைத்த பூமாலை என்ற பெண்ணை பீமன் கவர்ந்து செல்லும் கதை நிகழ்ச்சி பாடப்படுகிறது.

இக்கோவிலுடன் தொடர்புடையவர்கள் தங்களை வட தமிழ்நாட்டிலிருந்து புலம்பெயர்ந்த வைணவர்கள் என்று கூறுகின்றனர்.

9. வெங்கடாசலம், திருவாழிமார்பன் (திருப்பதிசாரம் தல புராணம்) கோட்டாறு, 1912.

10. குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்

நலங்களாய நற்கலைகள் நாவிலும் நவின்றிலேன்

புலன் களைந்தும் வென்றிலேன் பொறியிலேன் புனிதரின்

இலங்குபாத மன்றிமற்றோர் பற்றிலெனம் ஈசனே

(திருச்சந்த விருத்தம்)

11. பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் திருமழிசையாழ்வாரின் சமகாலத்தவர்.

12. திருமழிசை ஆழ்வாரின் நண்பனின் மகன் கணிகண்ணன் என்ற கதையும் உண்டு. திருமழிசை ஆழ்வார், தன் வீட்டின் முற்றத்தைப் பெருக்கி மெழுகிய கிழவியின் வேண்டுகோளுக்கிணங்கி அவள் இளம்பெண்ணாக மாற வரம் கொடுத்தார். இதை அறிந்த காஞ்சி மன்னவன் கணிகண்ணனை அழைத்து தன்னை வாலிபனாக்கும்படி திருமழிசை ஆழ்வாரிடம் சொல்லும்படி கட்டளை இட அவன் மறுத்தான் என்ற கதை உண்டு.

13. கன்னியாகுமரி மாவட்டம் அகஸ்தீஸ்வரம் வட்டம் இரவிபுதூரில் உள்ள காடராசன் கோவில் தொடர்பாக வில்லிசைக் கதை உண்டு. இதில் காஞ்சிபுரத்திலிருந்து தென் திருவிதாங்கூருக்கு வந்த ஒரு குறுநிலத் தலைவன், வேறு சாதிப் பெண்ணை விரும்பியதன் காரணமாகக் கொல்லப்பட்ட நிகழ்ச்சி வருகிறது. நாஞ்சில் நாட்டுப் பறக்கை மதுசூதனப் பெருமாள் கோவிலுக்கு காஞ்சி புரத்திலிருந்து கருடன் வந்ததாகக் கதை உண்டு.

## தண்டனைச் சிற்பங்கள்

> கிழக்கிந்தியக் கம்பெனி வேரூன்றிய காலத்தில் வட்டார அளவிலான செய்திகளைத் தொகுத்த இயேசுசபைப் பணியாளர்களும் மறுமலர்ச்சி கிறிஸ்தவ சமயப் பரப்புநர்களும் நாட்டார் தெய்வ வழிபாட்டுச் செய்திகளைத் தொகுத்திருக்கின்றனர். இவர்களின் தொகுப்பில் நாட்டார் தெய்வ வழிபாட்டுக்கும் தனிப்பட்ட வாழ்க்கையின் நியதிகளை மீறுவதற்கும் உள்ள தொடர்பு, இவற்றிற்கான தண்டனைகள் பற்றிய செய்திகளும் உள்ளன.

என் முனைவர் பட்ட ஆய்விற்காகக் கதைப் பாடல்களைப் பற்றிய ஆராய்ச்சியை மேற்கொண்ட சமயத்தில் (1983 – 1987) சுடலைமாடன் கதையில் வரும் திருநெல்வேலி மாவட்டம் சீவலப்பேரிக்குச் சென்றேன். அங்கே நான் சந்தித்த தர்மேந்திரர் நம்பும்படியான தகவலாளியாக இருந்தார். என்னுடைய மாணவரின் உறவினர் அவர்.

சுடலைமாடன் கதைப்பாடலின் பெரும் பகுதியும் தர்மேந்திரருக்கு மனப்பாடமாயிருந்தது. சீவலப்பேரி சுடலை பழைய தென்திருவிதாங்கூர் கிராமங்களில் குடிப்பெயர்ச்சி செய்த தகவல்களைச் சொன்னபோது வரலாற்று, சமூகக் காரணங்களையும் சேர்த்தே அவர் சொன்னார். இப்போது நாகர்கோவிலிலிருந்து திருநெல்வேலி மாவட்டம் பணகுடி, வள்ளியூர், சீவலப்பேரி போன்ற ஊர்களுக்குச் செல்லும் வழிகள் அல்ல பழைய வழிகள்.

நாஞ்சில் நாட்டு வடமீதிப் பகுதி கிராமங்களிலிருந்து பணகுடிக்குச் செல்லும் மலைவழியில் சில இடங்களில் சீவலப்பேரி சுடலைமாடன், சிறுகோவிலில் குடிகொண்டுள்ளான். இதற்குக் காரணம் அந்த வழி வணிகர்களின் பாதையாக இருந்தது என்பதுதான். அதுதொடர்பான கதைகளையும் அந்தப்பாதை பற்றியும் நான் தகவல்கள் சேகரித்தபோது நாட்டார் தெய்வங்களின் குடிப்பெயர்ச்சி பற்றிய களஆய்வு விரிவாகத் தேவை எனப் புரிந்தது.

தர்மேந்திரர் மலைவழிப் பாதைகள் பற்றிய விவரங்களைச் சொல்லிவிட்டு 'பெரும்பழஞ்சி ஒற்றைப்பனை சுடலைமாடன் கோவிலுக்குப் போய்ப் பாருங்கள்; துடியான சாமி அது' என்றார். பொதுவாக நாட்டார் தெய்வங்களில் தீவிரமான நம்பிக்கை உள்ள தெய்வங்களுக்குத் 'துடியான' என்னும் அடைமொழி கொடுப்பதுண்டு. குறிப்பாக அகால மரணம் அடைந்து தெய்வமானவர்களுக்கு இந்த அடைமொழி இன்னும் நெருக்கமாக இருக்கும். தூய சேவியர் கல்லூரி நாட்டார் வழக்காற்றியல் துறைப் பேராசிரியர் ராமச்சந்திரன் 'துடியான சாமிகள்' என்னும் தலைப்பில் ஒரு நூல் எழுதியிருக்கிறார்.

துடியான என்பதற்குச் சாமி உடனே பலன் கொடுக்கும்; தீவிரமாகச் செயல்படும்; தண்டனை கொடுக்கும்; தன் முன்னே சத்தியம் செய்பவர்களை விசாரணை செய்யும் என்னும் பல அர்த்தங்கள் சொல்லிக்கொண்டே போகலாம். இவை அகராதிப் பொருள்கள் அல்ல. வழிபடுபவர்கள் உருவாக்கிய பொருள்கள். துடியான சாமி இருக்கும் இடத்தின் சூழ்நிலை, அது குறித்த நம்பிக்கையைப் பொறுத்து இந்த அர்த்தங்கள் வேறுபடும்.

ஒற்றைப்பனை சுடலையைத் துடியான சாமி என்று நம்பியதற்கு அது அதர்மத்தைத் தட்டிக் கேட்கும்; தன் கோவிலின் முன்னே வந்து சத்தியம் செய்யும் நிரபராதிகளைக் காப்பாற்றும் என்பன போன்ற செயல்கள்தாம் காரணம் என்று சொல்லிக்கொண்டே போனார் தர்மேந்திரர்.

ஒற்றைப்பனை சுடலைமாடன் துடியானவனா என்று சோதனை செய்வதற்கு நான் ஆசைப்படவில்லை. ஆனால் அதற்கு ஒரு வாய்ப்பு கிடைத்தது. திருக்குறுங்குடி கோவிலில் அரையர்சேவை பார்த்துவிட்டு அங்கேயே தங்கி அடுத்தநாள் வீட்டிற்குப் புறப்பட்டபோதுதான் ஒத்தப்பனை கோவிலுக்குப் போகும் எண்ணம் வந்தது. போகிற வழி, நாகர்கோவில் திருநெல்வேலி சாலையிலிருந்து வலதுபக்கம் ஐந்து கி.மீ. குறுக்குப் பாதையில் சென்றுவிடலாம். இரு சக்கர வண்டியில் சென்றதால் இந்த யோசனை.

பேராசிரியர் ஜெகதீசன் ஏற்கனவே பெரும்பழஞ்சிக்கு வழிகேட்டு வைத்திருந்தான். குக்கிராமங்களில் வழி கேட்பதும் பதில் சொல்வதும் சடங்காக இருக்காது. வழி கேட்பவரிடம் சில சமயம் தன் விவரக்குறிப்பைச்

சொல்ல வேண்டியிருக்கும். வழிசொல்பவர்கூட தான் எதற்கு எங்கே போய்க்கொண்டிருக்கிறேன் என்றும் சொல்லிவிடுவார்.

ஒற்றப்பனை சுடலை கோவிலுக்குத் திருவிழாக் காலத்தில் போனவர்கள் சாதாரண நாட்களில் போனால் கோவில் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிப்பது சிரமம்தான். சுற்றிலும் தோட்டம்; செடி கொடிகள். ஒரு காலத்தில் ஒற்றைப்பனை நின்றிருக்கலாம். இப்போது அங்கங்கே பனைகள், கருவேல மரங்கள்; சரியான கரிசல்காடு.

நான் கோவிலுக்குப் போன சமயத்தில் பகல் பூசை முடிந்து விட்டது. அன்று வெள்ளிக்கிழமை என்பதால் கோவிலின் அருகே ஆணும் பெண்ணுமாய்ச் சிலர் நின்றுகொண்டிருந்தார்கள். ஜெகதீசன் வாகனத்தை ஆலமரத்து நிழலில் நிறுத்தினான். இரண்டு பேரும் செருப்பைக் கழற்றிவிட்டுக் கோவிலின் அருகே போனோம்.

இருபத்தைந்து வயதில் ஒரு பெண்; இடுப்பில் இரண்டு வயதுக் குழந்தை. பக்கத்தில் அவள் கணவன். வயதான இரண்டு பெண்கள்; மூன்று நான்கு ஆண்கள். இந்தக் கூட்டம் கோவிலின் அருகே நின்றது. நாங்கள் அதைக் கவனிக்காதது மாதிரி நடந்து கோவிலின் முன்னே போனோம். கோவில் பூசாரி வாசலில் நின்றுகொண்டிருந்தார். அவர் உடுத்தியிருந்த காவி வேட்டியும் நெற்றித் திருநீறும் அவரை அடையாளம் காட்டின. நான் அவரிடம் "நிர்மலாவின் ஆசிரியர். . ." என்று என்னை அறிமுகப்படுத்தினேன். அவர் உடனே கோவில் மேடையிலிருந்து வேகமாய் கீழே இறங்கினார். உபசாரமாய் என்னை வரவேற்றார். என் மாணவி நிர்மலாவின் சித்தப்பா அவர். கள ஆய்வில் இப்படியான துருப்புச்சீட்டு எனக்குப் பல தடவைகளில் பயன்பட்டிருக்கிறது. இந்தப் பூசாரியை நான் பின்னர் இக்கோவில் விழாவிலும் பலித்தடைச் சட்டம் அமலுக்கு வந்த சமயத்திலும் சந்தித்து விரிவான பேட்டி எடுத்திருக்கிறேன்.

பூசாரி கோவிலைப் பற்றிய பொதுவான தகவல்களைச் சொல்லிக்கொண்டிருந்தபோது, அங்கே நின்றவர்கள் திரும்பிச் சென்றுகொண்டிருந்தார்கள். அந்தப் பெண்ணும் அவளது கணவனும்

பூசாரியிடம் விடை பெற்றார்கள். பூசாரி கணவனிடம், "சுடல சொல்லியாச்சு. உங்களுக்கு ஒரு குறையும் இல்ல; நல்லா இருங்க" என்றார்.

பூசாரி அவர்கள் சென்றபிறகு என்னிடம் பேச ஆரம்பித்தார். குரலைத் தாழ்த்தி "அதோ குழந்தைய தூக்கிவச்சிருக்காளே பொண்ணு, இங்கே சூடம் பொருத்தி சத்தியம் செய்ய வந்தாள். அவளுக்கு சொந்தத்துல ஒன்றுவிட்ட அத்தான்கூட தொடர்புன்னு புருஷனுக்குச் சந்தேகம். அந்தப் பொண்ணு நாந்துகிட்டு நிக்கப் போயிருக்கு. நல்லகாலம்; மாமியா கண்டுகிட்டா; அடிச்சு பிடிச்சு காப்பாத்திற்றா; மாமியா நல்லவ, மகனைச் சமாதானப்படுத்தி சூடம் பொருத்த அழச்சிட்டு வந்திருக்கா."

"பொண்ணு வாசல்ல சூடத்தப் பொருத்தி ரெண்டு கையாலும் அவிக்கா; மாமியாக்காரி சத்தம் போட்டு சுடல சொல்லியாச்சு; ஏம்லே இதமீறி ஒண்ணுமில்லன்னா மகனப் பார்த்து. இனி மீறிப் பேசுனா சுடலக்குப் பதில் சொல்லணும்னிட்டுப் போறா" என்றார்.

ஒற்றைப்பனை சுடலைமேல் உள்ள நம்பிக்கைதான். அந்தப் பெண் குற்றமற்றவள் என்று அவளது கணவனை நம்ப வைத்திருக்கிறது. இது ஒருவகையான விசாரணையும் தண்டனையும்; சந்தேகப்படுபவர்களுக்கு உரிய விசாரணை. இதை மீறுபவர்களுக்கு உரிய தண்டனை; இது காலங்கடந்து கிடைக்கும் என்பது நம்பிக்கை.

இது நாட்டார் தெய்வ நம்பிக்கை மட்டுமல்ல; பெருநெறித் தெய்வக் கோவில்களுக்கும் இது பொருந்தும். கன்னியாகுமரி மாவட்டம் சுசீந்திரம் தாணுமாலயன் கோவில் பற்றி ஒரு நூல் எழுத ஆரம்பித்தபோது நம்பூதிரிகளுக்கு இப்படி ஒரு விசாரணை நடந்ததை கே.கே. பிள்ளையின் நூல்வழி அறிந்தேன்.

நம்பூதிரி சாதியைச் சார்ந்த கன்னிப்பெண் நம்பூதிரி இளைஞனுடன் தொடர்பு கொண்டாள் எனச் சந்தேகம் வந்தால், அவள் விசாரிக்கப்படுவாள். இது ஸ்மார்த்த விசாரம் எனப்படும். நச்சுப்பாம்பு அடைக்கப்பட்ட மண்குடத்தில் கையை விட்டு அவள் தன் பவித்திரத்தை நிரூபித்துக் காட்ட வேண்டும்.

அவளுடன் தொடர்பு கொண்டதாகக் குற்றம்சாட்டப் பட்ட நம்பூதிரி இளைஞனும் விசாரிக்கப்படுவான். இது பிரத்யாயம் எனப்படும். கொதிக்கும் நெய் இருக்கும் வெண்கலப் பானையில் கிடக்கும் ரிஷப விக்கிரத்தை எடுத்து அவன் தன் தூய்மையை நிரூபிக்க வேண்டும். இந்த வழக்கம் 1834வரை தென்திருவிதாங்கூரில் நடைமுறையில் இருந்தது. ஒரு நம்பூதிரி இளைஞன் இச்சோதனைக்கு ஒத்துக்கொள்ள மறுத்து நீர்நிலையில் விழுந்து தற்கொலை செய்த நிகழ்ச்சியே இந்த வழக்கத்தை நிறுத்தக் காரணமானது.

இதுபோன்ற சோதனையும் இவர்களுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனையும் பற்றிய செய்திகள் கல்வெட்டுகளில் குறைவாகவே காணப்படுகின்றன. தண்டனை பற்றிய செய்திகளைச் சிற்பங்களிலிருந்தும் சேகரிக்கலாம் என்பதையும் குற்றவாளிக்குக் கொடுக்கப்பட்ட தண்டனையை மற்றவர்களும் அறிய வேண்டும் என்பதற்காகச் செய்யப்பட்ட விளம்பரங்கள் பற்றியும் களஆய்வில் அறிந்தேன்.

தென்திருவிதாங்கூர் கோவில்களில் சிற்பங்கள், ஓவியங்கள் பற்றிய செய்திகளைச் சேகரிக்கச் சென்றபோது தண்டனைச் சிற்பங்கள் சிலவற்றை அடையாளம் கண்டேன்.

சுசீந்திரம் கோவிலின் (கன்னியாகுமரி மாவட்டம்) பரிவார தெய்வமாக உள்ள தட்சணாமூர்த்தி கோவிலின் இடதுபக்கத் தூணில் ஒரு தண்டனைச் சிற்பம் உள்ளது. ஒரு தராசு; அதன் கீழ் யானை, அது முன்னங்காலை உயர்த்திக்கொண்டு நிற்கிறது. கீழே மூன்றுபேர் குனிந்து நிற்கின்றனர். இந்தச் சிற்பம் அதிக வேலைப்பாடில்லாதது. ஆனால் கோவிலுக்கு வருபவர்கள் கண்ணில் படும்படியான இடத்தில் உள்ளது. இந்தச் சிற்பம் தொடர்பான நிகழ்ச்சி வாய்மொழியாக உள்ளது.

சுசீந்திரம் கோவிலுக்குத் திருமலைநாயக்கர் பல பணிகள் செய்துள்ளார். இக்கோவிலின் திருவேங்கடப் பெருமாளின்மேல் தங்கக்கவசம் அணிவித்தவரும் இவரே. இதற்காக அவர் உள்ளூர் தட்டான் ஒருவனிடம் பசும்பொன் தங்கம் கொடுத்தாராம். தட்டான் அந்தத் தங்கத்தில் அதிக அளவில் செம்பு சேர்த்துக் கவசம் செய்தான். இதற்குக் கோவிலைச் சார்ந்த இரண்டு அதிகாரிகள்

உதவினார்களாம். அரசன் இந்தத் திருட்டுச் செயலைக் கண்டுபிடித்துவிட்டான். அந்தக் குற்றவாளிகளை யானைக்காலால் இடறும்படி தண்டனை வழங்கினான். இதை ஊர் அறியும்படியாகச் செய்தானாம் மன்னன்.

இந்தச் சிற்பம் இருக்கும் தட்சணாமூர்த்தி கோவிலையும் இதை அடுத்து இருக்கும் கருடன் கோவிலையும் திருமலை நாயக்கனே கட்டினான் என்னும் செய்தியிலிருந்து இந்தக் கதை உருவாகியிருக்கலாம். ஆனால் திருவிதாங்கூரில் யானைக் காலால் இடறும் தண்டனை 18ஆம் நூற்றாண்டுவரை வழக்கில் இருந்தது. முக்கியமாக இராஜதுரோகக் குற்றங்களுக்கும் கோவில் பொருட்களைத் திருடிய பிராமணர் அல்லாதாருக்கும் யானைக்காலால் இடறும் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

இதே கோவிலில் பரிவார தெய்வமான சுப்பிரமணியசுவாமி கோவிலின் தெற்கிலும் வடக்கிலும் எதிரெதிராக இரண்டு தண்டனைச் சிற்பங்கள் உள்ளன. இரண்டுமே முழங்காலை மடக்கிக் கால்களைக் குறுக்காக வைத்தபடி சப்பணம் (சம்மணம்) இட்டபடி இருக்கும் அமர்ந்த கோலச் சிற்பங்கள். இரண்டு சிற்பங்களின் வலது கைகளும் வலது தொடையின்மேல் மலர்த்தியபடி உள்ளன. கையின் நடுவில் ஆணி அடிக்கப்பட்ட அடையாளம் காணப்படுகிறது.

இந்த இரண்டு சிற்பங்களைக் கோவில் அதிகாரிகள் என்றும் இவர்கள் கோவிலில் கள்ளக்கணக்கு எழுதியவர்கள் என்றும் அதற்கு அரசன் அளித்த தண்டனையே இது என்றும் கூறும் வாய்மொழி மரபு உள்ளது.

குற்றவாளிகளுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனை முறை இப்படித்தான் இருக்க வேண்டும் என்னும் நடைமுறை விதி முந்திய காலங்களில் இல்லை என்பதற்கு வாய்மொழிச் செய்திகளில் ஆதாரம் உண்டு. தண்டனை முறை, அதை நிறைவேற்றிய உயர் அதிகாரியின் கற்பனையின் தன்மையைப் பொறுத்து இருக்கும்.

தவறு செய்த இந்த இரண்டு அதிகாரிகளையும் கனமான பலகையில் உட்கார வைத்து கள்ளக்கணக்கு எழுதிய வலது உள்ளங்கையில் எழுத்தாணியால்

குத்தி இறுக்கி அலுவலகத்தின் வெளியே பார்வைக்காக ஒருநாள் வைத்துவிட்டு விடுதலை செய்தார்களாம். இதன் அடையாளமாகச் செய்யப்பட்ட சிற்பங்களே இவை. கோவில் நிர்வாகக் கணக்குகளைப் பரிசோதிக்கும் இடம் சுப்பிரமணியர் கோவில் எதிரே உள்ள யோகக்காரர் மண்டபம் ஆதலால், இப்பகுதியில் இச்சிற்பங்கள் வைக்கப்பட்டிருக்கலாம்.

திருவட்டாறு (கன்னியாகுமரி மாவட்டம்) ஆதிகேசவப் பெருமாள் கோவிலைப் பற்றி நூல் எழுத தகவல்கள் சேகரிக்கச் சென்றபோது கோவிலின் வெளியே தெற்குத்தெருவழி வந்தேன். அங்கே ஒரு அரசமரத்தின்கீழ் இருந்த மேடையில் சில இளைஞர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருவன் புகைத்துக் கொண்டிருந்த சிகரெட்டைத் தூக்கி எறிந்தான். பக்கத்திலிருந்தவன் "டேய் நைசம்மா தலையில் போடாதே, ஏற்கனவே அவள் தலையில் நெருப்பு" என்றான். அவன் சிகரெட்டைத் தூக்கி எறிந்த இடத்தைப் பார்த்தேன்; கொடியும் செடியும் வளர்ந்து கிடந்த இடத்தில் ஒரு சிற்பம் இருந்தது.

சமசதுர பீடத்தின்மேல் ஒன்றரை மீட்டர் உயரத்தில் நின்றகோலமாய் உள்ள அந்தக் கல் சிற்பத்தின் தலையில் பெரிய கல் சட்டி இருந்தது. சிற்பத்தின் இரண்டு கைகளும் உயர்ந்தபடி சட்டியைப் பிடித்திருக்கின்றன. இதன் கால்கள் வளைந்திருக்கின்றன. சட்டியின் கனத்தைத் தாங்கமுடியாமல் உடலின் வளைவைக் காட்டிய சிற்பியின் வேலைப்பாடாக இது இருக்கலாம்.

நான் சிற்பத்தின் அருகே சென்று கூர்ந்து பார்த்தேன். இளைஞன் ஒருவன் "எங்க ஊர் நைசம்மா" என்றான். ஆனால் அது ஆண் சிற்பம். இடையில் ஆடை தெரியும்படி தொப்புளுடன் இருந்தது. முன் கைகளில் தண்டை. கழுத்தில் கடகமாலை, சரப்பள்ளி, பத்ரகுண்டலம் என்னும் ஆபரணங்கள் அணிந்த ஆண். இவன் தலையில் உள்ள சட்டி ஒன்றரை லிட்டர் எண்ணெய்விடும் அளவுக்கு உட்குழிவு உள்ளது.

இதுபோன்ற ஒரு சிற்பத்தை ஆதிகேசவர் கோவிலின் உட்பிரகாரத்தின் மூலையிலும் நான் பார்த்தேன். அது பாழ்பட்டுக் கிடக்கிறது. இந்தச் சிற்பம் தொடர்பாக வாய்மொழிச் செய்திகள் உள்ளன. கோவிலில் எண்ணெய் திருடும்

அதிகாரிக்கு அல்லது பணியாளுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனையைக் காட்டுவது இச்சிற்பம்.

குற்றவாளியின் தலையில் எண்ணெய் விளக்கை ஏற்றிக் கோவிலின் முன் நடையில் நிறுத்திவிடுவர். கோவில் முன்வாசல் மூடுவது வரை குற்றவாளி அப்படியே நிற்க வேண்டும். இப்படி ஒரு மாதம்; இல்லை என்றால் விளக்கேந்திய ஒரு சிற்பத்தைச் செய்து கோவில் உட்பிரகாரத்தில் நிறுத்தி, அந்த விளக்கு எரிப்பதற்குரிய எண்ணெயைக் கொடுக்க வேண்டும்; இது ஒரு ஆண்டுக்கு; தண்டனை அல்லது அபராதம் என்பது வழக்கு. 1930இல் கூட இதுபோன்ற தண்டனை இருந்திருக்கிறது. இப்படியாக எண்ணெய் திருடி தண்டனை பெற்ற அதிகாரி ஒருவர், தன்னைப் போல் சிற்பம் செய்து விளக்கெரிக்க எண்ணெய் கொடுத்திருக்கிறார். அந்தச் சிற்பமே இது என்று நான் முதலில் பார்த்த சிற்பத்தை அடையாளம் காட்டினார் ஒருவர்.

இந்தச் சிற்பங்களைப் பற்றிய வாய்மொழித் தகவல்களைச் சேகரித்தபோது, நடவிளக்கேற்றுதல், வட்டத்தில் நிறுத்துதல் என்னும் தண்டனைகள் பற்றிய செய்திகளும் கிடைத்தன. தமிழகத்தின் தென்மாவட்டங்களில் திருடுதல், சோரம்போதல், நம்பிக்கைத் துரோகம் செய்தல் போன்ற செயல்களுக்காகக் கொடுக்கப்பட்ட தண்டனைகள் இவை.

குற்றம் சாட்டப்பட்டவரின் தலையில் சாணி அல்லது களிமண்ணை வைத்து அதன்மேல் மண் சட்டி விளக்கைப் பதித்து முச்சந்தி அல்லது கோவில் வாசலின் வெளியே நிறுத்திவிடுவது இந்தத் தண்டனையின் நடைமுறை. தானாக முன்வந்து நடவிளக்கு ஏந்துவதும் உண்டு. இது குறிப்பிட்ட தெய்வத்திடம் வேண்டும் நேர்ச்சை. குழந்தை வேண்டி நடவிளக்கேந்துவேன் எனக் குறிப்பதை வில்லிசைப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

வட்டத்தில் நிறுத்துதல் என்பது சிறு தண்டனை. முச்சந்தியில் வட்டமான கோடு வரைந்து அதில் குற்றம் செய்தவரைக் குறிப்பிட்ட நேரம்வரை நிற்கும்படி தண்டனை கொடுத்தல். பெரும்பாலும் பகல் நேரத்தில் வெயிலில் நிற்க வைத்தல் இதன் உச்சம்.

நாஞ்சில்நாட்டு முதலியார் ஆவணம் ஒன்று (கி.பி. 1744) இந்தத் தண்டனையைக் குறிப்பிடுகிறது. இது நில ஒப்பந்தம் தொடர்பான ஆவணம்; பூதநாத முதலியார், தாணுமாலயப்பெருமாள் இருவரும் நில ஒப்பந்தம் செய்திருந்தனர். இந்த ஒப்பந்த ஓலை தவறிவிட்டது. என்றாலும் அந்த நிலத்தைப் பூதநாதரும் தாணுமாலயனும் பயிரிட்டனர். இதில் ஏற்பட்ட வழக்கின்போது பழைய பத்திரம் கிடைத்தால் கீறி எறிய வேண்டும் என்றும் மீறினால் தரையில் வட்டம் வரைந்து நிறுத்திச் சிறைப்படுத்தலாம் என்றும் முடிவு செய்யப்பட்டதை இந்த ஆவணம் கூறும். இந்தத் தண்டனையைக் "கீறுகிழியும்" என்ற சொல்லால் இவ்வாவணம் குறிப்பிடுகிறது.

வட்டத்தில் நிறுத்துதல் என்ற தண்டனை தென்மாவட்டங்களில் 16 – 19ஆம் நூற்றாண்டுகளில் வழக்கில் இருந்தது. புகழேந்திப்புலவர் பேரில் உள்ள பஞ்சபாண்டவர் வனவாசம் அம்மானையில் வட்டத்தில் நிறுத்துதல் பற்றிய செய்தி வருகிறது.

அர்ஜுனன் இமயமலைக்குப் பாசுபதாஸ்திரம் பெறச் செல்கிறான். அப்போது அவனைச் சந்தித்த ஏலகன்னி தன்னை மணந்துகொள்ளுமாறு கேட்கிறாள். அர்ஜுனன் மறுக்கிறான். ஏலகன்னி கோபம் கொண்டு "ஏழு கோடு இழுத்தாளே இங்கு நீர் நில்லுமென்றாள். உம் குருவின் மேலாணை வட்டம் விட்டுப் போகாதே" என்று சொல்லிவிட்டுப் போகிறாள். வட்டத்துக்குள் தனியே நிற்கும் அர்ஜுனன் காளியின் அருளால் தப்புகிறான்.

புகழேந்திப்புலவரின் பெயரில் உள்ள இந்த அம்மானைப்பாடல் 18 அல்லது 19ஆம் நூற்றாண்டினது. தென்மாவட்டங்களில் பரவலாக அறிந்த கதை இது. இதனால் இங்குக் குறிப்பிடப்படும் தண்டனை பொதுவானதாக இருந்திருக்க வேண்டும் என்று எடுத்துக்கொள்ளலாம்.

கன்னியாகுமரி மாவட்டம் கல்குளம் வட்டத்தில் சாலையோர மண்டபங்களைக் கல்வெட்டாய்வாளர் செந்தீ நடராசனுடன் அடையாளங்காணச் சென்றபோது திருவிதாங்கோடு ஊரின் எல்லைப்புறத்தில் தனியாருக்குச் சொந்தமாக உள்ள ஒரு தோட்டத்தில் பாழடைந்த ஒரு மண்டபத்தைக் கண்டுபிடித்தோம். அந்த மண்டபத்தின் உடைந்த ஒரு தூணில் குனிந்தபடி நிற்கும் மனிதனின் முதுகில்

வடிவமற்ற ஒரு பொருள் இருப்பது போன்ற ஒரு சிற்பத்தைக் கண்டோம். இதுபற்றிய வாய்மொழிச் செய்தி வருமாறு. கோவில் விழா/ கட்டுமானத்தின்போது சம்பளமின்றி வேலை செய்ய மறுப்பவர்களைக் குனியவைத்து முதுகில் கல்லை ஏற்றிக் குறிப்பிட்ட நேரம் நிற்கவைப்பதுதான் அந்தத் தண்டனை.

இந்தத் தண்டனை பிராமணரைத் தவிர பிற எல்லா சாதிக்காரர்களுக்கும் கொடுக்கப்பட்டது. குறிப்பாகக் கோவில் கட்டுமானத்தின்போது உடலுழைப்பு தர மறுப்பவர்களுக்கும் உடலுழைப்பிற்கு ஆட்களைச் சேகரிக்காதவர்களுக்கும் கொடுக்கப் பட்டது இத்தண்டனை. இது பற்றிய வாய்மொழிச் செய்திக்கு நாஞ்சில் நாட்டு முதலியார் ஆவணத்திலும் சான்று உண்டு.

1798ஆம் ஆண்டு முதலியார் ஆவணம் ஒன்று சுசீந்திரம் கோவில் ஸ்ரீபலிமண்டபம் கட்டுமானம் பற்றிக் கூறுகிறது. இதில் மண்டபப் பணிக்கு வராதவர்களைக் குனிய வைத்து முதுகில் கல்லை ஏற்றித் தண்டனை கொடுக்க வேண்டும் எனக் குறிப்பிடப்படுகிறது. இந்த ஆவண வாசகம் வருமாறு: "குஞ்சு கூட்டக்கறார் வந்து அம்பலக்காறரெயும் இளந்தாரிகளையும் அறியிச்சு குனிச்சு நிறுத்தி கல்லுகேத்தி எறிய சோத்தியம் செய்யுந்து எந்தும . . ."

நானும் செந்தீ நடராசனும், திருவிதாங்கோடு பாழடைந்த மண்டபத்தில் பார்த்த தண்டனைச் சிற்பத்தை வேறு பொது இடங்களில் அடையாளம் கண்டிருக்கிறோம்.

நான் இந்தத் தண்டனை பற்றி எல்லாம் சொல்லிவிட்டு இப்படித் தண்டனை கொடுக்கும் அரசனுக்கு எவ்வளவு பாவம் சேரும் என்று ஒரு முதியவரிடம் கேட்டேன். அவர் பிரவர்த்திகார் (கிராம அதிகாரி) அலுவலகத்தில் தண்டலாய் (வரிப்பிரிக்கும் பணியாளர்) இருந்து ஓய்வு பெற்றவர்; முஞ்சறைக்காரர் அவர். நான் சொன்னதைக் கேட்டுப் பெரிதாய் சிரித்துவிட்டு, "எந்த ராஜாக்கமாரும் பாவம் சம்பாதிக்கில்லா; அறியாமோ சங்கதி" என்ற பீடிகையுடன் பேச ஆரம்பித்தார்.

கடைசியாகத் தென்திருவிதாங்கூரில் தூக்குத் தண்டனை நிகழ்ச்சி நாகர்கோவில் கழுவந்தட்டில்தான் நடந்தது. அப்போது அந்த இடம் கொல்லாமரங்கள் நிறைந்த காடு; செம்மண்தேரி; பெரிய மேடுகளும் குண்டுகளும் நிறைந்த பகுதி. கழுவந்தட்டில் கடைசியாகத் தூக்கில் தொங்கியவன் ஒரு சலவைத் தொழிலாளி. அவன் தன் வைப்பாட்டியை நல்லூர் அத்தானிமார் குளத்தில் மூழ்கடித்துக் கொன்றுவிட்டான். அவனுக்கு அவள் பேரில் சந்தேகம். அதனால் கொன்றான் என்று விசாரணையில் தெரிந்தது.

"அவனைத் தூக்கிலே போடப் போகிறார்கள்" என்று சுற்றுவட்டாரத்தில் முரசடித்துச் சொன்னார்கள். நடந்தும் மாட்டுவண்டியிலும் தூக்கு நிகழ்ச்சி பார்க்க ஜனங்கள் கழுவந் தட்டுக்கு வந்தார்கள். அவன் தூக்குமேடையில் நின்றபோது கொஞ்சம் பேசினான். "நான் இந்தக் கொலையைச் செய்யவில்லை. ஆனால் எவ்வளவோ அநியாயங்கள் செய்திருக்கிறேன். எல்லாவற்றிலும் தப்பிவிட்டேன். செய்த குற்றத்திற்குத் தண்டனை கிடைக்கவில்லை. செய்யாத குற்றத்துக்காக இப்போது சாகப் போகிறேன்" என்றானாம்.

அவனைத் தூக்கில் போட சைகை செய்கிறார் ஆறச்சர் (தூக்குப் போட உத்தரவிடும் அதிகாரி போன்றவர்). அவன் தூக்கில் தொங்கினான். அவன் கழுத்து தொங்கியது. அந்த நேரத்தில் ஒரு குதிரை வேகமாக வந்தது. அதிலிருந்து இறங்கிய காவலன் "ஆறச்சரே தூக்கு தண்டனையை நிறுத்தும்படி அரசர் ஆணை. இதோ அரச நீட்டு" என்றான். காரியம் முடிந்துவிட்டதே என்றார் ஆறச்சர். குதிரை வீரன் "என் பேரில் தவறில்லை. இந்தக் கிழட்டுக் குதிரைதான் மெல்ல வந்தது. அதனால் அரச உத்தரவைக் கொண்டுவர நாழியாகிவிட்டது" என்றான்.

இது ஒரு நாடகம். தூக்குப்போடும் இடத்திலிருந்து தொலைவில் மறைவான இடத்தில் குதிரை வீரன் இருப்பான். அவன் தூக்கு நடப்பதைப் பார்த்துக்கொண்டுதான் இருப்பான். தூக்கு போடப்பட்டதும் குதிரையில் வேகமாக வருவது போல் நடிப்பான். ஆறச்சரும் அரசர் கருணையுள்ளவர்;

நாம்தான் அவசரப்பட்டு விட்டோம் என்பார். குதிரை வீரனோ குதிரையின்மேல் குற்றம் சாட்டுவான். கடைசியில் குற்றவாளியைத் தூக்கில் போட்ட பாவம் குதிரைக்குப் போய் சேரும். குதிரைதானே வர நாழியாயிற்று!

இச்செய்தி மிகைப்படுத்தல் என்றுதான் முதலில் நினைத்தேன். இதன்பிறகு, இந்தத் தூக்கு தொடர்பான ஒரு கதைப்பாடல் வழி இது உண்மைதான் என உறுதிப்படுத்திக் கொண்டேன். சிதம்பரநாடார் கதை நிறைய சமூகச் செய்திகளைக் கொண்டது. இந்தக் கதையில் வரும் சிதம்பரம் நாடார் தென்திருவிதாங்கூரின் தெற்குப் பகுதியில் உள்ள புத்தளம் என்னும் ஊரில் வரிப்பிரிக்கும் பொறுப்பில் இருந்தார். ஒருநாள் அவர் பறக்கை ஊரில் சுடுகாட்டு வழியே குதிரையில் போய்க்கொண்டிருந்தார். சுடுகாட்டில் பாம்பு கடித்து இறந்துபோன ஒரு பிராமண இளம்பெண்ணை எரிப்பதற்குரிய சடங்குகள் நடந்துகொண்டிருந்தன. நாடார் ஓரிடத்தில் ஒதுங்கி நின்றார். சடங்குகள் முடிந்து எல்லோரும் சென்றபின் சுடுகாட்டுக் குழியின் அருகே சென்றார்.

சிதம்பரநாடார் மந்திரமும் வைத்தியமும் அறிந்தவர். அவர் அவளைக் கடித்த பாம்பை வரவழைத்து, அவள் உடலின் விஷத்தை உறிஞ்சச் செய்தார். அவள் உயிர் பெற்று எழுந்து நின்றாள். அந்தப் பெண், "என்னைக் காப்பாற்றிய நீரே என் கணவர்" என்று சொன்னாள். சிதம்பர நாடாரும் அவளைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று மனைவியாக்கிக் கொண்டார். இந்தச் செய்தியை அறிந்த பிரமணர்கள், சிதம்பர நாடாரைக் கொல்வதற்கு அரசரிடம் உத்தரவு பெற்று வந்தனர்.

இந்த நிலையில் சிதம்பர நாடாரின் உறவினர்கள் அரசனைக் கண்டு நடந்த நிகழ்ச்சியைச் சொல்லிவிட்டனர். அரசன் நாடாரைத் தூக்கில் போடவேண்டாம் என உத்தரவு இட்டான். அந்த உத்தரவைப் பெற்ற குதிரைவீரன் வந்தான். அவன் வேகமாக வருவதற்குள் நாடாரைத் தூக்கில் போடும்படி ஆறச்சருக்கு உத்தரவு இட்டார்கள். ஆறச்சர் தூரத்தில் குதிரை வருவதைப் பார்த்து பதிவான நாடகம் இது என்று நினைத்து தண்டனையை நிறைவேற்றிவிட்டார்.

சிதம்பரநாடாருக்கு இப்போதும் வழிபாடு உள்ளது. இவரது கதையை வில்லுப்பாட்டாய்ப் பாடுகின்றனர். இந்தக் கதையில் உள்ள மந்திர

நிகழ்ச்சிகளை ஒதுக்கிவிட்டாலும் நாடார் பிராமணப் பெண்ணைத் திருமணம் செய்ததற்காக மரண தண்டனை பெற்றிருக்கிறார் என்பதும் அப்போதும் அரசன் கொடுத்த உத்தரவால் வந்த பாவம் குதிரைக்குத்தான் போயிருக்கிறது என்பதும் மறுக்க முடியாத செய்திகள்.

**புதிய ஆராய்ச்சி, ஜனவரி 2010**

## அஞ்சலோட்டம் அவருக்கே ஆச்சு!

> கவிமணி தேசியவிநாயகம் பிள்ளையின் 'மருமக்கள்வழி மான்மிய'த்தில் வரும் காரணவர் மருமகனுடன் மாறுபாடு கொண்டு நீதிமன்றத்துக்குப் போய் சொத்துக்களை இழந்து தளர்ந்து இருக்கும் சூழ்நிலையைச் சோகத்துடன் பாடுவார் காரணவரின் ஐந்தாம் மனைவி "அஞ்சலோட்டம் அவருக்கேயாச்சு" என்பாள். அஞ்சலோட்டம் என்பது தென்குமரியில் உள்ள வழக்கிழந்த சொல். இதற்குத் தபால் கொண்டு செல்லும் தபால்காரனின் ஓட்டம் என்பது பொருள்.

தபால்காரன் நிற்காமல் செல்லவேண்டும் என்ற கட்டளையும் அது பற்றிய வழக்காறும் பண்டைய திருவிதாங்கூர் வரலாற்றுடன் தொடர்புடையது. தென்குமரியின் பழைய வரலாற்றை அறிந்தவர்களுக்கு அரசாங்கமும் முக்கிய பிரதானிகளும் செய்திகளைப் பரிமாறிக்கொள்ளுவதற்காக உருவாக்கப்பட்ட அஞ்சல் துறையைத் தெரியும்.

திருவிதாங்கூரின் அரசரான தர்மராஜாவின் காலத்தில் (1784) ஆரம்பமான அஞ்சல்துறைதான் செய்திகள் பரிமாற்றத்திற்காக முதலில் ஏற்படுத்தப் பட்ட துறை. இதற்கு முன்பு தமிழகத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் தபால்துறையை ஆரம்பித்துவிட்டது. பிரிட்டிஷ் ஆட்சியின் கட்டுப்பாட்டில் இருந்த திருவிதாங்கூர் சமஸ்தானத்திலும் பிரிட்டிஷ் அரசின் தபால்துறை செயல்பட்டிருக்கிறது. இது 1865 முதல் நாகர்கோவிலில் ஆரம்பமானது.

பிரிட்டிஷ் அரசின் தபால்துறை அப்போது இருந்த சமயப் பணியாளர்களுக்கும் பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கும் சென்னை ராஜதானியின் கீழடங்கிய பகுதிகளுக்குச் செய்திகளைக் கொண்டு செல்வதற்குத்தான் ஏற்படுத்தப்பட்டது. அஞ்சல்துறையும் தபால் துறையும் இவை தோன்றிய காலத்திலேயே போட்டியுடன் செயல்பட்டிருக்கின்றன. அஞ்சல்துறை தபால்துறையைவிட மலிவானது என்ற எண்ணம் மக்களிடம் ஆரம்பித்திலேயே பதிந்திருக்கிறது.

மக்களும் அரசும் செய்தியைப் பரிமாறிக்கொள்வதற்காக உள்ள இந்த இரண்டு துறைகளின் போட்டி சென்னை ராஜதானி தபால்துறையின் தலைமை அதிகாரிவரை தெரிந்திருக்கிறது. அவர் 1886இல் பிரிட்டிஷ் அரசு தபால்துறைக்கும் திருவிதாங்கூர் அஞ்சல்துறைக்கும் இடையே ஒப்பந்தம் செய்துகொள்ளும் அளவுக்கு வந்துவிட்டது.

அந்தக் காலத்தில் தபால் கொண்டு சென்ற வண்டிதான் போக்குவரத்துச் சாதனமாகவும் இருந்தது. என்றாலும் இதைத் தபால்வண்டி என்றே குறித்தார்கள். 12 பேர் பயணம் செய்வதற்கு வசதியாக இருந்த பெரிய மாட்டுவண்டிதான் தபால் வண்டி. இதைக் கூண்டுவண்டி என்பது நாஞ்சில்நாட்டு வழக்கு.

தபால்துறையும் அஞ்சல்துறையும் நடைமுறையில் இருந்த 19ஆம் நூற்றாண்டில் திருவிதாங்கூர் மக்கள் இதை முழுதும் பயன்படுத்தினார்கள் என்று சொல்ல முடியாது. இக்கால ஆரம்பத்தில் நாகர்கோவிலில் அச்சு இயந்திரசாலை வந்து விட்டது. எழுதுபொருள், தாள், மை எல்லாம்கூட வந்துவிட்டன. என்றாலும் ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுதும் வழக்கம் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில்கூட இருந்தது போன்றது தான் தபால் அல்லது அஞ்சல் துறை மக்களிடமிருந்து அந்நியமாக இருந்ததும்.

அஞ்சல் ஓட்டம் பெரும்பாலும் அரசு சார்பானது என்பதற்கு ஓவியச்சான்று உண்டு. சுசீந்திரம் தாணுமாலயன் கோபுரத்தின் நாலாம் நிலையில் மேற்குப் பார்த்த சுவரின் மேல்பகுதியில் அஞ்சல் ஓட்ட ஓவியம் உள்ளது. ஒருவர் (இவர் குமஸ்தா) தரையில் அமர்ந்து கைப்பெட்டியில் ஓலையை வைத்து எழுதுகிறார். எழுதிய ஓலையை அதிகாரி ஒருவர் பரிசீலிக்கிறார். இவர் உயர் அதிகாரியாகவோ திவானாகவோ இருக்கலாம்.

பரிசீலித்த ஓலையை அரசர் பார்க்கிறார். பின் அது அஞ்சலோட்டக்காரனிடம் கொடுக்கப்படுகிறது. அஞ்சல்காரனின் ஓவியம் வடக்குப் பார்த்த சுவரில் இருக்கிறது. இவன் தலையில் தலைப்பாகை, இடையில் தார்பாய்ச்சிய வேட்டி, வலது கையில் நீண்ட ஈட்டி, இடதுதோளில் தபால் பை. இவன் ஓடுகிறான். இதற்கு அடையாளமாய் இவன் வலதுகால் முன்னே, இடதுகால் பின்னே

காட்டப்பட்டுள்ளது. அஞ்சல் ஓட்டக் காரனின் ஈட்டியில் மணிகள் இருக்கும். அவன் ஓடும்போது ஒலிக்கும். அந்த மணிகளின் சத்தத்தைக் கேட்டு மக்கள் வழிவிட்டு ஒதுங்குவார்கள். அஞ்சலோட்டம் பற்றித் தென்குமரிக் கதைப் பாடல்களில் செய்திகள் உள்ளன. ஒரு இடத்திலிருந்து வேறு இடத்திற்குச் செய்தி கொண்டு செல்பவனைக் கதைப்பாடல்கள் 'ஓட்டன்' எனக் கூறும்.

அரசு அறிக்கைகளை ஓலை ஆவணங்களில் பதிவு செய்து பொதுமக்களுக்குத் தெரிவிக்கக் கட்டளை இடப்படுவது என்பது பொதுவான முறை. முக்கியமான உத்தரவுகளைக் கல்லில் பொறித்துப் பொது இடத்தில் நடும் முறையும் அது போன்றதே. பொதுமக்களுக்குச் செய்தி அறிவிக்கும் இந்த முறை பேரரசர் அசோகர் காலத்துக்கு முன்பே இருந்தது. இதே முறையை வேணாட்டரசர் பரிசீலனை செய்திருக்கிறார்.

கன்னியாகுமரி மாவட்டம் கல்குளம் வட்டத்தில் திருவிதாங்கோடு ஊரில் பொதுமக்கள் கூடும் இடத்தில் இருந்த ஒரு கல்வெட்டு புலைப்பேடி என்னும் சமூக வழக்கம் நிறுத்தப்பட்டது பற்றிக் குறிப்பிடுகிறது. (இக்கல்வெட்டு தற்போது பத்மநாபபுரம் அரண்மனையில் உள்ளது)

குறிப்பிட்ட மாதத்தில் அதிகாலையில் வெளியே வரும் பெண்ணின்மீது கல்லை எறியும் ஒடுக்கப்பட்ட ஆண்மகனுக்கு (புலையன்) அவள் உரியவளாவாள். புலைப்பேடி என்று அழைக்கப் பட்ட இந்த வழக்கம் தடை செய்யப்பட்டதையும் இதை மீறுபவர்களுக்குக் கடுமையான தண்டனை கொடுக்கப்படும் என்பதையும் இந்தக் கல்வெட்டு கூறுகிறது. இதை வேணாட்டு அரசரான வீரகேரளவர்மன் 1696இல் வெளியிட்டுள்ளான். அரசு ஆணையை அல்லது அறிக்கையை வெளியிடுவதற்கு உரிய உத்தி இது. இந்தத் தகவல்களைப் படிக்கத் தெரிந்தவர்கள் படித்து வாய்மொழி மூலம் அடுத்தவரிடம் சொல்லி இருக்கின்றனர். செய்தி இப்படியே பரவி இருக்கிறது.

ஒரு செய்தியை ஓலை அல்லது செப்பேடு அல்லது கல்வெட்டு மூலம் வெளியிடுவதும் அவைதாம் ஆதாரமானவை என்பதும் மட்டுமல்ல. வாய்மொழிச் செய்தியையும் ஆதாரமாக எடுத்துக்கொள்ளும் வழக்கம் முந்திய காலங்களில் சாதாரணமாக இருந்தது. பிரிட்டிஷ் இந்தியாவில் முறையான நீதிமன்றங்கள்

உருவான பின்புதான் எழுத்துச் சான்றுகள் முக்கிய ஆதாரம் என்ற கருத்து வலுப்பட்டது.

அரசு காப்பாளர்/ ஊர்ப் பிரதானி ஒருவர் கூறும் செய்தியும் அறிக்கை போன்றே நம்பத்தகுந்தது என்று கூறும் வழக்கம் இருந்தது. நாஞ்சில்நாட்டுப் பழைய வரலாற்றுச் செய்திகளைக் கூறும் முதலியார் ஓலை, வாய்மொழிச் செய்தியை ஆவணமாக எடுத்துக் கொள்ளலாம் என்று குறிப்பிடுகிறது. 1697இல் உள்ள இந்த ஆவணம், மதுரைப்படைகளின் படையெடுப்பின்போது விலை ஆதார ஓலைகளும் ஒத்தி ஓலைகளும் கிழிக்கப்பட்டன. இதனால் இந்த நிலம் ஒத்தி தொடர்பான தகவல்களை வாய்மொழியாகக் கூறினாலும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று குறிப்பிடுகிறது. வாய்மொழி மரபில் வரும் நம்பிக்கையாகவும் இதை எடுத்துக்கொள்ளலாம்.

அரசு பற்றிய செய்திகளும் குடும்பச் செய்திகளும் வழிபாடு தொடர்பான செய்திகளும் வாய்மொழியாகப் பரவியதற்கு நாட்டுப்புறவியல் தகவல்களில் சான்று உண்டு. இதுபோன்ற செய்திகள் பல தொகுக்கப்படவில்லை. செய்தியை ஒலிப்பேழையிலும் ஒளிப்படப் பெட்டியிலும் பதிவு செய்து ஆதாரப்பூர்வமாக வெளியிடும் இந்தக் காலத்தில் வாய்மொழிச் செய்திகள் மட்டுமே செய்திப் பரப்பலுக்குக் காரணமாயிருந்தது என்பதை இன்று நம்புவது கஷ்டம்தான்.

ஊரூராய் யாசகம் பெற்றுச் செல்லும் பண்டாரங்களின் வழியும் வாய்மொழிச் செய்தி பரப்பப்பட்டது. நாஞ்சில் நாட்டில் இந்த வழக்கம் இந்திருக்கிறது. பண்டாரங்கள் ஒன்றிரண்டு பேர் சேர்ந்து யாசகம் எடுப்பார்கள். இவர்கள் ஊரின் ஒதுக்குப்புறமாக இருந்த மண்டபத்தில் தங்குவார்கள்.

இவர்கள் யாசக அரிசியைச் சமைத்து உண்டு மண்டபத்தில் படுத்துக்கொள்ளுவார்கள். அப்போது அங்கே கூடும் ஊர் மக்களிடம் தங்கள் பயணத்தில் சந்தித்த மக்கள், பார்த்த நிகழ்ச்சிகள், ஊர்கள் பற்றிப் பேசுவார்கள். கேட்பவர்கள் இவர்களை யாசகர்களாகக் கருதமாட்டார்கள் என்பது முக்கியம். அந்த ஊர் மக்கள், தங்கள் ஊரின் நிலவரம் பற்றியும்

பண்டாரங்களிடம் பேசுவார்கள். இந்தச் செய்திகளைப் பண்டாரங்கள் அடுத்த ஊரில் சொல்லுவார்கள்.

இந்தப் பண்டாரங்களில் சிலர் காவடியும் வைத்திருப்பார்கள். காவடியில் கட்டப்பட்டிருக்கும் மணியும் அரிசிச் செம்பும் அசைய இவர்கள் நடந்து செல்லும்போது வயதான பெண்கள் அடுத்த ஊரில் இருக்கும் தங்கள் உறவினர்களின் வீட்டில் தெரிவிக்க வேண்டிய செய்தியைச் சொல்லிவிட்டுத்தான் யாசக அரிசியைப் போடுவார்கள்.

இந்த யாசகர்கள் தனியே நடக்கும்போது பாடிக்கொண்டு போவார்கள். இந்தப் பாடல் பெரும்பாலும் திருவிதாங்கூர் அரசர்களின் பெருமை, அவர்கள் செய்யும் தர்ம காரியங்கள் பற்றியதாய் இருக்கும். மூலம் திருநாள் சுசீந்திரம் கோபுர வேலையை மறுபடியும் ஆரம்பிக்கப்போகிறார் என்னும் செய்தியை இந்தப் பண்டாரங்களே பரப்பி உள்ளனர். பேச்சிப் பாறை அணைகட்ட ஆரம்பிக்கும்முன் (1897) அது பற்றிய செய்திகள் வாய்மொழியாகப் பரவியதையும் பருத்திப்பயிர் போய் நஞ்சைப்பயிர் வரப்போவதையும் களியல் ஆட்டப் பாடகன் பாடியிருக்கிறான்.

பண்டாரங்கள், செய்தி பரப்பியதற்கு ஐவர்ராசாக்கள் கதைப்பாடலில் சான்று உண்டு. திருநெல்வேலி மாவட்டம் வள்ளியூரில் ஆட்சி செய்த குலசேகரன் என்னும் பிற்காலப் பாண்டியனைப் பற்றியது இக்கதைப்பாடல். ஒரு பண்டாரம் குலசேகரனின் படத்தை எடுத்துக்கொண்டு ஊர் ஊராய்க் காட்டி அவன் பெருமையைப் பேசி வருகிறான். இது அரசனுக்குப் பெண் பார்க்கும் வேலையும்கூட. இதில் அரசனின் புகழ் பரப்பல் ஒரு நோக்கம்.

அரசனின் செல்வாக்கை மக்களிடம் ஏற்படுத்த உருவாக்கிய உத்தி இது. திருவிதாங்கூரின் முதல் அரசனான மார்த்தாண்ட வர்மாவின் பெருமை, வீரம் பற்றியும் தம்பிமார்கள் அவர்களுக்குச் செய்யும் துரோகம் பற்றியும் முண்டன் என்னும் ஓட்டன் நாஞ்சில்நாட்டுக் கிராமங்களில் செய்தி பரப்பியதை ஓட்டன் கதை கூறுகிறது. இதுபோன்ற செய்திவழி அரசனின் புகழ் பரப்பிய இவர்கள் இன்றைய அரசியல்வாதிகளின் கொள்கை பரப்புச் செயலாளர்களைப் போல இருந்திருக்கிறார்கள்.

நல்ல விஷயங்களை வாய்மொழி மூலம் பரப்பியது போலவே கொடுமை செய்தவனின் செயலைப்பற்றியும் பரவவிடுதல் வழக்கில் இருந்தது. சண்டாளன் மருதநாயகம்பிள்ளை என்பவனைப் பற்றிய செய்தி இப்படித்தான் பரப்பப்பட்டது. அண்ணனின் மனைவியை விரும்பினான் தம்பி மருதநாயகம். அண்ணி அதற்கு இணங்கவில்லை. அதனால் அவளைக் கொலை செய்தான் தம்பி. இந்த செய்திகளைப் பண்டாரங்கள் ஊருக்கு வெளியே இருந்த கல்மண்டபங்களில் அமர்ந்து பாடியிருக்கின்றனர். கதையாகச் சொல்லவும் செய்தனர். யாசகம் எடுத்த சிலருக்கும் பாடுபொருள் மருதநாயகம்பிள்ளையின் கதைதான்.

சண்டாளன் மருதநாயகம் பிள்ளையின் கொலைப்பாடல் ஒருவகையில் வடதமிழ் நாட்டில் பரவலாக அறியப்பட்ட கொலைச்சிந்து போன்றதுதான். இன்றைய புலனாய்வுப் பத்திரிகையின் கூறுகளைக் கொண்டவை சிந்துப் பாடல்கள். சிந்துப் பாடகனுக்குப் புலனாய்வுப் பத்திகையாளரின் கற்பனையும் மொழிவேகமும் செய்திகளை அலசும் நுட்பமும் இருந்தன. கொலைச் சிந்துகளைப் படிப்பதற்கென்றே கூட்டம் உண்டு. அச்சில் வராத கொலைச் சிந்துகளைப் பாடியவர்களுக்கு வருமானமும் மரியாதையும் இருந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடந்த பெரிய கொலை வழக்குச் செய்திகளைச் சாதாரண பாமரனுக்குக் கொண்டு சேர்த்த பெருமை கொலைச்சிந்துப் பாடகனுக்கு உண்டு. நாஞ்சில்நாட்டில் இப்படியான கொலைச் சிந்துகள் கிடைத்துள்ளன.

சுசீந்திரம் ஊரில் பத்து வயதுச் சிறுமியின் கழுத்தை நெரித்துக் கொன்று கோவில் தெப்பக்குளம் அருகே போட்ட நிகழ்ச்சி பிள்ளையைக் கொன்ற பாட்டு என்னும் தலைப்பில் சிந்து வடிவில் வந்திருக்கிறது. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் நடந்த இந்த நிகழ்ச்சி அப்போது வெளிவந்த பத்திரிகைகளில் பரபரப்பாகப் பேசப்படவில்லை. ஆனால் சிந்துப் பாடகன் தங்கச் சங்கிலிக்காக கொலைப்பட்ட சிறுமி பற்றிய விபரங்களையும் கொலையாளி கைது செய்யப்பட்டு தண்டனை பெற்ற விவரங்களையும் புலனாய்வுப் பத்திரிகை நடையில் பாடியிருக்கிறான். காலணா விலையில் (இன்று 1.5 நயா பைசா) 16

பக்கங்கள் கொண்ட இந்தச் சிறு பிரசுரம் நாஞ்சில் நாட்டில் கிராமங்கள் தோறும் கூவி விற்கப்பட்டிருக்கிறது.

சுசீந்திரம் தேரோட்டத் திருவிழா அன்று மதம் பிடித்து பழையாற்றில் இறங்கி அட்டகாசம் செய்த யானையை அடக்கப் போன அப்புக்குட்டனைப் பற்றிய ஒரு சிந்துப்பாடலும் வெளிவந்திருக்கிறது. இது அன்றைய தேரோட்ட விழாவில் பொதுமக்கள் பரபரப்பாய் ஓடியது, பெண்கள் வீடுகளில் புகுந்து ஒளிந்தது பற்றி விலாவாரியாக வர்ணிக்கிறது.

மகாத்மாகாந்தி கொல்லப்பட்டதற்கு அடுத்தநாள் நாகர்கோவிலில் நடந்த இரங்கல் கூட்டத்தில் வினியோகிக்கப்பட்ட மகாத்மா துக்கச் சிந்து என்ற சிறு பிரசுரம் அன்றைய புகழ்பெற்ற தினப்பத்திரிகை ஒன்றில் தேசப்பிதா மரணம் என்னும் தலைப்பில் வந்த செய்திகளைவிட பரபரப்பாய்ப் பேசப்பட்டிருக்கிறது.

தென்குமரியில் ஊர் அம்பலங்களும் முத்தாரம்மன் கோவில்களும் செய்தி பரப்பிய முக்கிய மையங்களாக இருந்தன. முத்தாரம்மன் கோவில் கூட்டத்தில் அரசரால் அங்கீகரிக்கப்பட்ட ஊர்ப் பிரதானியாகவும் வருவாய்த் துறையினருக்கு உதவுபவராகவும் இருந்தவர் வாய்மொழியாகச் சொன்ன செய்திகள் அரசு அறிக்கையாகவும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. இதுபோன்ற அரசுச் செய்தி முதலில் திருவனந்தபுரத்திலிருந்து அழகியபாண்டியபுரம் முதலியார் வீட்டிற்கு ஓலைவழி கொண்டு வரப்பட்டுப் பின் அதை முதலியார் 12 பிடாகைத் தலைவர்களிடமும் சொல்ல அவர்கள் முத்தாரம்மன் கோவில் கூட்டத்தில் வாய்மொழியாக இச்செய்திகளைச் சொல்லுவார்கள். இச்செய்தி இப்படியே வாய்மொழியாகப் பரவும்.

திருவிதாங்கூரின் இரண்டாம் அரசரான தர்ம ராஜாவின் அம்மாவிற்கு உடல் நலமில்லாத செய்தியை நாஞ்சில் நாட்டு மக்களுக்கு அறிவிக்க வேண்டி அனுப்பப்பட்ட ஓலை, முதலியார் ஆவணத் தொகுதியில் உள்ளது. இது 1798ஆம் ஆண்டு எழுதப்பட்டது. இச்செய்தி வாய்மொழியாக பரப்பப் பட்டிருக்கிறது.

தமிழகத் திருவிழாக்கள் வழிபாடு, கேளிக்கை, வியாபார மையம் என்பதாக மட்டும் இல்லாமல் மக்கள் தங்களுக்குள் செய்திகளைப் பரிமாறும் இடமாகவும் இருந்திருக்கிறது. ஒரே சாதிக்காரர்களும் உறவினர்களும் தங்கள் குடும்பத்திலும் ஊரிலும் நடந்த நல்லது கெட்டது செய்திகளையும் திருவிழாவில் சந்தித்தபோது பரிமாறிக் கொண்டனர்.

மதுரை சித்திரைத் திருவிழாவில் சில சாதிகளுக்குரிய ஒரு ஆண்டிற்கான கொடுக்கல் வாங்கல் கணக்கை முடிப்பது, திருமணம் நிச்சயம் செய்வது, குடும்ப வழக்குகளை முடித்துக் கொள்வது போன்ற பல விஷயங்கள் நடந்திருக்கின்றன. மராட்டிய கணிகர் சாதியில் செய்திப் பரிமாற்றம் சித்திரை விழாவை அடியொற்றியே இருக்க வேண்டும் என்பது எழுதப்படாத சட்டமாக இருந்தது.

விழாவில் செய்திப் பரிமாற்றம் என்ற இந்தச் செயல் நாஞ்சில் நாட்டில் சுசீந்திரம் தேரோட்ட விழா, கோட்டாறு சவேரியார் விழா இரண்டிலும் நடந்திருகிறது. சுசீந்திரம் தேரோட்ட விழாவன்று மாலையில் நாஞ்சில்நாட்டுப் பன்னிரண்டு பிடாகை மக்களும் கூடி, விவசாயத் தொழில் பற்றி விவாதித்திருக்கின்றனர். குளம் தூர்வாரும் நாள், விதைக்கும் நாள் பற்றிய செய்திகள் இங்கே பேசப்பட்டன. முக்கிய செய்திகளை வாய்மொழியாகப் பரிமாறிக்கொள்ளும் இடமாக இது இருந்தது.

வருவாய்த் துறை உயர் அதிகாரியான திவான் பேஷ்காரின் அறிவிப்பைப் பார்வத்தியக்காரர் (கிராம அதிகாரி) வாய்மொழி உத்தரவாத அளவில் பரவ விடுதல் மிக அண்மைக்காலம்வரை வழக்கில் இருந்திருக்கிறது. மகாத்மா காந்தியடிகள் மூன்றாம் முறையாக கன்னியாகுமரி மாவட்டத்துக்கு வந்தபோது (1934) அவருக்கு அரசுப் பணியாளர்கள் உதவி செய்யக்கூடாது, பொதுமக்கள் அவர் பேசும் கூட்டத்திற்குச் செல்லக்கூடாது என்னும் செய்திகள் வாய்மொழியாகவே பரப்பப்பட்டன. (இதற்குப் பலன் கிடைக்கவில்லை என்பது வேறு விஷயம்)

தென்குமரியில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் மிகக் குறைவாக இருந்த இந்திய விடுதலை போராட்ட காலத்தில் 'சுதேசமித்திரன்', 'இந்து',

'மணிக்கொடி', 'சுதந்திரச்சங்கு' போன்ற பத்திரிகைகள் வாங்கப்பட்டிருக்கின்றன. இவற்றை ஒருவர் படிக்க மற்றவர் கேட்க, கேட்டவர் வாய்வழி அது பரவியிருக்கிறது. 'மணிக்கொடி', 'சுதந்திரச்சங்கு' ஆகிய இரண்டிற்கும் ஐந்து பிரதிகளே வாங்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இவற்றின் செய்தி நூறுபேருக்கு மேல் எட்டியிருக்கிறது.

வாய்வழிச் செய்தி பரவும்முறை எழுதப்படிக்காத சமுகத்தில் தவிர்க்க முடியாதது என்ற நாட்டார் கொள்கை ஒருபுறம் இருந்தாலும் கன்னியாகுமரி மாவட்டத்திலேயே பத்திரிகைகள் அச்சிடப்பட்டிருக்கின்றன என்பது முக்கியமான விஷயம். 1820லேயே நாகர்கோவிலில் அச்சு இயந்திரசாலை வந்துவிட்டது. இதன்பிறகு தேசோபகாரி (1840), பாலதீபிகை (1840), மாதர்போதினி (1840), சுவிஷேச பிரபல விளக்கம் (1841), சுவிஷேச தீபிகை (1863) போன்ற பத்திரிகைகள் வந்திருக்கின்றன. இந்தப் பத்திரிகைகளில் மாதர்போதினி முக்கியமானது.

**கன்னியாகுமரி மாவட்ட பிரஸ் கிளப் மலர், 2008**

# சுடலை கேட்ட படைப்புச் சோறு

முத்தாரம்மன் சுத்த சைவம். எனவே வடை, பருப்பு, சாம்பார், அவியல், புளிசேரி, எரிசேரி, கட்டித் தயிர், பச்சடி, கிச்சடி, பொரியல், துவரன், உப்பிலிடு வகைகள் அம்பாரமாகக் குவிக்கப்பெற்ற பச்சரிசிச் சோற்றின்மீது கொட்டப்பெற்றன. சோற்றுக் கூம்பின்மீது பப்படம் பாவப்பட்டது. சாய்ந்த தென்னம்பாளைக் கீற்றுகளில் வெள்ளைத் துணி சுற்றி நெய்யில் நனைத்த பந்தங்களும் ஊதுபத்திகளும் படையல்மீது சொருகப் பெற்றன.

"மற்ற தெய்வங்கள் எல்லாவற்றிற்கும் அசைவப் படைப்புகள், குளத்து மீன் கறி, அவித்த முட்டைகள், கோழி, ஆட்டுக்கறி, தீயில் சுட்ட அயிலைக் கருவாடு படைத்தவர்கள் வாயில் வெள்ளைத் துணிகளைக் கட்டிக்கொண்டு மூச்சுவிடாமல் . . ."

இது நாஞ்சில் நாடனின் 'தெய்வங்கள் ஓநாய்கள் ஆடுகள்' சிறுகதையில் வரும் பகுதி. இந்தக் கதையில் வரும் வில்வமங்கலம் பண்ணையாரின் முத்தாரம்மனைப் போன்றவள்தான் மற்ற ஊர் வேளாளரின் முத்தாரம்மனும் பிற சாதியினரின் முத்தாரம்மனும்.

நாஞ்சில்நாட்டு நாட்டார் தெய்வங்கள் எல்லாம் ஒரு காலத்தில் சுத்த அசைவ உணவை மட்டுமே ஏற்றுக்கொண்டு வாழ்ந்தன. இப்போதெல்லாம் நிலை தலைகீழாக மாறிவிட்டது. முத்தாரம்மனைப் போன்ற சமூக அந்துஸ்துள்ள அம்மன்கள் வெகு வேகமாகச் சைவச் சாப்பாடே வேண்டும் என்று கேட்க ஆரம்பித்துவிட்டன. சுடலைமாட சாமிகளில் சிலர்கூடச் சைவத்துக்கு மாறி வருகின்றனர். இப்படியாக மாறுவதற்கு அம்மன்களுக்கும் மாடன்களுக்கும் அஜீரணக் கோளாறோ வாயுத் தொல்லையோ காரணமல்ல.

இதற்கெல்லாம் சரியான காரணத்தைக் கண்டுபிடித்துச் சொல்ல முடியாது. எல்லாச் செயல்பாடுகளும் மாறியதன் விளைவோ வினையோ என்னவோ? புதுமைப்பித்தன் சொல்வதைப்போல் கால விஷேசம் காரணமாக இருக்கலாம்.

ஆராய்ச்சியாளர்களிடம் இதுபற்றிக் கேட்டால் சமஸ்கிருத மயமாக்கல், பிராமணமயமாக்கல், மேல்நிலையாக்கம் என்னும் சொற்களைப் பிரயோகித்து வியாக்கியானம் தருவார்கள். எந்த முத்தாரம்மனும் சுடலைகளும் தங்களை மேல்நிலையாக்க வேண்டுமென ஆராய்ச்சியாளர்களிடம் விண்ணப்பம் செய்ய வில்லை.

நாட்டார் தெய்வங்களின் வழிபாடு, விழா, சடங்குகள், கோவில் அமைப்பு, முக்கிய தெய்வ வடிவம், நிகழ்த்து கலைகள், நிகழும் முறை ஆகியன மாறியது போலவே உணவுப் பழக்கங்களும் மாறிவிட்டன. தமிழகத்தில் இப்படியாக மாறும் கலாச்சாரத்துக்கு எப்போதுமே தென்திருவிதாங்கூர் முதலில் பச்சைக்கொடி காட்டிவருகிறது. இதற்குக் காரணம் கேரளப் பாதிப்பு என்றும் அதிக அளவில் படித்தவர் வாழும் பகுதி என்றும் எடுத்துக் கொள்ளலாம். பிரசன்னம் பார்த்தல் என்னும் நிறுவன தெய்வக் கோயில் நியதியை நாட்டார் தெய்வக் கோவிலைப் புனரமைப்புச் செய்வதற்கு அனுசரிப்பது இப்போது சகஜமாகிவிட்டது.

கோயிலின் கட்டடம், பரிவாரத் தெய்வங்களை வைக்குமிடம், சடங்குகள் போன்றவற்றைத் தீர்மானிப்பவர்களாய்ப் பிரசன்னம் பார்க்கும் நம்பூதிரிகளோ அவர்களைப் போன்றவர்களோ இருக்கும்போது சாமிகளின் சாப்பாடு விஷயங்களில் எப்படி விதி விலக்களிக்க முடியும். எதிர்காலத்தில் பரோட்டா, சப்பாத்தி, நாண், நூடுல்ஸ் போன்றவை படைக்கப்பட்டாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை.

*

கயிலாய மலையில் வேள்விக்குழியிலிருந்து பிறந்த சுடலைமாடன் தனக்குப் படைக்க வேண்டிய படையலைப் பட்டியலிட்டுச் சொல்லியிருக்கிறான். இந்தப் பட்டியல் இப்போது ஆறுமுகப்பெருமாள் நாடாரின் சுடலைமாடன் பதிப்பில் மட்டுமே காணப்படுகிறது. நடைமுறையில் இது பின்பற்றப்பட வில்லை என்பது வேறு விஷயம்.

சுடலைமாடனைப் பிறப்பிப்பதற்காக வேள்விக்குழியில் கருவைப் போட்டவர்கள் குழியிலிருந்து உருப்பெற்று வந்த சுடலை மாடனிடம் உனக்கு நாங்கள் எப்படிப் பூசை செய்ய வேண்டும், படைப்புப் போட வேண்டும் என்று பணிந்து கேட்கிறார்கள். கேட்டுக்கொள்ளுங்கள் என்று ஆவேசமாய்ச் சொல்ல ஆரம்பிக்கிறான் சுடலை. "ஆட்டின் தலையைத் தனியே எடுத்து வைத்துவிடவும்; முட்டெலும்பைத் தனியே அவித்துச் சமைக்கவும்; மூளையைப் பிரித்து எடுத்து மிளகு சேர்த்துக் கிண்டி வைக்கவும்; இறைச்சித் துண்டுகளைக் குண்டுச் சட்டியில் வேகவைத்து வண்டு கட்டிவிடு; கோழித்தலையையும் ஈரலையும் நெருப்பிலே சுட்டு வை; பச்சைக் கருவாட்டை நெருப்பில் வாட்டி வை; முட்டையை அவித்து வை; சுட்ட கறிதான் எனக்குப் பிடிக்கும்; எல்லாம் சுடச்சுட வேண்டும்; இவை மட்டுமல்ல மண் தோண்டியிலே கள்ளும் சாராயமும் வைக்க வேண்டும்" என்று அடுக்கிக்கொண்டே போகிறான். அவர்களும் தருவதாய்த் தலையசைக்கின்றார்கள்.

இப்படியாகத் தனக்கு வேண்டிய உணவைப் பட்டியலிடுவது சுடலைக்கு மட்டுமல்ல; தமிழகத்தின் பிற நாட்டார் தெய்வங்களுக்கும் பொதுவான அம்சம். நாட்டார் தெய்வம் கேட்கா விட்டாலும் அந்தத் தெய்வங்களின் பக்தர்களோ அருள் வந்து ஆடுபவரோ உனக்கு இதை எல்லாம் படைப்பேன்; எனக்கு இதையெல்லாம் தர வேண்டும் எனப் பேரம் பேசுவதும் உண்டு; அல்லது தெய்வத்தின் பிரதிநிதியாகச் சாமியாடிக் கேட்பதும் உண்டு. இந்தப் பட்டியலும் படைப்பு வேண்டலும் வாய்மொழிப் பாடல்களிலும்கூடக் காணப்படுகின்றன.

நிறுவன சமயத் தெய்வங்களின் கோவில்களில் இன்ன தெய்வத்திற்கு இந்த நைவேத்தியம் என்று முறைப்படுத்தப்பட்ட 'படித்தரம்' உண்டு. படித்தரம் என்பது கோவிலில் நிகழும் வழிபாடு, சடங்கு, தெய்வங்களுக்குரிய நைவேத்தியம், விழா, சிறப்பு நிகழ்ச்சி ஆகியவற்றிற்குச் செலவழிக்க வேண்டியது பற்றிய நெறிப்படுத்தல் விவரம்.

திருவிதாங்கூர் கோவில்களின் படித்தர விபரங்கள் கோவிலுக்குக் கோவில் மாறுபடுகிறது. தென்திருவிதாங்கூரின் (இன்றைய கன்னியாகுமரி மாவட்டம்)

முக்கியமான பெரிய கோயில்களில் தெய்வத்திற்குரிய படையல்களின் பட்டியல் காலங்காலமாக அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது.

திருவட்டாறு ஆதிகேசவப் பெருமாள் கோவிலில் படைக்கப்படும் நைவேத்தியம் பிற கோவில்களில் படைக்கப்படுபவற்றிலிருந்து வித்தியாசமானது. இங்குப் படைக்கப்படும் நைவேத்தியங்கள் எரிசேரி, ஓலன், புளிசேரி, உப்பேரி, உப்பு மாங்காய், இடிச்சு பிழிஞ்ச பாயசம், உண்ணியப்பம், ஒற்றை வடை, துலாபாயசம், அரவணை, பால் பாயசம், நெய் ஆகியன.

இந்த நைவேத்தியம் தயாரிப்பதற்குரிய பக்குவம், சேர்மானங்கள் பற்றிய விவரங்கள் ஓலையில் குறிக்கப்பட்டுக் கோவில்களில் பாதுகாக்கும் வழக்கம் 1920இல்கூட இருந்தது. இவற்றின் சுவை, சேர்மானம் போன்றவை சரியாக அமைந்துள்ளனவா, முந்திய கால வழக்கப்படி தயாரிக்கப்படுகின்றனவா என்பதைக் கவனிக்க சிறு அதிகாரி இருந்தார். இதனால் இது போன்ற உணவு வகைகளின் சுவை தொடர்ந்து பேணப்பட்டு வந்தது என்று தெரிகிறது.

நாட்டார் தெய்வங்களின் படைப்பு பற்றிய செய்திகள் எவையும் எழுதிவைக்கப்படவில்லை. இவை வாய்மொழிவழி வந்தவை. நிறுவன சமயக் கோவில்களில் நைவத்தியம் பற்றிய சில செய்திகளின் ரகசியங்கள் பேணப்பட்டது போலவே நாட்டார் தெய்வப் படைப்புகள் பற்றிய செய்திகளும் குறிப்பிட்ட குழுவுக்குள் ரகசியமாக வைக்கப்பட்டுக் காலங்காலமாய்க் கைமாறப்பட்டு வருகின்றன.

தென்திருவிதாங்கூர் கோவில்களில் காணப்படும் கல்வெட்டுக்களில் கோவில் மூலவரின் நைவேத்தியம், பிராமணர்களுக்குக் கொடுக்கப்பட்ட உணவு, இதற்குக் கொடுக்கப்பட்ட நிவந்தம் ஆகியன பற்றிய செய்திகள் நிறையவே காணப்படுகின்றன.

பிராமணர்களுக்குக் கொடுக்கப்பட்ட சாதத்திற்குக் கூட்டுகளாக எரிசேரி, ஓலன், பருப்பு, புளிசேரி, உப்பேரி, உப்பு மாங்காய், ஒற்றை வடை, கீரைக் குழம்பு, வாழைக்காய்க் கூட்டு, வழுதலங்காய் பருப்புக் கூட்டு, பூசணிக் கூட்டு, பச்சடி ஆகிய பெயர்கள் கிடைத்துள்ளன. இந்தக் கூட்டுகளில் நல்லமிளகு மட்டுமே

காரத்திற்காகப் பயன்படுத்தப்பட்டது. உணவுக்கு அளிக்கப்பட்ட நிவந்தங்களில் நல்லமிளகின் பெயர் மட்டுமே கல்வெட்டுக்களில் வருகின்றது. விஷேச நாட்களில் பருப்பு, நெய், பப்படம், கதலிப்பழம் ஆகியன விநியோகிக்கப்பட்டன. கல்வெட்டுக்களில் வேறு பழங்களின் பெயர்கள் வரவில்லை. பிராமணர்களின் உணவு தொடர்பான இந்தப் பட்டியல் 16ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட கல்வெட்டுகளிலேயே விரிவாக வருகின்றது.

தயிர் சாதம், பொங்கல் இரண்டும் பிராமணர்களுக்குப் பொதுவாக அளிக்கப்பட்ட உணவு. பொங்கலில் நல்லமிளகு, நெய், தேங்காய் ஆகியன சேர்க்கப்பட்டன என்பதற்குக் குறிப்பு உண்டு. குறிப்பிட்ட கோவில்களில் பொங்கலுடன் சுக்கு, சீரகம், நல்லமிளகு, சர்க்கரை, எரிகரும்பு, நெய் ஆகியன சேர்க்கப் பட்டதை 1558ஆம் ஆண்டுக் கல்வெட்டு கூறும்.

நெய், பால், தயிர் ஆகியன கோவில் நைவேத்தியத்திற்கும் பிராமண ஊட்டிற்கும் தாராளமாகச் செலவிடப்பட்டிருக்கின்றன. உணவில் சேர்ப்பதற்குப் பசு நெய்யும் விளக்கெரிக்க ஆடு, எருமை ஆகியவற்றிலிருந்து பெறப்பட்ட பாலிலிருந்து தயாரிக்கப்பட்ட நெய்யும் பயன்படுத்தப்பட்டதைப் பெருமளவு கல்வெட்டுகள் கூறுகின்றன.

தென்திருவிதாங்கூர் பகுதிகளில் உள்ள கல்வெட்டுக்களில் நிறுவன சமயத் தெய்வங்களுக்கும் பிராமணர்களுக்கும் அளிக்கப்பட்ட உணவு வகைகள் பற்றிய செய்திகள் மட்டுமே காணப்படுகின்றன. கோவில்கள் அல்லாத சாலைவழிக் கல்மடங்களில் ஊறுகாயும் நெருப்பும் தண்ணீரும் பிராமணர் அல்லாத சாதியினருக்கு இலவசமாகக் கொடுப்பதற்காக அளிக்கப்பட்ட நிவந்தச் செய்திகள் உள்ளன.

நாட்டார் தெய்வங்கள் தொடர்பான விழாக்களுக்கோ பூசை முறைகளுக்கோ படித்தரங்கள் என்னும் முறைப்படுத்தப்பட்ட வரன்முறை கிடையா. ஆனால் காலங்காலமாகத் தெய்வங்களுக்குப் படைக்கப்பட்ட படைப்பின் சேர்மானமும் சமைக்கும் முறையும் மாறாமல் வருவது நடைமுறையில் உள்ளது. இச்செய்திகள் கோவிலைச் சார்ந்தவர்களின் நினைவிலிருந்தே அடுத்தவருக்குச் சொல்லப்பட்டன.

பொதுவாகப் பலி கொடுக்கப்பட்டுச் சமைக்கப்பட்ட ஆடு, கோழி ஆகியவற்றின் இறைச்சியையும் முட்டையையும் அசைவப் படைப்பில் கலந்து விநியோகிக்கப்படும். பெரும்பாலான கோவில்களில் ஒரே மாதிரியான சைவக் கூட்டுவகைகளே சாதத்தில் கலக்கப்படுகின்றன.

முக்கியத் தெய்வத்தின் முன்னே பச்சரிசிச் சாதம் பொங்கிக் குவிக்கப்பட்டிருக்கும். பருப்பு, துவட்டல், அவியல், முருங்கைக் கீரை துவரன், பப்படம், கோழிக்குழம்பு, ஆட்டுக்கறிக் குழம்பு ஆகியன தனித்தனிப் பாத்திரங்களில் வைக்கப்பட்டிருக்கும்.

முக்கியத் தெய்வத்திற்கும் துணைத் தெய்வங்களுக்கும் வழிபாட்டுச் சடங்கு முடிந்ததும் பச்சரிசிச் சாதத்தைப் பெரிய அலுமினியப் பாத்திரத்தில் போட்டு ஒவ்வொரு குழம்பு, கறிகளையும் தனித்தனியே விட்டு 'குழைச் சட்டுவத்தால்' கிண்டுவர். பெரிய அளவிலான சட்டுவம் குழைச்சட்டுவம் எனப்படும். இது அண்டாவில் சோறு கிண்டப் பயன்படுவது. இதன் நீண்ட கைப்பிடி மரத்தால் அமைந்திருக்கும். சாதம் சரியான அளவில் விரவப்பட்டபின் விநியோகிக்கப்படும்.

சைவப் படைப்பு பருப்பு, முருங்கைக்கீரை துவரன், தயிர் பச்சடி, அவியல், எரிசேரி அல்லது சாம்பார் அல்லது கூட்டுக்கறி ஆகியவற்றையும் பச்சரிசிச் சோற்றுடன் ஒன்றாகச் சேர்த்துப் பிசைந்து தயாரிக்கப்படுவது.

***

கன்னியாகுமரி மாவட்டம் அகஸ்தீஸ்வரம் வட்டம் இராஜாக்கமங்கலம் ஊராட்சி ஒன்றியத்தில் அடங்கிய தெக்குறிச்சி ஊரிலும் இதைச் சுற்றி அமைந்த கணபதிபுரம், அமைந்தகரை, சூரப்பள்ளம், பேயோடு, ஈசன்தங்கு, அண்டன் கோட்டை போன்ற ஊர்களில் வாழும் நாடார் சமூகத்தைச் சார்ந்த குறிப்பிட்ட குடும்பத்தினர் மட்டுமே நடத்தும் காளி வழிபாடு 'கோவிலூட்டம்மை வழிபாடு' என்னும் பெயரில் வழங்கப்படுகிறது.

காளியே இங்கு கோவிலூட்டம்மை என்று குறிக்கப்படுகிறாள். இந்தக் காளி இராமாயணத்தில் வரும் ராவணன் வழிபட்ட காளி. ராம ராவண யுத்தத்தின்போது தோற்றுப்போன ராவணன் தன் பலத்தைப் பெருக்க காளியை வழிபட்டான் என்பது யுத்த காண்ட நிகழ்ச்சி. இது தொடர்பான காளியை இந்தக் குடும்பத்தினர் வழிபடுகின்றனர்.

கோவிலூட்டம்மையான காளி, சூல வடிவில் இருக்கிறாள். இந்தக் காளியை வழிபடும் குடும்பத்தினரின் வீட்டுச் சிறப்பு நிகழ்ச்சியிலோ திங்கள் அல்லது வெள்ளிக்கிழமையிலோ கோவிலூட்டம்மைக்கு அசைவப் படைப்புப் போடுகின்றனர்.

இந்த அம்மைக்குப் பலியாகக் கொடுக்கப்படும் ஆடு, மறிக்கிடாவாகவும் கோழி கறுப்பு அல்லது சிவப்பு நிறத்தில் சிறு வெள்ளைப் புள்ளி உடையதாய் முட்டையிடும் பருவத்தில் உள்ளதாயும் இருக்க வேண்டும்.

பலி கொடுக்கப்படும் ஆட்டின் எல்லாப் பாகங்களும் சமைக்கப்பட வேண்டும் என்பது இந்த ஊட்டின் விசேஷம். ஆட்டுத்தோலின் ரோமம் நெருப்பில் எரிக்கப்பட்டு மயிர் சீவப்பட்டுப் பின் தோல் முழுவதுமாய்க் கழுவப்பட்டு மிகச் சிறு துண்டுகளாக நறுக்கப்பட்டுச் சமைக்கப்படும். ஆட்டுக்கால் குழம்பும் கோழித்தூவலும் நெருப்பில் எரிக்கப்படும் அல்லது மண்ணில் புதைக்கப்படும்.

பலி கொடுக்கப்படும் விலங்கு அல்லது பறவையின் சமைப்பதற்குரிய பாகங்களைத் தவிர பிறவற்றைப் பூமியில் புதைப்பது அல்லது எரிப்பது என்பது பொதுவான நடைமுறை. மற்றவர்கள் இவற்றைத் தீண்டுவதோ நாய், நரி போன்றவை தின்பதோ தீட்டாகக் கருதப்படும்.

பலி கொடுக்கப்பட்ட ஆட்டின் தலை, தோல், குடல், கால் போன்ற உறுப்புகளைத் தனியே வெட்டி எடுத்துவிட்டு உடல் பகுதியை மேலிருந்து கீழாக இரண்டாகப் பிளந்து, இதன் வலதுபக்க இறைச்சித் துண்டைத் தனியே வைப்பர். இது முதல் வேலை என்னும் சொல்லால் குறிக்கப்படும். முதல் வேலைப் பகுதியைக் கூட்டுக்கறிக் குழம்பாகச் சமைக்கத் தனிப் பானைகளில் வைத்துவிடுவர்.

ஆட்டின் இரண்டாம் பகுதி இறைச்சி (இடப்பக்கம்) இரண்டாம் வேலை என்ற சொல்லால் குறிக்கப்படும். இந்த இறைச்சிப் பகுதியுடன் ஆட்டின் தலை, தோல், குடல், கால் ஆகியவற்றையும் சேர்த்துச் சமைப்பர். அதோடு பலி கொடுக்கப்பட்ட கோழியின் இறைச்சி, வழுதலங்காய்க் கூட்டு ஆகியவற்றையும் சமைத்து இதனுடன் வைப்பர். இந்த இறைச்சிக் கூட்டு ஏழு சட்டிகளில் வைக்கப்பட்டிருக்கும்.

பலி ஆட்டின் சதை ஒட்டிய எலும்புகள் மிகச் சிறியதாய் வெட்டப்பட்டுக் குழம்பாக வைக்கப்படும்.

கோவிலூட்டம்மை கோவிலுக்குரிய 'படைப்பு அரிசிச் சாதம்' தயாரிக்கப்படும் முறையும் வித்தியாசமானது. கைக்குத்தல் அரிசியையே படைப்புச் சாதம் பொங்கப் பயன்படுத்த வேண்டும் என்பது நியதி. சில வருஷங்களுக்குமுன் ஊட்டு நிகழும் அன்று காலையில் நெல்லை அவித்துக் காயப்போட்டுக் கையால் குத்தி அரிசி எடுப்பது என்ற வழக்கம் இருந்தது.

கைக்குத்தல் அரிசிச் சாதம், ஆட்டு இறைச்சிக் கறி, கோழி இறைச்சிக் கறி, ஆட்டு எலும்புக் குழம்பு, வழுதலங்காய்க் கூட்டு ஆகியன ஏழு பனை ஓலைப் பட்டைகளில் காளியின்முன் வைக்கப்படும். இந்தப் படைப்புக் கூட்டத்தில் ஆட்டின் வலது பக்க இறைச்சியால் சமைத்த கறியும் இடது பக்க இறைச்சியால் சமைத்த கறியும் தனித்தனி ஓலைப்பட்டையில் வைக்கப்பட வேண்டும் என்பது நியதி.

மூத்த நாச்சியார் என்னும் துணைத் தெய்வத்திற்குக் கோழியின் தலையை நெருப்பில் வாட்டி வைப்பர். முந்திய காலங்களில் வடித்த சாராயமும் வைக்கப்படும். இப்போது டாஸ்மாக் கடை பானம்.

கோவிலூட்டு அம்மன் கோவிலுடன் தொடர்புடையவர்களே சமையல் வேலையைக் கவனிக்கின்றனர். சமையலாள் துணியால் வாயைக் கட்டிக்கொண்டிருக்க வேண்டும் என்பது நியதி. அறியாமல்கூடப் பதார்த்தங்களில் எச்சில் விழுந்துவிடக் கூடாது என்பதற்கு இந்த ஏற்பாடு.

கோவிலின் பூசை முடிந்த பின்னர் பக்தர்கள் முக்கியத் தெய்வம் இருக்கும் அறையின்முன் சென்று வணங்குவர். அப்போது பூசகர் பலி ஆட்டின் வலது பக்க இறைச்சிக் குழம்பைக் கைக்குத்தல் அரிசிச் சோற்றுடன் சேர்த்துப் பிசைந்து உருட்டி வழங்குவார். இந்த உருட்டுச் சோற்றை வாங்கியவர்கள் கோவில் வளாகத்திலேயே தின்றுவிட வேண்டும் என்பது முறை.

பூசாரி வலது பக்க இறைச்சிக் குழம்புச் சோற்றை விநியோகித்த பின்பு வலது, இடது பக்கம் உள்ள ஆட்டிறைச்சிக் கறி, எலும்புக் குழம்பு, வழுதலங்காய்ப் பொரியல், கைக்குத்தல் அரிசிச் சாதம் ஆகிய அனைத்தும் ஒன்றாகக் கலந்து பிசைந்து விநியோகிக்கப்படும்.

இக்கோவிலின் பலி, படைப்பு, சமையல், விநியோகம், பூசை தொடர்பாகத் தனிச்சொற்கள் உள்ளன. இச்சொற்களைக் கோவிலுக்கு உரிமை உடையவர்களே சொல்கின்றனர். கோவில் படைப்புப் பற்றிப் பேசும்போது இந்தச் சொற்களின் வழியே பேச வேண்டும் என்பதும் நடைமுறை. இவற்றிற்கு மந்திரத் தன்மை உண்டு என்பதும் ஒரு காரணம்.

*

கன்னியாகுமரி மாவட்டத்தில் நாட்டார் தெய்வ விழாக்களைக் கொடை விழா, கொடுதி என்ற சொற்களாலும் சிறிய சிறப்பு நிகழ்ச்சிகளைச் சிறப்புப் படுக்கை, வைத்துக்கொடுத்தல் என்னும் சொற்களாலும் குறிப்பிடுவர். இவற்றிற்குத் தெய்வத்துக்கு உணவு படைத்தல் என்பது பொதுவான பொருள். இவை அல்லாத சொல் 'ஊட்டு.' இச்சொல்லுக்கு 'உணவை ஊட்டுதல்', 'படைத்தல்' என்ற பொருள் வழக்கில் உள்ளது.

ஊட்டு என்ற சொல் நாட்டார் பெண் தெய்வம், ஆண் தெய்வம் இரண்டிற்கும் பின்ஒட்டாக அல்லது முன்ஒட்டாக வந்தாலும் இது காளியுடன் சார்த்திக் கூறப்படுவது பொதுவான வழக்கு. காளி கோவில் விழாவைக் காளி ஊட்டு என்னும் சொல்லால் குறிப்பர். விதிவிலக்காகக் கடுக்கரை என்ற ஊரில் உள்ள ஆண் தெய்வமான தம்புரானின் கோவில் ஆயினூட்டுத் தம்புரான் கோவில் என்றே வழங்கப்படுகிறது.

காளிக்குக் கொடுக்கப்படும் படைப்பில் மது முக்கிய இடம் வகிக்கும். பிற நாட்டார் தெய்வங்களில் சாம்பான் சாமி, அரவணைப் போத்தி, முண்டன் போன்ற தெய்வங்களுக்கும் மது படைப்பதுண்டு. இந்த மது, கடையில் வாங்கப்பட்ட கள் அல்லது சாராயமாக இருக்கும். இப்படிப் படைக்கப்பட்ட மதுவை இந்தத் தெய்வத்திற்காகச் சாமியாடுகிறவர்களே குடிப்பர். காளிக்கு ஊட்டப்படும் இந்த மது, விழாக் காணவரும் பக்தர்களின் முன்னிலையில் தயாரிக்கப்படும். இந்தத் தயாரிப்பும் கோவில் சடங்குகளில் ஒன்று.

காளி ஊட்டு நிகழ்ச்சியில் தயாரிக்கப்படும் மதுவை அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் பீர் என்று கூறலாம். புளித்த பச்சரிசிச் சாதம், முளை கட்டிய நெல்லை இடித்து எடுத்த அரிசி மாவு, புளித்த தயிர், உமி, தவிடு ஆகியவற்றின் கலவையிலிருந்து பிழியப்பட்ட சாறுதான் மது. சில ஊர்களில் இந்த மதுவில் கொஞ்சம் கள் அல்லது நவதானியங்களைச் சேர்த்து அரைத்துப் பிழிந்த பாலையும் ஊற்றிக்கொள்கின்றனர். இந்த மது இருக்கும் பானையில் சாம்பிராணிப் புகையும் சேருவதால் இது நுரைத்துப் பொங்கும்.

காளிக்குரிய படையலில் பச்சரிசிச் சோறு, கோழிக் குழம்பு, மீன் குழம்பு, ஆட்டுக்கறிக் குழம்பு என எல்லாம் படைக்கப்படும். இது பிற கோவில்களைப் போன்று இருக்கும். என்றாலும் விழாவில் வாகனத்தில் காளி வலம் வரும்போது இந்த அசைவ உணவு வகைகள் தனித்தனி மண் பானைகளில் வைக்கப்பட்டுத் தனி வாகனத்தில் எடுத்துச் செல்லப்படும்.

கன்னியாகுமரி மாவட்டம் நாட்டார் தெய்வ விழாக்களில் அதிக எண்ணிக்கை கொண்ட மக்களுக்கு உணவு பரிமாறும் நிகழ்ச்சி கடுக்கரை ஊர் ஆயினூட்டுத் தம்புரான் கோவிலில் நடக்கிறது. இந்த ஊர் நாஞ்சில் நாட்டுத் தோவாளை வட்டத்தில் செழிப்பான பொதியமலை அடிவாரத்தில் இருக்கிறது. நாகர் கோவிலிலிருந்து 20 கி.மீ. தொலைவில் உள்ளது. இந்த ஊரில் கோவில் கொண்டுள்ள ஆயினூட்டுத் தம்புரான் வேணாட்டு அரச குடும்பத்தில் பிறந்து துறவியாகிச் சமாதி ஆனவர் என்பது வாய்மொழிச் செய்தி.

நாஞ்சில் நாட்டின் 12 பிடாகைகளுடன் தொடர்புடைய பெரிய அளவிலான இரண்டு விழாக்களில் ஒன்று தம்புரான் ஊட்டு விழா. இன்னொன்று, சுசீந்திரம்

மார்கழித் தேர்த்திருவிழா. இந்த இரண்டு விழாக்களிலும் பெரும் அளவில் உணவு சமைக்கப்பட்டுப் பரிமாறப்பட்டிருக்கிறது. மார்கழித் திருவிழாச் சாப்பாட்டைத் திருவிதாங்கூர் திவானாக இருந்த சி.பி. ராமசாமி அய்யர் நிறுத்திவிட்டார்.

கடுக்கரை ஆயினூட்டுத் தம்புரான் கோவில் விழாவில் உணவு ஊட்டுவது என்பது முக்கிய நிகழ்ச்சி. இந்த விழா, ஊட்டு என்றே பொதுவாகக் குறிப்பிடப்படுகிறது. இந்தத் தம்புரான் சாமி விழாவுடன், கல்குளம் வட்டம் குலசேகரம் ஊர் காணிக்காரர் என்னும் மலைவாழ் சாதியினர் ஒருவரின் குடும்பம் தொடர்புடையது. இந்தக் காணிக்காரர் இவ்விழாவில் முக்கிய பங்கு வகிக்கிறார். இங்கே நிகழும் சில சடங்குகளைச் செய்பவர் இவரே. இதுவும் மரபுவழிக் கைமாறப்பட்டு வரும் செய்தி. கோவில் நுழைவு அறிக்கை வரும் முன்பு இவர் இக்கோவில் சடங்குகளைச் செய்பவராகவும் இருந்திருக்கிறார்.

கடுக்கரை தம்புரான் ஊட்டு 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடக்கிறது. இருபதாம் நூற்றாண்டில் ஏழு முறை நடந்திருக்கிறது. கடைசியாக 2003இல் நடந்தது. இனி 2015இல் நடக்கும். 2003இல் நடந்த ஊட்டு விழாவில் 55 செம்பு அரிசி சமைக்கப்பட்டது.

ஊட்டுவிழா பங்குனிமாதம் (மார்ச் – ஏப்ரல்) வியாழன், வெள்ளி, சனி ஆகிய மூன்று நாட்களில் நடக்கும். இதில் வெள்ளிக்கிழமை பகல் ஒரு மணிக்குமேல் உணவு பரிமாறப்படும். வெள்ளிக்கிழமை பகல் 12 முதல் 1 மணிக்குள் தம்புரானுக்குச் சாமியாடுபவர் படைப்புச் சோற்றின் நடுவில் சொருகப் பட்டிருக்கும் பந்தத்தையும் படைப்பின்மேல் போடப்பட்டிருக்கும் பூ மாலையையும் எடுக்க வேண்டும் என்பது நடைமுறை. அவர் இதைச் செய்தவுடன் படைப்புச் சாதம் இரண்டாக வெடிக்கும்.

சாதம் வெடித்ததும் பூஜை ஆரம்பமாகும். சாதம் வெடிக்கும் காட்சியைக் காண பக்தர்கள் குவிந்து விடுவார்கள். இந்த நேரத்தில் பெண் பக்தர்களின் குரவை ஒலி கேட்கும். சாதம் பிளந்த பின் அதைப் பார்க்கப் பார்வையாளர்கள் அனுமதிக்கப்படுகின்றனர். பின்னர் உணவு பரிமாறப்படும்.

தம்புரானின் ஊட்டுக்குரிய சாதம் பொங்குவதற்கு ஒரே வகை அரிசியைப் பயன்படுத்துவதில்லை. ஊட்டுவிழா நடக்கும் வருஷத்தில் கார்த்திகை (ஜூலை) மாதமே ஊட்டு விழாவிற்குரிய பூர்வாங்க வேலை ஆரம்பமாகிவிடும்.

முக்கியமாகக் கடுக்கரை ஊரில் உள்ள நிலச்சுவாந்தாரர்களிடம் ஒரு ஏக்கருக்கு ஏழு மரக்கால் நெல்லும் தென்னந்தோப்பு உடையவர்களிடம் ஒரு ஏக்கருக்கு 100 தேங்காயும் நிலமே இல்லாதவர்களிடம் 500 ரூபாயும் சேகரிக்கின்றனர். இந்த நெல்லை அவித்துக் காயவிட்டு ஆலையில் அரைக்கும் வேலை கொடை விழாவிற்கு ஒரு வாரம் முன்பே முடிந்துவிடும். அரிசி ஆலை வரும் முன்பு நெல்லை அவித்து அரிசியாக்கும் பொறுப்பை உள்ளூர்ப் பெண்களே செய்தனர். அப்போது நெல் குத்துவதற்கு வெளியூரிலிருந்து ஆள் தருவிப்பதுமுண்டு.

கொடை விழாவிற்குச் சேகரிக்கப்படும் நெல் சம்பா, வாரிசிறை மீண்டான், அரிக்கிராவி, ஐ.ஆர். 8 என எல்லா வகைகளிலும் இருக்கும். வேறுபட்ட அரிசி வகைகள் என்றாலும் ஒன்றாகப் பொங்குவது என்பது முக்கியமாகக் கொள்ளப்படுகிறது.

வெள்ளிக்கிழமை காலை நான்கு மணிக்குச் சாதம் பொங்கும் வேலை ஆரம்பமாகும். 12 மணிவரை இது தொடரும். சாதம் பொங்கித் தட்டுவதிலும் அதைப் படைப்பாகக் குவித்து வைப்பதிலும் பரம்பரையாக ஒரு முறையைக் கையாளுகின்றனர். படைப்புச் சாதம் இரண்டாக வெடிப்பதன் ரகசியமும் இந்த நுட்பத்தில்தான் உள்ளது.

படைப்புச் சாதத்தைக் கோவிலை அடுத்திருக்கும் கல்பாறையிலேயே போடுகின்றனர். வியாழக்கிழமை இரவிலேயே இப்பகுதி சுத்தப்படுத்தப்பட்டு ஓலைப்பாய் விரிக்கப்பட்டுச் சாதம் போடத் தயாராக இருக்கும். 55 செம்பு அரிசிச் சாதக் குவியல் எந்த அளவில் பரந்து கிடக்கும் என்பதை முதலில் கணக்கிட்டு அந்த எல்லையைச் சுற்றி மிகப் பருமனான மூங்கில் கழிகள் (தண்டயம் என இது அழைக்கப்படும்) அடுக்கப்படும்.

படைப்புச் சோற்றை வாங்கிப் பாயில் பக்குவமாகத் தட்டுவதற்கென்று ஊட்டுக் களத்தில் (படைப்புச் சாதம் போடும் இடம்) மூன்று பேர் நிற்பார்கள். இவர்கள் தங்கள் வாயிலிருந்து எச்சில் தெறிக்காதபடி வெள்ளைத் துணியைக் கட்டியிருப்பர். கால் பாதத்திலிருந்து கணுக்கால்வரை உள்ள பகுதிகளை வெள்ளைத்துணியால் பொதிந்து கட்டியிருப்பர். இவர்கள் ஊட்டு விழா ஆரம்பித்ததும் விரதம் இருப்பார்கள்.

ஊட்டு விழா அன்று காலை நான்கு மணிக்கு ஒரே சமயத்தில் 15 செம்புகளும் 15 கிடார அடுப்புகளில் ஏற்றப்படும். ஒரே நேரத்தில் நெருப்புப் பற்றவைக்கப்படும். ஒரே சமயத்தில் உலைநீர் கொதிக்கும். 15 செம்புகளிலும் ஒரே சமயத்தில் அரிசி போடப்படும். இதையெல்லாம் கவனிக்க ஒவ்வொரு செம்பின் முன்னும் ஒருவர் நிற்பார்.

உலை கொதித்துக் கால் வேக்காடு வந்ததும் சாதத்தைப் பனைநார்ப் பெட்டியில் பகிர்ந்தெடுக்க ஆரம்பிப்பர். ஒவ்வொரு செம்பிலும் உள்ள சாதத்தைப் பகிரும் வேலை தனித்தனியே நடக்கும். பாதி வெந்தும் பாதி வேகாததுமாக இருக்கும் 450 கிலோ சாதத்தை ஊட்டுக் களத்தில் பரவலாக விரித்துப் போடுவர்.

இப்படியாக வெந்த சோற்றைப் போட்டு முடித்த உடனே 15 செம்பிலும் சாதம் பொங்க ஆரம்பிப்பர். இப்போது உலை இரண்டாம் கொதி வந்தவுடன் அரை வேக்காட்டுச் சாதத்தைப் பகிர்ந்து ஏற்கெனவே பரவலாய்ப் போடப்பட்ட சாதத்தின் மேலே போடுவர்.

மூன்றாவது அடுக்கில் போடப் பத்துச்செம்பு அரிசி (30 x 10 = 300 கிலோ) பொங்கப்படும். இப்போது முக்கால் வேக்காட்டில் சாதம் பகிர்ந்தெடுக்கப்படும். இந்தச் சாதம் ஊட்டுக் களத்தில் மூன்றாவது அடுக்கில் போடப்படும். நான்காவது அடுக்கில் போட 15 செம்பு அரிசிச் சாதம் (450 கிலோ) பொங்கப்படும். இந்த முறை சாதம் முழுவதும் நன்றாக வெந்த பின்பே பகிர்ந்தெடுக்கப்படும். இந்தச் சாதம் நான்காவது அடுக்காகப் போடப்படும்.

மொத்தச் சாதக்குவியலின் நான்கு புறமும் ஒதுக்கப்பட்டுக் குவியலாகக் கலைநயத்துடன் வைக்கப்படும். படைப்புச் சாதத்தின் மேல் தீப்பந்தம் நடப்படும். சாதத்தின்மேல் நீண்ட மாலையைப் போட்டிருப்பர். சாதக்குவியலைச் சுற்றி 21 பானைகளில் 21 கூட்டுகளும் குழம்புகளும் பப்படங்களும் வைக்கப்பட்டிருக்கும்.

இந்தக் காரியங்கள் எல்லாம் பகல் 12 மணிக்குள் முடிந்துவிடும். இந்த நேரத்தில் சாமியாடி தம்புரான் கோவிலிலிருந்து கமுகம் பூவை எடுத்துவருவார். அவர் வந்த சில நிமிடங்களில் சாதம் இரண்டு அல்லது மூன்று பகுதிகளாக வெடிக்க ஆரம்பிக்கும். சாதம் வெடித்தால் சாமி ஊட்டை ஏற்றுக்கொண்டதாக ஐதீகம்.

இந்த படைப்புச் சாதத்திற்குரிய கூட்டுக் குழம்பு வகைகள் நாட்டுக் காய்கறிகளாலே தயாரிக்கப்பட வேண்டும் என்பது நியதி. இருபத்தொரு கூட்டுக் குழம்பில் கூட்டுக்கறி கட்டாயம் இருக்க வேண்டும். பூசணிக்காய்ப் பருப்பு உட்படப் பெரும்பாலான நாட்டுக் காய்கறிகளைச் சேர்த்து வைக்கப்படும் கூட்டுக்கறி அதிக அளவில் வைக்கப்படும்.

கூட்டுக் குழம்பு வகைகளில் காய்கறிகளின் துண்டுகள் பெரிய அளவில் போடப்பட்டிருக்கும். ஊட்டு விழாவில் எல்லோரும் ஒன்றாகச் சாதி வேறுபாடின்றி அமர்ந்து சாப்பிட்டது 2003ஆம் ஆண்டின் சிறப்பம்சம்.

**'தமிழர் உணவு' (ப.ஆ.: பக்தவத்சல பாரதி)**

## என்ன ஆச்சு?

அந்தக் கல்லூரியின் வாசலின் இடதுபுறம் நீண்ட கிளைகளைப் பரத்தியபடி நின்ற அரசமரத்தின் அடியில் கோவில் கொண்டிருந்த விநாயகரிடம் கல்லூரி மாணவர்களுக்குக் கொஞ்சம் பொறாமை உண்டு. காரணம் சின்ன விஷயம்தான். அந்த அரசமரத்தின் நிழலில்தான் மாணவிகள் மாலை நேரத்தில் பேருந்துக்குக் காத்திருப்பார்கள். மாணவிகள் விநாயகரின் பக்கத்தில் நெருங்கி நிற்பார்கள். அவரைத் தொட்டுத் தடவவும் செய்வார்கள்.

இப்படியாக மாணவிகள் விநாயகரிடம் அந்யோன்யமாக இருக்கின்ற நேரத்தில் இரண்டு மாணவர்கள் மாணவிகளிடம் ஏதோ கிண்டலாகப் பேசியதாகப் பணியாளர் ஒருவர் முதல்வரின் அறையில் கொண்டு நிறுத்தினார். மாணவர்கள் செய்த குற்றம் மாணவிகளைப் பார்த்து "பிள்ளையார் கிட்டே நெருங்காதீங்க; பால்குடிச்சிருவாரு" என்று பேசியது தான். அப்போது (1987 செப்டம்பர்) உலகெங்கும் ஊடகங்களில் பிள்ளையார் பால் குடிக்கிறார் என்ற செய்தி பேசப்பட்டது. இந்த நேரத்தில் மாணவன் பேசிய பேச்சுக்கு வேறு அர்த்தம் கற்பிக்கப்பட்டது. முதல்வர் மாணவர்களைக் கண்டித்து அனுப்பிவிட்டார்.

இந்த மாணவர்கள் இதை மனதில் வைத்துக் கொண்டோ என்னவோ கல்லூரிக் கலைவிழாவில் கதைசொல்லும் நிகழ்ச்சியில் கலந்துகொள்ள என்னிடம் அனுமதி கேட்டார்கள். கல்லூரி விழாவில் கலைநிகழ்ச்சிகளை நடத்தும் பொறுப்பில் நான் இருந்தேன். நான் பெருந்தன்மையாக ஒத்துக்கொண்டேன். மாணவர்களின் கற்பனையில் எனக்கு நம்பிக்கை உண்டு. விழாவில் அந்த மாணவர்கள் சொன்ன கதை இது.

விநாயகன் ஒருமுறை பார்வதியிடம் அம்மா எனக்கு வயதாகி விட்டதே; கல்யாணம் பண்ணிவை என்றான். பார்வதி உனக்கு எப்படிப்பட்ட மனைவி வேண்டும் என்று கேட்டாள். விநயாகன் அழகாகவும் நல்ல

அறிவுடையவளாகவும் படிப்பாளியாகவும் உள்ள பெண்தான் எனக்கு வேண்டும் என்றான்.

பார்வதி பெண் தேட ஆரம்பித்தாள். விநாயகன் சொன்ன நிபந்தனைப்படி பெண்ணைத் தேடினாள். அவன் சொன்ன மாதிரியே பெண்களைத் தேர்ந்தெடுத்து விநாயகனிடம் காட்டினாள். பார்வதி காட்டிய எந்தப் பெண்ணும் பிள்ளையாருக்குப் பிடிக்கவில்லை. மறுத்துக்கொண்டே வந்தான். பார்வதி பெண் பார்த்து அலுத்துவிட்டாள். அவளுக்கு வெறுப்பும் கோபமும் வந்தது. இதை எல்லாம் பார்த்துக்கொண்டிருந்த சிவன் "பிரம்மச்சாரியாக இருக்க வேண்டும் என்பது இவனது விதி. பார்வதி நீ சிரமப்பட வேண்டாம். இதை நீ அவனிடம் சொல்லவும் வேண்டாம். பூலோகத்தில் அந்த ஊரில் உள்ள கல்லூரி வாசலில் அரசமரத்தடியில் போய் அமர்ந்து கொள்ளச் சொல். அந்தக் கல்லூரி மாணவிகளில் அவனது நிபந்தனைப் படியான பெண் வந்தால் பார்க்கட்டும் என்று சொல்லிவிடு" என்றான்.

பார்வதி சிவன் சொன்னதை விநாயகனிடம் சொன்னாள். விநாயகன் அந்தக் கல்லூரி வாசலில் அரசமரத்தடியில் அமர்ந்தான். அந்தக் கல்லூரி மாணவிகள் விநாயகனின் பக்கம் நெருங்கிதான் நின்றார்கள். அவன் தினமும் எல்லோரையும் பார்க்கத்தான் செய்தான். அவன் நிபந்தனைக்குரிய பெண்தான் கிடைக்கவில்லை. "நான் அம்மாவைப் படுத்திய பாட்டுக்கு இதுதான் தண்டனை" என்று நொந்துகொண்டான்.

நான் இந்தக் கதையையும் நிகழ்ச்சியையும் எழுத்தாளர் சுந்தர ராமசாமியிடம் சொன்னபோது அவர் "மாணவர்களின் படைப்பாற்றலைத் தண்ணீர்விட்டுத் தடியால் அடிப்பவர்கள் அவர்களின் ஆசிரியர்கள்தாம் என்பதை முந்திய படைப்பாளிகள் சொல்லியிருக்கிறார்கள்" என்றார். இதை நாசுக்காகச் சொன்னார்.

மாணவர்கள், ஆசிரியர்களுக்கு வைக்கும் பட்டப்பெயர்களை ஆராய்ந்தால் போதும். மாணவர்களின் உற்றுநோக்குதல் திறன் எப்படிப்பட்டது என்று தெரியும். இளம் வயதான பேராசிரியர்களின் சபலம் பற்றிய (நாஞ்சில் நாட்டில் இதை அலவறத்தனம், அலப்பறை, அலவலாதி என்பார்கள்) மாணவர்களின்

அவதானிப்பு பட்டப்பெயர்களாக கதைகளாக உவமைகளாக மாறியிருக்கின்றது.

கிரைப்வாட்டர் விளம்பரம் தொலைக்காட்சியில் தொடர்ந்து வந்த சமயம். ஒரு அலப்பறை ஆசிரியரைப் பற்றி மாணவர்கள் பரிமாறிக்கொண்ட கதை பெரிய சிபாரிசின் பேரில் கிடைத்தது.

அந்தக் கல்லூரி மாணவி வீட்டில் தனியறையில் இருந்து அழுதுகொண்டிருந்தாள். அவளது அழுகைச் சத்தத்தைக் கேட்டு பக்கத்து அறையிலிருந்த அவளது அம்மா 'என்ன ஆச்சு' என்று கேட்டுக்கொண்டு வந்தாள். மாணவி அம்மாவிடம் அந்த ஆசிரியர் நடத்திய சில்மிஷத்தைப் பற்றிச் சொன்னாள். அம்மா "நானும் அவர் கிட்டதான் படிச்சேன்; அப்பவும் இப்படித்தான்; அவன் இன்னும் மாறலியா" என்றாள்.

அம்மா பேசுவதைக் கேட்டு அவளது அம்மா வந்தாள். என்ன ஆச்சு என்றாள். மாணவியின் அம்மா விஷயத்தைச் சொன்னாள். அதைக் கேட்ட பாட்டி "அடப்பாவி எனக்கு ஜூனியராத்தான் அவன் படிச்சான்; அப்பவும் இப்படித்தான் மாறிலியா அவன்" என்றாள்.

இவர்களின் சம்பாஷணையைக் கேட்ட கொள்ளுப்பாட்டி தள்ளாடித் தள்ளாடி வந்தாள். "என்ன ஆச்சு" என்றாள். மாணவி விஷயத்தை சொன்னாள். பாட்டி அதைக் கேட்டு "அடப்பாவி! அவன் மூனு நாலு வயசுலே என் மடியிலபோட்டு விளையாட்டுக் காட்டுவேன். அப்பவும் இப்படித்தான் தொடக்கூடாத இடத்துல தொடுவான். அவன் இன்னும் மாறலியா" என்றாள்.

# தமிழகப் பழங்குடிகள்

தமிழகத்தின் பழங்குடிகள் பற்றி ஆரம்ப காலத்தில் எட்கார் தர்ஸ்டனும், எல்.டி. அனந்த கிருஷ்ண அய்யரும், பின்னர் டாக்டர் அய்யப்பன் போன்றோரும் வேறு பலரும் ஆராய்ந்துள்ளனர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் மொழியியல் துறையினர் சிலர் நீலகிரிப் பழங்குடியினரின் மொழிகளைக் குறித்து ஆராய்ந்துள்ளனர்.

**பழங்குடிகள் யார்?**

இதற்குப் பொதுவான சில வரையறைகள் உள்ளன. அவை:

* பழங்குடிகள் பெரும்பாலும் காடு சார்ந்த வாழ்க்கை உடையவர்கள். வெகுஜனத்தொடர்பை முழுதும் அறியாதவர்கள். அடுத்த சமூகத்தைச் சாராமல் சுயச்சார்பு உடையவர்கள்.

* பணப்பொருளாதாரம் பற்றி முழுவதையும் அறியாதவர்கள்.

* தாங்கள் சேகரித்த காட்டுப் பொருட்களைப் பண்டமாற்றாகக் கொடுத்து தங்களுக்குத் தேவை யானவற்றை மட்டுமே பெற்றுக்கொள்பவர்கள்.

* தாங்கள் வாழ்கின்ற சூழ்நிலையில் உள்ள இயற்கை வளத்திலிருந்து பொருட்களைப் பெறுவதற்குரிய மரபு சார்ந்த தொழில்நுட்பத்தை அறிந்தவர்கள்.

* இவர்களுக்கெனத் தனிக் கிளைமொழிகள் உள்ளன. இவை தனிப் பண்பாட்டுடன் கூடியவை. பேச்சு வடிவில் இருப்பவை.

* இவர்களைப் பற்றிய வரலாற்றை எழுத எழுத்துச் சான்றுகளோ வேறு ஆவணங்களோ கிடையா.

* இவர்கள் தம் இனத்தலைவர்களின் ஆணைக்கும் தலைமைக்கும் அதிகார எல்லைக்கும் மட்டுமே அடங்கி வாழும் தன்மை பெற்றிருப்பவர்கள்.

* மாற்றத்துக்குரிய வேட்கையோ அறிகுறியோ பெரிதும் இல்லாதிருப்பர்; அல்லது குறைவாகக் கொண்டிருப்பர்.

* பேசும்மொழி, வழிபாடு, அன்றாட வாழ்விற்குத் தேவையான பொருட்களை ஈட்டும் முறை ஆகியவற்றின் அடிப்படையில் வகைப்பாடு உடையவர்கள்.

**தமிழகப் பழங்குடியினர்**

இந்தியாவில் ஏறத்தாழ 427 பழங்குடியினர் உள்ளனர். தமிழகத்தில் மொத்த மக்கள் தொகையில் பழங்குடியினர் 3.5 சதவிகிதத்தினர் (2001). இவர்கள் நாற்பதுக்கும் மேற்பட்ட இனத்தினராய் உள்ளனர். தமிழகப் பழங்குடிகளாக ஆய்வாளர்களாலும் அரசாங்கத்தாராலும் அடையாளம் காணப்பட்டவர்களாக அரயன், அரநாடன், இருளன், ஊராளி, எரவல்லன், எருக்கலா, கசபர், கணியன், கணியான், கம்மாரா, காட்டு நாயக்கர், காடர், கணிக்காரர், குடியா, குறும்பர் (அலு குறும்பர், பெட்ட குறும்பர், முள்ளுக் குறும்பர்), குறுமான், குறிச்சான், குடிமலைக்குடி, கொண்ட காப்பு, கொண்டாரெட்டி, கொச்சு வேலன், கொரசா, கோத்தர், சோளிகர் உராளி, சோள நாயக்கர், தோடர், பதிமலசார், பல்லியான், பல்லீயன், பளியர், பனியர், புலையர், மகாமலசார், மலஅரையன், மலயகாண்டி, மலகுறவன், மலசார், மலபண்டாரம், மலமலசார், மலையாளி, மலவேடன், மன்னான், முதுவர், முடுவன், மேலக்குடியன் ஆகியோர்களின் பெயர்கள் காணப்படுகின்றன.

பழங்குடிகளின் பெயர் ஒற்றுமை, இவர்களின் உள்பிரிவின் வேறுபாடு ஆகியவற்றின் காரணமாக ஏற்பட்ட குழப்பம் இவர்களின் எண்ணிக்கையை அறியத் தடையாக உள்ளது. கேரளம், கர்நாடகம் ஆகிய மாநிலங்களில் உள்ள பழங்குடிகள் தமிழகக் காடுகளில் இருப்பதும் இவர்கள் சில காரணங்களால் தமிழகம்விட்டு அந்த மாநிலங்களுக்குச் செல்வதும் மறுபடியும் தமிழகத்துக்கு வருவதும் ஆகிய செயல்கள் மக்கள்தொகைக் கணக்கெடுப்பாளர்களுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தி வருகின்றன.

காட்டு நாயக்கர் என்னும் பெயரில் நீலகிரியில் உள்ள பழங்குடியினரையும் தென் தமிழ் மாவட்டங்களில் துப்புரவுத் தொழில் செய்யும் தெலுங்குமொழி

பேசும் காட்டு நாயக்கரையும் ஒன்றாகக் கருதிய குழப்பத்தை அரசு பதிவு செய்துள்ளது. மேலும் பழங்குடியினருக்குரிய சலுகையைப் பெறுவதற்குப் பிற்படுத்தப்பட்ட மக்கள், பழங்குடியினராகச் சான்றிதழ் வாங்கும் செயல் பழங்குடியினரின் எண்ணிக்கையைத் துல்லியமாகக் கணக்கிட முடியாமல் ஆக்கிவிட்டது. குறும்பர் என்னும் பொது இனத்தின் உட்பிரிவுகள் பொது இனத்தில் அடக்கப்பட்டு வந்த குழப்பம் இன்னும் தீரவில்லை.

**தோற்றம்**

பழங்குடிகளான காடர், கோத்தர், தோடர் ஆகியோர் நீக்ரிட்டாய்ட் (Negritoid) இனத்தவராகவும்; மலமலசார், முதுவர் ஆகியோர் ஆஸ்திரேலிய இனத்தவராகவும்; பிற இனத்தவர்கள் திராவிட இனத்தவராகவும் கருதப்படுகின்றனர்.

காட்டுநாயக்கர், முள்ளுக் குறும்பர் ஆகிய இனங்கள் நடுத்தர உயரமுடையவர். பெட்ட குறும்பர், கோத்தர் ஆகியோர் நல்ல உயரமுடையவர்; பிற இனத்தவர் அனைவருமே குட்டையானவர். பொதுவாகப் பழங்குடியினர்களில் பெரும்பான்மையோர் கறுப்பானவர்கள். தோடர்கள் பழுப்பு நிறமுடையவர். பெண்கள் சுருண்ட தலைமுடியுடையவர்.

காட்டு நாயக்கர், கோத்தர், தோடர் ஆகியோர் நீண்ட மூக்கை உடையவர். பிற இனத்தினர் வட்ட முகத்துடன் சப்பை அல்லது தட்டையான மூக்கும் பெரிய நாசித்துவாரங்களும் உடையவர். மலைவேடன் இனத்தினர் நீண்ட தலை உடையவர். கோத்தர்கள் நீலக்கண்களை உடையவர். தோடர்களைத் தொல் மத்தியதரைக்கடல் இனத்தவர் என்றும் சுமேரியர் என்றும் மெசபடோமியர் என்றும் சித்திய இனத்தவர் என்றும் கூறும் கருத்துக்கள் உள்ளன.

**பூர்வீகம்**

பழங்குடிகளின் பூர்வீகம் குறித்து மானிடவியலாளர் தொகுத்தளித்த கருத்துக்கள் வருமாறு:

தமிழகப் பழங்குடிகளில் பலர் சமவெளியில் சாதாரண மக்களாக வாழ்ந்தவர்கள்; ஏதோ காரணத்தால் இவர்கள் துரத்தப்பட்டு மலையின் மேல்பகுதிக்குச் சென்றனர் என்ற கருத்து பொதுவாக உள்ளது (இருளர்). இவர்கள் பல்லவர் என்ற இனத்தின் மரபினர். (காட்டு நாயக்கர், ஜேலு குடும்பர், பெட்ட குறும்பர்)

மதுரைப் பாண்டியர்களின் இறுதி ஆட்சிக்காலத்தில் முஸ்லீம்களாலும் வேறு பகைவர்களாலும் துரத்தப்பட்ட வீரர்களில் சிலர் மலைப்பகுதிகளுக்குச் சென்று நிரந்தரமாகத் தங்கினர். இவர்களில் மதுரை மீனாட்சியை முதுகில் சுமந்தவர் முதுவர் எனப்பட்டனர். அரசியல் காரணங்களால் தென்தமிழகத்திற்கு வந்த சிலர் பாண்டியர்களுக்குக் குற்றேவல் செய்தனர். ஏதோ காரணத்தால் மலைப்பகுதிக்குச் சென்றனர் (காணிக்காரர், புலையர், மலக்குறவன், மலவேடன், மன்னான், பளியர், ஊராளி).

கர்நாடக மலைப்பகுதியிலிருந்து தமிழ்நாட்டு மலைப்பகுதியில் குடியேறியவர் கசபர். கேரளா மாநிலக் காடுகளில் உள்ள பழங்குடியினருடன் மாறுபாடு கொண்டதன் காரணமாக தமிழக மலைகளில் குடியேறியவர் பனியர், தோடர்.

காஞ்சிபுரம் வேளாளக் குடும்பங்களுக்கும் காட்டு வேடர்களுக்கும் பெண் தொடர்பாக ஏற்பட்ட பூசலால் வேளாளர்கள் வேடப்பெண்களை மணந்துகொண்டு மலைப்பகுதியில் குடியேறிய பழங்குடியினரே மலையாளி என்கின்றனர்.

மகாபாரத்தில் அர்ஜுனன் தீர்த்த யாத்திரைக்குச் சென்ற போது அவனை வேடனாக வந்து எதிர்த்த சிவனின் வியர்வையில் பிறந்தவர்கள் முள்ளுக் குறும்பர், மலவேடன். கம்பட்டவராயன் என்ற தெய்வத்தின் வியர்வையில் பிறந்தவர்கள் கோத்தர்.

**மொழி**

பழங்குடிகளின் மொழிகளும் மற்றவர்களிடமிருந்து அவர்களைப் பிரித்துக்காட்டுவன. தோடர்களின் தோடா மொழியும் கோத்தர்களின் கோத்தா

மொழியும் தனி மொழிகளாகும். நீலகிரியில் வாழும் பழங்குடிகளின் மொழிகள் திராவிட மொழிக்குடும்பத்தைத் சார்ந்தவை என்பர்.

அரநாடன், ஏரவல்லன், காணிக்காரர், காடர், கொச்சுவேலன், பனியர், மலக்குறவர், மலவேடன், கணியன் ஆகியோரின் மொழிகள் மலையாளக் கலப்புடைய தமிழ் என்கின்றனர். இவற்றில் சில மலையாளம் அல்லது தமிழின் கிளைமொழிகள் என்றும் கொள்ளுகின்றனர். கசபர், காட்டுநாயக்கர், குறும்பர், அலுகுறும்பர், பெட்ட குறும்பர், முள்ளுக் குறும்பர், குறிச்சான், சோளிகர் ஆகியோரின் மொழிகள் கன்னடக் கலப்புடையவை.

பழங்குடிகள் பேசும் மொழிகளில் மலையாளம், கன்னடம் ஆகியவற்றின் செல்வாக்கு இருந்தாலும் இவற்றில் சில தனி மொழியாகவே அடையாளப்படுத்தப்படுகின்றன (பெட்ட குறும்பரின் மொழி). இருளரின் வில்லியம் பிரிவினர் தமிழ் மொழியையும் மேலநாட்டு இருளர் இருள மொழியையும் பேசுகின்றனர். இருளமொழி தமிழ் மலையாளக் கலப்புடையது. இருளமொழியைத் தமிழின் கிளைமொழி என்கிறார் கமில் சுவலபில். அவர் இது தமிழிலிருந்து வேறுபட்டது என்கிறார். இருளர் மொழியில் படகர், குறும்பர் ஆகியோரின் மொழிச் சொற்களும் கலந்துள்ளன. இருளர் மொழியில் காணப்படும் காரணவினை, ஏவல்வினை போன்ற இலக்கண அமைப்புகளைக் கொண்டு இதைத் தனிமொழியாகவே கொள்ள வேண்டும் என்கிறார் லூயிஸ். இன்றைய நிலையில் இருளமொழியில் தமிழ்க் கலப்பு அதிகரித்துவிட்டது.

எருக்கலா மக்களின் மொழியைத் தமிழின் கிளைமொழியாகவோ தனிமொழியாகவோ கருதலாம். எரவல்லன் இனத்தினர் கேரளத்திற்கும் தமிழகத்திற்கும் அடிக்கடி குடிபெயர்ந்து செல்லுவதால் இவர்களின் பேச்சு மொழியான தமிழில் மலையாளக் கலப்பு அதிகம் உள்ளது. கசபரின் மொழியை ஆய்ந்தவே. சிதம்பரநாதன் இது கன்னடமொழியின் கிளைமொழி என்கிறார். கசவரின் மொழி பிற பழங்குடி மக்களின் மொழிகளிலிருந்து பெருமளவில் வேறுபட்டது.

காட்டுநாயக்கரின் மொழி கன்னட மொழியின் கிளைமொழியாகக் கருதப்படும். இந்த மொழிக்கும் குறும்பர்களின் பிரிவினர் பேசும் மொழிகளுக்கும்

தொடர்புண்டு. இந்த மொழியில் மூக்கின உயிர்கள் உண்டு.

கன்னியாகுமரி மாவட்ட மலைகளில் வாழும் காணிக் காரர்கள் மலையாள மொழியையும் திருநெல்வேலி மாவட்ட மலைகளில் வாழும் காணிக்காரர்கள் தமிழும் பேசுகின்றனர். இரண்டு மொழிகளுமே தமிழின் கிளை மொழிகளாகக் கொள்ளப்படுகின்றன. குமரிப்பகுதி காணிக்காரர்கள் பேசும் மலையாள மொழியில் ங, ஞ ஒலியன்களும் இடப்பெயர் விகுதியும் இல்லை.

கோத்தர்கள் தங்கள் மொழியைக் கோவ்மான்த் என்பர். இவர்களின் மொழி பழந்தமிழுடன் தொடர்புடையது. தமிழிலும் கோத்தர் மொழியிலும் அஃறிணை, உயர்திணைப் பாகுபாடு, மூவகை சுட்டுப்பெயர்கள் உள்ளன. தொடரியல் அடிப்படையில் கோத்தர்மொழி, பழந்தமிழ் ஆகிய இரண்டுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.

தோடர்களின் மொழியும் தமிழுடன் மிகவும் நெருங்கிய தொடர்புடையது என்கிறார்கள். ஒப்பர்ட் அது தெலுங்கின் கிளை மொழி என்பார். ரிவர்ஸ் இது மலையாள மொழியுடன் நெருங்கிய தொடர்புடையது என்பார். இந்த மொழியில் பால் வேறுபாடு கிடையாது. நிகழ்காலத்துக்கும் எதிர்காலத்திற்கும் கூட வேறுபாடில்லை. தோடரின் மொழியில் பல ஆயிரங்கள் வரை எண்ண முடியும் என்பது இதன் சிறப்பு. மன்னான் பழங்குடிகள் தமிழகத்திலும் கேரளத்திலும் தமிழே பேசுகின்றனர். கேரளப் பழங்குடிகளில் தமிழ் பேசுபவர்கள் மன்னான் மட்டுமே.

தமிழ்ப் பழங்குடிகள் தாங்கள் எங்கே வாழ்கின்றார்களோ அங்கே வழக்கில் உள்ள வட்டாரச் சொற்களையும் எடுத்துக் கொள்கின்றனர். பிற மக்களிடம் தமிழ் பேசுகின்றனர்.

**வழிபாடு**

தமிழகப் பழங்குடிகளிடம் இன்று நடைமுறையில் உள்ள வழிபாட்டு நிலைகளை:

* பலகாலமாக இருந்து வரும் பழங்குடி மக்களுக்கே உரிய தெய்வங்கள் / வழிபாடுகள்,

* பிற மக்களால் ஏற்பட்ட தாக்கத்தால் வந்த நாட்டார் தெய்வங்கள்,

* இந்துமதத் தெய்வங்கள் / வழிபாடுகள்,

என வரையறுத்துக் கூறலாம்

இந்த மூன்று வழிபாட்டு முறைகளில் சமவெளியில் நிரந்தரமாகத் தங்கிவிட்ட பழங்குடி மக்களிடம் பழங்குடி வழிபாட்டுக் கூறுகள் பெரிதும் மறைந்துவிட்டன. சமவெளிப் பழங்குடிகளிடம் மாரியம்மன், கருப்பசாமி, சுடலைமாடன், இசக்கி போன்ற நாட்டார் தெய்வங்களின் வழிபாடு பெருகி வருகிறது. இந்த வழிபாடு அண்மைக்காலத்தில் வந்தது.

இந்து சமயத் தெய்வங்களின் வழிபாடு மிக அண்மைக்காலமாகப் பெருகி வருகிறது. பொதுவாகப் பழங்குடி மக்களிடம் சைவத்தை விட வைணவத் தாக்கம் அதிகம். இருளர், எருக்கலா, கசபர், குறிச்சான், சோளிகர் போன்ற பழங்குடியினர், ரங்கசாமி (காரமடை), திருப்பதி ஏழுமலையான் ஆகிய தெய்வங்களை வணங்குகின்றனர். மலையாளிகளும் முதுவர்களும் மட்டுமே தங்களைச் சைவச் சார்புடையவர்களாகக் காட்டிக்கொள்கின்றனர். எருக்கலா, கசபர் ஆகிய மக்களின் கோவில் விழாக்களில் பிராமணப் பூசாரிகள் பங்குகொள்ள ஆரம்பித்துவிட்டனர்.

பழங்குடிகளிடம் சூரிய, சந்திர, நெருப்பு வழிபாடு உண்டு. மிகப்பெரிய மரங்களில் தெய்வம் உறையும் என்று நம்புகின்றனர். பயிர் செழிப்பிற்கும் வேட்டைத்தொழில் சிறக்கவும் குறிப்பிட்ட தெய்வங்கள் வழிபடப்படுகின்றன. இவர்களிடம் தாய்த்தெய்வங்கள் உள்ளன. குறும்பரின் குருபடே தாய் புனிதமான தெய்வமாவாள்.

சில பழங்குகளிடம் தங்களின் இனத்தலைவர்களின் வழிபாடு உள்ளது. இம்மக்களிடம் உருவ வழிபாடு பெரிய அளவில் இல்லை. காணிக்காரர்கள்

நாணல் புல்லை ஈட்டிபோல் குத்தி வைத்து வழிபடுவர். கோத்தர் வில் அம்பை வைத்து வழிபடுவர். பழங்குடிகளின் வழிபாட்டில் பூசாரிகளுக்குத் தனி இடம் உண்டு. இனத்தலைவர்கள் அல்லாமல் வழிபாட்டுத் தலைவர்களாக உள்ள இவர்கள் வைத்தியம் செய்வதும் உண்டு. இப்பூசாரிகள் இறந்து போனவர்களின் ஆவியுடன் பேசுகின்றவர்களாகவும் (பெட்ட குறும்பர்) உள்ளனர். இவர்கள் அருள் வந்து ஆடவும் செய்வர்.

தெய்வம் தொடர்பான தத்துவார்த்தமான சிந்தனை பழங்குடிகளிடம் குறைவு. அலுகுறும்பர் என்ற பழங்குடி மக்களிடம் இது குறித்த சிந்தனை உண்டு. அலுகுறும்பர் ஆன்மா பற்றிய நம்பிக்கை உடையவர். ஒவ்வொரு உடலுக்கும் இரண்டு ஆன்மாக்கள் உள்ளன. ஒன்று பெரியது. இது டோடா உஜூரு எனப்படும். இது உடம்பின் நிழலாக இருக்கும். சிறியது கண்ணுக்குத் தெரியாமல் மறைந்திருக்கும். ஒருவரின் உடலில் உயிர் இருக்கும்போது இரண்டு ஆன்மாக்களும் உடலுடன் சேர்ந்து இருக்கும். அந்த உடல் இறந்தவுடன் இரண்டும் தனித்தனியே பிரிந்துவிடும். ஆனால் சுவர்க்கத்தில் அவை மீண்டும் இணைந்துவிடும்.

ஒருவன் தன்னை மறந்து உறங்கும்போது பெரிய ஆன்மா உடலைவிட்டு வெளியே சென்று உலாவிவிட்டு மறுபடியும் அந்த உடலுக்கு வந்துவிடும். உடலிலிருந்து உயிர் பிரிந்ததும் அந்த உடலின் பெரிய ஆன்மா நேரடியாக யமனிடம் சென்றுவிடும். சிறிய ஆன்மாவோ அந்த உடலைப் புதைத்த இடத்தில் சுற்றி வரும். அந்த உடலுக்குக் கருமாதிச் சடங்குகள் செய்வதால் அது அமைதியடைந்து பெரிய ஆன்மாவை நோக்கிச் சென்று இணையும். இந்த நம்பிக்கை குறித்து வாய்மொழி மரபுகள் அலுகுறும்பரிடம் உள்ளன.

பனியர்கள், பதினேழு உலகங்களில் ஆயிரக்கணக்கான ஆவிகள் தெய்வங்களாக வாழ்கின்றன; இவற்றைப் பகல் கடவுளான சூரியனும் இரவுக் கடவுளான சந்திரனும் கவனிக்கின்றனர். நாம் ஏழாம் உலகில் வாழ்கின்றோம் என நம்புகின்றனர். தெய்வங்களிடம் பயிர் செழிக்க, காட்டுப்பொருள்கள் சேகரிக்க, மழை பெய்ய, நெருப்பு அணைந்து போக, வெப்பு நோய் தீர, நேர்ச்சை செய்யும் பழக்கம் பரவலாக உள்ளது.

## தங்குமிடம்

பழங்குடிகளில் சிலர் மிக அண்மைக் காலம்வரை குகைகளிலும் மரப்பொந்துகளிலும்தான் வாழ்ந்தனர். சோள நாயக்கர் என்ற இனம் 1930களில்கூடக் குகைகளிலும் மரப்பொந்துகளிலும் வாழ்ந்தனர். இரண்டாம் உலகப்போரின் போதுதான் குகைகளில் இருந்த காடர் என்ற இனத்தைக் கண்டுபிடித்தனர்.

தமிழகப் பழங்குடியினர், மலைப்பகுதியில் சரிவான இடங்களில் வீடமைத்துக் கொள்கின்றனர். மூங்கிலாலும் மண்ணாலும் வீடமைத்துப் புல்வேய்ந்து கொள்வர். இருளர் வீட்டிற்கு ஜன்னல் இடுவதில்லை. இது குளிரிலிருந்து தப்புவதற்கு. ஊராளிகள் வீட்டைச் சுற்றித் தோட்டம் போடுகின்றனர். காடர் இனத்தவர் அடிக்கடி இடம்மாறும் இயல்புடையவர். இவரைப் போன்ற பழங்குடியினர் தற்காலிக வீடமைத்துக் கொள்வர். பெட்ட குறும்பரின் வீடு ஒரு அறை உடையதாய் பெரிதாய் இருக்கும். ஆனால் கோத்தர்கள் முன்திண்ணையைச் சமையல் செய்யப் பயன்படுத்துகின்றனர். யானைகளிடமிருந்தும் வேறு கொடிய விலங்குகளிடமிருந்தும் பாதுகாத்துக் கொள்ள பெரிய மரங்களில் வீடு கட்டிக்கொள்ளும் வழக்கம் பொதுவாக உள்ளது. மலசார் போன்ற சில சாதி மக்களிடம் இன்றும் இது வழக்கில் உள்ளது. தற்போது பழங்குடிகளுக்கு வீடு கட்ட கூட்டுறவுச் சங்கங்கள் உதவுகின்றன.

## ஆடை அணிகள்

பழங்குடிகள் சிலர் இரண்டாம் உலகப் போரின் முன்புவரை மரப்பட்டைகளையும் இலை தழைகளையும் உடுத்தியிருந்ததை ஆராய்ச்சியாளர் பதிவுசெய்துள்ளனர். (சோள நாயக்கர், சோளிகர், காட்டு நாயக்கர்)

இன்று ஆண்கள் வேட்டி சட்டை அணியும் வழக்கம் பரவலாகிவிட்டது. என்றாலும் தலையில் முண்டாசும் இடையில் கோவணத்துடனும் தோட்ட வேலை செய்யும் ஊராளிகளை இன்றும் பார்க்க முடியும். பெண்கள் மார்பை

மறைத்து ஆடை அணியும் வழக்கம் அண்மைக்காலத்தில் வந்ததுதான். இன்று பெரும்பாலான பழங்குடிப் பெண்கள் பிற இனப் பெண்களைப் போல் ஆடை அணிகின்றனர்.

பழங்குடிகள் வெள்ளியால் ஆன காப்பு, பித்தளை மாலை, பாசி மணிகளை அணியும் வழக்கம் மறைந்து வருகிறது. தலையைச் சீவாமல் பரட்டையாய் இருந்த எருக்கலாப் பெண்கள் எண்ணெய் தேய்த்துச் சீவ ஆரம்பித்துவிட்டனர்.

**உணவு முதலியன**

பழங்குடிகளின் காட்டு வாழ்க்கை மாற ஆரம்பித்த பின்னர் உணவுப் பழக்கத்திலும் மாற்றம் வந்துவிட்டது. சமவெளியில் இருக்கும் பழங்குடியினருக்கும் மலைமேலிருக்கும் பழங்குடியினருக்கும் உள்ள வேறுபாடுகளில் உணவுப் பழக்கம் முக்கியமானது. பழங்குடிகள் எல்லோரும் எல்லா மாமிசங்களையும் சாப்பிட்டாலும் எருமை, பன்றி போன்றவற்றை முழுக்கவும் ஒதுக்கும் இனங்களும் உள்ளன. (ஊராளி, காட்டு நாயக்கர், எருக்கலா, பளியர், அலுகுறும்பர், பெட்ட குறும்பர், கசபர்) ஊராளிகளும் இருளரும் எலியை விரும்பிச் சாப்பிடுவர். பளியரும் முதுவரும் கருங்குரங்கின் மாமிசத்தையும், இரத்தத்தையும் நோய் எதிர்ப்புச் சக்தியுடையதாக எண்ணுகின்றனர்.

இவர்கள் காட்டுக் கிழங்குகளில் உண்பதற்குரியவற்றை அடையாளம் கண்டுள்ளனர். பலாப்பழம், பலாக்காய் இரண்டுமே ஒருவேளை உணவு. எருக்கலா இனத்தவர் பால், முட்டை போன்றவற்றைப் பெரிதும் பயன்படுத்தவில்லை. வாழைக்காயைச் சுட்டு, தேனுடன் கலந்து உண்ணும் வழக்கம் எருவல்லாவிடம் உண்டு. மூங்கிலரிசியில் தேன் கலந்து சாப்பிடுவது காட்டு நாயக்கரின் வழக்கம்.

தேனை மூங்கில் குழாய்களில் பாதுகாப்பது பொதுவான வழக்கம். காட்டு நாயக்கர் இறைச்சியையும் மூங்கில் குழலில் வைக்கின்றனர். மிக அண்மைக்காலமாக ராகி, சாமை, கேழ்வரகு, சோளம் போன்றவற்றை உண்கின்றனர். பெரும்பாலானவர்கள் கேழ்வரகுக் கஞ்சி அல்லது கூழை

விரும்புகின்றனர். ஊராளிகள் பச்சைப்பாலை விரும்பிக் குடிப்பர். பழங்குடிகளில் பலர் இரண்டு வேளையே உண்ணுகின்றனர்.

இருளர் ஞாயிற்றுக்கிழமையில் குளிப்பதை வழக்கமாய்க் கொண்டுள்ளனர். ஊராளிகள் விடுமுறை நாட்களில் சூடான நீரில் குளிப்பர். இவர்களிடம் தலைக்கு எண்ணெய் தேய்க்கும் வழக்கம் அண்மையில் வந்ததுதான். விருந்தினர் வந்தால் அவர்களை உபசரித்துத் தானியங்கள் கொடுத்து அனுப்பும் வழக்கம் இருளரிடம் உண்டு.

நெருப்பை உண்டாக்கும் கல், உருக்குத் துண்டு, பன்னாடை ஆகியவற்றை மூங்கில் குழலில் வைத்துத் தோளில் தொங்கவிட்டுக் கொண்டு காட்டில் பயணிக்கும் பழங்குடியினர் இன்றும் உள்ளனர். வீட்டில் விளக்கேற்றக் கூடாது என்ற நம்பிக்கை காட்டு நாயக்கரிடம் உண்டு. இவர்கள் கொள்ளிக்கட்டையை வீட்டின் அருகில் வைத்திருப்பர்.

**தொழில்**

மலையின் உயர்ந்த பகுதியில் உள்ள பழங்குடிகள் காட்டுப் பொருள் சேகரிப்பு, வேட்டையாடல் போன்ற தொழில்களைச் செய்தனர். காடுகளில் உள்ள கடுக்காய், தேன், வெடிமருந்து செய்ய உதவும் பசம் போன்ற பொருட்களைச் சேகரித்துக் கொடுத்துத் தமக்குரிய பொருட்களை வாங்கிவந்தனர். இந்த வழக்கம் மாறி வருகிறது.

காட்டுப் பொருள்களை வாங்க கூட்டுறவுச் சங்கங்கள் வந்தபின்பு பழங்குடிகளின் வாழ்க்கைத் தரம் மாறியிருக்கிறது. என்றாலும் ஊராளிகள் கூலி வேலையை இரண்டாம் பட்சமாகக் கொள்கின்றனர். காட்டுவிலங்குகளைக் கணக்கெடுக்க அரசு பெட்ட குறும்பரைப் பயன்படுத்துகின்றது. காடர், காணிக்காரர் போன்றோர் தேன் சேகரிப்பில் வல்லவர். பளியர் கண்ணிவைத்துப் பறவை பிடிப்பர். மலையாளிகள் விவசாயத் தொழில் தொடர்புடையவர். இவர்களிடம் உழவுத் தொழில் தொடர்பான சொற்கள் உள்ளன. முள்ளுகுறும்பர் ஏரைப் பயன்படுத்துவதையும் மரம் அறுப்பதையும் அறிந்திருக்கின்றனர்.

பழங்குடிப் பெண்கள் தண்ணீரை விஷமாக்கி மீன் பிடிக்கும் வழக்கத்தைப் பொதுவாகக் கொண்டிருந்தனர். இது இப்போது இல்லை. அரசு பழங்குடிகளுக்குக் கொடுத்த நிலத்தைப் பிற இன முதலாளிகள் குத்தகைக்கும் எடுத்து வருகின்றனர் (காணிக்காரர்கள்). இதனால் பழங்குடிகள் மீண்டும் காட்டு வாழ்க்கைக்கோ கூலி வேலைக்கோ செல்ல வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டு வருகின்றனர். தன்னார்வ நிறுவனங்கள் இதை எதிர்த்துக் குரல் கொடுத்து வருகின்றன.

1975 வரை தோட்ட முதலாளிகளிடம் கொத்தடிமையாக இருந்த பழங்குடிகள் விடுதலை பெற்றுவிட்டனர். கோத்தர்கள் தற்காலப் பூச்சி கொல்லும் மருந்தைப் பயன்படுத்தும் அளவுக்கு வளர்ந்துவிட்டனர்.

**வாய்மொழி மரபு**

பழங்குடி மக்களிடம் கணிசமான அளவு வாய்மொழி மரபு உண்டு. இருளரின் பாடல்கள் மரம், செடி, கொடிகளை வருணிக்கின்றன. இவர்களின் இசைப்பாடல்களைப் பேய்ப்பாட்டு, திணைப்பாட்டு என்பர். இருளப் பெண்கள் வயல் அறுப்பு சமயங்களில் பாடுவது தென்பாட்டு என்றும் ஆண்கள் தேன் எடுக்கச் செல்லும்போது பாடப்படுவது வீரப்பாட்டு என்றும் வழிபாட்டின் போது பாடப்படுவது பேய்ப்பாட்டு என்றும் கூறப்படும். இருளரின் ஒப்பாரிப் பாடல் நீண்ட வடிவிலானது. அது சாவுப்பாட்டு எனப்படும். இவர்களின் தாலாட்டுப் பாடலில் ஜோ ஜோ என்ற தொடர் அடிக்கடி வரும். ('ஜோ' என்றால் 'உறங்கு' என்று பொருள்)

இருளர்களிடம் வாய்மொழிக்கதைகள் நிறையவே உள்ளன. மாமனார் மருமகள் உடல் உறவு, சித்தி கொடுமை, கணவனின் தம்பியை அண்ணி உடல் உறவுக்கழைப்பது போன்ற செய்திகள் குறித்த கதைகள் உள்ளன.

இருளரிடம் பில்லி சூனிய நம்பிக்கை மிகுதியாக உண்டு. இது தொடர்பான கதைகளும் உள்ளன. விடுகதைகளிலும் பழமொழிகளிலும் பாலுணர்வு தொடர்பான செய்திகள் பேசப்படுகின்றன. வயதானவர்கள் உடலுறவு அனுபவம்

குறித்த வாய்மொழி மரபுச் செய்திகளை இளைஞர்களுக்குச் சொல்லும் வழக்கம் இருந்தது.

**இசை நடனம்**

இருளர்கள் தெய்வங்களின் விழாக்கள், திருமணம், இறப்புச் சடங்கு ஆகியவற்றில் நடனம் ஆடுகின்றனர். நீலகிரி மாவட்டம் கொணிக்கரையில் வாழும் இருளர் தைப்பொங்கல் விழாவில் கரடி, குரங்கு, புலி போன்ற விலங்குகளைப்போல் ஒப்பனை புனைந்து ஆடுவர். இருளரில் ஆண் பெண் இருவரும் பங்கு பெற்றாலும் தனித்தனியாகவே ஆடுவர். இவர்களின் ஆட்டத்தை அது நிகழ்த்தப்படும் தன்மையின் அடிப்படையில் நிமிர்ந்தாடுதல், குனிந்தாடுதல், சுழன்றாடுதல் என வகைப்படுத்துகின்றனர்.

கோத்தர்களின் ஆட்டங்களில் 'கொய்' என்ற இசைக்கருவியும் கால்மணிக் கச்சம், சால்ரா, வட்டமணித் தட்டு ஆகியனவும் பின்னணியாக ஒலிக்கும். இவர்கள் 'மண்ட் பேர் கிச் மாராப், புல்கை குமாஸ், ஒடைக்கட்முண்ட்' ஆகிய ஆடைகளை அணிந்து கொண்டு ஆடுகின்றனர். இவர்களின் பார்வையாளர்களாகப் படுகர்கள் வருகின்றனர். கோத்தர்களின் ஆட்டங்கள் கால்கூஸ் ஆட், திருகனாட், பீப் பாலாட், கொய்னாட் ஆகியனவாம்.

தோடர் ஆண்கள் கைத்தடி ஆட்டம், கை கோத்தாடும் ஆட்டம் ஆகியவற்றையும்; பெண்கள் கும்மி ஆட்டம், கைகோத்தாடும் ஆட்டமும் ஆடுகின்றனர். தோடர்களின் ஆட்டங்களில் தலைதாழ்த்தும் செயல் பரலாக உள்ளது. தோடர் ஆட்டங்களில் இசைக்கருவிகள் பெரும்பாலும் பயன்படுத்தப் படுவதில்லை. இவர்களின் பாட்டுக்களில் பல்வகை மெட்டுக்கள் உள்ளன.

பழங்குடி மக்களின் வாழ்க்கைச் சுழற்சிச் சடங்குகளிலும் தெய்வ வழிபாட்டிலும் பயிர் விளைச்சலின் போதும் வேட்டைக்குச் செல்லும்போதும் மகிழ்ச்சியுடன் கூட்டமாய் இருக்கும்போதும் பாடுவதும் இசைக்கருவிகளை இசைப்பதும், ஆடுவதும் சாதாரணமாய் நிகழ்கிறது.

இருளர்கள் ஏழு இசைக்கருவிகளை வேறுவேறு நிகழ்ச்சிகளில் பயன்படுத்துகின்றனர். புகிரி என்பது மூங்கிலால் செய்யப்பட்ட குழலிசைக் கருவி. 50 செ.மீ. நீளமுடையது. ஆறு துளைகளை உடையது. 'பிரிஜி' என்பது சிறிய புல்லாங்குழல். இது 35 செ.மீ. நீளமுடையது; ஆறு பெரிய துளைகளை உடையது. 'நாகுகுரா' என்பது பாம்பாட்டியிடம் உள்ளது போன்ற மகுடி. கடுமி எருமைத் தோல் போர்த்த மண்குடம். தென்பாண்டி தமிழகத்தில் உள்ள தப்பட்டையும் இவர்களிடம் உண்டு.

புலையர் இனத்திடம் பெருந்தலை, சிறுதலை என இரண்டு இசைக்கருவிகள் உள்ளன. இவர்கள் பிற பழங்குடிகளின் விழாக்களில் இசைக்கருவி இசைப்பதுண்டு. பழங்குடிகளில் புலையர் இசையறிவு உடையவர்கள். இவர்களின் வாய்மொழிப் பாடல்களில் கானமயில் தாளம், கானக்கோழி தாளம், கண்டாரகோளி தாளம் என்ற தாளங்கள் உண்டு. இவர்கள் சத்தக்குழல் என்ற இசைக்கருவியின்வழி 32 தாளங்களை இசைப்பர்.

**மருத்துவம்**

பழங்குடி மக்களில் சிலருக்கு மரபுவழி மருத்துவமும் பச்சிலை மூலிகை பற்றியும் தெரிந்திருக்கிறது. காடர்கள் குழந்தை பெறாமல் இருக்கவும் குழந்தை பெறுவதற்கும் உரிய மூலிகைகளை அறிந்திருக்கின்றனர்.

தென்னா வேர், வெட்டி வேர், வெங்கா வேர் ஆகிய செடிகளின் வேரைக் காயவைத்துப் பொடித்து அதனுடன் மான் கொம்பின் பொடியையும் சேர்த்து நல்லகா என்ற மாத்திரையைத் தயார் செய்து தீட்டான பெண்களுக்கு 9 — 10 நாட்களுக்குக் கொடுப்பர். இதைச் சாப்பிடும்போது புளி, எலுமிச்சை சேர்க்கக் கூடாது. இந்த மருந்து கர்ப்பத்தைத் தற்காலிகமாக நிறுத்தும். நல்லகா மாத்திரை தின்றவருக்கு மீண்டும் குழந்தை பெற வேண்டுமென்றால் ஒரு கஷாயம் கொடுக்கின்றனர். வேளி, தான்னி, பூவம் ஆகிய மூன்று செடிகளின் வேரை, இரண்டு லிட்டர் தண்ணீரில் கொதிக்க வைத்து 1/16 ஆக எடுத்து பெண்ணுக்கு வெறும் வயிற்றில் 3 நாட்கள் கொடுத்தால் போதும். அவள் குழந்தை பெறத் தயாராகி விடுவாள். காடர் மக்களிடம்

மகப்பேற்றின்போது வலியில்லாமல் குழந்தை பிறப்பதற்குரிய மருந்து உண்டு. இவ்வினப் பெண்களில் சிலர் குந்தி இருந்த நிலையிலேயே குழந்தை பெறுவர்.

## பஞ்சாயத்துத் தலைவன்

பழங்குடிகளின் குடியிருப்பில் இருக்கும் தலைவன், மூப்பன் (இருளர்), காரணவர் (காட்டுநாயக்கர்), மூட்டுக்காணி (காணிக்காரன்), பூரணவன் (முள்ளுக் குறும்பன்) எனப் பல பெயர்களில் அழைக்கப்படுவான். இவன் வன்புணர்ச்சி தொடர்பான பூசல், விவாகரத்து, பூசாரியை நியமித்தல், காட்டுப் பொருள் சேகரிப்பின்போது ஏற்படும் தகராறு, கூட்டுக் குடும்ப விரிசல் போன்றவற்றை விசாரிப்பான். இதில் குற்றஞ்சாட்டப்பட்டவனுக்கு அபராதம் விதிப்பதும் உண்டு. பெரிய குற்றங்களுக்குக் குற்றவாளியைக் குனிய வைத்து முதுகில் கல் ஏற்றி வைப்பதும் உண்டு; அடி கொடுப்பதுமுண்டு (மன்னான்).

பஞ்சாயத்துத் தலைவனான மூப்பனுக்குத் துணையாக சில உறுப்பினர்கள் இருப்பதுண்டு. மலசார் இன மூப்பனுக்குத் தலையாரி, கொண்டாரி என்பவர்கள் உதவியாக இருப்பார்கள். பழியர்களின் தலைவனான காணிக்காரன் அல்லது விட்டுக்காணிக்கு வலிய இளந்தாரி, மறையன் தண்டக்காரன் ஆகியோர் உதவியாக இருப்பர்.

பெரும்பாலும் பழங்குடிகளின் பஞ்சாயத்தில் ஐந்து உறுப்பினர்கள் இருப்பார்கள். மூப்பன், தான் சார்ந்த குடிகளின் வாழக்கை வட்டச் சடங்குகளை நடத்தி வைக்க வேண்டும். காட்டு நாய்க்கர் இனத்தில் ஜென்மதேவன் என்ற இனத் தலைவனும் ஜென்மத்தி என்ற அவன் மனைவியும் வாழ்க்கை வட்டச் சடங்குகளை நடத்துகின்றனர்.

இந்தப் பழைய வழக்கம் மாறி வருகிறது. தற்போது சில பழங்குடிகளின் பஞ்சாயத்துத் தலைவர்களின் இடத்தில் காட்டிலாகா அதிகாரிகள் வந்துவிட்டனர். இவர்களே இந்த இனங்களின் பிரச்சனைகளைத் தீர்க்கின்றனர் (மகாமலசார்).

## பிறப்புச் —சடங்குகள்

பழங்குடிகளிடம் பிறப்பு, இறப்பு, பெண் பூப்படைதல், வீட்டு விலக்காதல் எல்லாம் தீட்டாகவே கருதப்படுகின்றன. பிறப்புத் தீட்டு 7 முதல் 15 நாட்கள் வரை இருக்கும். கசபருக்குப் பிறப்புத் தீட்டு ஏழு நாட்கள். ஊர்ப் பூசாரியே குழந்தைகளுக்குப் பெயரிடுவான். காட்டு நாயக்கர், குழந்தை பிறந்த ஏழு மாதங்களுக்குப் பின்பே பெயரிடுவர். தமிழ்ப் பழங்குடிகளிடம் மலை, நதி, மலர்களின் பெயர்களை இடும் வழக்கம் உண்டு.

கோத்தர் பெண்கள் தன் ஊருக்கு வெளியே உள்ள குடிசையில்தான் குழந்தை பெற வேண்டும். 15 நாட்கள் கழித்துத்தான் வீட்டிற்குத் திரும்பலாம். பனியர் குழந்தையைத் தொட்டிலில் படுக்க வைப்பதில்லை. முதுவர், பெண் குழந்தை பிறந்த மூன்றாம் நாள் ஓடும் ஆற்று நீரில் கட்டாயம் குளிப்பர்.

தோடர் இனத்தில் பிறப்பு தொடர்பான சடங்குகள் உள்ளன. பெண் கர்ப்பமடைந்த ஏழாம் மாதத்தில் வில்லம்பு சடங்கு நடத்த வேண்டும். இதை இப்பெண்ணின் கணவனே நடத்துவான். இதை நடத்துபவன் அப்பெண்ணின் குழந்தைக்குத் தந்தையாகக் கருதப்படுவான்.

பெண் பூப்படைதல் ஏழு நாள் தீட்டாகவும் பன்னிரெண்டு நாள் தீட்டாகவும் கொள்ளப்படும் வழக்கம் தமிழ்ப் பழங்குடியினரிடம் உண்டு. பெண் பருவமடைந்ததும் தனிக்குடிசையில் இருத்தி வைக்கும் வழக்கம் பொதுவானது. தீட்டான பெண் குளிக்கும்போது ஆகாயத்தில் பறக்கும் கழுகைப் பார்க்கக்கூடாது (ஊராளி), வீட்டிற்கு விலக்கானவள் காட்டிற்குச் செல்லக்கூடாது (மலபண்டாரம்), அவள் ஊருக்கு வெளியே இருக்க வேண்டும் (கோத்தர்) என்பன போன்ற நம்பிக்கைகள் பழங்குடிகளிடம் உள்ளன. சில மறைந்து வருகின்றன.

### திருமணம்

தமிழ்ப் பழங்குடிகளிடம் உள்ள முந்தைய திருமண முறையை நான்கு வகைகளாகப் பகுக்கலாம். அவை:

* ஆணும் பெண்ணும் விருப்பப்பட்டு காட்டிற்குள் சென்று இரண்டு மூன்று நாட்கள் இருந்துவிட்டு வந்தால் சமூகம் அவர்களைக் கணவன் மனைவியாக ஏற்றுக் கொள்ளும்.

* பெண் வீட்டில் மாப்பிள்ளை தங்கி மாமனாருக்குச் சேவை செய்து தன் ஊதியத்தை மாமனார் வீட்டிலே கொடுத்துப் பின் அந்தப் பெண்ணை மணம் முடிப்பது.

* பெண்ணைக் கடத்திச் சென்று மணம் முடிப்பது.

* பெற்றோர்கள் பேசி முடித்து மணம் செய்வது.

இந்த நான்கு முறைகளில் விருப்பப்பட்டு மணம் செய்யும் முறையும் இரண்டு வீட்டாரும் பேசி முடித்து மணப்பதும் தான் இன்று நடைமுறையில் உள்ளன. பழங்குடி மக்களிடம் மாப்பிள்ளைக்கு ஸ்ரீதனம் கொடுக்கும் வழக்கம் இல்லை. எருக்கலா என்ற இனத்தில் மாப்பிள்ளை, பெண் வீட்டாருக்குச் ஸ்ரீதனம் கொடுக்க வேண்டும் என்ற வழக்கு உள்ளது. விதவைகள் மறுமணம் செய்வதும் எளிதாக விவாகரத்து பெறுவதும் இவர்களிடம் வழக்கில் உள்ளன. முந்திய காலங்களில் குழந்தை மணம் வழக்கில் இருந்தது.

இன்று பெரும்பாலான பழங்குடிகளிடம் திருமண வயது பெண்ணுக்கு 16 — 20, ஆணுக்கு 18 — 29 என்ற அளவில் உள்ளது. திருமணத்தில் இனத்தலைவன், ஊர்ப் பூசாரி ஆகியோர் முக்கியப் பங்கு வகிப்பர். ஒரே கால்வழியில் அல்லது ஊரில் மணம் செய்துகொள்ளுவது பொதுவாக வழக்கில் இல்லை. எருக்கலா இனத்தினர் திருமணத்தைச் சேர்த்துக் கொள்ளுதல் (சேர்ந்துகோம்) என்கின்றனர்.

ஒரு பெண் பல ஆண்களை மணப்பதும் (தோடர், ஊராளி); ஒரு ஆண் பல பெண்களை மணப்பதும் முன்பு வழக்கில் இருந்தது.

பெட்ட குறும்பர் இனத்தில் திருமணத்திற்கு முந்தியநாள் தாய்மாமா பெண்ணுக்குத் தாலி கட்டுவார். மாப்பிள்ளை தாலி கட்டும் வழக்கம்

இவர்களிடம் இல்லை. இந்த இனத்தில் மணக்களின் முதலிரவு ஊருக்குப் பொதுவான குடிசையில் நிகழும். மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டிற்குத் திருமணம் பேசுவதற்கு ஐந்து முறை செல்வதும் நான்கு முறை திருமணம் தவிர பிற விஷயங்களைப் பேசிவிட்டு வருவதுமான சம்பிரதாய முறை சில இனங்களிடம் இருந்தது. (பெட்ட குறும்பர், இருளுர், மலசார்).

மகாமலசார் திருமணத்திற்குரிய நாள் புதன் அல்லது திங்கள் என்பர். மன்னான் இனத்தவர் கார்த்திகை மாத இறுதி நிறைவு விழாவில் பெரும்பாலான கல்யாணங்களை நடத்துவர். கோத்தர் தங்கள் ஊரில் நடக்கும் விழாக்களில் விதவைகளுக்கும் விவாகரத்து செய்தவர்களுக்கும் திருமணம் நடத்துவர். இருளரின் திருமண விழாவில் பெண் வீட்டு ஜாத்திக்கும் (இனத்தலைவர்) மாப்பிள்ளை வீட்டு ஜாத்திக்கும் முக்கிய இடம் உண்டு. தோடரின் உள்பிரிவுகளில் பிற மணக்கொள்கை முக்கியமாகப் பார்க்கப்படுகிறது. இருளரிடம் பருவமடையாத பெண்ணுடன் இளைஞன் உடல் உறவு கொள்ளும் வழக்கம் முன்பு இருந்தது. ஆனால் அவன் அவளைத் திருமணம் செய்யவேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

**இறப்பு**

தமிழகப் பழங்குடிகளிடம் இறந்தவரைப் புதைப்பது, எரிப்பது ஆகிய இருமுறைகளும் உள்ளன. முந்திய காலங்களில் பிணத்தின்மேல் இலைதழைகளை மூடி பாறையிடுக்குகளில் வைப்பது (காட்டுநாயக்கர், ஆலு குறும்பர்), பிணத்தை இலைகளால் மூடி பெரிய குன்றிலிருந்து கீழே உருட்டிவிடுவது (புலையர்) என்னும் வழக்கம் இருந்தது. இருளர் பிணத்தைக் குறிப்பிட்ட இடத்தில்தான் புதைத்தனர். இப்போது ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனி புதைகுழி இடங்கள் உள்ளன. இது கொப்பே எனப்படும். இருளன் எந்த இடத்தில் இருந்தாலும் அவனது பிணம் அவனுக்கு ஒதுக்கப்பட்ட கொப்பேக்குக் கொண்டு செல்ல வேண்டும் என்பது வழக்காறு.

இறந்தவர்களுடன் அவர்களுக்குரிய பொருட்களைப் புதைக்கும் வழக்கம் சில இனங்களிடம் உண்டு (இருளர், காட்டு நாயக்கர்), கோத்தர் பிணத்தை அடக்கம் செய்யும்போது இசைக்கருவிகளை இயக்குவர். பளியர்

பிணத்தின்மேல் மக்கள் சுண்ணாம்பு, சாணி போன்றவற்றைக் கலக்கித் தெளித்துப் புதைப்பர்.

தமிழ்ப் பழங்குடிகளிடம் இறப்பு தொடர்பாக நிகழும் சடங்குகளை மூன்று நிலையில் அடக்கலாம். முதலில் பிணத்தைப் புதைக்கும் நிகழ்ச்சி. இரண்டாவது ஐந்து – ஆறு நாள் நிகழும் சடங்கு. மூன்றாம் நிகழ்ச்சி இறந்த ஒரு வருடம் முடிந்ததும் நடப்பது. இறப்புச் சடங்குகளில் இனத்தலைவருக்கு முக்கிய இடம் உண்டு.

இறந்தவர், ஆவியாக உலாவுவார் என்ற நம்பிக்கை பழங்குடிகளிடம் இருந்தாலும் ஆவி குறித்த தீவிர சிந்தனை இல்லை. ஆனால் ஆவியை வரவழைக்க முடியும் என இவர்கள் நம்புகின்றனர். பளியர் இறப்புச் சடங்கில் மூப்பன் பிணக்குவியலின் அருகே கேழ்வரகுக் கஞ்சியை வைத்துக்கொண்டு ஆவியை அழைப்பார். ஆவி காகத்தின் வடிவில் வரும் என்ற நம்பிக்கை சிலரிடம் உண்டு (புலையர், பனியர், மலமலசார்).

**பழங்குடிகள் சிலர்**

அரநாடன் என்னும் பழங்குடியினர் ஆனைமலையின் (கோவை) உயரமான இடங்களில் வாழ்கின்றனர். பாம்பிலிருந்து எண்ணெய் தயாரிக்கும் நுட்பம் தெரிந்ததால் இவர்கள் அரநாடன் எனப் பெயர் பெற்றனர் என்பர்.

இருளர் தமிழகப் பழங்குடிகளின் எண்ணிக்கையில் இரண்டாம் இடத்தில் உள்ளவர். இவர்கள் திருவண்ணாமலை, விழுப்புரம், காஞ்சிபுரம், சேலம், நீலகிரி, கடலூர், கோவை ஆகிய மாவட்டங்களில் வாழ்கின்றனர். இருளர், இருளிகர் என வழங்கப்படுகின்றனர். இருளர் என்ற பெயர் இருட்டு (கறுப்பு) அல்லது வேட்டைக்காரர் என்ற சொல்லிலிருந்து வந்திருக்கலாம் என்பர். இவர்கள் கேரளம், கர்நாடகம் ஆகிய மாநிலங்களிலும் வாழ்கின்றனர்.

இருளர் வாழ்கின்ற இடத்துக்குத் தக்க பெயர் பெறுகின்றனர். கோவை ஆனைமலையில் உள்ளவர் வட்டக்காடு இருளர் என்றும்; மேட்டுப்பாளையத்தில் உள்ளவர் இருளப் பள்ளர் என்றும் குறிக்கப்படுவர்.

நீலகிரி கோத்தரிகிரியில் உள்ளவர் மேலநாட்டு இருளர் என்றும்; பிற 33 ஊர்களில் உள்ளவர்கள் மலைதேச இருளர் என்றும்; கூனூர் பகுதியில் உள்ளவர்கள் வேட்டக்காடரு என்றும் குறிப்பிடப்படுகின்றனர். காஞ்சிபுரத்தில் இவர்களைப் பாம்பு நிறக்காரன் என்பர். ஈரோடு சத்தியமங்கலம் பகுதியில் இருள ஊராளி என்பர். இருளரை முதுவர் என்பவரின் பிரிவினராகக் கசவர் கூறுவர்.

திருவண்ணாமலை மாவட்டம், செஞ்சி மலைப் பகுதியில் வாழ்கின்ற வில்லிகள் என்பவரை இருளர் என்றும் கூறும் வழக்கு உண்டு. இவர் பழங்குடி இருளரிலிருந்து வேறானவர்கள். இவர்களிடம் பழங்குடித்தன்மை இல்லை. இருளரில் மேலநாடு இருளர் இருளமொழி பேசுகின்றனர். வில்லியம் பிரிவினர் தமிழ் பேசுவர்.

இருளர் கொல்லிமலைப் பழங்குடிகளால் நீலகிரிக்குத் துரத்தப்பட்டவர் என்றும் கோவை மாவட்டச் சமவெளிப்பகுதியில் இருந்து துரத்தப்பட்டவர் என்றும் இவர்களின் தலைவன் கோயன் (இவன் பெயரால் கோயம்புத்தூர் வந்ததாம்) நீலகிரிக்குச் சென்றான் என்றும் பல்வேறு செய்திகள் உள்ளன. காஞ்சி புரம் இருளர் கொங்குநாட்டிலிருந்து துரத்தப்பட்டவர் என்ற வாய்மொழி மரபு காஞ்சிபுரம் மாவட்டத்தில் உண்டு.

இருளரின் தனிப்பண்பு எலியை விரும்பி உண்பவர் என்பதுதான். இவர்கள் பாம்பு பிடிப்பதிலும் வல்லவர். தற்போது இந்தப் பழக்கம் குறைந்து வருகிறது. இவர்கள் இப்போது அரிசிச் சாதத்திற்குப் பெருமளவில் மாறி வருகின்றனர். இருளரிடம் மொழி, சாதிப்பண்பு, இருக்குமிடம் ஆகியவற்றின் அடிப்படையில் 14 கிளைகள் உள்ளன. சமவெளியில் இருக்கின்ற இருளரிடம் (காஞ்சிபுரம் மாவட்டம்) பெரிய மாற்றம் வரவில்லை. இன்றும் இவர்களிடமிருந்து கோவணமும் முண்டாசும் போகவில்லை.

ஊராளி என்பவர் நீலகிரி, சத்தியமங்கலம் பகுதியில் உள்ளனர். இவர்கள் அரையன், பில்லியா என்னும் இரண்டு சகோதரர்களின் வம்சத்தினர் என்றும் இவ்விருவரும் பாண்டிய அரசர்களுக்குக் குடை பிடித்தவர்கள் என்பதும்

வாய்மொழி மரபு. எட்கார் தர்ஸ்டனும் இவர்கள் மதுரையைச் சார்ந்த முத்துராஜா என்னும் வீரமரபினரின் வம்சத்தினர் என்கிறார்.

ஊராளிகள் மாமிசத்தில் பச்சைமிளகை மட்டுமே பயன் படுத்துகின்றனர்; மசாலாவின் பயன்பாடு இவர்களுக்குத் தெரியாது. அரிசிச்சோறும் இவர்களுக்கு அபூர்வம்தான். இவர்கள் காட்டுப்பொருட்களைச் சேகரித்துக் கூட்டுறவுச் சங்கங்களில் கொடுத்துப் பணம் பெறுகின்றனர்.

தமிழகத்தில் குறவர்கள் என்று சொல்லப்படும் சாதி பல பிரிவுகளை உடையது. இச்சாதியினர் குன்றக்குறவர், பூங்குறவர், காக்குறவர், பாண்டிக்குறவர், உப்புக்குறவர் போன்ற பலவகையினர் உள்ளனர். நரிக்குறவர் இவர்களிடமிருந்து வேறுபட்டவர்.

எருக்கலா என்ற இனம் குறவர் பிரிவைச் சார்ந்ததுதான். காஞ்சிபுரம் மாவட்டம், செங்கல்பட்டு பகுதியில் வாழ்கின்ற இவர்களின் மொழியைத் தனிமொழியாகவே கொள்கின்றனர். இது மலையாள மொழி இலக்கணத்துடன் தொடர்புடையது.

இவர்களுக்குப் பன்றி இறச்சியும் கேழ்வரகுக் களியும் பிடித்த உணவு. இவர்கள் கிழங்கு வகைகளையும் பால், முட்டை போன்வற்றையும் மிகக் குறைவாகப் பயன்படுத்துகின்றனர்.

எருக்கலாவில் முச்சுக்குறு பிரிவினர் குறி சொல்கின்றனர். இந்த இனப் பெண்கள் பச்சை குத்திக் கொள்கின்றனர். ஒரங்குறு வகையினர் கூடைமுடைவது, பன்றி வளர்ப்பது போன்ற தொழில்களைச் செய்கின்றனர். நாகு கிரிகுறு வகையினர் நாடோடி வாழ்க்கை உடையவர். உத்லவாரு வகையினர் உறி செய்தும் கோதல்வாகு வகையினர் குரங்கை ஆட்டியும் பிழைக்கின்றனர். இவர்களிடம் வைணவ வழிபாட்டுத் தாக்கம் உள்ளது.

எரவல்லன் என்னும் பழங்குடியினரை வில்லுவேடன் என்றும் கூறுவர். கோவை மலைப்பகுதியில் வாழ்கின்ற இவர்களின் மொழி தமிழாக இருந்தாலும் இது

மலையாளக் கலப்புடையது. இவர்கள் காட்டுத் தோட்டங்களில் கொத்தடிமையாக இருந்து அண்மையில் விடுதலை பெற்றவர்கள்.

மைசூரிலிருந்து குடிபெயர்ந்தவர்களாகக் கருதப்படும் கசபர் நீலகிரியில் கடலூர் உதகமண்டலம் பகுதிகளில் வாழ்கின்றனர். கசபரின் மொழியைக் கன்னடக் கிளைமொழியாகக் கூறுவர். இவர்கள் விவசாயத் தொழிலில் அதிகம் நாட்டமில்லாதவர். அதனால் அரசாங்கமே காட்டில் உலவ அனுமதிச்சீட்டு வழங்கியுள்ளது.

காட்டு நாயக்கர் நீலகிரி முதுமலைப் பகுதியில் உள்ளனர். இவர்கள் ஜேலு குறும்பர், ஜேலு நாயக்கர், காடு குறும்பர் என்றும் அழைக்கப்படுகின்றனர். காட்டு நாயக்கரின் மொழி கன்னடத்தின் கிளைமொழிதான். இவர்கள் குரங்கின் மாமிசத்தை விரும்பி உண்பவர். செருப்பை அணிந்து வீட்டினுள் செல்வதுகூடாது; ஒரே இடத்தில் கூடியிருக்கக்கூடாது என்னும் இவர்களின் நம்பிக்கை மெல்ல தளர்ந்து வருகிறது. குழந்தையைத் தாலாட்டுவதற்கு, தேன் சேகரிக்கச் செல்வதற்கு, இறந்தவரை நினைக்கும்போது என எல்லா நிலைகளிலும் இவர்கள் பாடுகின்றனர்.

கன்னியாகுமரி மாவட்டம் மேற்கு மலைகளில் வாழும் காணிக்காரர்கள் மலையாளமும் திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் மலையில் வாழும் காணிக்காரர்கள் தமிழும் பேசுகின்றனர். இவர்களுக்கு காணி, காணிக்காரன், காணியான், வேலன்மார், மலை அரசர் என்ற பெயர்கள் உண்டு. இவர்கள் தங்கள் பெயருக்குப்பின் காணி என்று வைத்துக்கொள்வர். இவர்களில் மக்கள்வழி, மருமக்கள்வழி பிரிவு உண்டு. இவர்களிடம் ஒருகால் வழியினர் மண உறவு வைக்கக்கூடாது என்ற நம்பிக்கை உள்ளது.

காணிகளின் பூசாரியான பிலாத்தி மந்திரவாதம், பில்லிசூனியம் அறிந்தவர். பிலாத்தி இறந்தபின் தெய்வமாகி விடுவர். காணிக்காரர்களில் சமவெளியில் குடியேறியவர்களின் வாழ்க்கைத் தரம் முழுதும் மாறிவிட்டது.

தமிழகத்தின் மிகத் தொன்மையான பழங்குடியான காடர் சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்புவரை குகைகளிலும் மரப்பொந்துகளிலும் வாழ்ந்ததை

ஆராய்ச்சியாளர்கள் பதிவு செய்துள்ளனர். இவர்கள் கோயம்புத்தூர் ஆனைமலையிலும் திருச்சி தஞ்சை மாவட்டங்களிலும் வாழ்கின்றனர்.

காடர்கள் தங்களின் முன்வரிசைப் பற்களைச் செதுக்கி ராவிக்கொள்ளும் வழக்கத்தை உடையவர்கள். தலையின் முன் பகுதியைக்கூட சிரைத்துப் பின்கொண்டை வைத்துக்கொள்ளுவர். இவர்களின் வாழ்க்கை முழுதும் காடு சார்ந்தது. இன்றும் மூங்கில் குழாய்களைத் தேன் சேகரிக்கவும் தண்ணீர் எடுக்கவும் பயன்படுத்துகின்றனர். காடர் இளைஞன் மூங்கில் சீப்பைத் தயாரித்துக் கொடுக்கும் வழக்கம் அண்மைக்காலம் வரை இருந்தது. காடர்கள் வாழும் ஆனைமலைப் பகுதியில் ஆளியாறு அணைக்கட்டு வந்த பின்பு இவர்களின் வாழ்க்கைத்தரம் மாறிவிட்டது.

குறும்பர் என்ற இனம் நீலகிரி மலையிலும் சமவெளியிலும் உள்ளது. குறும்பர்களின் அலு குறும்பர், பாலு குறும்பர், ஹராலு குறும்பர் ஆகியோர் முக்கியமானவர். இவர்களைத் தவிர குறும்பரின் பிரிவுகளாக ஜேலு குறும்பர், தென் குறும்பர் ஊராளிக் குறும்பர், முள்ளுக் குறும்பர், முடுகு குறும்பர், பெட்ட குறும்பர் ஆகியோரும் உள்ளனர்.

அலுகுறும்பர் நீலகிரி பவானி ஆற்றை ஒட்டிய இடங்களில் வாழ்கின்றனர்; இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் அடையாளம் காணப்பட்டவர்கள். கன்னடக் கிளைமொழி பேசும் இவர்களில் சிலர் சமவெளியில் தோட்டப்பயிர் செய்தும் கூடைமுடைந்தும் வாழ்கின்றனர்.

குறும்பரில் இன்னொரு பிரிவினரான பெட்ட குறும்பர் தமிழக கர்நாடக எல்லையில் வாழ்கின்றனர். கன்னடக் கிளைமொழி பேசும் இவர்களைப் பற்றிய சரியான ஆய்வே 1996இல்தான் நடந்திருக்கிறது. இவர்கள் யானைகளைப் பிடிப்பதில் வல்லவர். யானைகளை இனம் பிரித்து அடையாளம் காணவும் செய்வார்கள். காட்டிலாகாவினர், யானைகளின் எண்ணிக்கையைக் கணக்கிட இவர்களைப் பயன்படுத்துகின்றனர். இந்த இனத்தவரிடம் பதினேழு ஆட்பெயர்கள்தாம் உள்ளன. குறும்பரின் ஒரு பிரிவினராகக் கருதப்படும் முள்ளுக்குறும்பர், பிற குறும்பர்களிலிருந்து முழுதும் வேறுபட்டவர். இவர்கள்

நீலகிரி மாவட்டம் கூடலூர்ப் பகுதியில் வாழ்கின்றனர். இவர்கள் கன்னடத்தின் கிளைமொழியைப் பேசுகின்றனர்.

கேரளத்திலும் தமிழகத்தில் தருமபுரி மாவட்டத்திலும் வாழ்கின்ற குறிச்சான் என்ற இனத்தினரில் பல பிரிவுகள் உண்டு. தமிழகத்தில் வாழும் அறம்பாடி குறிச்சான் என்பவர். தமிழ் கலந்த கன்னடம் பேசுகின்றனர். இவர்கள் தங்களைக் கவுண்டர் அல்லது கௌடர் என்று சொல்லிக்கொள்ளுகின்றனர்.

தமிழக கர்நாடக எல்லையில் வாழும் குடிமலைக்குடி என்ற இனத்தினர் துளு பேசுகின்றனர். தமிழக ஆந்திர எல்லையில் வாழும் கொண்டாரெட்டியின் இனப்பெயரைச் சொல்லிப் பிற இன ரெட்டி மக்களும் சலுகைகள் பெறுவதால் இவர்களைப் பற்றிய ஆய்வு முழுமையற்றதாக உள்ளது.

கேரளத்திலும் தமிழகத்தில் நீலகிரி மாவட்டத்திலும் உள்ள கொச்சுவேலன் என்பவர்கள் மலையாள மொழியைப் பேசுகின்றனர். இவர்களின் எண்ணிக்கை ஐம்பதுக்கும் கீழ்தான் உள்ளது.

கோத்தர்களைப் பசுவின் புத்திரர்கள் என்பர். இவர்கள் பிற பழங்குடியினரைவிட உயரமானவர். நீண்ட மூக்கும் நீலக்கண்களும் உடையவர். கோத்தரின் மொழி கன்னடம், மலையாள தொடர்புடையது; சங்கத் தமிழ் தொடர்புடையது எனப் பல்வேறு கருத்துக்கள் உள்ளன.

தமிழ்ப் பழங்குடிகளில் இரும்பு வேலை, தங்க வேலை, மர வேலை, துணி வெளுக்கும் வேலை போன்றவற்றை அறிந்தவர்கள் கோத்தர்களே. அதோடு விவசாயம் தொடர்பான நுட்பங்கள் அறிந்தவர்கள்.

சோளிகர் நீலகிரி, ஈரோடு, கோவை, சேலம், தருமபுரி ஆகிய மாவட்டங்களில் வாழ்கின்றனர். இவர்கள் தேனின் மருத்துவ குணத்தை நுட்பமாக அறிந்தவர். தேன் இருக்கும் இடத்தைப் பொறுத்து இதன் மருத்துவ குணம் இருக்கும் என்று நம்புகின்றனர். சோளிகரின் உட்பிரிவுகளில் ஒருவரான சோளிகர் ஊராளி என்பவர் சோளிகக் கவுண்டர் எனவும் படுவர். கன்னடக் கலப்புமொழி பேசும்

இவர்கள் நீலகிரி, கோவை, ஈரோடு, தருமபுரி, சேலம் ஆகிய மாவட்டங்களில் வாழ்கின்றனர்.

சோள நாயக்கர் என்ற இனம் 60 ஆண்டுகளுக்கு முன்புதான் அடையாளங் காணப்பட்டது. காட்டு யானைகளால் அதிக அளவில் இறந்துவிட்ட இவ்வினம் பற்றி முழுமையான ஆய்வுகள் நடக்கின்றன.

தோடர்களை எருமையின் குழந்தைகள் என்பர். இவர்களின் வாழ்க்கை எருமையைச் சுற்றியது. நீலகிரி மாவட்டத்தில் வாழும் இவர்களின் மொழி பண்டைக்காலப் பேச்சுத் தமிழ் என்று கால்டுவெல் கூறுவார்.

தோடர் இருக்குமிடத்தை மந்து என்பர். ஒவ்வொரு மந்திலும் எருமை வளர்க்கப் புதுமைப் பண்ணைகள் உள்ளன. இவர்கள் எருமையைத் தெய்வமாகக் கருதுகின்றனர். எருமையை வைத்து இவர்களின் செல்வம் மதிப்பிடப்படுகிறது. தோடர்கள் அழகுணர்ச்சியுடையவர். மரவேலைப் பொருட்கள் செய்யவதிலும் பாடுவதிலும் ஈடுபாடு உள்ளவர்கள். இவர்களின் மொழியில் பழங்கதைகளும் நடனம் சார்ந்த பாடல்களும் உள்ளன.

கோவை ஆனைமலையில் உள்ள பதி மலசார் என்ற இனத்தை மண்ணடி என்றும் கூறுகின்றனர். இவர்கள் யானை பிடிப்பதில் வல்லவர்.

திண்டுக்கல் மாவட்டம் மேற்கு மலையிலும் இராமநாதபுரம், ஸ்ரீவில்லிபுத்தூரிலும் வாழும் பளியர் என்பவர் முருகனின் மனைவி வள்ளியின் வம்சத்தினர் என்றும் பளிச்சியம்மன் என்ற தாய்த்தெய்வத்தின் மரபினர் என்றும் சொல்லிக்கொள்கின்றனர். தமிழ்க் கொச்சைமொழி பேசும் இவர்களில் சிலர் தஞ்சை, புதுக்கோட்டை மாவட்டங்களில் விவசாயம் செய்கின்றனர்.

நீலகிரியில் வாழும் பளியர், பாணாசுரம் என்னும் மலையில் வாழ்ந்த அண்ணன் தங்கைகளுக்குப் பிறந்த வம்சத்தினர் என்னும் வாய்மொழி மரபு உண்டு. இவர்கள் 1975 வரை கவுண்டர், செட்டியார் ஆகிய தோட்ட முதலாளிகளிடம் கொத்தடிமையாய் இருந்தனர். இடுப்பில் கறுப்புப் பட்டை அணிவது இவர்களின்

அடையாளம். இவர்கள் தமிழும் கன்னடமும் கலந்த கிளைமொழியைப் பேசுகின்றனர்.

திண்டுக்கல் மாவட்டம், பழனி மலையில் உள்ள புலையர் பாண்டி நாட்டிலிருந்து குடிபெயர்ந்தவர் என்பர். இவர்கள் பாண்டியில் நடந்த கலவரம் ஒன்றில் குடிபெயர்ந்து காடுகளில் ஒளிந்து வாழ்ந்தவர்கள்; பின்னர் பழங்குடியாயினர். இவர்கள் எலி உட்பட எல்லாப் பிராணிகளையும் உண்ணுகின்றனர். இவர்களுக்கு மருத்துவக் குணமுடைய மூலிகைகளைப் பற்றித் தெரியும்.

கோவை, உடுமலைப்பேட்டையிலும் திண்டுக்கல் மலைப் பகுதியிலும் உள்ள மகாமலசார் தமிழ்மொழி பேசுகின்றனர். மலையரையன் இனம் நீலகிரியில் உள்ளது. இவர்களில் பெரும் அளவினர் கேரளக் காடுகளில் வாழ்கின்றனர். கன்னியாகுமரி மாவட்டம் மேற்கு மலையடிவாரத்தில் வாழ்கின்ற மலைக்குறவர்கள் பாண்டி நாட்டிலிருந்து திருவிதாங்கூருக்குக் குடியேறியவர் என்பர். இவர்கள் மலையாள மொழி பேசுகின்றனர்.

கோவை மாவட்டம் மலைகளில் உள்ள மலசார் கவுண்டர் முதலாளிகளிடம் கொத்தடிமைகளாக இருந்து அண்மையில் விடுதலை பெற்றுள்ளனர். மலபண்டாரம் என்னும் இனத்தினர் கேரள தமிழ் எல்லையில் உள்ள மேற்கு மலையில் வாழ்கின்றனர்.

மலமலசார் இனத்தினர் கோவை ஆனைமலையில் வாழ்கின்றனர். தமிழின் கிளைமொழியைப் பேசும் இவர்களின் முக்கியத் தொழில் காட்டுப்பொருள் சேகரிப்புதான். இந்த இன ஆண்களுக்குத் தாடி வளராது. லேசாக வளரும் தாடியைக் கீழ்மீசை எனக் குறிப்பிடுவர். பல்லை ராவிக் கூர்மைப்படுத்தும் பழக்கம் இவர்களிடம் உண்டு. யானைகள் அணுக முடியாத இடத்தில் குடிசை அமைக்கும் வழக்கும் இவர்களிடம் இப்போதும் உள்ளது.

மலையாளி என்னும் பழங்குடி இனத்தினர் சேலம், விழுப்புரம், திருவண்ணாமலை, திருச்சி போன்ற மாவட்டங்களில் (சேர்வராயன் மலை, கொல்லி மலை, ஜவ்வாது மலை, நீலகிரி மலை, பச்சை மலை)

வாழ்கின்றனர். இவர்களை மலை வேளாளர், கொங்கு வேளாளர், காஞ்சி மண்டலத்தார், மலைக்காரன், மலைக்கவுண்டர் என்றெல்லாம் அழைப்பர்.

இவர்களின் பூர்வீகம் காஞ்சிபுரம் என்பதற்கு வாய்மொழி மரபுச் செய்தி உண்டு. இவர்கள் 16ஆம் நூற்றாண்டில் கல்வராயன் மலைக்கு வந்திருக்கலாம் என்பர்.

கொங்குநாட்டு வேளாளர்களில் பெரியண்ணன் என்பவன் கைக்கோளப் பெண்ணை மணம் செய்து கல்வராயன் மலைக்குச் சென்றான்; நடுவண்ணன் என்பவன் பள்ளப் பெண்ணை மணந்து பச்சை மலைக்குச் சென்றான்; சின்னண்ணன் என்பவன் தேவேந்திரகுலப் பெண்ணை மணந்து கொல்லி மலைக்குச் சென்றான். பின்னர், இவர்கள் பெரிய மலையாளி, பச்சை மலையாளி, கொல்லி மலையாளி ஆயினர்.

மலையாளிகள் இருக்கின்ற இடத்தைப் பொறுத்து இவர்களின் மொழி அமைகின்றது. இவர்களில் சிலர் கன்னடமும் தமிழும் பேசுகின்றனர். கல்வராயன் மலையில் உள்ளவர் 1963 வரை கொத்தடிமைகளாக இருந்தனர். தற்போது இவர்களில் சிலர் பெரும் செல்வந்தர்களாக உள்ளனர்.

மலவேடர் என்ற இனத்தினரில் சிலர் கன்னியாகுமரி மாவட்ட மேற்கு மலையில் வாழ்கின்றனர். இவர்கள் பாண்டிய மன்னர்களிடம் கூலி வீரர்களாக இருந்தனர் என்றும் ஏதோ காணரத்தால் திருவிதாங்கூர் மலையில் குடியேறினர் என்றும் கூறும் வாய்மொழி மரபு உண்டு.

கொடைக்கானல் மலையில் வாழும் மன்னான் பாண்டிநாட்டுக் கலவரத்தின்போது குடிபெயர்ந்தவர்கள் என்பர். இவர்களின் தெய்வம் மதுரை மீனாட்சி. கேரளத்தில் வாழும் மன்னான் இனத்தவரின் தெய்வமும் மீனாட்சிதான். இவர்களைப் பற்றி ஆய்வு சரியாக வரவில்லை. இவர்கள் மார்கழி மாதத்தை ஆண்டின் முதல் மாதமாகக் கொள்ளுகின்றனர்.

முதுவர் மதுரை (ஏலமலை) கோவை (ஆனைமலை) மாவட்டங்களில் வாழ்கின்றனர். கண்ணகி சேரநாட்டிற்குச் சென்றபோது அவள் முதுகின்பின்

சென்ற பாண்டிநாட்டுக்காரர் முதுவர் ஆயினர்; குழந்தையை முதுகில் சுமப்பவர் முதுவர் ஆயினர்; இஸ்லாமியப் பாண்டிநாட்டுக் கலவரத்தில் மதுரை மீனாட்சி விக்ரகத்தை முதுகில் சுமந்து சென்றவர்கள் முதுவர் ஆயினர் எனப் பல்வேறு வாய்மொழி மரபு உண்டு. இவர்கள் மலையாளக் கலப்புடைய முதுவ மொழியைப் பேசுகின்றனர்; சைவச் சார்புடையவர்கள்; சிவாத்திரி விழாவைக் கொண்டாடுகின்றனர். காட்டுக்கிழங்குகளைப் பக்குவப்படுத்திப் பலநாட்கள் வைத்திருக்கும் முறையை அறிந்தவர்கள். மேலக்குடியா என்ற இனம் தமிழக கர்நாடக எல்லை மலைப்பகுதியில் வாழ்கின்றது.

குறும்பரின் ஒரு பிரிவினரான முள்ளுக் குறும்பர் நீலகிரியில் (கூடலூர்) வாழ்கின்றனர். இவர்கள் பிற குறும்பர்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டவர். அர்ஜுனனுக்கு வரமளித்த சிவ வேடனின் வம்சத்தினர் என்று சொல்லிக்கொள்ளுகின்றனர். கன்னடக் கிளைமொழியைப் பேசும் இவர்களின் வாய்மொழி மரபில் மகாபாரதச் செல்வாக்கு உண்டு. இவர்களின் வாழ்வு வேட்டை தொடர்பானது. வில் அம்பு ஆயுதத்தை அறிந்தவர்கள். கேரளத்தில் இருக்கும் முள்ளுக் குறும்பர் கோட்டயம் அரசருக்காக கிழக்கிந்தியக் கம்பெனி வீரரை எதிர்த்திருக்கின்றனர்.

**மலையாள மனோரமா – இயர்புக் 2006**

## புதுச்சேரி வீரநாயக்கரின் நாட்குறிப்பு (1778 – 1792)

கி.பி. 1778ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் 4ஆம் தேதி இரவில் புதுச்சேரி நோயாளிக் கிடங்குப் பகுதி வலங்கை வீதியில் குடியிருந்த கம்மாளர் சாதியினரில் ஒருவர் இறந்துபோனார். அடுத்த நாள் அவரது உறவினர்களும் சாதிக்காரர்களும் கூடிப் பிணத்தை எடுக்கத் தேர்ப்பாடை கட்டத் தொடங்கினர். இந்தச் செய்தியை அறிந்த பறையர் சாதி மக்கள் பிணத்தைத் தேர்ப்பாடையில் கொண்டு செல்லக்கூடாது எனக்

கம்மாளரிடம் தர்க்கம் செய்தார்கள். கம்மாளருக்கும் பறையருக்கும் நடந்த தர்க்கத்தால் அந்தப் பிணத்தை அன்று எடுக்க முடியவில்லை.

கம்மாளர் எல்லோரும் புதுச்சேரி ஜெனரல் 'தெகனுவே' அவர்களிடம் பறையர்களின் எதிர்ப்பை முறையிட்டார்கள். அவர்களின் வேண்டுகோளைக் கேட்ட ஜெனரல், முந்தியகால வழக்கப்படிதான் எல்லாம் நடக்க வேண்டும்; பழைய மரபை மீறக் கூடாது என்று பறையர்களுக்குச் சார்பாய் நீதி கூறினார். உடனே கம்மாளர்கள் வாசந்தி கட்டி, தப்பும் சேமக்கலமும் அடித்தபடி பிணத்தைத் தூக்கிச்செல்லப் பறையர் சாதி மக்களிடம் அனுமதி கேட்டார்கள்.

பறையர்களோ கம்மாளரின் வேண்டுகோளை நிராகரித்தனர். பிணத்தை ஏணியில் வைத்துச் சந்தடி இல்லாமல் கொண்டுசெல்ல வேண்டும் அல்லது வாசந்தியில் பிணத்தை வைத்து நாலுபேர் தூக்கிச் செல்ல, இரண்டு பேர் பின்னால் சத்தம் போடாமல் போக வேண்டும் என்றார்கள். கம்மாளருக்கு இதில் விருப்பமில்லை. பறையரிடம் தர்க்கம் செய்தார்கள். பறையர்கள் முரண்டு பிடித்துப் பழைய வழக்கப்படிதான் செய்ய வேண்டும். நவமாய் (புதிதாய்) ஒன்றும் செய்யக்கூடாது; இது ஜெனரல் துரையின் உத்தரவு என்றார்கள்.

கம்மாளர்கள் வேறு வழியில்லாமல் பறையர் சொன்னபடி வாசந்தி கட்டி நாலுபேர் பிணம் தூக்க, இரண்டு பேர் மட்டும் சப்தமில்லாமல் பின்செல்ல சுடுகாட்டுக்குப் போனார்கள். இப்படியாக நடந்த தர்க்கத்தால் 4ஆம் தேதி இறந்துபோனவரின் பிணத்தை 7ஆம் தேதிதான் எடுத்தார்கள்.

பறையர் கம்மாளர் மோதல் குறித்த இந்தத் தகவல் இரண்டாம் வீரநாயக்கர் நாட்குறிப்பில் வருகிறது.

***

இரண்டாம் வீரநாயக்கரின் கொள்ளுத்தாத்தா பெருமாள் நாயக்கர். இவர் 1700இல் புதுச்சேரி காவல்துறையில் இரண்டாம் நயினராகப் பணிபுரிந்தார். புதுச்சேரி நீதிமன்றத்தின்கீழ் அடங்கிய பிரெஞ்சு காவல்துறைத் தலைவருக்கு

அடுத்த பதவியின் பெயர் நயினார். இவருக்கு அடுத்த பதவி இரண்டாம் நயினார். பெருமாள் நாயக்கர் 1700 முதல் 1741 வரை இரண்டாம் நயினாராக இருந்தார்.

பெருமாள் நாயக்கரின் மகன் வீரநாயக்கர், 1741 முதல் இந்தப் பதவியை வகித்தார். இவரை ஆனந்தரங்கம் பிள்ளை குறிப்பிடுகிறார். வீரநாயக்கருக்குப்பின் (1754இல்) அவரது மகன் ராஜகோபால நாயக்கர் இப்பதவியை வகித்தார். ராஜகோபால நாயக்கரின் மகன் வீரநாயக்கர் . . . எனவேதான் இவரை இரண்டாம் வீரநாயக்கர் என்கிறார் இவரது நாட்குறிப்பைப் பதிப்பித்த கோபாலகிருஷ்ணன்.

புதுச்சேரியில் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் நடந்த போராட்டத்தால் வீராசாமி என்ற வீரநாயக்கரின் மூதாதையரில் ஒருவருக்குப் பதவியைத் தொடர முடியவில்லை. ஆனால் ஏதோ ஒருவகையில் பிரான்ஸ் நாட்டுடன் இவருக்குக் கடிதத் தொடர்பு இருந்திருக்கிறது. இந்தத் தொடர்பு அவரைப் புதுச்சேரியில் வேரூன்ற வைத்தது.

வீரநாயக்கர் 1778 முதல் 1792 வரை 14 ஆண்டுகளில் 319 நாட்களுக்கு நாட்குறிப்பு எழுதியிருக்கிறார். இவர் கேட்ட கண்ட சம்பவங்களையும் கண்ணால் பார்க்காத சம்பவங்களையும் படித்தவற்றையும் தான் எழுதியிருப்பதாகச் சொல்லியிருக்கிறார்.

ஆனந்தரங்கம்பிள்ளை நாட்குறிப்பைக் கண்டுபிடித்த எதுவார் கரியேல் என்பவர்தான் வீரநாயக்கரின் நாட்குறிப்பையும் கண்டுபிடித்தார். கரியேல் புதுச்சேரியில் 1840 – 1850ஆம் ஆண்டுகளில் அரசு அதிகாரியாக இருந்தவர். தமிழ் அறிந்தவர். இவர் வீரநாயக்கரின் நாட்குறிப்பைப் பிரதி செய்து வைத்திருக்கிறார். இவர் மறைவிற்குப்பின் இவரின் நாட்குறிப்பைப் பாண்டிச்சேரி பிரெஞ்சு அதிகாரிகள் பிரான்ஸ் நாட்டு அரும் கையெழுத்துப் பாதுகாப்புத் துறையில் சேர்த்தனர்.

சுமார் 320 பக்கமுள்ள இந்த டைரியைப் பிரதி செய்து நூல்வடிவில் ஒர்சே. மா. கோபாலகிருஷ்ணன் என்பவர் 1992இல் வெளியிட்டிருக்கிறார்.

கோபாலகிருஷ்ணன் புதுச்சேரியில் பிறந்தவர் (1940). பிரான்சில் பொறியியல் படித்தவர். பேராசிரியராகப் பணியாற்றியவர். கணிப்பொறி நிபுணர். சிற்பம், வரலாறு, கல்வெட்டு முதலிய துறைகளில் ஈடுபட்டுள்ள இவர், பட்டினப்பாலையைப் பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்துள்ளார். நற்றமிழ்ப் பதிப்பகம் (சென்னை) வெளியிட்ட இந்நூல் பொதுவான வாசகனுக்கு மட்டுமல்ல, ஆராய்ச்சியாளர்களின் கண்களில்கூட படாமல் போய்விட்டது.

ஆனந்தரங்கம் பிள்ளையின் நாட்குறிப்புப்போல் அல்ல இது. என்றாலும் பிரெஞ்சு அரசு தமிழ்நாடு, ஆந்திரம், கர்நாடகம், மகாராட்டிரம், வங்காளம் ஆகியவற்றுடன் கொண்டிருந்த உறவு பற்றியும் ஆங்கிலேயருடன் கொண்டிருந்த உறவு / பகை பற்றியும் திப்புசுல்தான் பிரெஞ்சுக்காரருடன் கொண்டிருந்த நல்லுறவு பற்றியும் புதுச்சேரி தொடர்பான சில சமூக முரண்பாடுகள் பற்றியும் இந்த நாட்குறிப்பில் தகவல்கள் உள்ளன.

வீரநாயக்கர் தமிழ், பிரெஞ்சு ஆகிய இருமொழிகளும் நன்கு அறிந்தவர். ஆங்கிலம், உருது, பார்சி மொழிகளும் தெரியும். அதனால் இந்த மொழிச்சொற்கள் நாட்குறிப்பில் கலந்து வருகின்றன என்கிறார் பதிப்பாசிரியர். நாயக்கர் கவிதையைப் போல உரைநடையிலும் சொற்கள் பிரிக்கப்படாமலேயே எழுத வேண்டும் என்ற நம்பிக்கை உடையவர். பிரெஞ்சு மொழிக்கலப்பும் வட்டார வழக்குச் சொற்களின் பெருமளவு செல்வாக்கும் இந்த நாட்குறிப்பைப் பொதுவாகப் புரிந்துகொள்ளத் தடையாக உள்ளன. இந்நூலைப் பதிப்பித்தவரும் தமிழில் எழுதப்பட்ட பிரெஞ்சுப் பெயர்ச் சொற்களைப் பிரெஞ்சு வரிவடிவில் தந்திருப்பது இன்னும் உறுத்தலாய் உள்ளது.

நூலின் பெரும்பாலான பக்கங்கள் பிரான்சுக்கும் இங்கிலாந்துக்கும் நடந்த சண்டை, உடன்பாடு பற்றியே பேசுகின்றன. இந்தச் சண்டை புதுச்சேரியை எப்படிப் பாதித்திருக்கிறது என்ற குறிப்பையும் நாயக்கர் தருகிறார். இவர் பிரான்ஸ் நாட்டின் விசுவாசி. நாட்குறிப்பின் எல்லாப் பக்கங்களிலும் பிரான்ஸ் அரசரை 'மகாராஜா' என்றே குறிப்பிடுகிறார்.

கி.பி. 1778இல் பிரெஞ்சுக்காரர்கள் புதுச்சேரியில் முற்றுகையிட்ட விவரமும் லண்டனில் நடந்த சண்டைப் பற்றியும் அப்போது ஐரோப்பியக் கப்பல்கள் 'சுயெஸ்கால்' வழி வந்தது பற்றியும் உள்ள செய்திகளைப் பிரான்ஸிலிருந்து வந்த அதிகாரிகளின் வழியாகக் கேள்விப்பட்டதை நாட்குறிப்பில் குறிப்பிடுகிறார்.

நாயக்கர் குறிப்பிடும் செய்திகளில் தென்திருவிதாங்கூர் பற்றிய செய்திகள் திருவிதாங்கூர் வரலாற்றில் காணப்படாதவை. கன்னியாகுமரி அருகே உள்ள ஒரு கிராமத்தில் ஆயுதங்கள் செய்யும் தொழிற்சாலை இருந்தது. ஆங்கிலேயர்களின் தயாரிப்பில் உருவான இந்த ஆயுதங்கள் பிரஞ்சுக்காரரை எதிர்த்த வீரர்களுக்கு அனுப்பப்பட்டன. இச்செய்தியை ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி கவுன்சில் (கல்கத்தா) ஒத்துக்கொண்டது. இது 1778ஆம் ஆண்டுச் செய்தி. இதே காலகட்டத்தில் திருவிதாங்கூரை ஆண்ட தர்மராஜா என்ற அரசர் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு ஆதரவாக இருந்தார். இங்கே குறிப்பிடப்பட்ட தொழிற்சாலை பெரும்பாலும் குமரி மாவட்டக் குளச்சல் துறைமுகத்தில் இருந்திருக்கலாம்.

புதுச்சேரிக்கு மொரேசியஸ் தீவிலிருந்து பெந்தா கப்பலில் 160 ராணுவவீரர்கள் வந்தனர். இதில் பீரங்கிகளும் இருந்தன. இக்கப்பல் திருவிதாங்கூர் துறைமுகத்தில் நின்றது என்ற குறிப்பும் வருகிறது. (1778) இத்துறைமுகம் குளச்சல் அல்லது விழிஞம் ஆக இருக்கலாம்.

1783ஆம் ஆண்டு நாட்குறிப்பில் கன்னியாகுமரி அருகே பிரெஞ்சுக் குடியேற்றப் பகுதிகள் இருந்தன. இங்கே பிரெஞ்சுக் காரர்கள் சுதந்திரமாய் வர்த்தகம் செய்தனர் என்னும் செய்தி வருகிறது. திருவிதாங்கூரின் வரலாற்றை எழுதிய நாகம் அய்யாவோ (1903) டி.கே. வேலுப்பிள்ளையோ (1943) இப்படி ஒரு செய்தியைச் சொல்லவில்லை. கிழக்கிந்தியக் கம்பெனிக்கும் இங்கிலாந்து அரசுக்கும் திருவிதாங்கூர் அரசர்கள் எப்போதும் விசுவாசமாகவே இருந்தவர்கள். இந்த நிலையில் அவர்களின் எல்லைக்குட்பட்ட கிராமத்தில் பிரெஞ்சுக் குடியேற்றம் இருந்தது என்பது புதிராக உள்ளது.

திப்புசுல்தான் பிரான்ஸ் அரசருக்கும் புதுச்சேரி ஜெனரலுக்கும் பரிசுகள் கொடுத்ததும் பதிலாக அவர்கள் திப்புவிற்குப் பரிசுகள் கொடுத்ததும் திப்புவின்

குதிரைப்படைகள் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனிப் படைகளுக்கும் அவர்களின் குடிகளுக்கும் இழைத்த கொடுமைகள் பற்றியும் செய்திகள் இந்த நாட்குறிப்பில் உள்ளன.

1787 தை மாதம் 15ஆம் தேதி பிரான்ஸ் அரசருக்குக் கொடுப்பதற்குரிய பரிசுகளுடன் திப்புவின் ஆட்கள் புதுச்சேரி வந்தனர். பரிசைக் கப்பல்வழி பிரான்சுக்கு அனுப்ப வேண்டும் என்பது அந்தப் பிரதிநிதிகளின் கோரிக்கை. அந்தப் பிரதிநிதிகள் தங்குவதற்குரிய வசதிகளைப் புதுச்சேரி ஜெனரல் செய்து கொடுத்திருக்கிறார்.

கி.பி. 1789 வைகாசி 5ஆம் தேதி தினசரிக் குறிப்பில் பிரான்ஸ் அரசர் திப்புவுக்குக் கொடுத்தனுப்பிய பரிசு பற்றிய விபரம் விரிவாக உள்ளது.

பிரான்ஸ் அரசர், திப்புவுக்கு Topisseri des Gobilins என்னும் இரத்தினக் கம்பளத்தை அனுப்பிக் கொடுத்தார். இந்தக் கம்பளம் தரையில் விரிப்பதற்கல்ல. விதானமாகக் கட்டுவதற்கு. இதைத் தெரு முழுக்கக் கட்டிவிடலாம், 200 வேலைக்காரர்கள் பத்து ஆண்டுகள் உழைத்து உருவாக்கிய இந்தக் கம்பளத்தின் அப்போதைய விலை ஒரு இலட்சம் ரூபாய்.

இந்த கம்பளத்தைக் கப்பலிலிருந்து இறக்குவதற்கு மிகவும் சிரமப்பட்டிருக்கிறார்கள். ஐம்பது கட்டு மரங்களை வரிசையாக நிறுத்தி ஒன்றாகக் கட்டிவைத்து அவற்றின்மேல் மரக்குதிரைகளை நீளமாக வைத்து 100 காப்பிரிகள் உதவியுடன் கம்பளம் இறக்கப்பட்டது.

பிரான்ஸ் அரசர் இந்தக் கம்பளத்துடன் 35 பிரெஞ்சுக்காரர்களையும் அனுப்பி வைத்தார். இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் நிபுணர்கள். ஒருவர் அலோபதி மருத்துவர், ஒருவர் பொறியாளர், ஒருவர் பீரங்கி சுடுவதில் வல்லவர். இப்படியான நிபுணர்களும் அவர்களின் சொந்தப் பொருட்களுடனும் கம்பளத்துடனும் புதுச்சேரியிலிருந்து வேறு கப்பலில் ஸ்ரீரங்கப்பட்டணத்திற்குச் சென்றனர்.

கி.பி. 1790 மார்கழி 7ஆம் நாளில் புதுச்சேரி ஜெனரல் Cher De Fresus என்பவருக்குத் திப்பு கொடுத்தனுப்பிய பரிசுகளைத் திப்புவின் படைத்தலைவனான முஸ்லீம் ஒருவரும் பிராமண வக்கீல் ஒருவரும் 100 குதிரை வீரர்களும் கொண்டு வந்தனர்.

ஜெனரல் அந்த வெகுமதிகளைப் பெற்றுக்கொண்டு பதிலுக்கு வயிரம் இழைத்த தங்க மூக்குப்பொடிக் குப்பியைத் திப்புவிற்குக் கொடுத்து அனுப்பினார். அப்போது அதன் விலை ரூபாய் 4000. திப்புவின் வெகுமதியைக் கொண்டுவந்தவர்களுக்குச் சால்வையும் பாதஜோடுகளும் கொடுத்தார் பிரஞ்சுக் கர்னல்.

திப்புவின் குதிரைவீரர்கள் கிழக்கிந்தியக் கம்பெனி வீரர்களுக்கும் அவர்களுக்கு அடங்கி வாழ்ந்த தமிழகக் குடிமக்களுக்கும் தொடர்ந்து இடையூறு செய்திருக்கின்றனர். இதுபற்றிய குறிப்புகள் நிறைய உள்ளன. (1790 ஆனி 4, 1791 தை 3, ஆடி 1, 1792 தை 8, 13)

திப்புவின் குதிரைவீரர்கள் ஆங்கிலக் கம்பெனிக்கு உட்பட்ட புதுச்சேரியைச் சுற்றிய கிராமங்களில் கொள்ளையிட்டனர். குடிமக்கள் துன்புறுத்தப்பட்டனர். அதனால் உயிருக்குப் பயந்த மக்கள் புதுச்சேரியில் அடைக்கலம் வேண்டி வலசை சென்றார்கள் (குடியேறுதல்). இப்படிக் குடியேறுகின்றவர்களைப் புதுச்சேரி ஜெனரல் தடுக்கவில்லை. ஆனால் அவர்களைப் பற்றிய விவரங்களை அதிகாரிகள் பதிவு செய்ய வேண்டும் என்று ஆணையிட்டார்.

நாயக்கரின் நாட்குறிப்பில் திப்புவின் குதிரைப் படை வீரர்கள் புதுச்சேரியைச் சுற்றிய பகுதிகளில் கீழ்த்தரமாய்க் கொள்ளையடித்தது பற்றிய தகவல்கள் உள்ளன. முக்கியமாக ஆங்கிலேயரின் ஆட்சிப் பகுதியில் இது தீவிரமாய் நடந்திருக்கிறது. புதுவை வணிகர் ஒருவர் சென்னை ஆங்கிலேய வணிகருக்குக் கொடுப்பதற்காகக் கொண்டுசென்ற 15,000 ரூபாயைத் திண்டிவனத்தில் முகாம் அடித்திருந்த திப்புவின் வீரர்கள் பிடுங்கிக்கொண்டனர்; அந்த வணிகரை அவமானப்படுத்தினர்.

திப்புவின் வீரர்கள் பிரெஞ்சுக் கம்பெனிக்குக் கீழடங்கிய குடிமக்கள் யாவர், ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனிக்குக் கீழடங்கிய குடிமக்கள் யாவர் என்பது தெரியாமலே கொடுமைப் படுத்தினர். இதனால் புதுச்சேரி எல்லையில் பிரஞ்சு வீரர்கள் காவல் இருக்க வேண்டிய கட்டாயம் வந்தது. அது மட்டுமல்லாமல் திப்புவின் வீரர்களால் காயம்பட்ட ஆங்கிலச் சிப்பாய்கள் 200 பேர் புதுச்சேரி முதலியார்பேட்டைக்கு வந்தனர். அவர்கள் நடக்க முடியாமல் தளர்ந்து வந்த காட்சியைப் புதுச்சேரி ஜெனரலிடம் சொன்னார்கள். அவர் அந்த வீரர்களை எட்டு நாட்கள் தம் பாதுகாப்பில் வைத்துச் சாப்பாடு போட்டுச் சிகிச்சை செய்து அனுப்பி வைத்திருக்கிறார்.

புதுச்சேரி பிரெஞ்சு அதிகாரி Le Chevalier de Fresne என்பவர் சென்னைக்குப் போய்விட்டுத் திரும்பி வந்தபோது (1791 தை) திப்புவின் வீரர்கள் அவரை வழிமறித்துப் பொருட்களைக் கைப்பற்றினர். அந்தப் பிரெஞ்சு அதிகாரி தன்னைப்

பிரெஞ்சுக்காரர் என்று கூறித் திப்புவின் கடிதத்தைக் காட்டிய பின்னும் குதிரை வீரர்கள் அவரை விடவில்லை. இந்தச் செய்தியைக் கேட்ட புதுச்சேரி ஜெனரல் புதுச்சேரி எல்லையில் பிரெஞ்சு வீரர்களைக் காவல் இருத்தியும் வெள்ளைக் கொடிகள் பறக்க விட்டும் எச்சரிக்கை செய்தார். புதுச்சேரியைச் சுற்றியுள்ள எண்பது கிராமங்களில் விழிப்புடன் இருக்கும்படி ஆணை அனுப்பினார். திப்புவின் குதிரை வீரர்களால் பாதிக்கப்பட்ட கிராம மக்கள் புதுச்சேரியில் அடைக்கலம் புகுந்ததால் அங்கு தானியத் தட்டுப்பாடு வந்தது (1798 தை 8). இதனால் தானிய இறக்குமதிக்குத் தீர்வை நீக்க உத்தரவு போடப்பட்டது. திப்புவின் ஆட்கள் ஆங்கில வீரர்களை மட்டுமல்ல சென்னை, மயிலாப்பூர், பூந்தமல்லி பகுதிகளிலிருந்த ஆங்கிலத் துரைச்சாணிகளையும் சிறைப்பிடித்துச் சென்றார்கள் (1792 தை 13).

1792 மார்ச் நாட்குறிப்பில் திப்புசுல்தான் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி அதிகாரிகளுடன் ஒப்பந்தம் செய்த தகவல் உள்ளது. அவர்களுக்கு ஒரு தொகையைத் திப்பு கொடுக்க வேண்டும் என்ற உடன்படிக்கை நடந்திருக்கிறது. அப்படிக் கொடுக்கும்வரை திப்புவின் பிள்ளைகள் ஆங்கிலக்

கிழக்கிந்தியக் கம்பெனியின் பொறுப்பில் இருக்க வேண்டும் என்றும் உடன்பாடாயிற்று. இது மோடசு என்பவருக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவர் கைத்துப்பாக்கியால் தன்னைச் சுட்டுக்கொண்டு இறந்தார். இந்த மோடசு யார் என்று தெரியவில்லை.

பிரெஞ்சு ஆட்சியின்போது புதுச்சேரியின் பாதுகாப்பு குறித்த செய்திகளும் பிரெஞ்சுப் படையின் நிலை, ஆங்கிலப் படையின் நிலை, இருவருக்கும் இடையே நடந்த மோதல்கள் முதலியவை பற்றிய குறிப்புகளும் நாட்குறிப்பில் உள்ளன.

பிரெஞ்சு அரசரின் பொறுப்பில் புதுச்சேரி வந்ததும் (1778 மார்ச்) புதுவையின் பாதுகாப்பிற்காக 13 மண் கொத்தளங்கள் கட்டப்பட்டன. அவற்றில் மொறகாக்கள் (பீரங்கிகள்) வைக்கப் பட்டன. புதுச்சேரியின் வரைபடம் தயாரிக்கப்பட்டது. இதில் இந்தக் கொத்தளங்கள் குறிக்கப்பட்டன. புதுச்சேரிக் கோட்டையின் வெளியே 5 அடி ஆழமுள்ள அகழி உண்டு. அதில் கூர்மையான கல்லும் முள்ளும் நடப்பட்டிருந்தன.

பிரெஞ்சு அல்லது ஆங்கிலப் படைகள் புதுச்சேரியிலோ சுற்றியுள்ள கிராமங்களிலோ முகாம் அடித்தபோது திருடுவதும் குடிமக்களிடம் கொள்ளையடிப்பதும் அதர்மமாகக் கருதப்பட வில்லை.

1782இல் எழுதப்பட்ட ஒரு குறிப்பு, பிரெஞ்சுக் கம்பெனிக்குச் சிதம்பரம் அருகே படைத்தளம் ஒன்று இருந்தது என்றும் இதில் இருந்த வீரர்கள் சுற்று வட்டாரத்தில் ஆடுமாடுகளையும் தானியங்களையும் கட்டாயமாகக் கொள்ளையடித்ததையும் கூறுகின்றது.

'முசியோ கல்லியோ' என்ற அதிகாரி, புதுச்சேரி பிரெஞ்சுப் படைக்கு ஆட்கள் சேர்க்கும்போது சாப்பாட்டிற்கு வழியில்லாதவர்களையும் சேர்த்துக் கொண்டார். இவர்களுக்கு முறைப்படி படைப்பயிற்சி கொடுக்கப்படவில்லை. காலாள் சிப்பாய்களாக இருந்த இவர்களுக்குச் சில நாட்களே பயிற்சி கொடுக்கப்பட்டது.

ராணுவ உயர் அதிகாரிகள் இயல்பாக இறந்தபோது முறைப் படி மரியாதையுடன் அடக்கம் செய்யப்பட்டனர். பிரான்ஸ் அரசரின் படையிலிருந்து புதுச்சேரிக்கு வந்த துய்ஷெமன் என்பவர் உடல் நலமின்றி மஞ்சள் குப்பத்தில் இறந்தார் (1782). அவரது உடல் அங்கே புதைக்கப்பட்டது. ஐந்து வருடங்கழித்து அவரது எலும்புகளைச் சேகரித்துப் புதுவை கப்பீஸ் கோவிலில் புதைத்தனர். சுண்ணாம்புக் கோரியும் கட்டினர்.

பிரெஞ்சு ராணுவ மருத்துவ விடுதியில் நோயாளிகளுக்குச் சூப்புக் கொடுக்கப்பட்டது. அது சரியாக உள்ளதா என்பதை அதிகாரிகள் குடித்துப் பார்த்துச் சோதனை செய்தனர். ராணுவ வீரர்களின் காதில் மயிர்கள் நீண்டு நிற்கக்கூடாது. இடுப்பில் தொங்கும் montre என்ற கடிகாரம் வெளியில் தெரியாதவாறு இருக்க வேண்டும்.

ராணுவக் கப்பலில் உள்ள பிரெஞ்சுப் பணியாளர்கள் சூதாடக் கூடாது. மீறினால் 15 நாள் சிறைத்தண்டனை. மறுபடியும் செய்தால் பிரான்சுக்கு அனுப்பப்பட்டனர். ராணுவ வீரர்கள் தங்களுக்குள் சண்டைபோட்டுக் கொண்டால் கடும் தண்டனை. ஒரு வீரனை இன்னொருவன் கொலை செய்தால் தூக்குத் தண்டனை.

ஆங்கிலக் கம்பெனிச் சிப்பாய்களின் பயிற்சிக் கூடம் திருச்சிக் கோட்டையின் அருகே இருந்தது. இந்தப் பயிற்சி, 'வரிசை பழகுதல்' எனப் பேச்சு வழக்கில் கூறப்பட்டது. பிரெஞ்சுச் சிப்பாய்கள் ஆங்கிலச் சிப்பாய்களின் வீட்டுப் பெண்களைச் சிறையிலடைத்துக் கெடுத்திருக்கின்றனர் என்ற செய்தியும் அப்போது பேசப்பட்டது (1781).

புதுச்சேரியில் பிரெஞ்சு அரசு பாரபட்சம் காட்டாமல் நடந்தது என்பதற்குச் சில உதாரணங்கள் தருகிறார் வீரநாயக்கர். புதுச்சேரியில் வெளிமாவட்ட மக்களின் குடியேற்றம் அதிகமானதால் (1788 ஆனி 31) தானியத் தட்டுப்பாடு வந்தது. அதனால் பலசரக்குக் கடை உரிமையாளர்கள் எல்லோரும் தங்கள் கையிருப்புத் தானியங்களின் கணக்கைக் காவல் நிலையத்தில் ஒப்படைக்க வேண்டும் என்ற கட்டளை பிறப்பிக்கப்பட்டது. இது பிரான்ஸ் நாட்டு வணிகருக்கும் பொருந்தும் என அறிவிக்கப்பட்டது.

இப்படி எல்லாம் ஜெனரல் பாரபட்சமின்றி நடந்தாலும் ராணுவ வீரர்கள் குடிமக்களைத் துன்புறுத்துவது சாதாரணமாய் நடந்தது. பிரெஞ்சு நிர்வாகம் கடலூர் பகுதி ஆங்கிலேயர்களுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தால் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனிக்குப் பிரஞ்சு அரசுக்குரிய கடலூர்ப் பகுதி கொடுக்கப் பட்டது; அங்கிருந்த பிரெஞ்சு வீரர்களும் புதுச்சேரி வந்தனர். கடலூரில் Godward என்ற பிரெஞ்சு அதிகாரி மட்டும் தனியே இருந்தார். அவர் கடலூரில் மக்களைக் கொடுமைப்படுத்தியவர். இப்போது தனியாக மாட்டிக் கொண்டார். ஊர் மக்கள் அவரைப் பிடித்து அவமானப்படுத்தினர். அவரது துபாஷியின் உடையை உரிந்து நிர்வாணப்படுத்தினர். இந்தச் செயல்களை அறிந்த ஆங்கிலச் சிப்பாய்கள் அவரைக் காப்பாற்றிக் குதிரையிலேற்றிப் புதுச்சேரிக்கு அனுப்பி வைத்தார்கள்.

வீரநாயக்கரின் நாட்குறிப்பில் சமூகச் செய்திகள் சில விரிவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. முக்கியமாக வலங்கை இடங்கைச் சண்டைகள், மக்கள் குடிபெயர்தல், புதுச்சேரியில் கல்யாண நிகழ்வு, அந்தக் காலத் தண்டனை முறைகள் முதலிய சில செய்திகள் குறிப்பிடத்தகுந்தன.

தமிழகத்தில் 18ஆம் நூற்றாண்டில் வலங்கை இடங்கை மாறுபாடும் பூசலும் புதுச்சேரியில் நடந்ததுபோல் தமிழகத்தில் பிற இடங்களில் எந்த அளவுக்கு நடந்தன என்பது பெரிய அளவில் பதிவு செய்யப்படவில்லை. புதுச்சேரியில் நடந்த வலங்கை இடங்கை மாறுபாட்டை விசாரித்த பிரெஞ்சு ஜெனரல்கள் முடிவு கூறத் திணறியிருக்கின்றனர்.

புதுச்சேரி தேவாரச்செட்டி ஒருவரின் வீட்டில் திருமணம் நடந்தது. அந்த ஊர்வலத்தில் விருதின் அடையாளமான கொடியைப் பிடித்துச் சென்றனர். இது இடங்கைச் செட்டிகளுக்குப் பிடிக்கவில்லை. கூட்டமாய்ப் போய் மறுப்பைத் தெரிவித்தனர். இதை விசாரித்த குத்தான்கோ என்ற பிரெஞ்சு அதிகாரி வீட்டினுள் செய்ய வேண்டிய காரியங்களை ஊர்வலத்தில் செய்யக்கூடாது எனத் தீர்ப்பு வழங்கினார்.

இதன் பிறகு ஒருநாள் (1785) செட்டிகளின் கோவிலில் நகரா என்னும் தோல் வாத்தியத்தை அடித்து விழா நடத்தினர். இதைக் கேட்ட வலங்கை இன

தவறா செட்டிகள் நகரா அடிக்கக்கூடாது என்றனர். நகராவை உடைக்கப் போனார்கள். இச்செய்தி காவலர் தலைவர் உவைத்திடம் போனது. அவர் வலங்கைச் செட்டிகளிடம் பேசிப் பார்த்தார்; பலன் இல்லை. இரவு முழுக்கப் பேசினாலும் பலன் இல்லை எனத் தெரிந்தது. அவர் இனிமேல் வலங்கை இடங்கைச் சாதி மக்களின் கோவில்களில் நகரா அடிக்கக்கூடாது என்று சொல்லி அவர்களின் பிரச்சனைகளுக்கு முற்றுப்புள்ளி வைத்தார்.

1785 டிசம்பர் 16இல் வரதராஜப் பெருமாள் கோவிலில் வைகுண்ட ஏகாதசி விழாவில் இடங்கையர் தேர்வடம் பிடிக்கக் கூடாது என வலங்கையர் கூறினர். அப்போதும் ஜெனரல் முடிவு கூற முடியாமல் ஆயாசப்பட்டார். இதுபற்றிய விவரங்களை விரிவாகக் கூறும்படி முத்தப்பப்பிள்ளை என்ற துபாசியைக் கேட்டுக்கொண்டார் ஜெனரல். துபாசி வலங்கைக்குச் சார்பான விஷயங்களை மட்டும் மொழிபெயர்த்தார். அப்போது ஜெனரலின் அருகே இருந்த தமிழ் அறிந்த புறுழி என்ற அதிகாரி துபாசியைக் கோபித்தார். இனிமேல் அவர் அந்த அலுவலகத்திற்குள் வரக் கூடாது என்றார். கடைசியில் ஜெனரல் வலங்கை இடங்கை மக்கள் சமாதானமாக வந்தால் மட்டுமே வைகுண்ட ஏகாதசி விழாவை நடத்த முடியும். அதுவரை கோவிலில் எந்தச் சடங்கும் நடத்தக்கூடாது என்று எச்சரிக்கை செய்து அனுப்பினார்.

1788ஆம் ஆண்டு தைமாதம் 4ஆம் தேதி நடந்த ஒரு நிகழ்ச்சி வருமாறு:

இடங்கைப் பிரிவினரான அழகிய மணவாளன் செட்டி என்பவர் வலங்கையர் வாழ்ந்த தெருவில் நடந்துவந்தார். அவருக்கு வேலையாள் ஒருவன் பட்டுக்குடை பிடித்து வந்தான். இதற்கு வலங்கையர் கூடி எதிர்ப்புத் தெரிவித்தனர். அழகிய மணவாளனைத் தட்டிக்கேட்க முடியாது. அதனால் திருவேங்கடம்பிள்ளையின் வீட்டிற்குக் கூட்டமாய்ப் போய் முறையிட்டார்கள். அவர் அதைக் காவல் அதிகாரியிடம் சொன்னார்.

இந்தக் காரியங்கள் எல்லாம் நடக்கும்போது சூரியன் மறைந்துவிட்டான். இதை விசாரிக்க துரைக்கு அவகாசமில்லை. அதனால் வலங்கைத் தெருவில் வேலையாள் பட்டுக்குடைபிடிக்க நடந்துபோன செட்டியாரையும் அவருக்குக் குடைபிடித்த வேலையாளையும் சிறையிலடைக்கவும் செட்டியாரின்

பட்டுக்குடையைப் பறிமுதல் செய்யவும் உத்தரவிட்டார். இதையறிந்த செட்டிகளும் கம்மாளரும் (இடங்கையர்) துரையின் வீட்டில் கூடினார்கள். ஆனால் துரை அவர்களைச் சந்திக்க மறுத்துவிட்டார். மறுநாள் இதை விசாரித்துச் சில விதிமுறைகளைப் பிறப்பித்தார்.

வலங்கையில் பிரிவைச் சார்ந்த முதலாளி வலங்கைத் தெருவில் வரும்போது வேலையாள் அவருக்குப் பட்டுக்குடை பிடிக்கலாம். ஆனால் அவர்கள் இடங்கைத் தெருவில் அப்படிப் போகக்கூடாது.

பிரெஞ்சுக்காரர் வாழும் தெருவில் இரண்டு பிரிவினரும் குடை பிடித்துக்கொண்டு போகலாம். அரண்மனைத் தெருப் பக்கம் முதலாளிக்கு வேலையாள் குடைப்பிடித்துச் செல்வதாக இருந்தால் முன்அனுமதி பெற வேண்டும். ஆனால் தங்களுக்குத் தாங்களே குடைப்பிடித்துக்கொண்டு செல்வதில் தவறில்லை.

இப்படியான உத்தரவு இடப்பட்ட வேளையில் இடங்கைத் தெருவில் தங்காலை கணக்கு சுப்பராமன்பிள்ளைக்கு வேலைக்காரன் குடைப்பிடித்துக் கொண்டு போனான். இது பிரச்சினையானதும் பிள்ளை மன்னிப்புக் கேட்டார். இனிமேல் இப்படிப் போகமாட்டேன் என்றார். இதைக் கேள்விப்பட்ட வலங்கை மக்கள் சுப்பராயபிள்ளையரிடம் நம் இனம் இப்படி அவமானப்படும்படி நடக்கலாமா எனக் கூறி எச்சரித்தனர்.

1788 பிப்ரவரி 16 அன்று பகல் 12 மணிக்குப் புதுச்சேரியில் நடந்த ஒரு நிகழ்ச்சி.

வலங்கைப் பிரிவைச் சேர்ந்த இலவாணியச் சாதிப் பெண் ஒருத்தி இறந்து போனாள். அவளது பிணம் தருமார சிதம்பர மேஸ்திரியின் வீட்டிற்கு அருகே வந்தபோது தாரை தப்பட்டை முழங்கியது. அங்கிருந்த இடங்கைக் கம்மாளர், பிண ஊர்வலம் ஆடம்பரம் இல்லாமல் அமைதியாகப் போக வேண்டும் என்றனர். வலங்கையர்கள் பிணத்தை அங்கேயே இறக்கி வைத்துவிட்டு ஜெனரலிடம் முறையிடப் போனார்கள். இந்த நேரத்தில் இலவாணியருக்கு ஆதரவாக வந்த சிலர் தாரை தப்பட்டை முழங்கப் பிணத்தை எடுக்க

முயன்றனர். இதைப் பார்த்த சிதம்பர மேஸ்திரி துப்பாக்கியில் மருந்தை மட்டும் போட்டு கூட்டத்திலிருந்த பறையரைப் பார்த்துச் சுட்டார். இதனால் ஆவேசப்பட்ட பறையர்கள் மேஸ்திரியின் வீட்டு மேல்கூரையை உடைத்தனர். சிதம்பரத்தின் ஆட்கள் பிண ஊர்வலத்துடன் வந்தவர்களை அடித்தனர். இச்செய்திகளை அறிந்த ஜெனரல் காவலர்களை அனுப்பி சிதம்பர மேஸ்திரியின் வீட்டின்முன் கூடி நின்றவர்களை விரட்டும்படி சொன்னார்.

புதுச்சேரி ராசப்பையர் என்பவர் தன் மகளின் திருமணத்தை முன்னிட்டு (1788 ஆடி 5) விருந்து கொடுத்தார். விருந்தில் வலங்கை, இடங்கைப் பிரிவு தாசிகள் ஆடினார்கள். இடங்கைத் தாசி ஒருத்தி மகுடி வாசித்துக்கொண்டே பாம்பைக் கழுத்தில் போட்டுக்கொண்டு ஆடினாள். விருந்தினர்கள் இதைப் பார்த்துப் பிரமித்தனர். இதனால் வலங்கைத் தாசியர்களுக்குத் தாங்க முடியாத கோபம் வந்தது. அந்த இடத்தை விட்டுப் போனார்கள். இதைப் பார்த்த திருமண வீட்டுக்காரர்கள் வலங்கைத் தாசிகளைச் சமாதானப்படுத்தித் திரும்பி அழைத்தனர். பந்தலில் அமர்த்திச் சாப்பாடு போட்டுப் பரிசப்பணம் கொடுத்தனர்.

1789 மாசி 7ஆம் தேதி புதுச்சேரி வழுதாவூரில் வாசல்படி வீதியில் யாதவர்கள் வாழும் இடத்தில் திருவம்பலம் செட்டியின் மகன் காடி வண்டியில் போனார். காடி வண்டியில் போக இடங்கையருக்கு உரிமையில்லை என்று சொன்ன வலங்கைச் சாதியினர் சிலர் வண்டியை நிறுத்திச் செட்டியை அடித்தனர். வலங்கையருக்குத் துணையாகத் தேவரா, முதலிகள் எனச் சிலரும் கூடினர். வழக்குக் காவல்துறைக்குப் போனது. வலங்கையர் எச்சரிக்கப்பட்டனர்.

புதுச்சேரியில் வலங்கை இடங்கை மாறுபாட்டால் வந்த சண்டைகளின் தீர்ப்புப் பெரும்பாலும் வலங்கையருக்குச் சாதகமாக இருந்தது. சில சமயம் மட்டுமே வலங்கையர் எச்சரிக்கப் பட்டனர். வலங்கை, இடங்கைச் சண்டை பற்றிப் பிரெஞ்சு ஜெனரலோ அதிகாரிகளோ பெரிய அளவில் விசாரணை செய்து முடிவு எடுக்கவில்லை. வலங்கை இடங்கைச் சண்டையின் ஊற்று வற்றிவிடாமல் பார்த்துக்கொண்டார்கள். மரபுவழி வழக்கத்தை மாற்றக்கூடாது என்பதை உத்தரவாகக் கூறினர்.

மொரேசியஸ் தீவின் ஜெனரல் ஒருமுறை காரைக்காலுக்கு வந்தபோது அங்குள்ள மக்கள் குடும்பத்துடன் பெயர்வதைக் கண்டு காரணம் கேட்டார். அவர்கள் வெற்றிலை, புகையிலை குத்தகைக்குத் தீர்வை கொடுக்க முடியாததால் வேறு ஊர்களுக்குக் கூலிவேலை செய்யப் போவதாகச் சொன்னார்கள். அந்த அதிகாரி புதுச்சேரி ஜெனரலைச் சந்தித்துப் பேசி காரைக்காலில் வெற்றிலை, புகையிலைத் தீர்வையைக் குறைக்க உத்தரவு கொடுத்தார்.

1788 ஆடி 10ஆம் தேதி நாட்குறிப்பு முக்கியமான ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறது. இதே நாளில் தெ. சுப்பராயன் என்பவருடன் கைக்கோளச் சாதியினர் ஐம்பது பேர்கள் பிரான்ஸ் அருகே உள்ள Matte என்னும் தீவிலிருந்து புதுச்சேரிக்குத் திரும்பி வந்தது பற்றிய செய்தி அது.

இந்தக் கைக்கோளர்கள் (செங்குந்த முதலியார்) தென் மாவட்டத்தைச் சார்ந்தவர்கள். அங்கு நிலவிய பஞ்சத்தால் குடிபெயர்ந்து புதுச்சேரிக்கு வந்தவர்கள் (1785). புதுச்சேரி தெ. சுப்பராயன் கைக்கோளரின் தொழில்நுட்பம் பற்றி அறிந்து அவர்களைப் பிரான்சில் உள்ள மேட் தீவுக்கு வர விருப்பமா என்று கேட்டிருக்கிறார். அவர்களும் சம்மதிக்கவே சுப்பராயன் அவர்களைத் தன் சொந்தச் செலவில் கப்பலில் அழைத்துச் சென்றிருக்கிறார்.

கைக்கோளர்கள் மேட் தீவிலிருந்த மக்களுக்கு நெசவுத் தொழில், பருத்திப் பயிர் செய்யும் தொழில்நுட்பம் பற்றி மூன்று ஆண்டுகள் பயிற்சி அளித்திருக்கிறார்கள் (1785 – 1788). இவர்களின் பயிற்சி பலனளித்திருக்கிறது.

பிரஞ்சு ஆட்சிக்குப்பட்ட புதுச்சேரியில் கொலைக் குற்றவாளிகளைத் தூக்கில் போடுவதும் பிற குற்றவாளிகளை அவமானப்படுத்திச் சிறைக்கு அனுப்புவதுமான செய்திகள் நாயக்கரின் நாட்குறிப்பில் உள்ளன.

புதுச்சேரி சம்பா கோவிலில் சொஸ்தாது ஒருவன் (இராணுவ வீரன்?) திருடிவிட்டான். அவன் பிடிபட்டதும் அந்தக் கோவில் வெளித்தூணில்

கட்டிவைத்து அடித்தார்கள். பின் அவன் தோளில் சூட்டுக்கோலால் குற்றவாளி என்ற முத்திரை குத்திச் சிறைக்கு அனுப்பினார்கள்.

இராணுவக் கட்டுக்கோப்பைக் குலைத்தவரையும் இராணுவ வீரர்கள் மனதை மாற்றி அரசுக்கு எதிராகக் கிளப்பியவரையும் தூக்கிலே போட்டனர். தூக்கில் போடுமுன்பு இது போன்ற குற்றவாளிகளை அவமானப்படுத்துவது முக்கியமாகக் கருதப்பட்டது. குற்றவாளியின் தலையை மொட்டை அடித்தும் பீரங்கிக் குண்டைச் சங்கிலியால் கோர்த்துக் கழுத்தில் போட்டும் கால் விலங்கு போட்டும் தண்டனை கொடுத்தனர்.

Galero என்ற தண்டனை கொடுத்ததாகக் குறிப்பு உள்ளது. இது என்ன தண்டனை என்று தெரியவில்லை. இப்படியாகச் சித்திரவதைகள் எல்லாம் செய்யபட்ட பின்பு தூக்கிலே போட்டனர்.

தூக்குமரம் மிக உயரமாக இருந்தது. குற்றவாளியை ஏணியில் ஏறவைத்துத் தூக்கில் போட்டனர். பெரும்பாலும் மாலை 6 மணிக்குமுன் தண்டனை கொடுத்தனர். தூக்குப்போடும் உரிமையுள்ள தோட்டி குற்றவாளியின் ஆடையை உரிந்துகொள்ளலாம். தூக்குப் போடுவதைத் தண்டறை போட்டுத் தெரிவித்தனர்.

புதுச்சேரி ஜெனரலோ உயர் அதிகாரிகளோ பிரான்சிலிருந்து கப்பலில் வரும்போதோ வேறு மங்கலமான நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும்போதோ சவளைக்கழி மேளம் முழங்க தாசிகளின் ஆட்டம் நடந்தது.

புதுச்சேரியில் பணக்காரக் குடும்பத்தில் நடந்த திருமணங்கள் மிக ஆடம்பரமாக நடந்திருக்கின்றன. இதுபற்றிய ஒரு நிகழ்ச்சியை (1791 தை 3) நாயக்கர் பதிவு செய்திருக்கிறார். மகாராசர் ஸ்ரீவசாரதெரயெ விசய திருவேங்கடப்பப் பிள்ளை என்பவரின் புதல்வனின் திருமண விவரம் நாட்குறிப்பில் விரிவாகக் குறிப்பிடப்படுகிறது. மாப்பிள்ளைக்கு 14 வயது; பெண்ணுக்கு 10 வயது. மாப்பிள்ளை ஊர்வலத்தில் யானைகளின்மேல் அம்பாரி, நகரா, கருடக்கொடி எனப் பல பொருட்கள் இருந்தன. மாப்பிள்ளை பச்சைப் பல்லக்கில் போனார். தாசிகள் ஆடிக்கொண்டு நடந்தார்கள்.

ஜெனரல் வீட்டின் முன்னே ஊர்வலம் நிற்க வேண்டும் என்பது நியதி. மாலையில் மாப்பிள்ளை வெண்பல்லக்கில் வந்தார். திருமண வீட்டின் முன்பகுதி மட்டுமல்ல, அந்த வீடு இருந்த தெரு முழுக்கப் பந்தல் போட்டிருந்தனர். கவர்னர் வீட்டு மேசைகளைக் கொண்டு போட்டுப் பரப்பி வைத்துச் சாப்பாடு போட்டார்கள். கல்யாண வீட்டில் சாராய வினியோகம் அமோகமாய் நடந்தது. துரைகளும் துரைச்சாணிகளும் கல்யாணத்தில் கலந்துகொண்டதால் அதுபெரிய மதிப்பிற்குரிய கல்யாணம் எனப் பேசப்பட்டது.

நாயக்கரின் நாட்குறிப்பில் அன்றைய வழக்காறுகள், நடைமுறைகள் பற்றிய செய்திகள் சில குறிக்கப்பட்டுள்ளன. ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குச் செல்லும் தூரத்தைக் குறிக்க 'குண்டு சாலை' என்ற சொல் குறிக்கப்பட்டது. அதாவது பீரங்கிக் குண்டு சுடப்படும் இடத்திலிருந்து குண்டு விழும் இடம்வரை உள்ள தூரம் குண்டு சாலை ஆகும்.

புதுச்சேரி புறப்பகுதியில் வாழ்ந்த ஏழை ஒருவன் தன் வீட்டில் பிறந்து இறந்து (1788 ஆனி 3) போன அதிசயப் பிள்ளையைக் கவர்னரிடம் கொண்டு காட்டினான். அந்தக் குழந்தை ஆண் பெண் கலந்த வடிவமாக இருந்தது. கவர்னர் அதைப் பார்த்து அதிசயப்பட்டார். அதைப் பதப்படுத்திப் பிரான்சுக்கு அனுப்ப உத்தரவிட்டார். அந்தக் குழந்தையின் தந்தைக்கு ஒரு வராகன் கொடுத்தார்.

வரவேற்பு நிகழ்ச்சியிலோ அரசு விழாவிலோ பீரங்கி வெடித்துத் தெரியப்படுத்துவது என்பது சாதாரணமாய் நடந்திருக்கிறது. ஒரு பிரெஞ்சு அதிகாரி மொரேசியஸ் செல்வதற்குக் கப்பல் ஏறப்போனபோது தாசிகள் மேள வாத்தியங்களுடன் சென்றனர். ஒரு நட்டுவனாரும் சென்றார். அதிகாரி வந்ததும் 20 குண்டுகள் சுடப்பட்டன. இந்தச் சத்தத்தைக் கேட்ட நட்டுவனார் பயந்து செத்துப்போனார் (1785 மே).

கிறிஸ்தவ இந்து முரண்பாடு கலவரம் குறித்த செய்தி ஒன்றைப் பதிவு செய்திருக்கிறார் நாயக்கர் (1788 ஆவணி 27). புதுச்சேரி அரியாங்குப்பத்தில் கத்தோலிக்கக் கோவில் ஒன்றில் பத்து நாள் திருவிழா நடந்தது. ஒன்பதாம் நாள் விழாவில் வாகனத்தில் சாமி பவனி வந்தார். திருவிழாக் காலங்களில்

அந்தப் பகுதியில் பந்தலோ தோரணங்களோ கட்டக்கூடாது என மக்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர். ஒரு பிரெஞ்சு அதிகாரியும் ஆடம்பரமில்லாமல் விழா நடத்தவேண்டும் என உத்தரவு போட்டிருந்தார்.

கத்தோலிக்கரான பரமானந்தம்பிள்ளை என்பவரின் வீடு இருந்த தெரு முழுக்கப் பெரிதாய் பந்தல் போட்டிருந்தனர். இதற்கு மக்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர். அதிகாரியின் உத்தரவை மீறியதாகப் பரமானந்தம்பிள்ளையை எச்சரித்தனர் பிரெஞ்சுக் காவலர். கூலியாட்களைக் கொண்டு பந்தலைப் பிரித்துப் போட்டனர். பாதிரிகளுக்கு இது அவமானமாக இருந்தது. வேறுவழியில்லை. ஆடம்பரமில்லாமல் வாகனத்தை எடுத்துச் சென்றனர்.

1791 ஆடி 1ஆம் தேதி ஆபிரகாம் முதலி என்பவரின் வீட்டில் திருமணம் நடந்தது. மாப்பிள்ளை யானையின்மேல் அம்பாரியில் அமர்ந்திருக்க ஊர்வலம் சென்றது. இரவு நேரத்தில் ஊர்வலம் சென்றதால் யானையின் முன்னே தீவட்டி பிடித்துச் சென்றார்கள். இதைப் பார்த்துப் பறையர்களும் யாதவர்களும் ஊர்வலத்தில் நுழைந்து கலவரம் செய்தார்கள்.

இந்தக் கலவரம் பற்றிக் காவலர்க்குத் தெரிவிக்கப்பட்டது. அவர்கள் வருமுன்னே மாப்பிள்ளையும் கலவரக்காரர்களும் ஓடிவிட்டார்கள். அடுத்தநாள் ஆபிரகாம் முதலியைக் காவலர்கள் விசாரித்தனர். அவர் 'முன்பு தெய்வநாயகம் முதலி வீட்டில் இதுபோல் ஊர்வலம் நடத்தினார். அதனால் நானும் அப்படி நடித்தினேன்' என்றார். காவல் அதிகாரி அதை ஒத்துக்கொள்ள வில்லை. இனிமேல் இப்படி நடத்தக்கூடாது என்று எச்சரித்தார்.

கலவரம் செய்த யாதவர்களிடமும் பறையர்களிடமும் விசாரணை நடந்தது. அவர்கள், 'ஆபிரகாம் முதலி கரையான் பிரிவினர். புதுச்சேரியில் புதிதாகக் குடியேறியவர்கள். இப்பிரிவினர் தங்களை உயர்ந்தவராகக் காட்டிக்கொண்டதே கலவரத்துக்குக் காரணம் என்றனர். புதுச்சேரியில் புதிய சாதியினர் வலசை வந்தால் (குடியேறுதல்) தங்கள் அந்தஸ்தை வெளிகாட்டக் கூடாது என்பதைக் காவல் துறையினரும் நியாயப்படுத்திப் பேசினர்.

***

நாயக்கரின் மொழிநடை ஆனந்தரங்கம் பிள்ளையின் மொழி நடையைவிடக் கடினமானது. பிரெஞ்சுக் கலப்பு அதிகம். புதுச்சேரிப் பேச்சுவழக்கை இவர் கையாளும் விதமும் வித்தியாசமானது. பிரெஞ்சுக்காரர்கள் இந்தியாவை 'இந்துதேசம்' எனக் குறிப்பதை இவர் அடிக்கடி மேற்கொள் காட்டுகிறார். ஆங்கிலச் சொற்களைத் தமிழுக்கேற்பச் சொல்ல முயற்சிக்கிறார் (Hospital – இசுபித்தால்).

## பின் குறிப்பு

தமிழக வரலாற்றுச் சான்றுகளில் புதுச்சேரி வரலாற்று நாட்குறிப்புகள், சான்றுகள் முக்கியமாகக் கருதப்படுகின்றன.

பிரெஞ்சுக்காரர்கள் 1694இல் புதுச்சேரியில் வணிகம் செய்ய ஆரம்பித்தபோது பிரெஞ்சுக் கம்பெனி அதிகாரியாக பிரஞ்சுலா மாத்தேன் என்பவர் இருந்தார். இவர் பிரெஞ்சு மொழியில் நாட்குறிப்பு எழுதியிருக்கிறார். இதில் கிபி 1664 முதல் 1703 வரையுள்ள காலகட்டப் புதுச்சேரி அரசியல் சமூக வரலாறு வருகிறது.

புதுச்சேரி ஆளுநராக இருந்த ஹேபர் என்பவருக்கு துபாசியாக (1709) நயினாப்பிள்ளை என்பவர் இருந்தார். இவரை வீண்பழி சுமத்திச் சிறையிலடைத்தார்கள். இவரது மகன் குருவப்பப் பிள்ளை தன்னைக் காப்பாற்றிக்கொள்ள கிறிஸ்தவர் ஆனார். இவர் ஒரு நாட்குறிப்பு எழுதியிருக்கிறார். இது கிடைக்கவில்லை.

ஆனந்தரங்கம்பிள்ளையின் தம்பி திருவேங்கடம் பிள்ளை ஒரு நாட்குறிப்பு எழுதியிருக்கிறார். ஓலைச்சுவடி வடிவில் இருக்கும் இந்த நாட்குறிப்பு பாரிசு தேசிய நூலகத்தில் உள்ளது. இது முழுமையானது. சென்னை ஆவணக் காப்பகத்தில் இதன் நகல் உள்ளது. நான் இதைப் பெற முயற்சி செய்தபோது அடையாளம் காணமுடியவில்லை.

## ஆனந்தரங்கம்பிள்ளை நாட்குறிப்பு

ஆனந்தரங்கம்பிள்ளை நாட்குறிப்பு பத்து பகுதிகளைக் கொண்டது. பிள்ளையால் தமிழில் எழுதப்பட்ட இக்குறிப்புகள் முதலில் பிரெஞ்சு மொழியிலும் பின் ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டன. ஆனந்தரங்கம்பிள்ளை என்ற ரங்கப்பன், "காதால் கேட்பனவற்றையும் கண்ணால் காண்பனவற்றையும் கப்பலின் போக்குவரத்தையும் அவ்வப்போது நடைபெறும் அதிசயங்களையும் குறித்து வைத்து எழுதிவைத்துள்ளேன்" என்று கூறியுள்ளார்.

ஆனந்தரங்கம்பிள்ளையின் நாட்குறிப்பு கி.பி. 1739 செப்டம்பர் 9இல் தொடங்கி, 1761 ஜனுவரி வரை உள்ளது. இந்த நாட்குறிப்பு மிகவும் நம்பகத்தன்மை உடையது எனப் பதிப்பாசிரியர்கள் கூறுகின்றனர்.

ஆனந்தரங்கம்பிள்ளை சென்னை, பெரம்பலூரில் 1709 மார்ச் 10இல் பிறந்தார். சென்னை நாட்டுப்பிள்ளையார் கோவில் தெருவில் 7 வயது வரை வாழ்ந்தார். தந்தை திருவேங்கடம் பிள்ளை; வசதியான வணிகர். தாயார் பெயர் நாட்குறிப்பில் வரவில்லை. பிள்ளையின் மூன்றாம் வயதில் தாயார் இறந்தார். இவரது தந்தை 1722இல் புதுச்சேரியில் குடியேறினார்.

பிள்ளை பிரெஞ்சு, தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளும் அறிந்தவர். பார்சியும் இந்துஸ்தானியும் படிக்கும் அளவுக்குத் தெரியும். அந்தக் காலத்தில் வணிகர்கள் பேசிய கலப்புப் போர்ச்சுக்கீசிய மொழியை அறிந்திருக்கிறார். ஆனந்தரங்கம்பிள்ளைக்கு ஆங்கிலம் தெரியாது. இவர் கி.பி. 1759 ஜூன் மாதம் தன் 83ஆம் வயதில் தன் தங்கையின் வீட்டில் மரணமடைந்தார்.

ஆனந்தரங்கம்பிள்ளையின் நாட்குறிப்பு தமிழகச் சமூக வரலாற்றை எழுதுவதற்கான அடிப்படைச் சான்றுகளில் ஒன்று எனப் பதிப்பாசிரியர்கள் கூறினாலும் இதுபற்றி விரிவான ஆய்வு வரவில்லை. ஆனந்தரங்கம்பிள்ளையின் நாட்குறிப்பையும் வீரநாயக்கரின் நாட்குறிப்பையும் ஒருசேர ஆராய்வதன் மூலம் புதுச்சேரி வலங்கை இடங்கைச் சாதி பற்றிய விரிவான ஆய்வை முன்வைக்க முடியும்.

**பனுவல், அக்டோபர் 2012**

# ஆண்டாளும் ஆமுக்த மால்யதவும்

கிருஷ்ணதேவராயர் இயற்றிய நூல்களில் சிறந்ததாகவும் பெருங்காவியமாகவும் கருதப்படும் தெலுங்கு மொழியில் அமைந்த 'ஆமுக்த மால்யத' என்ற நூல் ஆண்டாளின் வரலாற்றைக் கூறுவது. இந்நூல் ஆறு அத்தியாயங்களை (ஆஸ்வாசம்) உடையது; வேதம் வெங்கடராய சாஸ்திரி எழுதிய உரை நூலில் ஏழு அத்தியாயங்கள் உள்ளன என்கிறார் இந்நூலின் தமிழ் மொழிபெயர்ப்பாளர் மு.கு. ஜகந்நாத ராஜா.

'ஆமுக்த மால்யத' என்பதற்குச் 'சூடிக்களைந்த பூமாலையைத் தந்தவர்' என்பது பொருள். இது 'விஷ்ணு சித்தியம்' என்றும் வழங்கப்படும். இந்நூலைக் கிருஷ்ணதேவராயரின் அவைப்புலவராக இருந்த அல்லசானி பெத்தன்னா என்னும் புகழ்பெற்ற கவிஞர் இயற்றினார் என்று கூறும் கருத்து தவறு என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. கிருஷ்ணதேவராயர் 1515 – 1520ஆம் ஆண்டு கால கட்டத்தில் இந்நூலை இயற்றியிருக்க வேண்டும் என்று இதை முதலில் பதிப்பித்தவர்கள் கூறுகின்றனர்.

கிருஷ்ணதேவராயர்1 விஜயவாடாவில் உள்ள ஸ்ரீகாகுளம் ஊரில் இருக்கும் கோவிலில் உறையும் தெய்வத்தை வணங்கி, ஏகாதசி விரதம் இருந்து அன்றைய நாளின் நான்காம் சாமத்தில் இக் காவியத்தை எழுத ஆரம்பித்திருக்கிறார்.

ஆமுக்த மால்யதவின் நடை கடினமானது, வடமொழிக் கலப்பு மிக்கது. இதற்கு முதலில் உரை எழுதியவர் கட்டுபல்லி ஸ்ரீனிவாசம். இந்த நூலுக்கு வேதம் வெங்கடராய சாஸ்திரியும் வாவிள்ள ராமஸ்வாமி சாஸ்திரியும் உரை எழுதி உள்ளனர். இவர்கள் இருவருமே தமிழர்கள். இவர்களின் தாய்மொழி தமிழ். இவ்விருவரின் உரை தவிர வேறு 30 உரைகளும் வந்துள்ளன. இந்நூலை முதலில் சி.பி. பிரௌன் என்ற ஆங்கிலேயர் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

இந்நூலின் சில பகுதிகளை (1945) ராஜபாளையம் ஏ.கே.டி. வெங்கடேச ராஜு என்பவர் 'பக்தன்' மாத இதழில் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார் (1946). இதன்பின் முழு நூலையும் ராஜபாளையம் பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா மொழிபெயர்த்திருக்கிறார். இதைத் தெலுங்கு பல்கலைக்கழகம் 1988இல் பதிப்பித்துள்ளது.

திருவேங்கடவன், ஆதிசேடன், பாஞ்சசன்யம், சுதர்சன சக்கரம், 12 ஆழ்வார்கள் ஆகியோரைத் துதித்து இந்நூலை ஆரம்பிக்கிறார் ராயர். நூல் ஆரம்பத்தில் கிருஷ்ணதேவராயரின் முந்திய தலைமுறையினரின் சிறப்புகள் பேசப்படுகின்றன.

ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாளின் கதையைக் கூறும் நூல் இது என்றாலும் பெரியாழ்வார், ராமாநுஜரின் குரு ஆளவந்தார் (யமுனாசாரியர்) ஆகியோரின் கதைகளும் சாண்டிக்ய கேசத்துவஜன் (விஷ்ணுபுராணம்), சண்டாள பிரம்ம ராட்சசன் (வராக புராணம்) ஆகியோரின் கதைகளும் இதில் வருகின்றன. இந்நூலில் கூறப்படும் பெரியாழ்வாரும் ஆண்டாளும் ஒரே காலத்தவர். ஆனால் கிருஷ்ணதேவராயர், இராமானுஜர், ஆளவந்தார் முதலியவர்களையும் ஒரே காலத்தவராகக் காட்டியுள்ளார்.

இக்காவியத்தில் பெரியாழ்வாரின்2 வரலாறு பாண்டிநாட்டு வர்ணனையுடன் ஆரம்பமாகிறது. அது நல்ல வேனில் காலம். முழுநிலவு காய்ந்துகொண்டிருந்தது. மதுரையில் தெப்பத்திருவிழா பார்ப்பதற்காக வந்த பிராமணன் ஒருவன் வைகையில் குளித்து விட்டு ஒரு வீட்டுத்திண்ணையில் அமர்ந்திருந்தான். நடுநிசி நெருங்க இன்னும் நேரமிருந்தது. அப்போது பாண்டிநாட்டின் அரசன் ஸ்ரீவல்லபன்3 மெய்க்காவலருடன் தன் காமக்கிழத்தியான தேவதாசி ஒருத்தியைப் பார்க்கப் போய்க்கொண்டிருந்தான். அரசன் தன்னை அலங்கரித்துக் கொண்டு செல்லும் அவசரத்தைப் பார்த்ததும் அந்தணனுக்கு அவனது நோக்கம் புரிந்தது.

அரசனைப் பார்க்காததுபோல் அந்தணன் ஒரு சமஸ்கிருத ஸ்லோகத்தை (வர்ஷித்த . . . எனத் தொடங்குவது) உரக்கச் சொன்னான். வடமொழி அறிந்த பாண்டியன்,

மழைக்காலத்துக்குத் தேவையானதை

மற்ற காலங்களில் சேகரிக்க வேண்டும்

இரவுக்குத் தேவையானதைப்

பகலில் சேகரிக்க வேண்டும்

வயதானபின் தேவைப்படுவதை

வாலிபப் பருவத்தில் சேகரிக்க வேண்டும்

அடுத்த ஜென்மத்திற்குத் தேவையானதை

இந்த ஜென்மத்தில் சேமிக்க வேண்டும்

என்னும் இந்த சுலோகத்தைக் கேட்டு நின்றுவிட்டான். அரண்மனைக்குத் திரும்பினான். பெரிய தட்டில் பொன் நாணயமும் தாம்பூலமும் வைத்து நடுஇரவில் சுலோகம் சொன்ன பிராமணனுக்கு அனுப்பிவைத்தான்.

இதன்பிறகு அரசனின் அகவிழி திறந்தது. மறுமை பற்றிய சிந்தனையை நான் அறியவில்லையே. இப்படியாகக் காலத்தைக் கழித்துவிட்டேன். இது பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும்: ஆழ்ந்த படிப்பும் சிந்தனையும் உடையவர்வழி அறிவேன் என்று எண்ணினான். தன் அரண்மனையின் அவைக்களத்தில் பொற்கிழி ஒன்றைக் கட்டினான். மெய்ப்பொருள் பற்றி ஆழமாய்ச் சிந்தித்தவர்கள் அது பற்றி விவாதித்துவிட்டு இந்தக் கிழியை அறுத்துக்கொள்ளலாம் எனப் பறை அறைவித்தான்.

மன்னனின் அறிவிப்பைக் கேட்டுப் பல்வேறு மதங்களை ஆராய்ந்தவர்களும் சிந்தனையாளர்களும் வந்தனர். மெய்ப் பொருள் பற்றி விவாதித்தனர். மன்னனுக்கு அவர்களின் விவாதம் திருப்தியைக் கொடுக்கவில்லை. இந்தச் சமயத்தில்தான் பெரியாழ்வார் பொற்கிழி அறுத்து மெய்ப்பொருளை விளக்க மதுரை வந்தார்.

வில்லிபுத்தூரில்4 பெரியாழ்வார் என்ற விஷ்ணுசித்தர் நந்தவனம் அமைத்து மலர் பறித்து மாலை கட்டிப் பரம்பொருளுக்குச் சாத்தும் கைங்கரியத்தைச்

செய்து வந்தார். அவருக்குப் பாண்டியன் அறிவித்த செய்தி தெரியாது. அவரிடம் திருமால் "மதுரைக்கு நீ போய் மெய்ப்பொருளை விவாதித்து, பாண்டியனின் பொற்கிழியை அறுத்துவா" எனப் பணித்தான்.

திருமாலின் பேச்சு பெரியாழ்வாருக்குத் திகைப்பை அளித்தது. "பெருமாளே, நான் மண்வெட்டி பிடித்துப் பூமியைத் திருத்துபவன்; மலர்மாலை கட்டுபவன்; எப்படி நான் மெய்ப்பொருளைப் பற்றி விவாதிப்பேன்" என்றார். திருமாலோ "உன்மீது நான் நின்று விவாதிப்பேன்: தைரியமாகப் போ" என்றார். ஆழ்வாரும் சுவாமியின் பேச்சுக்குப் பணிந்தார்.

பெரியாழ்வார் மதுரைக்குப் பயணம் செய்ய வேண்டிய ஏற்பாடுகளைத் திருமாலே கோவில் பூசகர்வழி செய்தார். பெரியாழ்வார் பயணம் செய்யப் பல்லக்கும் அனுப்பினார். பயணத்துக்குரிய பொரிவிளங்காய், நெல்லரிசி, வெல்லம், புளி, வடகம், பருப்பு, சமையல் பாத்திரங்கள் எல்லாவற்றையும் தயார் செய்தனர். கோவில் பூசகர்கள். ஆழ்வாருக்குத் துணையாக சாத்தினவர் (பூணூல் அணிந்தவர்) சாத்தாதவர் (பூணூல் அணியாதவர்) ஆகியோரும் உடன் சென்றனர்.

ஆழ்வார் மதுரைப் பாண்டியனின் அவைக்குச் சென்ற போது விவாதம் நடந்துகொண்டிருந்தது. அவர் அங்கே முன்னறிவிப்பின்றிதான் போனார். அவையோரிடம், "விவாதம் தடைப்பட வேண்டாம் நடக்கட்டும்" என்றார். அவர்களின் பேச்சு முடிந்தபின் தன் கருத்தை முன்வைத்தார். 'ஈக்ஷிகேர் நாசப்கம்' என்னும் பிரம்மசூத்திரம்வழி பிரகிருதியே மூல காரணம் என்ற கருத்தைக் கூறி சாங்கியவாதிகளுடனும் 'போகமாத்ர சாம்யலிங்காக்க' என்ற சூத்திரத்தை விளக்கி வேதாந்திகளுடனும் மாயாவாதக்காரர்களுடனும் 'பலம் அத உபபச்தே' என்ற சூத்திரம்வழி பூர்வமீமாம்சவாதிகளுடனும் 'சாஸ்த்ரயோனித்வாக்' சூத்திரம்வழி வைசேடிகருடனும் பரமாவணுவாதிகளுடனும் கடோபநிஷத்தை விளக்கி பௌத்தமத வாதிகளுடனும் 'அனுபபக்தேர் நசாரீரசு' என்னும் சூத்திரம்வழி சார்வாகர்களுடனும் வாதித்துத் தன் கருத்தை அவை முன் வைத்தார்.

(ஆழ்வார் இப்படியாகத் தன் விவாதத்தை விவரிக்கும் இடத்தில் சாண்டிக்ய கேசத்வஜன் புராணம் வருகின்றது.)

நிமி என்னும் அரச குடும்பத்தின் வழிவந்த ஒன்றுவிட்ட சகோதரர்கள் சாண்டிக்கியனும் கேசத்துவஜனும். இவர்களில் சாண்டிக்கியன் கருமயோகம் அறிந்தவன். இவர்களுக்கிடையில் ஏற்பட்ட போரில் கேசத்துவஜன் வெற்றி பெற்றான். சாண்டிக்யன் காட்டில் மறைந்து வாழ்ந்தான். அவனுக்குத் துணையாக அமைச்சர்களும் நம்பிக்கையான வீரர்களும் உடன் இருந்தனர்.

ஒருமுறை கேசத்துவஜன் யாகம் செய்தான். அப்போது யாகத்துக்குரிய பசுவைப் புலி கடித்துக் கொன்றுவிட்டது. அதனால் யாகம் தடைப்பட்டது. இதற்கு என்ன பிராயச்சித்தம் என்று புரோகிதர்களைக் கேட்டான் கேசத்துவஜன். அவர்கள் "நாங்கள் இது பற்றி அறியோம்; இதை அறிந்தவன் ஒருவன் தான்; அவன் உன் சகோதரன் சாண்டிக்கியன்தான்" என்றார்கள்.

கேசத்துவஜன் யாகப் பிராயச்சித்தம் பற்றி விபரம் கேட்க சாண்டிக்யனைத் தேடிச் சென்றான். அவனது அமைச்சர்களோ உன் சகோதரன் காட்டில் இருக்கிறான்; நீ போனால் அழிவு நிச்சயம் என்றனர். கேசத்துவஜனோ நான் அங்கே போகாமல் இருந்தால் யாகப்பிழை காரணமாகப் பாவத்தை அடைவேன். அவன் என்னைக் கொன்றாலும் தவறு செய்யாதவனாகவே இறப்பேன்: அதனால் காட்டுக்கு அண்ணனைத் தேடிப் போவேன்" என்றான்.

காட்டிலிருந்த சாண்டிக்கியனைத் தொழுது தன் பிரச்சினையைச் சொன்னான். அந்த நேரத்தில் சாண்டிக்கியனின் மந்திரிகள் இது சரியான தருணம்; கேசத்துவஜனைக் கொன்றுவிடு என்றார்கள். சாண்டிக்கியனோ அடைக்கலமாகி வந்தவனைக் கொல்லுதல் மகாபாவம், மாட்டேன் என்று சொல்லிவிட்டான். மேலும் யாகப்பிழையால் வந்த பாபத்தைத் தீர்க்கப் பிராயச்சித்தம் செய்தான். எல்லாம் கேட்ட கேசத்துவஜன் "குருதட்சிணையாக உனக்கு என்ன வேண்டும் கேள்" என்றான்.

சாண்டிக்யன் "எனக்கு நாடோ பொருளோ வேண்டாம்; பிறப்பை அறவே ஒழிக்கும் வித்தையை மட்டும் எனக்குப் போதித்துவிடு" என்றான்.

கேசத்துவஜனும் அந்த வித்தையைச் சொல்லிக்கொடுத்தான். "இனி உன் நாட்டையும் நீ ஆளலாம்" என்றான். சாண்டிக்கியனோ "என் மகனே அரசுரிமைக்குரியவன்" என்று கூறி அவனுக்கு நாட்டைக் கொடுத்துவிட்டுத் துறவியானான்.

இந்தக் கதையை விரிவாகச் சொன்ன பெரியாழ்வார் பாண்டியனின் காதில் எட்டெழுத்து மந்திரத்தை ஓதினார். அவன் உடனே ஞானம் அடைந்தான்: வைணவன் ஆனான். பெரியாழ்வாரின் வாதம் முடிந்ததும் பொற்கிழி தானாக அறுந்து அவர் காலடியில் விழுந்தது. பாண்டியன் அவரை யானைமேல் ஏற்றி மதுரைவீதியில் வலம் வந்தான். அவருக்குப் பொன்னும் பொருளும் கொடுத்து வில்லிபுத்தூருக்கு அனுப்பிவைத்தான்.

ஆழ்வார் அந்தப் பணத்தைக் கொண்டு சயனசுவாமிக்குக் கைங்கரியங்கள் செய்தார். முந்திய வழக்கப்படியே நந்தவனத்துப் பூக்களைக் கொய்து மாலை கட்டிச் சுவாமிக்குப் படைத்து வந்தார். இப்படி இருக்கும் நிலையில் திருமால் பூமகளிடம் இந்த ஆழ்வாரைப்போல் யமுனாச்சாரியர் என்னும் தொண்டன் ஒருவன் எனக்கு இருந்தான் தெரியுமா என்று கேட்டார். பூமகளின் பதிலுக்குக் காத்திராமல் யமுனரின் கதையைச் சொன்னார் திருமால்.

ஒரு காலத்தில் பரம சைவ சமயியான பாண்டியன் ஒருவன் இருந்தான். அவன் விஷ்ணுவின் நாமத்தைக் கேட்டாலே காதைப் பொத்திக்கொள்ளுவான். சங்கமர்களைப் போற்றுவான். சைவ மடங்களுக்கு வாரி வாரி வழங்குவான். வைணவர்களைப் புறந்தள்ளுவான்.

பாண்டியன் மனைவியோ திருமால் பக்தை. வீட்டில் துளசி வளர்த்துப் பூசை செய்துவந்தாள். கணவன் சைவனாக இருந்தாலும் அவன் மனம் கோணாதபடி பணிவிடைகள் செய்து வந்தாள். மன்னன் சைவனாதலால் பாண்டிநாட்டு மக்களும் சைவர்களாகவே இருந்தனர். இந்நிலையில் திருமால் மன்னனுக்கு வைணவத்தின் பெருமையைப் புகட்ட விரும்பினார். அதற்காக யமுனாச்சாரியர் என்பவரைத் தேர்ந்தெடுத்தார். அவரிடம் தன் சக்தியைப் பிரயோகித்தார்.

பாண்டியனின் மதுரை அரண்மனை வாசலில் எப்போதும் ஏககண்டி (ஸ்மார்த்தர்) பிரம்மச்சாரிகள் கூடியிருப்பார்கள். அரசியின் அரண்மனை வாசலில் திரிதண்டிக்காரர்கள் (வைணவர்கள்) தானம் வாங்கக் காத்திருப்பார்கள். இப்படி இருக்கும்போது யமுனர் பாண்டிய அரசியிடம் சென்று வணங்கி, "அன்னையே நான் பாண்டிநாட்டுச் சைவசமய வாதிகளை அறிவார்த்த பூர்வமாய் வாதிட்டு வென்று வைணவத்தை நிலைநாட்ட வந்திருக்கிறேன். அரசரிடம் அனுமதி வாங்கித் தாருங்கள்" என்றார்.

பாண்டிய அரசிக்குச் சந்தோஷம். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திப் பாண்டி நாட்டை வைணவ நாடாக்குவேன் என்று நினைத்தாள். தன் கணவனிடம் பக்குவமாகப் பேசி மதுரை சைவர்களிடம் யமுனர் வாதம்புரிய அனுமதி பெற்றாள்.

அரண்மனை அவையில் சைவ சாத்திரங்களை அறிந்த அறிஞர்கள் கூடினர். அவர்களின் நடுவில் யமுனரும் அமர்ந்தார். அரசன் யமுனரிடம், "சிறியவனே, நீ சைவர்களிடம் வாதம் செய்து தோற்றால் உன் கழுத்தில் லிங்கம்கட்டி விடுவார்கள்; உனக்கு மட்டுமல்ல, என் மனைவியின் கழுத்திலும் லிங்கம் கட்டுவார்கள்; என் ஆட்கள் தோற்றால் விஷ்ணுவின் சக்கிராயுத முத்திரையை எங்கள் உடம்பில் குத்திக்கொள்வோம்" என்றான். யமுனர் சிரித்துக்கொண்டே அதற்கு ஒத்துக்கொண்டார்.

வாதம் நடந்தது, யமுனரே வெற்றிபெற்றார். தோல்வியடைந்த சைவர்கள் வைணவ முத்திரை குத்திக்கொண்டனர். பாண்டியன் தன் நாட்டில் பாதியை யமுனருக்குக் கொடுத்தான். தம் தங்கையை அவருக்கு மணமுடித்து வைத்தான். யமுனர் பாண்டி நாட்டின் ஒரு பகுதிக்கு அரசரானார். அரச போகத்தில் திளைத்த அவர் திருமால் தனக்கு அபூர்வ சக்தியைப் பிரயோகித்த காரணத்தை மறந்துவிட்டார்.

இந்நிலையில், நாதமுனியின் சீடரும் உய்யக்கொண்டாரிடம் கற்றவருமான மணக்கால் நம்பி, 'இந்த யமுனர் குகையில் அமர்ந்து தவம் புரிந்த நாதமுனிகளின் பேரர் அல்லவா; இவருக்குப் பாடம் கற்பிக்க வேண்டும்' என நினைத்தார்.

மணக்கால் நம்பி யமுனரின் சமையல்காரரிடம் தூதுவளைக் கீரையைக் கொடுத்து "உம் தலைவருக்குச் சமைத்துக்கொடு" என்று சொன்னார். நம்பி தினமும் காலையில் தூதுவளைக் கீரையை யமுனரின் சமையல்காரனிடம் கொடுப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். ஒரு நாள் கீரையை அவர் கொண்டுபோகவில்லை. யமுனர் சமையல்காரனிடம் தூதுவளைக் கீரை இல்லையே என்றார். அவர் தினமும் கீரையைக் கொண்டு வருபவர் வரவில்லை என்றான். அப்படியானால் நாளை அவர் வந்ததும் என்னிடம் அழைத்துவா என்றார். அவனும் அடுத்த நாள் நம்பியை யமுனரிடம் அழைத்துச் சென்றான். யமுனர் நம்பியிடம் உமக்கு என்ன வேண்டும் எனக் கேட்டார்.

நம்பி, "எனக்கு எதுவும் வேண்டாம்; உங்களுக்கு நான் ஒரு புதையலைக் காட்டுவேன்; அது ஸ்ரீரங்கம் தீவில் உள்ளது" என்றார். யமுனாச்சாரியாரை ஸ்ரீரங்கம் கோவிலுக்கு அழைத்துச் சென்றார்; சயனசுவாமியின் முகத்தைப் பாரும் என்றார். அப்போது யமுனருக்குத் தான் பிறந்ததன் நோக்கம் புரிந்தது.

யமுனர், நம்பியிடம் "நீர் யார்?" எனக் கேட்டார். மணக்கால் நம்பி தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார் . யமுனர் உடனே பாண்டிநாட்டின் பொறுப்பைத் தன் மகனிடம் ஒப்படைத்துவிட்டு வைணவக் கைங்கரியம் செய்யப் புறப்பட்டார்.

(இந்தக் கதையின் முடிவில் பெரியாழ்வார் — ஆண்டாளின் வரலாறு தொடருகிறது.)

பெரியாழ்வார் பாண்டியனிடம் பெற்ற செல்வத்தைக்கொண்டு வடபத்ரசாயிக்கு முறைப்படி கைங்கரியம் செய்து வந்தார். குழந்தைப் பேறில்லாத அவர் ஒருநாள் நந்தவனத்தில் அழகிய பெண் குழந்தை ஒன்றைக் கண்டார். அதை எடுத்து மனைவியிடம் கொடுத்தார். கோதை எனப் பெயர் சூட்டினார்.5

கோதை வளர்ந்து பெரிய பெண் ஆனாள். பெரியாழ்வார் முறைப்படியே தன் பணிகளைச் செய்துவந்தார். கோதை அதற்கு உதவினாள். பெரியாழ்வார் நந்தவனப் பூக்களை மாலைகளாகக் கட்டிப் பூக்கூடையில் வைத்திருப்பார். கோதை அவருக்குத் தெரியாமல் அதைச் சூட்டிக்கொண்டு நந்தவனக் கிணற்று

நீரில் அழகு பார்த்துவிட்டு கழற்றி, எடுத்த இடத்திலேயே வைத்துவிடுவாள். ஆழ்வாருக்கு இது தெரியாது. என்றாலும் கோதையின் முகத்தில் சோகம் இருப்பதை உணர்ந்தார். காரணம் அவருக்குத் தெரியவில்லை.

(இந்த இடத்தில் தாசரி கதை வருகிறது.)

இது வழக்கமாகப் புராணங்களில் அடியார்களின் சிறப்பைக் கூறும் கதைபோல் உள்ளது. திருமாலின் வாமன அவதாரம் நிகழ்ந்த திருக்குறுங்குடியிலிருந்து6 ஒரு யோசனை தூரம் உள்ள ஒரு கிராமத்தில் பஞ்சமர் குலத்தில் பிறந்த தாசரி ஒருவன் இருந்தான். இவன் தினமும் கோழி கூவுமுன்பு திருக்குறுங்குடிக் கோவிலுக்கு வந்து கோவிலின் வெளியே நின்று கைசிகப்பண் பாடிச் சேவித்துவிட்டு வீட்டிற்குச் செல்வான்.

இந்த தாசரி அழுக்குடையவன், எண்ணைக் கறைபட்ட தோல் ஆடையையும் குல்லாவையும் அணிந்தவன். இவன் கழுத்தில் தோல்பை தொங்கும். அதில் பித்தளைச் சங்கும் சக்கரமும் இருந்தன. அவன் தாழங்குடை பிடித்திருந்தான். குதிரை மயிரால் முறுக்கிச் செய்யப்பட்ட நாணுடைய சுரைக்காய் வீணையையும் தாளத்தையும் கையில் வைத்திருந்தான். கழுத்தில் துளசி மணிமாலை அணிந்திருந்தான். கக்கத்தில் சிறுபெட்டி; நெற்றியில் திருமண்; இடையில் மஞ்சள் ஆடை. இத்தனை ஒப்பனையுடன் இருந்த அவனைச் சண்டாளன் என்றுதான் மற்றவர்கள் அழைத்தார்கள்.

தாசரி கையிலிருக்கும் தம்புராவை மீட்டிக் கைசிகப்பண் பாடினாலும் அவன் கோவிலுக்குப் போகமுடியாது. கோவில் தீர்த்தத்தைச் சூத்திரன் ஒருவன் கொடுக்க அதைக் குடித்துவிட்டு அந்தப் பஞ்சமன் வீடுதிரும்புவான்.

தாசரி குறுங்குடி ஊருக்குச் செல்லும்போது மேல் வருணத்தார் எதிரே வந்தால் ஒதுங்கிச் சென்றுவிடுவான். நான்காம் வருணத்தாரான சூத்திரர்கள் இவனைக் கண்டால் மெச்சுவார்கள். கோவில் பிரசாதத்தை வாங்கிக்கொடுப்பார்கள். அவன் அதை அடக்கத்துடன் வாங்கிக் கொண்டு தூரத்தே போய் நின்று புசிப்பான். இவன் கோவில் கருவறை நீர்விழும் தூம்பிலிருந்து பாய்ந்து வெளியே செல்லும் நீரைக் குடித்துவிட்டுச் சேரிக்குச் செல்வான்.

ஒருநாள் தாசரியின் வீட்டினுள் ஒரு பூனை புகுந்ததால் கோழிகள் கூவின. தாசரி பொழுது விடிந்துவிட்டது என நினைந்து எழுந்தான். காட்டுவழியே திருக்குறுங்குடி சென்றான். காட்டில் அவன் தவறுதலாக மருட்கொடியை மிதித்து விட்டான். அதனால் வழிதவறியது. (மருட்கொடியை மிதித்தால் வழிதவறிவிடும் என்பது நம்பிக்கை.) காட்டுக்குள்ளேயே சுற்றினான்.

தாசரி அடர்ந்த காட்டில் இருந்த ஓர் ஆலமரத்தின் அடியில் வந்து நின்றான். வழிப்பயணிகள் அந்த இடத்திற்கு வர மாட்டார்கள். அந்த ஆலமரத்தில் பிரம்ம ராட்சதன் ஒருவன் குடியிருந்தான். தாசரி அந்த ஆலமரத்தின் அடியில் நின்று இளைப்பாறினான். அப்போது மரத்திலிருந்த பிரம்மராட்சதன் பொதீரென்று கீழே குதித்தான்.

தாசரி ராட்சதனைப் பார்த்தான். மூளை உறிஞ்சப்பட்டது போன்ற உருண்டை வடிவ மண்டை ஓட்டுத் தலை. இறைச்சி தின்றதால் ஊன் துகள்கள் ஒட்டிநிற்கும் வாய். பச்சைத் தோள். அழுக்கடைந்த நாவிதனின் வீட்டு முற்றத்துப் பிணத்தின் வாடை வீசும் உடம்பு. இத்தகு தோற்றத்துடன் நின்ற பிரம்ம ராட்சதனைப் பார்த்து அதிசயப்பட்டு நின்றான் தாசரி.

ராட்சதனைக் கண்டு நாயும் நரிகளும் குரங்குகளும் ஓடி ஒளிந்தன. கறுத்த மேனியை உடைய இவன் ஒரு பிணத்தைக் கோவணமாகக் கட்டியிருந்தான். அவனது கோரைப்பற்கள் குளவிகளின் நீண்ட வரிசை போல் கோரோசனையின் நிறத்துடன் இருந்தன. தாடியும் மீசையுமாகப் பிடரிமயிருடன் இருந்தான் அவன். மார்பில் குடலால் ஆன பூணூல் அசைந்தது. அவன் வேதாளத்தின் குரலைக் கொண்டவன்.

ராட்சதன் மரத்திலிருந்து குதித்ததும் கொடூரமாகப் பார்த்தான். தாசரி கொஞ்சமும் யோசிக்காமல் அவன்மேல் அம்பைச் செலுத்தினான். அம்பை எளிதாக முறித்துவிட்டான். ராட்சதன். தாசரி அவன் சாதாரண ராட்சதன் அல்லன் என்று தெரிந்துகொண்டான். என்றாலும் அவனும் சண்டை செய்யத் தயாரானான். ராட்சதனோ ஆவேசமாய் வேதாளக் குரலில் பேசினான்:

"அடே உன் உடம்பின் கொழுப்பை கத்தியால் வெட்டப் போகிறேன். உன் மண்டையை நெருப்பில் வாட்டி உடைத்துத் தின்றுவிட்டு நிறையக் கள் குடிப்பேன். என் பசிக்கு உன் உடம்பு காணாது. வேறு என்ன செய்வது. இப்போது உன்னைத் தின்று திருப்தி அடைவேன்" என்று சொல்லிவிட்டுத் தாசரியைக் கயிற்றால் கட்டினான்.

தாசரி, "ராட்சதனே நான் திருக்குறுங்குடி நம்பியை நாளும் சென்று பாடி வருபவன். இன்று சேவை செய்யப் போகின்ற வழியில் உன்னிடம் மாட்டிக்கொண்டேன். நான் போய் நம்பியைச் சேவித்துவிட்டு கைசிகப்பண் பாடி முடித்தபின் இங்கு வருவேன். என்னை உன் உணவாக எடுத்துப் புசிக்கலாம்" என்றான்.

ராட்சதன், "என்னை நீ நன்றாக ஏமாற்றுகிறாய். நான் இங்கு தவறிவரும் வழிப்போக்கர்களைக் கொன்று தின்று உடம்பை வளர்த்தவன். என் கையில் அகப்பட்ட ஆகாரத்தை விட்டுவிடச் சொல்கிறாயா? நான் என்ன ஏமாளியா?" என்று கேட்டான்.

தாசரி இரண்டு காதுகளையும் பொத்திக்கொண்டு பேசினான். "ராட்சதனே, நம்பியைச் சேவிக்கும் நான் சத்தியந்தான் பேசுவேன். பகவானைச் சேவித்துவிட்டு வந்து என் உடலை உன்னிடம் ஒப்படைப்பேன். இது நிச்சயம். என்னை நம்பு. நான் வணங்கும் நாராயணன்மேல் சத்தியம். நான் சத்தியம் தவறினால் திருமாலைத் தவிர்த்து வேறு தெய்வத்தை நினைத்த பாவத்தை அடைவேனாகுக" என்று சூளுரைத்தான்.

தாசரியின் பணிவான பேச்சு ராட்சதனுக்கு நம்பிக்கை அளித்தது. அவன் கட்டுக்களை அவிழ்த்தான். ராட்சதனிடமிருந்து விடுதலை பெற்ற தாசரி அதிவேகமாய்க் குறுங்குடி போனான். அங்கே கைசிகப்பண் பாடி, பிரசாதம் உண்டு, நீர் அருந்திவிட்டு, ராட்சதன் நின்ற இடத்திற்குத் திரும்பி வந்தான். "ராட்சதனே என் உடம்பைச் சேதமின்றி உன்னிடம் ஒப்படைத்துவிட்டேன். என்னைக் தின்று பசியாறிக் கொள்ளலாம்" என்றான்.

தாசரி சத்தியம் தவறாது வந்தது ராட்சதனுக்கு வியப்பை அளித்தது. அவனது பேச்சு நெகிழ்ச்சியூட்டியது. பாசலம் என்ற நோயால் பாதிக்கப்பட்ட யானை தரையில் விழுவதைப் போல தாசரியின் முன்னே ராட்சதன் சாஷ்டாங்கமாய் விழுந்தான். "பக்தனே, நீ சத்தியத்தை நிறைவேற்றிவிட்டாய். குறுங்குடி சுவாமியைப் பற்றுக்கோடாகக் கொண்டு ஞானம் அடைந்து விட்டாய். உன் கடைக்கண் பார்வையால் நான் பாக்கியசாலி ஆகிவிட்டேன்" என்றான்.

தாசரி ராட்சதனிடம் ஏற்பட்ட மாற்றத்தைப்பற்றிக் கவலைப் படாமல் "ராட்சதனே என் கொழுப்பு நிறைந்த உடலைப் புசித்து உன் பசியை ஆற்றிக்கொள்" என்றான். இதைக் கேட்ட ராட்சதன், "என்ன சொன்னாய்? இப்படி அருள் இல்லாமல் பேசலாமா? இத்தனை நாளும் நான் நரமாமிசத்தை உண்டு கழித்து விட்டேன். பெரிய பாவத்தைச் சம்பாதித்துக் கொண்டேன். முனிவரோ, ஞானியோ, தவசீலரோ, அடியவரோ வந்து என்னை ஆட்கொள்ள மாட்டார்களா என்று ஏங்கிக் கொண்டிருந்தேன். நீ வந்தாய் பாகவதனே! நீ என்னைக் கடைத்தேற்றாவிட்டால் என் கதி என்ன ஆகும் என்று யோசித்துப்பார்" என்றான்.

தாசரிக்கு ராட்சதன் பேசியது வியப்பாக இருந்தது. "நீ என்ன பேசுகிறாய்? உன் கருத்து என்ன?" என்று கேட்டான். இப்போது ராட்சதன் வேதாளக் குரலில் மென்மையாகப் பணிவாகப் பேசினான்.

"இப்போது பிரம்மராட்சதனாய் இருக்கும் என் பூர்வீகப் பெயர் கும்பஜானு. நான் முந்திய பிறவியில் சோமவர்மா என்னும் பிராமணனாக இருந்தேன். அப்போது செய்த பாவத்தால் இப்படி ஆனேன். பாகவதனே நீ குறுங்குடி சென்று பாடிச் சம்பாதித்த புண்ணியத்தை எனக்குத் தாரைவார்த்துக் கொடுத்தால் ஜென்மம் ஈடேறும்; தருவாயா பாகவதனே?" என்று கேட்டான்.

தாசரி, "ராட்சதனே பல பிறப்புகளில் ஒரு பிறப்பு இது. இப்போது உன் பிறப்பை ஒழித்து இன்னும் பிறப்பு எடுக்கலாம். நான் இப்போது இழிபிறப்பாளன். இன்னும் எத்தனையோ பிறவிகள் எனக்கு வரலாம். இதற்காக நான் பாடிச் சேவித்த புண்ணியத்தை உனக்குத் தரமாட்டேன்" என்றான்.

ராட்சதன், "அப்படியானால் உன் புண்ணியத்தில் பாதியையாவது எனக்குத் தர முடியுமா? கடல் நீரை மீன் குடித்தால் கடலுக்கு நஷ்டமா என்ன?" என்று கேட்டான். தாசரியோ, "என் உடலுக்கு என் புண்ணியத்தை விலை பேசுகிறாயே, இந்தப் பேச்சை விட்டுவிட்டு என் உடம்பைப் புசித்துப் பசியாறு" என்றான்.

ராட்சதன், "பாகவதனே உன்னைத் தின்பது பற்றிய சிந்தனை எனக்கில்லை. அபச்சாரம் பேசாதே. சரி, இன்று நீ பாடிச் சம்பாதித்த புண்ணியத்தை மட்டுமாவது தருவாயா? பாகவதனே என் கதையைக் கேட்டுவிட்டு இரக்கம் இருந்தால் உன் புண்ணியத்தைக் கொஞ்சம் தா; சொல்கிறேன் கேள்" என்று சொல்லிவிட்டுத் தன் பூர்வகதையைச் சொல்ல ஆரம்பித்தான்.

"சோழநாட்டில் காவிரி பாயும் கிராமத்தில் பரம்பரை பிராமண குலத்தில் பிறந்தவன் நான். சிறு வயதிலேயே வேதம், இதிகாசம், பிற கலைகள் எல்லாம் கற்றுவிட்டேன். அதனால் செருக்குடன் இருந்தேன். எனக்குப் பண ஆசை வந்தது. அதனால் என் கிராமத்திலிருந்து மதுரைப் பட்டணத்துக்குச் சென்றேன். அங்கே பிராமணோத்தமம் குறையும் அளவிற்கான காரியங்கள் செய்தேன். பிராமண சாதியிலிருந்து விலக்கப்பட்ட சிலரை உடன் சேர்த்துக்கொண்டேன். சிரார்த்தம் செய்தேன். பாவங்களை ஏற்பதற்காக நிறையச் சம்பாதித்தேன்.

சேமித்த பணத்தை எல்லாம் நம்பிக்கையுள்ள வைசியன் ஒருவனிடம் வட்டிக்குக் கொடுத்தேன். இப்படியாக நான் நிறைய சம்பாதித்ததைத் திருடனின் உளவாளி ஒருவன் கவனித்துக்கொண்டு வந்தது எனக்குத் தெரியாது. பாகவதனே, எனக்கு நிறையப் பணம் சேர்ந்ததும் மதுரைக்குச் செல்லும் பயணிகளுடன் சென்றேன். திருடனின் உளவாளியும் பயணியாக எங்களுடன் வந்தான். நடுக்காட்டில் நாங்கள் சென்றபோது உளவாளி கொள்ளைக்காரர்களுக்குச் செய்தி அனுப்பினான். அவர்கள் ஆயுதங்களுடன் எங்களை வழிமறித்தார்கள்.

கொள்ளைக்காரர்களின் தலைவன் குறிவைத்து என்னிடம் வந்தான். கத்தியால் என்னைக் குத்தினான். உளவாளி என் பணத்தை எடுத்துக்கொண்டான்.

என்னுடன் வந்த என் அத்தை மகன் என்னைக் காப்பாற்ற தூக்கிக் கொண்டு ஓடினான். ஆனால் நான் வழியிலேயே இறந்துவிட்டேன். சாகும்போது எனக்கு அந்தக் கொள்ளைக்காரனின் உருவமும் பண ஆசையும்தான் முன்னுக்கு நின்றன. அதனால் பிரம்மராட்சதன் ஆனேன்" என்றான்.

இந்தக் கதையைக் கேட்ட தாசரி, தான் அன்று சம்பாதித்த புண்ணியத்தை ராட்சதனுக்குத் தாரை வார்த்துக் கொடுத்தான். உடனே அவன் பாவம் நீங்கியது. அங்கே சோமவர்மா என்ற பிராமணன் நின்றான். அவன் தாசரியை வணங்கிவிட்டு, "நான் தீர்த்தயாத்திரை போகிறேன்" என்று சொல்லிவிட்டுப் போனான்.7

(இந்தக் கதை முடிந்ததும் பெரியாழ்வார், ஆண்டாள் ஆகியோரின் கதை மீண்டும் ஆரம்பமாகிறது.)

திருமால் வராக அவதாரம் எடுத்தபோது நாராயணருக்குக் கைங்கரியம் செய்யவும் பாடித் துதிக்கவும் பாசுரங்கள் பாடவும் வில்லிபுத்தூரில் கோதை என்ற பெயரில் பிறந்தாள் பூதேவி.8

கோதை ரங்கநாதனை விரும்பியதால் அவளைப் பல்லக்கில் ஏற்றி ஸ்ரீரங்கத்திற்கு அழைத்துச் சென்றார் பெரியாழ்வார். ஆனால் அரங்கன் தன் மாயையால் கோதையை யாருக்கும் தெரியாமல் தன்னிடம் அழைத்துக்கொண்டார். கோதையின் மாயவடிவத்தைப் பெரியாழ்வாரிடம் அனுப்பிவைத்தார். ஆழ்வார் அது அவளின் உண்மை வடிவம் என நினைத்து அவளை வில்லிபுத்தூருக்குப் பல்லக்கில் அழைத்துச் சென்றார். அங்கே செல்லும்போது அவள் மாயமாக மறைந்துவிட்டாள்.

ஆழ்வார் தம் வீட்டினுள் நுழைந்தபோது அங்கே கோதை இருப்பதைக் கண்டார். பின்னர் பிரம்மா முதலியோர் ஆழ்வாரிடம் முறைப்படியாகப் பெண்கேட்டு வந்தனர். அவர் வில்லிபுத்தூரிலேயே கோதைக்குத் திருமணம் நடக்கவேண்டும் என்றார். அப்படியே மணம் நடைபெற்றது. அரங்கனும் ஆண்டாளை அழைத்துக்கொண்டான்.9

நூலின் சில முக்கியமான பகுதிகள்:

ஆமுக்த மால்யதவின் வர்ணனைப் பகுதி உரையாசிரியர்களால் பெரிதும் பாராட்டப்படுகிறது. சான்றுக்கு மதுரை பற்றிய வர்ணனை வருமாறு:

மதுரையில் பெரிய மாளிகைகள் இருந்தன. அவை வானைத் தொடும் அளவுக்கு உயரமானவை. மாளிகை உப்பரிகையில் இளம் நங்கையர் மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கின்றனர். இவர்கள் கணவர்களுடன் கலவி செய்தபோது முரட்டுத்தன வேகத்தின் காரணமாக முத்துமாலைகள் அறுந்து விழுகின்றன. முத்துக்கள் மாளிகை மேல்மாடத்தில் சிதறிக்கிடந்தன. அடுத்த நாள் பணிமகள் இந்த முத்துக்களையும் பெருக்கி மேல்மாடத்திலிருந்து வீசி எறிகிறாள். அவை குட்டி முகில்களின் வயிற்றில் விழுகின்றன. முகில்களின் வயிற்றில் அவை அடங்கியிருந்து கருக்கொண்டபோது மழைநீருடன் மதுரை மண்ணில் விழுகின்றன. இதனால் கடலில் மட்டுமல்ல மதுரையிலும் முத்துப் பிறக்கும் என்று கூறுகிறார்கள். இத்தகு சிறப்புடையது மதுரை.

ஆமுக்த மால்யதவில் வரும் மதுரை கற்பனையான நகரம். ராயர் மதுரையைக் கண்டு வர்ணனை செய்தார் எனக் கூற முடியாது. இக்காவியத்தில் பெண் உடல் குறித்த வர்ணனை சற்று மிகைப்படுத்தலுடன் வருகிறது. நங்கையின் நிதம்பம் மணல்திட்டு போல் உள்ளது. தொடை வாழைத்தண்டை நிகர்த்தது. பிரம்மாவின் கையில் உள்ள கயிற்று முடிச்சுபோல் மாலை நேரம் காட்சி அளிக்கிறது.

தாமரை மலர் மூடுவதும் விரிவதும் பற்றிய வர்ணனை வரலாற்றுச் சான்றுடையது. மாலை நேரத்தில் கறுத்த வண்டு தாமரை மலரில் புகுந்ததும் மூடிவிடும். அடுத்த நாள் காலையில் விடியும்போது வண்டு வெளியே பறக்கும். இந்தக் காட்சி பீரங்கியிலிருந்து புறப்படும் இரும்புக்குண்டுக்கு உவமையாக்கப்படுகிறது.

ஸ்ரீவில்லிப்புத்தூரில் அந்தணர்கள் ஜபமாலை உருட்டும் காட்சி ஏற்றம்வழி நீர் இறைப்பதுபோல் இருந்ததாம். வசந்த காலத்தை மகப்பேற்றுடன் ஒப்பிடுகிறார் ராயர். வசந்தகாலம் பிரசவம் பார்க்கும் மருத்துவச்சி போன்றும் குழந்தை

மன்மதன் போன்றும் பூ மொட்டுக்கள் கொப்பூழ் அறுக்கப் பயன்படும் கத்தி போன்றும் சிவந்த பூக்கள் கொப்பூழ் அறுபட்ட சமயத்தில் சிந்திய ரத்தம் போன்றும் இருந்ததாம்.

ராயர் தம் சமகாலத்து மக்களின் வழக்கங்கள் பலவற்றைக் கூறுகிறார். ஆந்திரநாட்டு வரலாற்றாசிரியர்கள் இவற்றைச் சான்றாகக் கொள்ளுகின்றனர்.

பெண்கள் ரவிக்கை அணிந்திருந்தனர். இது சாதாரணமாய் வழக்கத்தில் இருந்தது. வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு போடுவது சமூக மதிப்பை உயர்த்தும். தேங்காய் சிரட்டையில் (கொட்டாங்கச்சி) அகப்பை செய்தனர்; சமையல் செய்யும்போது சிரட்டை வேகமாய் எரியும்.

பெண்ணின் பிரசவ நேரத்தில் ஆரண்ய மந்திரம் ஓதினால் சுகப்பிரசவம் ஆகும் என்ற நம்பிக்கை பிராமணர்களிடம் இருந்தது. அடுத்த வீட்டிலிருந்து நெருப்பை இலவசமாகப் பெறும் வழக்கம் சாதாரண மக்களிடம் இருந்தது.

கீரை வகைகளை முற்றாத புளியந்தளிருடன் சேர்த்து எண்ணெய் ஊற்றி வதக்கி உண்பர். குளிர்காலத்தில் சாணி வரட்டியை எரிப்பர். சாணி வரட்டிக் கனலைக் கட்டிலின் அருகே வைத்திருப்பர்.

அரசர்கள் காட்டில் வேட்டையாடும் முன்பு வேலி அமைத்து வேலிப்பகுதிக்குள்ளேயே மிருகங்களை விரட்டுவர். கூர்மையான வலிய நாணல் வகை ஒன்று இருந்தது. இதைச் செப்பனிட்டு அம்பு செய்வர். இதனால் இந்த நாணலின் பெயரையே அம்புக்குச் சூட்டினர். (இந்த வகை நாணல் பூப்பது சரத் காலத்தில்.)

குற்றவாளிகளைச் சுண்ணாம்புக் காளவாயில் தள்ளுவது, இரும்புக் குறட்டால் உறுப்புகளை இழுப்பது முதலியன அன்றைய தண்டனை முறைகள். இறைவனுக்குப் படைக்கப்பட்ட நைவேத்திய வகைகளில் சர்க்கரை, நெய், கதலிப்பழம் கலந்த அதிமதுரமும் ஒன்று. உதட்டு வெடிப்புப் புண்ணுக்குத் தேன்மெழுகைப் பூசுவது என்ற வழக்கம் உண்டு. ஆனால் அது இழிவான செயலாகக் கருதப்பட்டது.

கொசுக்கடியிலிருந்து தப்ப வலைகட்டும் வழக்கம் இருந்தது. ஆண் பாம்பின் நச்சுக்காற்றில் மரங்களின் இலைகள் உதிரும்; பெண் பாம்பின் அமுதக் காற்றில் மரம் தளிர்க்கும். முள்ளம்பன்றியின் முள் வீட்டில் இருந்தால் கலகம் வரும்.

தோசைக்கல்லில் மாவு ஊற்றியதும் எழும் ஆவிபோல் நீராவிப் புகை வந்தது. இரவு நிலவு மெல்லிய தோசைபோல் இருந்தது என்னும் இரண்டு உவமைகள் ராயர் காலத்தில் தோசை என்ற உணவு சாதாரணமாக வழக்கில் இருந்ததைச் சுட்டுகின்றன.

பல், பறவை, அந்தணர் மூன்றுக்கும் இரண்டு பிறவிகள். பல் விழுந்து முளைக்கும். பறவைக்கு முட்டை, குஞ்சு என இரு பிறவிகள். பார்ப்பானுக்குத் தாய்வழிப் பிறப்பு, முப்புரி நூல் அணிவதால் உருவாகும் பிறப்பு.

ராயர் அரசியல், நீதி பற்றிய சில அபூர்வமான தகவல்களைக் கூறுகிறார்.

கோட்டைப் பாதுகாப்பு நிர்வாகத்தில் அந்தணர்களுக்கு முன்னுரிமை கொடுக்க வேண்டும். கல்வியில் பெரியவரிடம் அரசன் கேள்வி கேட்கக்கூடாது. வருவாய்த்துறை அதிகாரியைக் கோவில் நிருவாகத்தில் அமர்த்தக்கூடாது. அவர்கள் கோவில்களின் உபரி வருமானத்தை வருவாய்த்துறையில் சேர்த்துவிடுவார்கள். அதனால் கோவில்களுக்குத் தனி அதிகாரிகளை நியமிக்க வேண்டும்.

பிரம்மஹத்தி செய்தல், மதுகுடித்தல், திருடுதல், குருவின் மனைவியைப் புணருதல் இத்தகைய குற்றங்களைச் செய்தவர்களை உடன் சேர்த்துக்கொள்ளுதல் பஞ்சமா பாதகம் எனப்படும். குழந்தை பிறந்து பல் முளைக்கும் காலத்தில்தான் பெண் கணவனைப் புணர வேண்டும்.

இக்காவியத்தில் இரண்டு கிளைக்கதைகள் வருகின்றன.

கௌதமன் என்ற பிராமணன் இருந்தான். அவன் காட்டில் சந்தித்த வேடப் பெண்ணை மணந்தான். ஒருமுறை இருவரும் காட்டுவழிப் பயணம்

செய்யும்போது யானைகளால் விரட்டப் பட்டனர். அவன் காட்டில் ஓடிக்களைத்து ஓர் ஆலமரத்தின் அடியில் போய் அமர்ந்தான்.

பிராமணனுக்கு அகோரப்பசி. தனியே இருந்து புலம்பினான். அவனது புலம்பலைக் கேட்ட ஒரு கொக்கு அவனுக்கு உணவும் கொடுத்துப் பணமும் தந்தது. அடுத்த நாள் காலையில் அந்தக் கொக்கைக் கொன்று இறைச்சியை எடுத்துக்கொண்டு பயண மானான். நன்றிகெட்ட செயலுக்கு இக்கதை உதாரணமாகக் கூறப்படுகிறது. (இது பாரதத்தில் உள்ள கிளைக்கதை.)

காவலர்களுக்கு நல்ல சம்பளமும் விருதுகளும் கொடுத்துப் பாதுகாக்க வேண்டும். அப்படி இல்லையென்றால் குற்றவாளி அல்லாத ஒருவனைப் பிடித்துத் தண்டனை வழங்கி வழக்கை முடித்துக்கொள்வார்கள். இது கழுவேற்றிய பெரிய செட்டி நியாயம் ஆகிவிடும் என்கிறார் ராயர். இந்த நியாயம் ஒரு கதையின் பின்னணியில் உருவானது. (இந்தக் கதையை உரையாசிரியர் கூறுவதாக மொழிபெயர்ப்பாளர் ஜகந்நாதராஜா கூறுகிறார்.)

ஓர் ஊரில் குடியானவன் ஒருவன் மண்ணால் கட்டப்பட்ட கூரை வீட்டில் இருந்தான். ஒருமுறை திடீரென்று பெய்த மழையில் வீடு இடிந்து விழுந்தது. குடியானவன் மழையால் வீடு இடிந்துவிட்டது என்று அந்த ஊர் மூட அரசனிடம் முறையிட்டான்.

அரசன் பெருமழைக்கு மேகம்தான் காரணம், மேகம் வரவேண்டுமென்றால் குயவனின் சூளை காரணம், பிடித்துவா ஊர்க் குயவனை என்றான். காவலர்கள் குயவனைப் பிடித்து அரசன்முன் நிறுத்தினார்கள். அரசன் பெரிய அளவில் சூளை வைத்ததால்தானே மேகம் வந்தது. அதனால் நீதான் குற்றவாளி என்றான்.

குயவன் அரசனிடம் "அரசே இந்த ஊரில் பெரிய கல்யாணம் நடந்தது. அதற்குப் பானைகள் வேண்டிதான் சூளை வைத்தேன்" என்றான். அரசன், அப்படியானால் கல்யாண மாப்பிள்ளையைக் கொண்டுபோய்க் கழுவிலே ஏற்று. அவன்தானே இதற்குக் காரணம் என்றான்.

கல்யாண மாப்பிள்ளை ஸ்தூல சரீரம் உடையவன். செட்டியாரான அவன் அரசனிடம், "அரசே நான் குற்றவாளிதான், ஆனால் என்னைக் கழுவில் ஏற்றினால் கழுமரம் ஒடிந்துவிடும். காவலர்களும் என்னைத் தூக்கிக் கழுவில் வைக்க முடியாது, யாராவது ஒல்லியான சரீரம் உடையவனே இதற்கு ஏற்றவன்" என்றான்.

அரசன் காவலர்களைப் பார்த்தான். அவர்களில் ஒருவன் "அரசே நம் ஊரின் எல்லைப் புறத்தே உள்ள கோவிலில் ஓர் ஆண்டி இருக்கிறான்: ஊதினால் பறந்து விடுவான். ஒல்லியான சரீரம். அவனைக் கழுவில் ஏற்ற எங்களுக்கும் வசதி. கழுமரமும் ஒடியாது" என்றான். அரசன் அப்படியே செய்யுங்கள் என்றான். காவலர்கள் கோவில் ஆண்டியைக் கழுவில் ஏற்றினார்கள்.

ஆமுக்த மால்யதவில் இராமாயண உத்தர காண்ட நிகழ்ச்சிகள் வருகின்றன. பிருகுமுனிவர் சாபம் பெற்ற கதையும் சூர்ப்பநகை கதையும் மேற்கோளாகக் காட்டப்படுகின்றன.

**அடிக்குறிப்புகள்**

1. விஜயநகரப் பேரரசின் தலைசிறந்த அரசர் கிருஷ்ணதேவராயர். சுங்க, சாளுவ வம்சங்களின் ஆட்சிக்குப்பின் துளுவ வம்ச அரசனான துளுவ நரசிம்மராயன் மகன் வீரநரசிம்மராயலு (1505 – 1509) என்ற அரசனை அடுத்து வந்த அரசர் கிருஷ்ணதேவராயர். துளுவ வம்சத்தினர்; துளு அல்லது கன்னடத்தைத் தாய் மொழியாகக் கொண்டவர். அதன்படி கிருஷ்ணதேவராயரின் தாய்மொழி கன்னடம்தான்.

கிருஷ்ணதேவராயர் 1487இல் பிறந்தவர். 1509இல் பட்டத்துக்கு வந்தவர். இவரது மனைவிகள் திருமாலா தேவி, சின்னாதேவி, அன்னபூர்ணா தேவி ஆகியோர். மகன் திருமலைராயர்.

கிருஷ்ணதேவராயருக்குத் துளுவ வம்சத்தினரான 'அப்பாஜி' என்னும் அமைச்சர் உதவியாக இருந்தார். ராயரின் காலத்தை விஜயநகர அரசின்

பொற்காலம் என்பர். ராயர் கலை மனம் உடையவர். கவிஞர், புலவர்களை ஆதரித்தவர். இலக்கிய இரசனை உடையவர்.

இவரது அவையில் அல்லசானி பெத்தண்ணா, நந்தி திம்மண்ணா, அய்யல ராஜு, ராமபத்ருடு, தூர்ஜடி, மாதயகாரி மல்லன், தெனாலி ராமகிருஷ்ணா, பிங்கிளி சூரன்ன, ராமராஜ பூஷண என்னும் 'அஷ்டதிக் கஜங்கள்' என்று வழங்கப்பட்ட எட்டுத் தெலுங்குக் கவிஞர்கள் இருந்தார்கள்.

ராயர் சூடாமணி நிகண்டு இயற்றிய மண்டல புருடர், இருசமய விளக்கம் எழுதிய அரிதாசர், திருவாரூர் தத்துவப்பிரகாசர் ஆகிய தமிழ்ப் புலவர்களை ஆதரித்திருக்கிறார்.

ராயர் சமராங்கனா சார்வபௌமர் என்னும் விருது பெற்றவர். தாய்மொழி கன்னடம் ஆனாலும் தெலுங்கு, வடமொழிகளில் வல்லவர். இவர் வடமொழியில் மகாசல சரித்திர, சத்யாவதி பரிணயம், சகலகதா சாரசங்கிரகம், ஞான சிந்தாமணி, ரசமஞ்சரி ஆகிய நூல்களையும் இயற்றியுள்ளார் என்பர். ஆனால் இவை கிடைக்கவில்லை. கிருஷ்ணன் ஜாம்பாவதியைத் திருமணம் செய்த நிகழ்ச்சியின் அடிப்படையில் எழுதப்பட்ட 'ஜாம்பவதி பரிணயம்' என்ற நாடகத்தையும் இவர் எழுதியுள்ளார். இது 1969இல் அச்சில் வந்திருக்கிறது.

2. பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான பெரியாழ்வாரின் இயற்பெயர் விஷ்ணு சித்தர். இவர் தோன்றிய இடத்தின் பெயரால் வில்லிபுத்தூரர், புதுவை மன்னர் என்று அழைக்கப்பட்டார். பட்டர்பிரான் என்ற பெயரும் இவருக்கு உண்டு.

பெரியாழ்வார் குரோதன வருஷம் (கலி 57) ஆனி மாதம் சுக்கிலபட்ச ஏகாதசி ஞாயிற்றுக்கிழமை சுவாதி நட்சத்திரத்தில் பிறந்தார் என்று வைணவ பரம்பரை கூறும். வடிவழகிய நம்பி என்பவர் 'பெரியாழ்வார் பிரபந்தத்தில்' விஷ்ணுசித்தரான இவர் கருடனின் அம்சமுடையவர், பேரழகுடையவராய் இருந்தார் என்று கூறுகிறார்.

வில்லிபுத்தூரில் பிறந்த இவரது தந்தை முகுந்த பட்டர். தாய் பதுமையார் என்ற பத்மவல்லி. பெரியாழ்வார் வைணவப் பிராமணரில் வேயர் குலத்தைச் சார்ந்தவர் என்பர். வேயர் குலம் என்பது பிராமணரில் மூங்கில் கிளையைக் குறிக்கும் என இராமநுஜ நூற்றந்தாதியில் திருவரங்கத்தமுதனார் கூறுவார் என்று குறிப்பிடுகிறார் மு. இராகவையங்கார்.

பெரியாழ்வாரின் நெருங்கிய நண்பர் செல்வநம்பி. இவரைச் சந்திக்கப் பெரியாழ்வார் நம்பியின் ஊரான திருக்கோட்டியூருக்குப் போயிருக்கிறார். இவ்வூரும் வில்லிபுத்தூரைப் போன்ற வைணவத் தலம்தான். பெரியாழ்வார் திருப்பல்லாண்டில் செல்வநம்பியை,

அவ்வழக்கு ஒன்றும் இல்லா

அணிசோட்டியர்கோன் அபிமான துங்கன்

செல்வனைப் போல் திருமாலே நானும்

உனக்குப் பழ அடியேன்

என்கிறார்.

பெரியாழ்வார் வில்லிபுத்தூரில் கோவில் கைங்கர்யம் செய்தவர். பரம பாகவதராக வாழ்ந்தவர். பெரியாழ்வாரின் மகள் ஆண்டாள். இவர்களின் சமகாலத்தவர்கள் நம்மாழ்வாரும் திருமங்கை ஆழ்வாரும்.

ஆண்டாளின் திருப்பாவையில் வரும் "வெள்ளி எழுந்து வியாழன் உறங்கிற்று" என்னும் வரிகளை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்தவர்கள். இது ஆண்டாள் காலத்தில் நடந்த விசேடச் சம்பவம் எனக் கூறுகின்றனர். இதற்குப் "புலப்படும்படி சந்திரன் உதயமானான்: மேல்திசை வானத்தில் கண்ணுக்குப் புலப்பட்ட வியாழன் அஸ்தமித்தான் என்பது பொருள்" என்று எழுதுகின்றனர். இந்த நிகழ்ச்சி நடந்தது கி.பி. 731 டிசம்பர் 18இல் என்று சாமிக்கண்ணுபிள்ளை கணிக்கிறார். பெரியாழ்வாரின் காலம் இதற்கு ஒத்துப்போகிறது.

இதனால் ஆண்டாள் திருப்பாவையை கி.பி. 731இல் எழுதினார் என்றும் நளவருஷம் ஆடிமாதம் (கி. பி. 716) பிறந்தாள் என்றும் கூறுகின்றனர்.

பெரியாழ்வாரின் மதுரைப் பயணமும் பாண்டியனின் அவையில் பொற்கிழி அறுத்து அவனை வைணவன் ஆக்கியதும் ஆகிய செய்திகள் ஆழ்வாரின் வாழ்க்கையில் முக்கியமானவை. 'ஆமுக்த மால்யத' காவியத்தில் வரும் இச்செய்திக்குச் சான்றுகள் உள்ளன.

பாண்டியப்பட்டர் என்பவர் பெரியாழ்வார் கிழியறுத்த கதையை,

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தான் என்று

ஈண்டிய சங்கம் எடுத்தூத — வேண்டிய

வேதங்கள் ஓதி விரைந்து கிழி அறுத்தான்

பாதங்கள் யாமுடைய பற்று

என்று கூறுகிறார்.

மணவாள மாமுனிகள் "வில்லிபுத்தூர் பட்டர் பிரான் பெற்றான் பெரியாழ்வார் என்னும் பெயர்" என்கிறார். ஆசிரியர் பெயர் தெரியாத பழைய வெண்பா ஒன்று

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தான் என்று

ஈண்டிய சங்கம் எடுத்தூத— வேண்டிய

வேதங்கள் ஓதிவிரைந்து கிழியறுத்தார்

பாதங்கள் யாமுடைய பற்று

எனக் கூறும்.

இந்தப் பாண்டியனுக்குப் பெண்களின் கூந்தலில் உள்ள மணம் இயற்கையானதா செயற்கையால் வந்ததா என்ற சந்தேகம் வரவில்லை. இவன் தத்துவார்த்தமான விஷயங்களில் ஈடுபட்டவன்.

பெரியாழ்வார் பொற்கிழியை அறுத்துச் சம்பாதித்த பணத்தை வில்லிபுத்தூர் கோவிலுக்குச் செலவிட்டிருக்கிறார். இவர் வட நாட்டுக் கங்கைக்கரையில் உள்ள வடமதுரை, கோவர்த்தனம், அயோத்தி, பதரிகாசிரமம் ஆகிய பதிகளுக்குப் பயணித்தவர். இவர் பாடிய முக்கியத் தலம் திருவரங்கம்.

பெரியாழ்வார் கண்ணனிடம் மிகுந்த ஈடுபாடுடையவர். பாகவதக் கதைகளைத் தன் சமகாலப் போக்குடன் தருகிறார். இவரின் பாசுரங்களில் ராமாயணச் செல்வாக்கு அதிகம்.

3. ஸ்ரீவல்லபப் பாண்டியன் என்பவன் கோநெடுமாறன், தென்கூடற்கோன் என்னும் பெயர்களை உடையவன். பெரியாழ்வார் இவன் காலத்தவர். இவன் நின்றசீர் நெடுமாறன் என்ற பாண்டியனின் பேரன். இவனது மனைவி பூசுந்தரி, அமைச்சர் மாறன்காரி, இவர் வில்லிபுத்தூர் அருகே உள்ள களக்குடி ஊரினர்.

இப்பாண்டியன் தீவிர சைவன் என்றும் மனைவியும் அமைச்சரும் வைணவர்கள் என்றும் பெரியாழ்வாரால் இப் பாண்டியன் வைணவன் ஆனான் என்றும் கருத்துக்கள் உண்டு. இவனது காலம் கி.பி. 740 — 767. இப்பாண்டியனைப் பெரியாழ்வார் "சொன்னவில் கூர்வேல் கோநெடுமாறன் தென் கடற்கோன்" என்றும்

பருப்பதத்து கயல்பொறித்த பாண்டியர் குலபதிபோல்

திருப்பொலிந்த சேவடிஎன் சென்னியர் மேற்பொலிந்தாய்

என்றும் பாராட்டுகிறார் (மு. இராகவையங்கார் ப. 101.)

4. வைணவப் பதிகளில் திருக்கோட்டியூருக்கும் ஸ்ரீவில்லி புத்தூருக்கும் தனியான சிறப்புகள் உண்டு. பெரியாழ்வாரும் ஆண்டாளும் பிறந்த இடம் வில்லிபுத்தூர். இந்த ஊரின் பழைய பெயர் புதுவை. இப்பெயரைப் பெரியாழ்வாரும் குறிப்பிடுகிறார். இவ்வூரின் ஆரம்பகாலப் பெயர் வேறொன்று இருந்தது என்பதற்கு வாய்மொழி வழக்காற்றில் சான்று உண்டு.

புதுவை என்னும் பெயர் இவ்வூருக்கு வரும் முன்பு இவ்வூரையும் இதைச் சுற்றிய பகுதிகளையும் மல்லி என்னும் வேடர்குலப் பெண் ஆண்டு வந்தாள். இதனால் இப்பகுதியை மல்லிநாடு என அழைத்தார்கள்.

வேடர்குல மல்லிக்கு வில்லி, சண்டன் என்னும் இரண்டு மக்கள் இருந்தனர். இருவரும் நல்ல வேட்டைக்காரர்கள். ஒருநாள் அவர்கள் அடர்ந்த காட்டுக்குள் வேட்டையாடச் சென்றிருந்தனர். அப்போது வில்லியைப் புலி ஒன்று பிடித்துக்கொண்டது. அண்ணனைக் காப்பாற்ற முடியவில்லையே என்ற ஏக்கத்தில் சண்டன் மயங்கி விழுந்தான். மயங்கிய நிலையில் அவன் அந்தக் காட்டில் அடர்ந்த ஆலமரத்தின்கீழ் வடபத்ரசாயி, சயனமூர்த்தி விக்கிரகங்களும் பெரிய பானை நிறைய தங்க நாணயங்களும் இருப்பதைக் கண்டான்.

சண்டன் விழித்ததும் தான் மயங்கிக் கிடந்த இடத்தில் புலி செத்துக்கிடப்பதைக் கண்டான். அருகே அண்ணன் வில்லி உயிருடன் இருந்தான். சண்டன் அண்ணனிடம் தான் கண்ட கனவைப்பற்றிச் சொன்னான்.

இருவரும் நடுக்காட்டிற்குச் சென்றனர். சண்டன் கனவில் கண்ட ஆலமரத்தை அடையாளம் கண்டுபிடித்தான். மரத்தின் அடியில் வடபத்ரசுவாமி, சயனமூர்த்தி விக்கிரகங்கள் இருந்தன. அருகில் பானை நிறையத் தங்க நாணயங்கள். இருவரும் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு போனார்கள். அந்தக் காட்டில் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து விக்கிரகங்களை வைத்தார்கள். கோவில் கட்டினர். கோவிலைச் சுற்றி மக்களைக் குடியேற்றினர். பிற்காலத்தில் வேடன் வில்லியின் பெயரால் இந்த ஊர் வில்லிபுத்தூர் ஆனது.

5. பன்னிரு ஆழ்வார்களில் பெண் அடியவரான ஆண்டாள் என்னும் கோதை பற்றிய கதை சாதாரண இலக்கிய வாசகனும் அறிந்ததே. கோதா என்பதற்கு வாக்கைச் சரியாகக் கூறுபவள் என்ற பொருள் உண்டு. சாமவேத சாகையொன்றில் கோதை என்ற பெயரில் பெண் புலவர் வருகிறார்.

ஆண்டாளின் இயற்பெயர் கோதை எனத் திவ்வியசூரி சரிதம் கூறும். இன்னொரு பெயர் சூடிக்கொடுத்த நாச்சியார். பெரியாழ்வார் இவரைச் 'சுரும்பார்

குழல் கோதை' என்று அழைத்திருக்கிறார்.

வில்லிபுத்தூர் தலபுராணமான, 'ஸ்ரீவராஹக்ஷேத்ர மகாத்மியம்' என்ற நூல் பூதேவியே ஆண்டாளாக அவதரித்தார், பெரியாழ்வார் ஐந்து வயதுக் குழந்தையாக அவரைக் கண்டெடுத்தார் எனக் கூறும்.

ஆண்டாளை அரங்கன் கைப்பற்றிய கதை திவ்யசூரி சரிதத்தில் வருகிறது இது. ஏனைய குருபரம்பரை வரலாறுகளில் இல்லை.

"திருவரங்கத்துப் பெருமானான அழகிய மணவாளனை அன்றி மானிடவர்க்கன்றி பேச்சுப்படில் வாழுகில்லேன்" என்று வாழ்ந்த ஆண்டாளின் திருமணத்தில் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், குலசேகர ஆழ்வார், மதுரகவியாழ்வார் போன்றோரும் கேட்டுச் சொன்னபடி ஆண்டாள் சில பாடல்களைப் பாடவும் செய்தாள்.

ஆண்டாளின் திருமணப் பொறுப்பை ஸ்ரீவல்லப பாண்டியனும் மதுரகவியாழ்வாரும் ஏற்றுக்கொண்டனர். கோதையின் திருமணம்கூட சடகோபரின் அனுமதியின் பின்னரே நடந்தது.

பெரியாழ்வார் ஆண்டாள் ஸ்ரீவல்லபப்பாண்டியன் ஆகிய மூவரும் ஆழ்வார் திருநகரி என்ற திருக்குருகை சென்று அங்கே நம்மாழ்வாரைக் கண்டு வணங்கினர். பெரியாழ்வார் நம்மாழ்வா ரிடம் ஆண்டாளின் திருமணத்திற்கு அனுமதி கேட்டாள். அவர் சம்மதித்ததும் ஸ்ரீரங்கத்துக்கு மகளை அழைத்துச் சென்றார்.

பெரியாழ்வார் மகளுடன் ஸ்ரீரங்கம் போகும்போது திருமங்கையாழ்வார் அவர்களை வழிமறித்தார். அப்போது ஆண்டாள் திருமங்கையாழ்வாருக்கு மந்திரோபதேசம் செய்தார்.

இப்படியாகத் திவ்வியசூரி சரிதம் கூறுவதில் காலமுரண்பாடு உள்ளது.

குருபரம்பரா ப்ரபாவம் ஸ்ரீரங்கத்துக்கு வந்த ஆண்டாளை சுவாமி ஆட்கொண்டார் என்றும் வடிவழகிய நம்பியின் நூல் பங்குனி உத்திரத்தன்று

வில்லிபுத்தூருக்கு வந்து அரங்கனே ஆண்டாளை ஆட்கொண்டான் என்றும் கூறும்.

ஆண்டாள் பாடியவை நாச்சியார் திருமொழியும் (143) திருப்பாவையும் (30) ஆக 173 பாடல்கள்.

ஆண்டாளின் ஒளி ராமாநுஜரையும் பாதித்திருக்கிறது. இதை "யதிராஜரும் நாளதாதாவுமான இராமாநுஜரின் வாழ்க்கையைச் சுற்றி ஒளி வீசிய பக்தி வடிவமான பாவனா சக்தியும் ஆண்டாள் அனுபவித்துக் கொடுத்தது" என்பார் பி. ஸ்ரீ.

**ஆண்டாள்பற்றிய நூல்கள்:**

சூடிக்கொடுத்த நாச்சியார் பிரபந்தம் – வடிவழகிய நம்பிதாசர்

கோதா ஸ்துதி – மதுரகவி ஸ்ரீனிவாசய்யர்

ஸ்ரீ ஆண்டாள் திருமண நாடகம் – ராமசாமி அய்யங்கார்

பெரியாழ்வார் பெண்கொடி – எஸ். கிருஷ்ணவேணி அம்மா

ஆண்டாள் வெண்பாமாலை – ஸ்ரீவைஷ்ணவ சிகாமணி

சூடிக்கொடுத்த சுடர்கொடி – ஷண்முக முதலியார்.

6. திருக்குறுங்குடி திருநெல்வேலி மாவட்டம் நாங்குனேரி வட்டத்தில் இருக்கும் கிராமம். இங்குள்ள நம்பி கோவில் மிகப் பழமையானது. நம்மாழ்வார் பாடிய தலம்.

7. கிருஷ்ணதேவராயர் கூறும் இந்த தாசரியின் கதை திருக்குறுங்குடி நம்பி கோவிலில் கார்த்திகை மாதம் கைசிக ஏகாதசியில் நாடகமாக நடிக்கப்படுகிறது. இக்கதை காலங் காலமாகத் தேவதாசிகளால் நடிக்கப்பட்டது. தேவதாசி ஒழிப்பிற்குப்பின் சடங்குக்காக மட்டும் பாடப்பட்டு

வந்தது. அண்மையில் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக மேனாள் நாடகப் பேராசிரியர் செ. இராமாநுஜம் இதை மீட்டுருவாக்கம் செய்துள்ளார்.

இந்த நாடகம் 1997வரை கார்த்திகை இரவில் 45 நிமிடங்கள் நடத்தப்பட்டது. கைசிக ஏகாதசியில் இரவு முழுக்க விழித்திருக்க வேண்டும் என்பது நியதி. இதனால் மற்ற நேரங்களில் வராகபுராணப் பகுதியைப் பாராயணம் செய்துகொண்டிருந்தார்கள். வராகப்புராணத்தில் திருமால் பூதேவிக்குச் சொல்லுவதாக கைசிகப்புராணக் கதை வருகிறது.

திருக்குறுங்குடியில் இப்போதும் நிகழும் இந்த நாடகத்தில் நம்பாடுவான் (தாசரி) இயல்பாகக் காட்டப்படுகிறான். பிரம்ம ராட்சதனைச் சந்தித்த பிறகு நம்பாடுவானைத் திருமால் பார்த்துப் பேசுவதாகவும் எச்சரித்ததாகவும் வரும் நிகழ்ச்சி ராயரின் காவியத்தில் இல்லை.

இந்த நாடகம் நடத்த அச்சுதராயர் என்ற விஜயநகர அரசரின் மனைவி நிவந்தம் கொடுத்த செய்தி தஞ்சை சரஸ்வதி மகாலில் இருப்பதை எடுத்துக்காட்டியிருக்கிறார் ராமாநுஜம்.

திருக்குறுங்குடி ஊரில் கைசிக நாடகத்தின் மூலப்பனுவல் ஓலை உள்ளது. இது மணிப்பிரவாள நடையில் அமைந்தது. இந்த ஏட்டுப் பிரதியில் 40 ராகங்கள் உள்ளன. கைசிகம் என்பது பைரவி ராகம்தான் என்று கூறுகின்றனர். இந்த நாடகத்தை செ. ராமாநுஜம் காலச்சுவடு பதிப்பகம்வழி வெளியிட்டிருக்கிறார்.

8. ஸ்ரீவில்லிபுத்தூர் தலபுராணமான 'ஸ்ரீவராகக்ஷேத்ர மகாத்மியம்' என்ற நூலில் சொல்கின்ற கதையை ராயரும் எடுத்தாளுகிறார்.

9. ராயர், ஆண்டாள் என்னும் கோதை தொடர்பாக சொன்ன செய்திகள் வில்லிபுத்தூர் ஆண்டாள் கோவில் தொடர்பான கதைகளுடன் ஒத்துப்போகின்றன.

ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோவில் நாச்சியார் திருக்கோவில், நந்தவனம், வடபத்ர சயனார் கோவில் என்னும் மூன்று பகுதிகளைக் கொண்டது.

நாச்சியார் கோவிலின் மகாமண்டபம் தென்கிழக்கு மூலையில் லட்சுமி நாராயணர் சந்நிதி உள்ளது. இதைப் பெரியாழ்வார் வழிபட்டார் என்பர். இக்கோவிலிலேயே திருமஞ்சனக்குறடு, கண்ணாடிக்கிணறு ஆகியன உள்ளன. ஸ்ரீரங்க மன்னரும் ஆண்டாளும் நீராடிய இடமே திருமஞ்சனக்கிணறு. ஆண்டாள் ரங்கனுக்குரிய மாலையைக் கழுத்தில் போட்டு அழகு பார்த்த இடம் கண்ணாடிக் கிணறு. கிணற்று நீரிலேயே ஆண்டாள் தான் அணிந்த மாலையைக் ஆட்டி அழகு பார்த்திருக்கிறாள் (இதே செய்தியை ராயரும் கூறுகிறார்.) இக்கோவில் கருவறை விமானத்தில் ஆண்டாள் சூடிக்கொடுத்த காட்சிச் சிற்பங்கள் உள்ளன.

நாச்சியார் கோவிலுக்கும் வடபத்ரசாயி கோவிலுக்கும் நடுவே இருப்பது நந்தவனம். இது ஓர் ஏக்கர் பரப்புடையது. பெரியாழ்வார் பூர நட்சத்திரத்தில் இதை நிறுவினார் என்பர். ஆண்டாள் பிறந்தது அவதாரம் செய்தது இந்த நந்தவனத்தில்தான்.

இந்த நந்தவனத்தில் கிளி இல்லாத ஆண்டாள் சிற்பம் உள்ளது. ஆண்டாள் ரங்கநாதனுக்குக் கிளியைத் தூதனுப்பினாளாம். அப்போது இருந்த கோலம் இங்குச் சிற்பமாக உள்ளது. கிளி ஆண்டாளிடம் நிரந்தரமாயிருக்க வரம் பெற்றதாம். இந்த நந்தவனத்தில் பாதிரி தலவிருட்சம் உள்ளது. இது சித்திரை மாதம் மட்டுமே பூக்கும்.

ஸ்ரீரங்கமன்னார் என்னும் வடபத்ர சயனர் கோவிலின் கோபுரமே (196 அடி உயரம்) தமிழக அரசின் சின்னம். இங்கு பெரியாழ்வார் சந்நிதி உண்டு. கருவறையில் பள்ளிகொண்ட பெருமாள், திருமகள், பூமகள் சம்மேதமாய் இருக்கிறார். இந்த சயன விக்ரகம் சுதையால் ஆனது.

வில்லிபுத்தூர் ஆண்டாள் கோவிலுடன் சடங்கு, விழா தொடர்பாக உள்ள பிறகோவில்கள் திருவரங்கம், திருப்பதி, திருத்தங்கல், அழகர் கோவில் ஆகியன.

ஸ்ரீவில்லிப்புத்தூரிலிருந்து ஸ்ரீரங்கத்திற்கு ஆடிப்பூரத்தில் ஆண்டாள் சூடிக்கொடுத்த மாலை செல்லுவது என்பது பெரிய அளவில் நடந்தது. சிவகாசி அருகே உள்ள திருத்தங்கலில் உறைந்த பெருமாள்சாமிக்கும் திருப்பதி கோதாதேவிக்கும் வில்லிபுத்தூருக்கும் தொடர்புண்டு. மதுரை அழகர்கோவிலுக்கு சித்திரை விழாவில் வில்லிபுத்தூர் ஆண்டாள் சூடிய மாலையைக் கொண்டு செல்வது சடங்காக நிகழ்கிறது.

**மேற்கோள் நூற்கள்**


கிருஷ்ணதேவராயர் (தமிழ் வடிவம் மு.கு. ஜகந்நாத ராஜா) ஆமுக்தமால்யத, தெலுங்கு பல்கலைக்கழகம், ஹைதராபாத், 1988.

சுந்தர பாப்பா, நா., ஆண்டாள் பாடல்களும் வழிபாடும், பிஎச்.டி. ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1988.

திருப்பாவை மூலமும் உரையும் (மயிலை மாதவதாசன் பதிப்பு) சென்னை, 1957.

பி.ஸ்ரீ., பகவானை வளர்த்த பக்தர், கலைமகள் காரியாலயம், சென்னை. 1958.

ராகவையங்கார், மு., ஆழ்வார்கள் காலநிலை, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1981.

ஸ்ரீவில்லிப்புத்தூர் தலபுராணம். ஸ்ரீ வராஹக்ஷேத்ர மகாத்மியம், ஸ்ரீவில்லிப்புத்தூர் (ஆ. இ.).



**பனுவல் மும்மாத இதழ், ஏப்ரல் 2011**

# கடல்சார் மக்களின் நாட்டார் வழக்காறுகள்

> கடல் பார்க்கவே அலுக்காதது. எப்போதும் ஆச்சரியத்தைத் தந்து கொண்டிருப்பது. சில சமயம் அச்சத்தைத் தருவது. நீலநிற நீர்ப்பரப்பில் வேட்டையாடுபவர்களுக்கு ஆழத்தில் கிடக்கும் மீன்களைத் தருவதில் தயக்கம் இல்லாதது. கடல்சார் மக்களின் சவால்களுக்கு எப்போதும் ஆதாரமாக இருப்பது. இந்த மக்களின் வாழ்வின் கூறுகள் பரந்த கடலுடன் தொடர்பு கொண்டவை. இவர்கள் தங்களின் சவாலைக் கடலில் வலையாய் விரித்துத் தோல்வியையும் வெற்றியையும் தொடர்ந்து பெற்று வருகிறார்கள். இந்த மக்களின் ஒருமைப்பாட்டின் ஆதாரமே கடல் தாய்தான்.

கடல்மீது ஆட்சி செலுத்தும் இந்த மக்களுடன் நிலத்தைப் பண்படுத்தி விளைச்சலைப் பெறும் மக்களை ஒப்பிடக் கூடாது. நிலத்தின் விளைச்சலுக்கு வானம் பொய்க்காமல் இருந்தால் போதும். பூமித்தாய் தன் பயனாளியை வேறு வகையில் சோதிக்கமாட்டாள். ஆழிசூழ் பரப்பில் தொழிலுக்குச் செல்வது எப்போதுமே சவாலின் அடையாளம்தான். கடல்தாய் விளைச்சலை அடக்கிக் கொண்டவள். அவளுடன் போராடும் மக்களின் வேதனையை நிலம் சார்ந்த மக்கள் முழுவதும் அறியமாட்டார்கள். கடல்பரப்பில் தனி உலகம் உள்ளது என்பது பலருக்கும் தெரியாது. அந்த உலகத்தில் உழைப்பவர்களின் உயிரும் அதில் அடக்கம் என்பதும் பெரிய அளவில் பதிவு செய்யப்படவில்லை.

தொழிலின் தன்மை, தொழில் செய்யும் இடத்தின், நிலையற்ற போக்கு, கரணம் தப்பினால் மரணம் என்ற நிலை ஆகியன எல்லாம் இவர்களின் வழக்காறுகளைப் பாதித்திருக்கின்றன. இந்தப் போராட்டம் இவர்களின் அழகியல் கூறுகளின் நுட்பத்தை மழுங்கச் செய்திருக்கிறது. இதனால் இவர்களின் நாட்டார் வழக்காற்று வகைமைகளின் வீச்சும் கூறுகளும் குறுகிய தளத்தில்தான் இயங்குகின்றன.

முந்திய காலங்களில் கடற்கரைக் கிராமங்களில் கலை நிகழ்ச்சிகளை நடத்தியது குறித்த வாய்மொழி மரபுகள் மிகக் குறைவாகவே கிடைத்துள்ளன. இருபதாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் மதுரை ஸ்பெஷல் நாடகக் கம்பெனியார் குமரி மாவட்டக் கடற்கரை ஊர்களை அடுத்த பெரிய கிராமங்களில் (தாமரைக்குளம், கொட்டாரம்) நாடகம் நடத்தியபோது கடல்சார் மக்கள் பெரும் அளவில் பார்வையாளர்களாக இருந்ததை டி.கே. சண்முகம் நினைவுகூர்கிறார்.

கன்னியாகுமரி, தாமரைக்குளம், இராஜாக்கமங்கலம், ஈ

த்தாமொழி, குளச்சல் போன்ற கடற்கரைக் கிராமங்களில் தோல்பாவைக் கூத்து நிகழ்ச்சி நடத்தியபோது கடற்கரை மக்கள் அளித்த நன்கொடை பற்றி மறைந்த கோபால்ராவ் பலமுறை சொல்லியிருக்கிறார். இந்த மக்களுடன் தொடர்புடைய நாட்டார் கலை களியலாட்டம் என்றாலும் இவர்களிடம் இது சிறப்பாக நிகழவில்லை.

குமரி மாவட்டக் கடல்சார் மக்களுடன் தொடர்புடையதாகச் செண்பகராமன் பள்ளு என்ற சிற்றிலக்கியம் கிடைத்துள்ளது. பள்ளு வகையைச் சார்ந்த இந்நூல் 17ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. இதன் பாட்டுடைத் தலைவன் செண்பகராமன்; கன்னியாகுமரி கோவளத்தைச் சார்ந்தவன். இவன் காலியங்கராயன் என்னும் பட்டம் உடையவன். போர்க்கலை அறிந்தவன். தமிழில் ஈடுபாடு உடையவன். இவன் கன்னியாகுமரி கல்லுமூலைக் கோவிலுக்கும் கோட்டாறு சவேரியார் கோவிலுக்கும் திருப்பணி செய்யப் பொருட்களைக் கொடுத்தவன். இவனிடம் அளவற்று இருந்த வண்டி மாடுகளைக் கோட்டாறு சவேரியார் கோவிலுக்கு மண் எடுக்கக் கொடுத்திருக்கிறான்.

செண்பகராமன் பள்ளு நூலின் ஆசிரியர் பெயர் கிடைக்க வில்லை; இவரும் பரதவர் சமூகத்தினரே. இந்நூல் 136 பாடல்களைக் கொண்டது. இதன் கடவுள் வாழ்த்தில் புனித அன்னம்மாள், புனித இன்னாசியார், அப்போஸ்தலர் ஆகியோர் வாழ்த்தப்படுகின்றனர். இந்நூலில் நாஞ்சில் நாட்டு வளம் சொல் நயத்துடன் காட்டப்படுகிறது.

குமரி மாவட்டம் மேற்குக் கடற்கரையை ஒட்டிய கிராமங்களில் குலசேகரத் தம்புரான் என்னும் நாட்டார் தெய்வம் வழிபாடு பெறுகிறது. இந்தத் தெய்வம் தொடர்பான ஐவர் ராசாக்கள் கதை வில்லிசை நிகழ்ச்சியில் பாடப்படுகிறது. இக்கதையில் வரும் குலசேகரப்பாண்டியன் கன்னட அரசன் ஒருவனுடன் போரிட்டபோது பாண்டியனுக்கு மன்னன், மதிப்பன் என்னும் இரண்டு வீரர்கள் உதவினர். இவர்கள் கன்னியாகுமரிக்கும் மணக்குடிக்கும் இடைப்பட்ட கடற்கரை கிராமத்தைச் சார்ந்த பரதவர்கள். இவர்களில் மன்னன் என்பவனைக் கன்னட அரசனின் ஒற்றன் கொன்று விடுகிறான். மதிப்பன் அந்த ஒற்றனைப் பழிவாங்குகிறான். பாண்டியன் மதிப்பனின் வீரத்தை மெச்சி நாற்பது காணி நிலம் தானமாகக் கொடுத்தான் எனக் கதைப்பாடல் கூறும்.

நாச்சியார் கொளத்து பத்து மாநிலமுமிட்டார்

வாரமின்றிக் கடமை பலவேலை ஊழியங்கள்

ஊழியங்கள் தான் விலகியுள்ள நிலந்தானுமிட்டு

எல்லை தோறும் கல்நாட்டி குறை கூறியும்தான் கொடுத்தார்.

ஐவர் ராசாக்கள் கதை தவிர அச்சில் வந்த கன்னடியன் போர் கதையும் இடைச்சி செல்லி கதை ஏடும் மன்னன் மதிப்பன் வரலாற்றைக் கூறுகின்றன. கன்னியாகுமரி கோவளத்தில் மதிப்பன் பெயரால் ஒரு கிணறு இருந்தது.

ஸ்டீபன் சாம் கடற்கரை மக்களிடம் வாய்மொழி வழக்கில் இருந்த கதைப்பாடல்களைத் தொகுத்துள்ளார் (1991). இவற்றில் நீலோடு நீலம் பொருந்திய நீல மக்கரசியாள் கதையைப் பதிப்பித்துள்ளார். இது தவிர பாம்பரசர் கதை, பள்ளத்து அடப்பனார் கதை, மன்னர் குருவேந்த ராஜ்யபாலன் கதை, எங்கும் கலிநீலி அரசியாள் கதை ஆகிய ஐந்து கதைப்பாடல்கள் வழக்கில் இருந்திருக்கின்றன. அச்சில் வந்த கதைப்பாடலின் அடிப்படையில் இவற்றைப் பார்க்கும்போது அம்மானைக்குரிய ஓசையும் கற்பனையும் கதைப்போக்கும் உடையவை இவை என்று கூறமுடியும்.

நீலோடு நீலம் பொருந்திய நீல மக்கரசியாள் கதையில் வலங்கை நூல் கதையின் சாயல் உண்டு. ஏழு அண்ணன் தம்பிகள், ஒரு தங்கை என்னும்

பொதுவான நாட்டார் கதைத்தன்மை இதில் உள்ளது. நாடார் சமூகத்தினருக்கும் இவர்களுக்கும் உள்ள சுமுகமான உறவு இதில் குறிப்பிடப்படுகிறது. கடற்கரையில் உள்ள கிராமங்களில் பஞ்சம் பிழைக்கக் குடியேறிய நாடார்களிடம் இவர்களுக்கு இருந்த உறவு சீராக இருந்தது. கடற்கரைக் கிராமங்களில் சர்ச்சுகள் கட்டுவதற்குரிய சுண்ணாம்பில் சேர்க்க பதனீரைக் கடற்கரை ஒட்டிய கிராமத்து நாடார்கள் கொடுத்ததை ஒரு வாய்மொழிப் பாடல் கூறுகிறது.

நாட்டார் வழக்காற்றியலின் வகைமைகளான பழமொழி, விடுகதை ஆகியன இந்த மக்களின் வழக்காற்றில் உள்ளன. (இணைப்பு எண்: 1,2.) கிடைக்கின்றவற்றில் இவர்களின் தொழில்நுட்பத் தகவல்கள் உள்ளன. தொழில் பாடல்கள் நிறையவே கிடைத்துள்ளன. தொழில் பாடல்களில் மீன் வகைகள், தொழிலுக்குரிய பொருட்கள், தொழிலின் துன்பம், கடலுடனான போராட்டம், அலைகளினூடே இவர்களின் அனுபவம் வருணிக்கப்படுகிறது.

கடல்சார் மக்களிடம் பதிவு செய்யப்பட்ட நாட்டார் வழக்காறுகளில் விளையாட்டுகள் பற்றிய செய்திகள் பெருமளவில் கிடைக்கின்றன. (இணைப்பு எண்: 3.) பொதுவாக இவர்கள் தொழிலுக்குப் போகாத நேரத்தில் விளையாடுகின்றனர். பெரும்பாலும் இது மாலை நேரம்தான். இவர்களின் விளையாட்டுகள் பொழுதுபோக்கு, உடம்புக்குப் பயிற்சி என்ற அளவில்தான் உள்ளன. கடற்கரை, சர்ச்சைத் தொட்ட மைதானம், பள்ளிக்கூட வளாகம் போன்றன இவர்களின் விளையாட்டு அரங்குகள்.

விளையாட்டில் தோற்றவனுக்குத் தொப்பி வைத்தல் என்னும் தண்டனை உண்டு. தொப்பி வைத்தல் என்பது தோற்றவனின் தலையில் ஓலைத் தொப்பியைச் சொருகி வைத்துவிட்டு மற்றவர்கள் பார்த்துச் சிரிப்பதுதான். தோற்றவனின் காதில் பனை ஓலை நாரால் செய்த வளையத்தைப் போடுவதும் உண்டு.

இவர்களின் விளையாட்டுகளில் ஆண்கள் விளையாடும் விளையாட்டுகளைப் பற்றிய செய்திகளே பெருமளவில் கிடைத்துள்ளன. பெண்கள் விளையாட்டுகளாக புளிமுத்துப் பாண்டி (பல்லாங்குழி விளையாட்டு), பண்ணி

ஒழிச்சு விளையாட்டு (கண்ணப்பொத்தி விளையாட்டு), குந்தி விளையாட்டு (கோகோ விளையாட்டு) ஆகியவை பற்றிய தகவல்கள் கிடைத்துள்ளன. இளம் பெண்கள் கடற்கரையில் விளையாடும் விளையாட்டுகள் பற்றிய தகவல்கள் கிடைக்கவில்லை.

ஆண்களின் விளையாட்டுகளில் பண்ணி விளையாட்டு, கடலடி விளையாட்டு, அம்மானை, குதிர விளையாட்டு ஆகியன கடல்நீர் கரையைத் தொட்டுச் செல்லும் பகுதியில் விளையாடப்படுவன. இவை ஆண்களுக்குச் சவால் விடுவன. பண்ணி விளையாட்டில் ஜெயிக்கின்றவன் கட்டுமரத்தைக் கடலில் தள்ளுவதில் வல்லவனாகவும் இருப்பான். கடலடி விளையாட்டு கடலில் ஒரு பலகையைப் போட்டு அதைப் பிடிக்க ஓடுவது. ஒருவகையில் இது தொட்டு விளையாட்டுப் போன்றது. இந்த விளையாட்டின் அமைப்பும் கட்டுமரத்தைக் கடலில் தள்ளுவதற்குரிய பயிற்சி என்று கூறலாம்.

அம்மானை விளையாட்டும் இது போன்றதுதான். கடல் நீர் கரையைத் தொடும் இடத்தில் இது நடக்கும். ரப்பரை உருக்கிச் செய்யப்பட்ட பந்து போன்ற பொருளைக் கடலில் வீசி அதைக் கடல் அலையில் படாமல் நீண்ட கம்பால் தட்டிச் செல்வது இதன் அம்சம். இதில் 10 முதல் 15 பேர் கலந்து கொள்ளுவர். இந்த விளையாட்டின் தன்மை கட்டுமரத்தைக் கடலில் அலையிலிருந்து மீட்கும் பயிற்சியைக் கொடுப்பதுதான்.

கடல்சார் மக்களின் நம்பிக்கைகள் மரபுவழி வந்தவை. கி.பி. 16ஆம் நூற்றாண்டிற்கு முன்பே இவர்கள் கத்தோலிக்கத்தைத் தழுவியபோதும் இந்த மண்ணுக்கே உரிய நம்பிக்கைகள் இவர்களிடம் ஒட்டிக்கொண்டுதான் இருக்கின்றன. இந்த நம்பிக்கைகளில் முக்கியமாக மந்திரம், பேய் குறித்த செய்திகள் அதிகம்.

பிற சமூகங்களில் காணப்படும் பொதுவான நம்பிக்கைகள் இவர்களிடம் இல்லை. பிறப்பு இறப்பு போன்றவையும் மனிதனின் உமிழ்நீர் சிறுநீர் போன்றவையும் தீட்டாகக் கருதப்படும். சமூகத்திலிருந்து இவர்கள் வேறுபட்டவர்கள் என்கிறார் கல்பனா ராம். இவர்களின் சிறப்புச் சடங்குகளில்

நாவிதன் பங்கு கொண்டாலும் அது தீட்டல்ல; அது வழிபாட்டின் கூறாகக் கருதப்பட்டது. பிறப்பும் தீட்டல்ல; அது இயல்பு வாழ்க்கை.

சகுனம் குறித்த நம்பிக்கை இவர்களிடம் பரவலாக இல்லை. பொதுவாகச் சகுனங்கள் எவை என்னும் பட்டியலை இவர்கள் மனப்பாடம் செய்து வைத்திருக்கவில்லை. இவர்களிடம் அவை பிரக்ஞை அளவில் உள்ளன. கடற்கரையில் ஒற்றைப் பிராமணனோ எருமை மாடோ வருவதில்லை என்பது அல்ல காரணம். இந்த நம்பிக்கை இவர்களிடம் பெரும்பாலும் இல்லை என்றாலும் கடலுக்கு மீன்பிடிப் பொருட்களைக் கொண்டு செல்லும்போது பெண்கள் எதிரே வருவதை விரும்புவதில்லை. இதுபோலவே பூனை குறுக்கே வருவதும் நல்லதல்ல. இந்த நம்பிக்கையைப் பொதுவானது என்று கருத முடியாது. மீன்பிடிப் பொருட்களைக் கொண்டு செல்லும்போது பெண் எதிரே வந்து அன்று மீன்பாடு நன்றாக இருந்தால் அவள் மறுபடியும் வருவதை விரும்பி வரவேற்கின்றனர். இப்படி நினைக்கும் அளவிற்குத்தான் இவர்களின் சகுன நம்பிக்கை உள்ளது. சகுனமும் மீன்பிடி தொழிலைச் சுற்றி வருவதுதான்.

இவர்களிடம் குழந்தையின் நோய் தொடர்பான நம்பிக்கைகள் ஆழமாக உள்ளன. நான்கு மாதக் கர்ப்பிணி வாந்தி எடுப்பதைக் குழந்தை பார்க்கக்கூடாது. பார்த்தால் குழந்தைக்கு வாந்தி வரும். வாயு வரும். இது 'செடிக்குத்தம்' எனப்படும்.

குழந்தை பிறந்த 41ஆம் நாள் கழிந்துதான் குழந்தையை வீட்டை விட்டு வெளியே கொண்டுவரவேண்டும். அப்படிக் கொண்டுவரும்போது வல்லூறு, ஆந்தை, பிராந்து ஆகிய பறவைகளின் நிழல்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். மீன் குட்டைக்காரி, முதல் குழந்தையைப் பறி கொடுத்தவள் ஆகியோரின் நிழலும் குழந்தையின்மேல் படக்கூடாது. இந்த நிழல் குழந்தைமீது பட்டால் குழந்தைக்கு வயிற்றுப்போக்கு வரும். அமாவாசை சமயத்தில் இந்த நிழலின் பாதிப்பு அதிகமாக இருக்கும்.

குழந்தை இரவில் அழக்கூடாது. கடற்கரைக்கு இரவு நேரத்தில் ஒரு பறவை (பெரும்பாலும் அது கூகை) தீர்த்தமாட வரும். அப்போது அந்தப் பறவை

குழந்தையின் அழுகுரலை வானம்வழி பிடித்துக்கொள்ளும். பட்சி, அழுகுரலைப் பிடித்தால் குழந்தையின் தொண்டை அடைத்துக்கொள்ளும். வயிற்றுப்போக்கு வரும். குழந்தை இறந்துகூடப் போகலாம். இதற்குப் பட்சி தோஷம் பார்க்க வேண்டும். குழந்தை இரவில் அழ ஆரம்பித்தால் இரும்பு அகப்பையை அடுப்புக் கனலில் போட்டுவிட வேண்டும். அப்படியானால் அழும் குழந்தையின் வீட்டின் பக்கமே பறவை வராது.

சூரியன் நடுவானில் இருக்கும்போது (இது சூரியப் பாய்ச்சல் எனப்படும்) கூரையைப் பார்க்கும்படி குழந்தையைப் படுக்க வைக்கக்கூடாது. இந்த நேரத்தில் குழந்தையை வேறு பக்கம் படுக்க வைக்க வேண்டும். சூரியப் பாய்ச்சலின்போது குழந்தையால் தாயிடம் பால் குடிக்க முடியாது.

குழந்தைக்குப் 'பாதல் இறங்கல்' என்னும் நோய் வரும். இதன் அடையாளம் குழந்தையின் வயிறு பெரிதாகும். பச்சை நரம்பு வயிற்றில் தெரியும். இதற்கு வைத்தியம் செய்வது கிடையாது. குழந்தையின் தாய் மாமா உடுத்த வேட்டியில் குழந்தையைப் போட்டு, வேட்டியின் இரண்டு தும்புகளையும் இரண்டு தாய் மாமாக்கள் பிடித்துக் கொண்டு மாறிமாறி குழந்தையை உருட்ட வேண்டும். அப்போது பாரம் உங்களுக்கு, பிள்ளை எங்களுக்கு என்று சொல்ல வேண்டும். இப்படி 10 தடவை உருட்டினால் பாதல் இறங்கல் நோய் குணமடையும்.

குழந்தை பிறக்கும்போது நச்சுக்கொடி வெளியே வந்தால் குழந்தைக்கு யோகம். நச்சுக்கொடி வரவில்லை என்றால் குடும்பத்தில் உள்ளவர்கள் ஜெபம் செய்வார்கள். செய்தால் நச்சுக்கொடி வெளிப்படும். நச்சுக்கொடியை மண்ணில் ஆழக்குழி தோண்டி உப்பு, சாம்பல் போட்டுப் புதைக்க வேண்டும். அதை நாய் தின்னக்கூடாது. தின்றால் தாய்க்குப் பால் வற்றிவிடும்.

குழந்தை பிறந்த 12ஆம் நாளுக்குமுன் பிரசவித்த பெண் வெளியே வரக்கூடாது. இரண்டு பிள்ளைகள் இருந்து ஒன்று இறந்துபோனால் அடுத்த குழந்தைக்கு மூக்குக் குத்துவதுண்டு. குழந்தையில்லாதவளை முழுத்தம் கெட்டவள் என்ற சொல்லால் குறிக்கின்றனர். இவள் பிறந்த குழந்தையை

எடுக்கக்கூடாது: குழந்தை பிறந்த வீட்டிற்கு வரக்கூடாது; சாவுச் சடங்கில் முன்நிற்கக் கூடாது.

கர்ப்பிணி நிமிர்ந்து படுக்கக்கூடாது. அப்படிப் படுத்தால் குழந்தைக்கு ஆகாரம் கிடைக்காது. கர்ப்பிணி வலதுபுறம் பார்த்துப் படுத்தால் ஆண் குழந்தை பிறக்கும், இடது புறம் சாய்ந்து படுத்தால் பெண் குழந்தை பிறக்கும். அவள் சூரியனை நேரடியாகப் பார்த்தால் பிறக்கும் குழந்தை ஊமையாகிவிடும் என்பன போன்ற நம்பிக்கைகள் உள்ளன.

இவர்களிடம் திருமணம் தொடர்பான நம்பிக்கைகள் குறைவாகவே உள்ளன. திருமணமான பெண்ணும் பிள்ளையும் மணமான ஏழு நாட்கள் கழித்துத்தான் வீட்டைவிட்டு வெளியே வரவேண்டும்; இதை மீறி வந்தால் சாத்தான் அடிப்பான். திருமணம் ஆடி மாதத்தில் நடத்தக்கூடாது. தங்க ஆசாரி தாலியைத் தன் வீட்டிலிருந்து நேரடியாகக் கலியாண வீட்டிற்குக் கொண்டு வரவேண்டும்.

பிற சமூகங்களைப் போல வாஸ்து நம்பிக்கை இவர்களிடம் முழுதும் இல்லை; புதுவீட்டிற்குப் பால் காய்ச்சும்போது கொதிக்கும் பால் மேற்கு அல்லது கிழக்குத் திசைவழி வழிய வேண்டும். புதுவீட்டிற்குத் திருஷ்டி கழிக்க சீனக்காரம் அல்லது பூசணிக்காயைக் கட்டும் வழக்கம் பொதுவாக உள்ளது.

கடல்மக்களின் நம்பிக்கைகளில் கடல் பற்றியவை அதிகம்; அதோடு அவர்களின் தொன்மக் கதைகளும் பெருமளவில் உள்ளன. பெண்கள் கடலுக்குத் தொழில் செய்யச் செல்வதில்லை என்பது மட்டுமல்ல, பொதுவாகவே அவர்கள் கடற்கரைக்கும் செல்வதில்லை. சாம்பல் புதன்கிழமைக்கு முந்திய செவ்வாய்க்கிழமை அன்று மட்டும் கடலுக்குச் செல்லலாம் என்ற வழக்கு பல காலமாய் இருந்திருக்கிறது. கடல் ஓரமாக வலம்புரிச் சங்குகள் வந்து மக்களைப் பார்த்துச் செல்லும். அப்படி வந்ததன் அடையாளம் கடற்கரையில் இருக்கும். அது கடற்கரை மக்களுக்கு நல்லது.

கடலுக்குப் புறப்படும்போதும் கடலில் தொழில் செய்யும் போதும் உள்ள நம்பிக்கைகள் நிறையவே உள்ளன. நல்ல மீன் பாடு இருந்தால் தொழில்

கருவிகள் திருஷ்டி பட்டுவிடும். அதற்குத் திருஷ்டி கழிக்க வேண்டும். சீனக்காரக் கட்டியால் கட்டுமரம், வலை ஆகியவற்றைச் சுற்றி உமிக்காந்தலில் வைத்து, மறுநாள் அதை எடுத்துப் பொடித்துத் தெருவில் போடவேண்டும். வசம்பை அரைத்துக் கட்டுமரத்தில் தெளித்தாலும் திருஷ்டி நீங்கும். ஒரு ஆண் நடு இரவில் நிர்வாணமாக நின்று வலை, கட்டுமரத்தின்மீது கள்ளி, எருக்கலைச் செடியால் அடித்துக் கெட்ட வார்த்தையால் ஏசினாலும் திருஷ்டி போய்விடும்.

புதிய கட்டுமரம், வலை ஆகியன கடலில் இறங்கும்போது பாற்சோறு படைத்தல். வழக்கில் உள்ளது. இரவு நேத்தில் கடலில் தொழில் செய்யும்போது கடற்பரப்பில் வெள்ளி நிறம் தெரிந்தால் மீன்பாடு அதிகமாக இருக்கும். இந்த வெள்ளிப்பரப்பு கவரு எனப்படும். இரவில் மீன் பிடிப்பவர்களைக் கடல் கன்னி அல்லது முனிகள் வந்து துன்புறுத்தும். சில நல்ல முனிகள் காப்பாற்றும். சில சமயம் சாத்தான் கடல் பரப்பில் கழுதையாகப் பாய்ந்து சென்று வழிமறிப்பான். அப்போது ஜெபம் உதவும்.

கடல்சார் மக்களிடம் மந்திரம், பேய் குறித்த நம்பிக்கை பெருமளவில் உள்ளது. பெரும்பாலும் வைத்தியரும் மந்திரவாதியும் ஒருவராகவே உள்ளனர். சாதாரண நோய்க்கும் பிரச்சனைகளுக்கும் மந்திரத்தை நம்புகின்றனர். வயிற்றுக்கோளாறு கொதியால் வருகிறது என்ற நம்பிக்கை இவர்களிடமும் உள்ளது. கொதி பிடித்தவரின் பெயர், அவர் விரும்பும் உணவின் பெயர் இரண்டையும் சொல்லி கொதி மந்திரத்தையும் சொல்லி மிளகு, சாம்பல், கத்தி ஏதாவது ஒன்றால் கொதிவந்தவரின் உடம்பைச் சுற்றி அதை நெருப்பில் போடுவது இதன் நடைமுறை. (இணைப்பு எண்: 4 — 11.)

இந்த மக்களின் மந்திரம் குறித்த நம்பிக்கைகளும் மந்திரங்களும் இந்து மதத்திலிருந்து வந்தவை என்று கருதலாம். மந்திரம் குறித்த உலகளாவிய செயல்பாடுகளே இவர்களுக்கும் உள்ளன. பிடிக்காதவனைக் கெடுப்பதற்கும் தன்னை விருத்தி செய்துகொள்ளுவதற்கும் கடலில் மீன் அதிகம் கிடைக்கவும் மந்திரங்கள் பயன்படும் என்ற நம்பிக்கை உள்ளது. இந்து பெருநெறித் தெய்வங்களையும் நாட்டார் தெய்வங்களையும் ஆவாகனப்படுத்தி மந்திரம்

செய்யும் முறையை இவர்களும் ஆரம்பத்தில் பின்பற்றினர் (கல்பனா ராம், பக். 55). இவர்களின் மந்திரங்களில் வரும் புனிதர்களின் பெயர்கள் இருந்த இடத்தில் வேறு நாட்டார் தெய்வங்களின் பெயர்களே இருந்தன (இணைப்பு எண் 4). மந்திரம் ஓதிய தாயத்தைக் கையில் கட்டிக்கொள்ளும் நம்பிக்கை இவர்களிடம் உண்டு.

பேய் குறித்த இவர்களின் நம்பிக்கை ஆழமாக உள்ளது. பேய் பிடித்த ஆணுக்குப் பெண்ணின் சிறுநீரையும் பெண்ணுக்கு ஆணின் சிறுநீரையும் கொடுத்தால் பேய் ஒடிவிடும். பேய்க்குச் சிறுநீர்வாடை பிடிக்காது. பேயை விரட்ட அந்தோனியார் மந்திரம் முக்கியமாகக் கொள்ளப்படுகிறது (இணைப்பு எண்: 4 — 12). பெரும்பாலும் புனிதர்களின் பெயர்களை உச்சரித்தாலே பேய் ஓடிவிடும். இயேசுவின் கட்டளைக்குக் கீழ்படிந்தவர்கள் சம்மனசு. கீழ்படியாதவர்கள் பேயாக உலாவுவர். பேய் உயரமாக இருக்கும். இதற்கு நிரந்தர வடிவம் கிடையாது. இது வடிவத்தை மாற்றும் என்னும் நம்பிக்கை உள்ளது.

கடற்கரையில் குருசடி, புனிதர்கள் ஊர் பற்றிய தொன்மங்கள் இன்னும் வழக்கில் உள்ளன. கடலைத் தாயாகக் கருதும் இவர்களின் வழிபாட்டிலும் தாய்த்தெய்வங்களே அதிகம் இடம் பிடித்துக் கொண்டுள்ளன. கடற்கரையை ஒட்டிய வேறு கிராமங்களிலும் நாட்டார் பெண் தெய்வங்களே அதிக அளவில் வழிபடப்படுகின்றன. அரபுக் கடலோரக் கிராமங்களில் வழிபாடு பெறும் மண்டைக்காடு பகவதி, பர்வதம்மாள், பிரகாசியம்மாள் ஆகிய மூவருமே சகோதரிகள் என்ற நம்பிக்கை இருந்தது.

கண்ணம்மாள் எனப்படும் (காளி) பார்ப்பாரம்மாள் அணைக் கரையில் குடியேறினாள். பிரகாசியம்மாள் கொட்டில்பாடு புதூருக்கு வந்தாள். புதூருக்கு வடக்கே இருக்கும் மண்டைக்காடு பகவதி இவளுடன் உறவுடையவள். இந்த உறவே கடற்கரை மக்களையும் இக்கோவிலுக்குள் நுழைய வைத்தது. அதுபோல 1971இல் மண்டைக்காடு புனித சகாய மாதா குருசடிக்கும் ஊரின் மேற்கு பகுதி ஆகாத்தம்மாள் குருசடிக்கும் இந்துக்கள் வழிபட வந்தனர்.

கடற்கரை மக்களிடம் புனிதர்களின் கோவில்கள் உருவானது பற்றியும் குருசடிகள் தானாக முளைத்தது பற்றியும் பல தொன்மங்கள் உள்ளன (இணைப்பு எண்: 5).

1995இல் தென்குமரிக் கடல்சார் மக்களிடம் ஒலிநாடாவில் பதிவு செய்யப்பட்ட செய்திகளின் அடிப்படையில் தொகுக்கப் பட்ட நாட்டார் வழக்காறுகளில் பல இன்று மறைந்துவிட்டதை இப்போது (2005) கள ஆய்வுக்குச் சென்றபோது உணர முடிந்தது. குறிப்பாக நாட்டார் விளையாட்டுக்கள் பெருமளவில் மறைந்துவிட்டன. மந்திர நம்பிக்கை குறைந்து வருகிறது. ஆண்டவனிடம் உண்மையான பக்தி எதையும் தாங்கும் வல்லமை கொடுக்கும் என்ற மனநிலை பழைய தலைமுறையினரிடம் இன்னும் அப்படியே உள்ளது. மதக் கலவரங்களால் தாய்த்தெய்வம் குறித்த தொன்மம் சிதைக்கப்பட்டு மரபுவழி நம்பிக்கை வலு இழந்து வருகிறது. புனிதர்களின் விழாக்களில் உள்ள மோகம் தொன்மத்தைத் தக்க வைத்து வருகிறது.

சுனாமி மொத்த நாட்டார் வழக்காற்றையும் பாதித்திருக்கிறது.

## பின் இணைப்புகள்

**இணைப்பு எண் –1**

### விடுகதைகள்

கடலிலே ஒரு சுளவு அது என்ன?

விடை: திரச்சிமீன்

கடலிலே ஒரு பெட்டகம் அது என்ன?

விடை: ஆமை

கடலிலே மூன்று பூ அது என்ன?

விடை: ஆரம்பூ, குதுப்பூ, கலப்பு

**பழமொழி**

அய்ந்தவனுக்கு அய்ப்பைக் கண்ணைக் கண்டாலும் பேய் (பயந்தவனுக்கு அகப்பைக்காம்பைக் கண்டாலும் பேய்)

**இணைப்பு எண் — 2**

**நாட்டார் விளையாட்டுக்கள்: பட்டியல்**

எட்டுக்கட்டம்

எறிபந்து

ஓரம்பாடி

ஒட்டப்பந்து

கபடி

கறிச்சட்டி விளையாட்டு

கழச்சி விளையாட்டு

கயிறாட்டம்

களிமரச்சி

கிளிமறப்போ

குதிரபந்து (குதிர விளையாட்டு)

கோட்டப் பூசு

கொலை கொலையா முந்திரிக்கா

சீட்டு விளையாட்டு

சுட்டியடிப்பு

தாயம் விளையாட்டு

பண்ண ஒழிச்சு

மட்டப்பந்து

முத்துப்பாண்டி

**இணைப்பு எண்— 3**

## தலைவலி போக்கும் மந்திரம்

சந்த நாள் தந்தனீர் சாமி சருவேஸ்வரன்

தந்த நீர் எந்தனுக்கு உகந்த நீர்

சேசுநாதர் சுவாமி

தந்த நீர் இஸ்பிரித்து சாந்து

அளந்த நீர் எந்த நீர்

அளந்தால் காய்ச்சல் மண்டைசுரம்

பனி சகலமான சத்துருக்களெல்லாம்

மாறு மாறு

## கெட்டு மந்திரம்

ஒத்தப் பூரத் தள்ளப் பாம்பு கிண்டிப்புள்ள கிண்டிப் போகும் நேரம் கண்ணனும் கண்ணியும் நீக்கி மத்தம் தான் நெறிகளை எல்லாம் நாவடக்கிக் கெட்டினேன், வாய் அடக்கிக் கெட்டினேன், சுண்டு அடக்கிக் கெட்டினேன், பல் அடக்கிக் கெட்டினேன், உன்னாண கெட்டினேன், என்னாண கெட்டினேன், உன்னையும் என்னையும் படைத்த இயேசு சுவாமியாண கெட்டினேன், இந்தக் கெட்டு சேசுவின் கெட்டு வங்கெட்டு வைரக் கெட்டாய் வரம் பெற்று இருக்க வேண்டும் என் சேசுவே.

## கெட்டு மாந்திரம் (வேறு)

குருசால் ஒரு குருசு

வானத்தின் நற்குருசு

காவலாய் வந்த குருசு

மன்னி என்னும் பூங்குழலும்

வைரமணிச் சங்கிலியும்

சித்திரக் கோட்டையிலே

பிறந்தாரே சேசு

துரும்பைக் குத்தினார் தூணாக்கினார்

சுவிசேசர் கையில் அகப்பட்டார்

பழுதில்லாமல் பாலகனும்

பாலகரிடத்தில் சேர்ந்தார்

தாய் பேர் மரியம்மா

தகப்பனார் சூசை சேர்ந்தார்

ஏழு புத்தகங்கள் ஓடி வரும்

இந்த மந்திரம் படித்தும்

படிப்பார்க்கு நம்முடைய நாதர்

இயேசு கிறிஸ்து நாதர் சாமி

தினமும் ஆயிரம் பிழை பொறுப்பர்

ஆமென்

## தன்னைக் கெட்டும் மந்திரம்

பிதா சுதன் இஸ்பிரித்து சாந்து. கிழக்கு மேற்கு வடக்கு தெற்கு இதிலிருந்து வருகிற சத்திரவாதிகளை ஆங்காங்கே கட்டினேன். பூமியும் வானமும் இதிலிருந்து வருகிற சத்திரவாதிகளை ஆங்காங்கே கட்டினேன். சந்திரனும் சூரியனும் போகவராமல் கட்டினேன்; என் கட்டு இயேசு கிறிஸ்துநாதர் சுவாமி திருவாய் இருக்க சேசு மரி சூசை துணை.

உள்ளம் உள்ள பதிவை பதிவராகிய அர்சீஸ்ட அந்தோனியாரே அண்டத்தில் வாழும் ஒரு கையில் செய சக்கரமும் ஒரு கையில் ஈரேழுலகமும் ஏந்தி இருக்க இடத்தில் வாழும் கண்டம் பிளந்து வட்டி பிளந்து சூலம் பிளந்து சுடுகாடு பிளந்து என்கிட்டே வாரும்.

பரமசிவனையும் பார்வதியையும் பூணூலையும் அறுத்து மாற்றும். வேலும் தட்டும் தடியும் உடைத்து ஓம் கணபதி என்ற சக்கரமும் பிறந்து எரிந்து பச்சைமயில் ஏறி விளையாடி வாரும்.

ஆறுமுகப் பெருமாளும் தொந்தி மூத்தோன் பால சுப்பிரமணியனையும் பச்சை கல்யாணி காளி நீலி வட பத்திரகாளி மாரி மகாதேவி மலையாள பகவதி மண்டைக்காட்டு தேவி கன்னியாகுமரி பகவதி சுசீந்திரம் தாணுமூர்த்தி திருச்செந்தூர் வால வாதை கனவில் மூர்த்தி குளத்தில் இறந்தவன் நாந்து தூங்கிச் செத்தவன் ஈசன் இருளன் இடு காட்டு முண்டன் சுடுகாட்டு முண்டன் வாந்தி பேதி வைசூரி மண்ண நிறை கொள்ளை நோயும் தீயும் விசமானப் பூச்சியும் விரோதிகளும் எதிராளிகளும் பகையாளிகளும் முப்பத்தி முக்கோடி தேவர்களையும் கட்டினேன்.

இது என் கட்டல்ல. அர்சிஸ்ட்ட அந்தோனியாருடைய ஆறு கோண அச்சரத்தால் அடக்கி ஒடுக்கிக் கட்டினேன். நாலு திசையும் 16 கோணமும் கட்டினேன். இது என் கட்டல்ல அர்சிஸ்ட அந்தோனியாருடைய கெட்டு. கெட்டு குத்து குத்து குடலைச் சரித்திரு சங்காரம் செய்திடு அந்தந்தோனி மாமுனியே முப்பது லட்சம் முடிவு பெற்றவர்.

உச்சரித்த இச்செபத்தை அடியேன் நான் உச்சரிக்க பிதா சுதன் இஸ்பிரித்து மூவரும் எழுந்தருளி மூன்று விலாசம் சம்மனசுகளும் தீவெட்டி புடிக்க நான் உச்சரித்த இடத்தில் அர்சீஸ்ட அந்தோணியார் வந்து உதவவும் ஆமென் இயேசு.

இயேசுவின் திரு நாமத்தால் ஆசீர்வாதம். போ பிசாசே எழுபதினாயிரம் காதவளிக்கப்பாலே. ஆடாதே அலையாதே அவகோடு அலவு திறவாதே வாய் பூட்டு தாள் பூட்டு உச்சிலையும் உள்ளங்களால் நடுவிரலையும் காஞ்ஞாம் மூட்டு கவுத்தி ஆணி அறைந்து ஏற்றினேன்.

இந்த ஆணை மறந்து இங்கே வந்தாயானால் என்னையும் உன்னையும் படைத்த யேசுநாதர் சுவாமி எழுந்தருளி வந்து உன்னையும் என்னையும் ஏகமெல்லாம் மாறி சினந்து கட்டி அடித்திடும் அனேகம் பூமிகள் கிடுகிடுங்க அனேகம் மலைகள் நடுநடுங்க பிதா சுதன் இஸ்பிரீத்து சாந்து ஆணையிட்டு நாலாயிரம் ரட்சைகளையும் கட்டினேன்.

நடுமூக்கு நடு மண்ணையும் கட்டினேன். உச்சிவரை உள்ளங்கால் வரையும் கட்டினேன் பனிமோக கன்னியும் கட்டினேன் ஆதி மனிதன் செய்த பாவத்தால் ஆண்டவன் பாடுபட்ட ஐந்து திருக்காயத்தால் அடக்கி கட்டினேன்.

சாசுகள் விக்ரகங்கள் அறுபது

சிலந்தி அறுபது

அக்கினி அறுபது

எழும்பி வஞ்சனை சூனியம்

கன்னி விட்டு அறிய

அக்கினி கெட்டு

அகக் கெட்டு

பூமி மந்திர பூமி

என் இயேசுவே இரங்கும்

ஆமென்.

## வியாதி

கொம்ளீர் வற்று நிலல் வற்று எல்லற்று எனாச்சி வற்றி அகம் வற்றி புறம் வற்றி கருகிப்போகச் சிவா.

## தேள்; திரச்சிமுள்

கருகிலிருந்து முள் எழும்ப யானை யானை வெருகவே இருகலிருந்து கலகலங்க செங்கடல் வாழ்கின்ற செந்தேள் கருங்கடல் வாழ்கின்ற கருந்தேள் சோம மங்கலத்தில் வாழும் தேள் கட்டியாய் இருந்து தேள் கடுப்பாய்த் தீண்டும் தேள் வீமனைத் தீண்டும் தேள் விதமாய்த் தீண்டும் தேள் நீ கொட்டி விட்டே நான் தட்டி விட்டேன் போ சிவா.

## தேள் (வேறு)

பட்டையில் ஒட்டிய தேளே

பகவதி கொண்டு கொட்டிய தேளே

குழுகுழு வென்று ஓடிவா

விரும்பும் தேள்களும்

ஒரு பனையில் இருக்கையில்

விரும்புவரே தேள் விசம்

கீழே இறங்கி ஓடிப்போக சிவா.

உச்சிப்பட்டால்

முலை கெட்டு நொந்து முறையோ என்றால் தன் கணவன் மாரைத் தடவத்தடவ பிசிகன் பிசிந்தால் போல் (நோயாளி பெயர்) வலது முலைக்கண் பிசிந்து போக சிவா.

## பாம்பு

ஒரு மிதி மிதித்தான் கெரடன்

ஒரு மலை போட்டான் கெரடன்

ஒரு மலை எடுத்தான் கெரடன்

ஒரு கணம் எழுந்தது பாம்பு

பதிவினை கிடப்பாயாகின்

உன் சங்கு சுத்தி

உன் சக்கரம் சுத்தி

பித்தெரிய பிணம் எரிய

பிணத்தின் கீழ் இருக்கின்ற

நாகம் எரிய

எரி பொரி போ சிவா

## பாம்பு (வேறு)

கீரியும் கெருடனும் ஒரு மலை ஓடக்கண்டேன்

கழுத்து உள கெடக் கண்டேன் கீரியும்

கெருடனும் உறுதி தவித்துப் போகக் கண்டேன்

முறி கரமா முறிமுறி கெரடா முறி கூர முறி

## முள்

முள் முள் அல்ல முருங்கை முள்ளல்லா கள்ளி

முள்ளல்லா கடலில் கிடக்கும் திரச்சி முள்ளல்ல

வாங்கடல் சுற்றி ஓங்கி கைதீந்தது விசல்

கலங்கி போகச் சிவா

மிக்கேல் அய்யா சக்கரம்

மோரியப்பயங்கள் விடும் விடும் பில்லி சூனியங்கள்

மூர்த்திகளாய் சாதித்து நின்ற சத்துருவே

சறுக்காதே என்முன் வாதித்து நின்ற துஷ்ட

பூத பிரேத பிசாசுகளை எல்லாம் கடுகடுக

பின்வாங்கிவிடு ஆதி பிதா சுதன் இஸ்பிரித்து

சாந்துவின் முன் ஆணையுண்டே

## கொதி பார்க்க

இந்திரனும் இறைவனும் சந்திரனும் சூரியனும்

இந்திரன் ஆடிய வேட்டைக்குப் போகும்போது

தென்னை மரத்தில் சென்று இருந்துமே மூட்டில்

தேங்காயும் கருப்புக் கட்டியும் தின்று கொண்டு

இருக்கும்போது நாய் கொதிப்பட்டதோ மனுஷன்

கொதி போட்டானோ நாயின் வயிற்றில் கிடக்கும்

எச்சிலும் உண்ணும் வெள்ளம் அற்றால்போல்

அற்று அற்று வாங்கி நிற்க சிவா மனிசனுடைய

வயிற்றில் கிடக்கின்ற மாச்சி நீயும் சோறும்

மூன்றும் வெள்ளம் அற்றாப்போல் அற்று

அற்று வாங்கி நிற்க சிவா

## அந்தோணியார் மந்திரம் கருஈற்றல்

அர்சிட்ட அந்தோனியாரே ஆயவாண பரமண்டலத்து குருபிதா ஆனவரே எங்களோடு துடங்கி வரும், இசந்தது சற்று பிசாசுகளும் கண்போர நாவேறு கண்திரிப்பு முறைபாடுகளை எல்லாம் உமது சுந்தர கடகத்தால் குத்து, உமது வாளால் வெட்டு வெட்டு வினைகள் விட்டெரிய பிசாசுகள் கண்போறுகள் நாவேறுகள் விட்டொளிய உமது கையில் இருக்கும் ஐந்து மணிக்கயிற்றில் அடத்துத் துரத்திடுவீர். பிதா சுதன் பரிசுத்த ஆவியின் பெயரால் ஆமென்.

இந்த மந்திரங்கள் சின்னவிளை அந்தோனியிடமிருந்து 12.4.1995இல் தொகுக்கப்பட்டது.

## மிக்கேல் ஆண்டவர் மந்திரம்

கீழ் வாதை விடுவாதை நோக்கி சைவாதை போது அவயம் ஒது ஒரு தெய்வம் அகஸ்மானங்களிலும் இந்த அகஸ்மானம்னு சொன்னா திடீர் மரணங்கள்தாம் அகஸ்மானம்னு சொல்லம் ஆறுல ஓடுவ திரியாண கண்டு சுடுகாட்டுல மரணமாகிப் போன பேய் பிசாசு பில்லி சூனியங்கள் உள்ள அத்தன வித கிழக்கே மேக்கே தெற்கே வடக்கே ஆட்கள் போட்டுள்ள ஆகாச ஒருவனுமாகிலும் சொப்பனமாகினும் சொப்பனமாகிய அச்சனுமாருது அகசியமாருது சந்தன மாருது மோகனமாருது மோகனிலி மாருது சர்வகுமாரனும் எட்டுத்திக்கும் பதினாறு கோணம் இட்டு எண்கொண்ட மிக்கேல் அய்யா உன் திருவாயினாலே அடிதடி தாக்கி வானம் நடுங்க பூமி நடுங்க அண்ட லோகங்கள் எல்லாம் வெளிதிறந்து அகல பிலாசத்து எல்லாம் அகல வாங்கி விடுங்கள் ஆதிபிதா பரிசுத்த ஆவியின் பெயரால் ஆணையிட்டுக் கேட்கிறேன். இன்னார் பெயரில் உள்ள சர்வ துஷ்ட பூதபேதம் ஓடி

அகஸ்மானங்களும் எரி எரின்று நரி நரின்று நகண்டு சீக்கிரம் சீக்கிரம் பட்டுப் பட்டுன்னு கையிலிருக்கும் வாளால் வெட்டி அடைக்கலம் செய்கிறேன் மிக்கேல் கொற்றவனே.

இந்த ஆணை மீறி இங்கு வருவாயாகில் திருஉருவமாகிய தேவதாயாரும் திருச்சிலுவையாகிய சீரு சினந்து வடகரை வெட்டி எரித்து சாம்பல்போல் எரித்து மெழுகுபோல் ஆக்கி என் கையிலிருந்து ஏசுநாதர் சாமி பாடுபட்ட ஐந்து திரிகாயத்தின்பேரில் ஆணையிட்டுக் கெட்டுகிறேன். இன்னாருடைய துஷ்ட பேதம் பூதபேதங்களும் உமது கையிலிருக்கும் வேலால் குத்திக் கிளறி எரித்துச் சாம்பலாக்கிவிடுவீர் வீரமிக்கேல் என்ற கொற்றவனே.

இரைபாக்கும் மந்திரம்

இந்திரனும் இறைவனும்

சந்திரனும் சூரியனும்

தம்மில் அற்ற ஒன்றும்

கழிஞ்சு கொண்டு இருக்கும்போள்

சந்திரரே வயிற்றில்

ஆயிரத்து எட்டு கலந்துண் கேட்கல

என் கலச்சி என்னும்

இரையை நீக்கி சேசம் உள்ள

இரைகளே இல்லாமல் நாசு

ஒருங்கக் கட்டினேன் மிண்டாதே கரையாதே

ஒடுங்கி நிற்க சிவா

## நெருப்பு

அத்தி இத்தி உம்த்தி

காட்டில் நிற்கும்

மரங்களை வெட்டியிட்டு

நீட்டின தீ அத்தி வருகொளம்

இத்தி அனல் வாங்கி நிற்க சிவா

அக்கினி வெந்து அடர்ந்து

ஏறி முக்கியமாய் உன்னை நான் போற்றி

நீ கருகி வெந்து அக்கினி

தீயை விட்டு விலகி

என் நெஞ்சில் நிற்கவும்

என் சொற்களை வைரவரே

## பேதரு

யேசுநாதரும் தம்பேதுரும் ஆற்றங்கரை

மூலம் போகும்போது ஒரு நாரை யாகப்பட்டது

ஒரு கெண்டய எடுத்து விழுங்கிக் கெண்டையில்

இருபக்கமும் சிக்கி அடு படுத மறுக்கத்தைப்

பார்த்து அர்ச் ராயப்பர் சொல்லுவதாவது

ஆண்டவரே இந்த நாரை படுகிற மறுக்கத்தைப்

பாரும் பேதுரு உனக்குத் தெரியாத கெண்டை

விழுங்கிடவும் நாரை பறித்திடவும் ஒரு கடல்

இருகடல் மூன்று கடல் நான்கு கடல் ஐங்கடல்

அறுகடல் இங்கடல் ஏழுகடலுக்கு அப்பாலே

கிடக்கும் தவளையும் தண்ணீரும் குளிர்ந்திறங்கி

போனது போய் காந்தல் குத்து வேதனை எல்லாம்

குளிர்ந்திறங்கி போக சிவா

## இணைப்பு எண் – 4

### தொன்மங்கள் (புனிதர்கள் – ஆண்)

#### தோமையார்

மணக்குடிக்காயல் மிக அண்மைக்காலம் வரை இடைக்காடு என வழங்கப்பட்டது. புனித தாமஸ் இங்கு வந்திருக்கிறார். இதனால் தாமஸை இடைக்காட்டு தோமையார், இடைக்காட்டார் என்று கூறும் வழக்கு உண்டு. இடைக்காட்டில் தோமையார் குருசடி இருந்தது. இந்த குருசு மணக்குடி கடலில் மிதந்து வந்தது என்பது ஐதீகம். இந்தக் குருசடிக்கு இந்துக்களும் வந்தனர்.

ஒருமுறை தோமையார் குருசுக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தவனின் கை, அதனுடன் ஒட்டிக்கொண்டது. அவன் குருசுக்கு நேர்ச்சை செய்த பிறகு கை விலகிக்கொண்டது. இடைக்காட்டார் குருசைத் துடைத்த துணியைக் கிழித்து வீட்டிற்கு எடுத்துச் சென்றால் நல்லது என்ற நம்பிக்கை அண்மைக்காலம் வரை இருந்தது.

மிகப் பழங்காலத்திலிருந்தே இடைக்காட்டுத் தோமையாருக்குத் திருவிழா நடந்தது. இது உயிர்ப்புத் திருவிழாவிற்கு அடுத்த நாள் நடக்கும். இதில் இந்துக்களும் கலந்துகொண்டனர்.

#### அந்தோனியார்

மேல்மிடாலம் அந்தோனியார் குருசடியில் பல அற்புதங்கள் நடக்கின்றன. ஒருமுறை அந்தோனியாரை வழிபட்ட ஒரு பெண்ணுக்குக் கடல்பரப்பிலிருந்து வந்த முனிவர் ஒரு சங்கை கொடுத்தார். அப்பெண்ணின் உறவினரான

எலிமியாஸ் அந்தச் சங்கை வழிபட்டு பணக்காரர் ஆனார். இந்தக் குருசடியில் அருள்பெற்ற சிலர் எதிர்காலப் பலன் கூறுகின்றனர்.

மேலமணக்குடி அந்தோனியார் சக்தி வாய்ந்தவர். இவரை வழிபடுகின்றவர்கள் அந்தோனியார் குதிரைமேல் வருவதாகக் கனவு காண்பர். இந்தக் கனவு வந்தால் அவரது துன்பம் நீங்கிவிடும். ஒருமுறை இந்த ஊரில் கோவில் கோபுர வேலை நடந்தது (187). அப்போது சங்கரன் என்னும் இந்து நாடார் கோபுரத்திலிருந்து கீழே விழுந்துவிட்டார். ஆனால் அவர் எந்த அடியும் படாமல் மெதுவாகக் கீழே வந்தார். இந்த அற்புதத்திற்குப் பின்பு சங்கரன், ஜோசப் எனப் பெயரை மாற்றிக் கொண்டார்.

பள்ளம் துறை ஆலயத்தில் அந்தோனியார் ஸ்வரூபம் உள்ளது. இது வடக்கு நோக்கி இருக்கிறது. இதற்கு ஒரு கதை சொல்கின்றனர். மண்டைக்காடு மதக்கலவரம் நடந்தபோது கலவரக்காரர்கள் பள்ளம் துறை சர்ச்சை உடைக்க வந்தனர். அவர்கள் சர்ச்சினுள் சென்றபோது, அந்தோனியார் ஸ்வரூபம் அவர்களை வடக்கே செல்லுமாறு கை காட்டியது. அவர்களைச் செயலற்றவர்களாக்கித் திருப்பியது. இதன்பிறகு இச் ஸ்வரூபம் வடக்கு நோக்கி உள்ளது.

இனயம் பழைய கோவிலில் உள்ள அந்தோனியார் ஸ்வரூபத்தின்முன் குஷ்டரோகி ஒருவன் நின்று வழிபட்டான். அவன் சுகம் பெற்றபின் இந்த கோவிலுக்கு இந்துக்களும் வந்தனர்.

**லாரன்ஸ்**

முள்ளுதுறை ஊரில் லாரன்ஸ் புனிதருக்கு வழிபாடு உள்ளது. இந்த லாரன்ஸ் ஸ்வரூபம் ஒரு பெட்டியில் மிதந்து வந்தது. தேங்காய்ப்பட்டணம்வழி முள்ளூர் துறையில் ஒதுங்கியது. இதை முள்ளூர் துறை சாமியார் முழந்தாளிட்டு எடுத்து வந்து பழைய கோயிலில் வைத்தார்.

லாரன்ஸ் இந்துவாக இருந்து கத்தோலிக்கராக மாறியவர்; ராஜ பரம்பரையினர். இவரது தந்தை இவரை இரும்புக் கட்டிலில் வைத்து எரித்தாராம். இவர்

அப்போது சாதாரணமாக இருந்தார்; தன்னைச் சுற்றியிருந்த சேவகர்களைப் பார்த்து "மக்களே ஒரு பக்கம் வெந்தாச்சு; பிச்சுத் தின்னுங்கள்" என்றாராம். அவர்கள் அவரை அப்படியே விட்டுவிட்டு ஓடினார்களாம்.

இவரின் தூலரூபத்தைப் புகைப்படம் எடுத்தால் பதியாது என்ற நம்பிக்கை உள்ளது.

**குருசடிகள்**

இனயம் கடற்கரையிலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவில் கடலில் அலெக்ஸ்ரா என்ற பாறை உள்ளது. இங்கே இயல்பாக வளர்ந்த ஒரு குருசடி உள்ளது. 500 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு வெள்ளைக்காரன் இந்தப் பாறைக்குச் சென்று வழிபட்டான். இவன் ஒரு பெரிய குருசை நட்டான்.

இதுபோலவே மிடாலம் இனையத்திற்கு இடையில் உள்ள கடல்பரப்பில் பாறையில் இயல்பாக வளர்ந்த ஒரு குருசு உள்ளது.

**இணைப்பு எண் 5**

**ஊஞ்சல் பாட்டு**

நாளான நாளையில் நல்ல வெள்ளிக் கிழமையிலே வே—ஏ

பள்ளி மகன் வாசலிலே பாலன் ஒருவன் வந்தானே

பாலொடு ஊஞ்சலாடலாம் பழங்களோடு போறான் தம்பி

நூலொடு ஊஞ்சலாடலாம் நோகப் புண் ஆவதில்லே

சாஞ்சாடி சாஞ்சமரம் சந்தனத்த உள்ள மரம்

உள்ளுளுத்த மாமரமோ ஈந்தமரம் காடாமோ

காடுவெட்டி கல்லுருட்டி காரமுள்ளுமேல் பறககும்

வானவேணாங் சோன வேணாங் கடல்வரும் சிங்கராசன்

சிங்கராஜன் கல்

## ஊஞ்சல் பாட்டு

நாளான நாளையிலே

நல்ல வெள்ளிக் கிழமையிலே லே ஏ

பள்ளி மகன் வாசலிலே

பாலன் என்றொரு வந்தானே

பாலோடு ஊஞ்சலாடலாம்

பழங்களோடு போறேன் தம்பி இ இ

நூலோடு ஊஞ்சலாடலாம்

நோகப்புண் ஆறுதில்லா

சாஞ்சாடி சாஞ்சமரம்

சந்தனத்த உள்ள மரம் ஓ ஓ

உள்ளுத்த மரமாமோ

ஈந்தமரங் காடாமோ

காடு வெட்டிக் கல்லுருட்டி

காரமுள்ளு மேல் பறக்கு

வான வேணாங் கோன வேணாங்

கடல்ல வரும் சிங்கராசன்

சிங்கராசன் கல்யாணமாம்

முத்துப் பெண்ணே மோகனமே

மூத்தங்கு அடிமை சீக்குண்டு

உச்சிக் குள்ளே வாரும் மன்னா

வந்து முத்தம் தாரு மன்னா ஆ

தாராட்டி னுள்ளே வளர்த்த

தாயார் சொல்லி நா மறப்பேங்

மறப்பதில்லை சுரப்பதில்லை

மணப்பாட்டு மரக்குரிசே ஏ

குருசு நல்ல உமச் செழிவோ

கும்பிடுவோம் ஆதரிப்போம்

ஆசாரிப் பூசப் பெட்டி

காவல் மேல ராமப் பெட்டி இ

சொக்கலிங்கம் வருவாரன்றி

பணிப்பெண்ணே பகவதியே

பாத்து தந்தாலோ பெலமோ ஓ

வள்ளி மகங் வாசலிலே

பாலன் வந்து பிறந்தானே

பழங்களோடு போறேன் தம்பி

நோயோடு ஊஞ்சலாடலாம்

## தொழில் பாட்டு

ரசப்பா கடவுளடா நா கடவல மீனும் பயந்து வர

பூவாகும் பாவானுமா போனவனெல்லாங் கரசேர

ஊப்பனை தேள் குழலாம் குமரப்பனும்

பட்டானாம் நா நூத்த நூலெல்லாம்

வத்தே கொண்டே பேச்சுதே

வெள்ளிக்கிழம சந்தயிலே

சனி உழுந்தா உன்மேலே

எங்கமடி நாவயெல்லாங்

இறக்கவல்ல போறாவு

பட்டதுல பெரிய மீனு

பன்னாவும் குதுப்புமா

தட்டுல கீழ வைத்து எல்லா

பைரவெல்லா போறாவு.

ஆழியிலே தேனாலே அலலுமாய்

அன்பான வாலே கொழமுமாய்

குழந்தையினாலே வளம் பெறுவாய்

கொழந்தை கையினாலே பத்திரமாய்

பத்திரருத்தனாலே பேச வந்தா

கௌவுசியை போல் ஆன புள்ளே

ஆன புள்ளனாலே மீன் பிடிக்கும்

அரசர் புள்ளனாலே தூண்டலிடும்

மீன் பிடிக்கும்னாலே சறிகளே

விலமதிப்பினாலே வெள்ளளேன்

வெளச்சலினாலே கொய் எடுப்பா

வேடிக்கையினாலே சட்ட நெய்வா

வைகாசி நாளே பெருகிவரும்

வளர்ந்து நாளே பெருகிவரும்

## இயேசு சுபை நடத்திய அலைகளினூடே கருத்தரங்கில் படித்த கட்டுரை (15.5.2005)

## இந்தக் கட்டுரை மீதான விவாதம்

**பேரா. ஆ. சிவசுப்பிரமணியன்**

நாட்டார் வழக்காறு என்றதும் நாட்டார் பாடல்களே நினைவுக்கு வரும். அது தொடாத பல செய்திகள் குறிப்பாக விளையாட்டுக்கள், நம்பிக்கைகள், புராணம் இவை பற்றி மிகச் சிறந்த பதிவாக அ.கா. பெருமாளின் உரை இருக்கின்றது. தமிழ்நாட்டில் இஸ்லாமியர், கிறிஸ்தவர் இரண்டு பேரையும் உள்ளடக்கிய நாட்டார் வழக்காறுகள் அதிக அளவில் தொகுப்பட வில்லை. அதனால் ஆய்வு என்பதை இப்போது நினைக்கவே முடியாது.

சீர்திருத்தக் கிறிஸ்தவம், கத்தோலிக்கம் இரண்டையும் ஒப்பிடும்போது சீர்திருத்தக் கிறிஸ்தவத்தில் நாட்டார் வழக்காறுகளும் அழகியல் கூறுகளும் பெருமளவில் இல்லை. சீர்திருத்தக் கிறிஸ்தவம் கல்விக்கு முக்கியத்துவம் கொடுத்ததற்கு அந்தக் காலகட்டத்தில் அவர்கள் விவிலிய வாசிப்புக்கு முக்கியத்துவம் கொடுத்ததுதான் காரணம். சீர்திருத்தக் கிறிஸ்தவன் என்று சொன்னால் அவன் நிச்சயமாக விவிலியம் படிக்கத் தெரிந்திருக்க வேண்டும்.

விவிலியம் படிக்கத் தெரிய வேண்டுமென்றால் எழுதப் படிக்கத் தெரிய வேண்டும். எழுதப் படிக்கத் தெரிய வேண்டு மென்றால் கல்வி இருக்க வேண்டும். சீர்திருத்தக் கிறிஸ்தவம் பரவுவதற்கு முந்திய காலத்தில் பரவிய கத்தோலிக்கம் சடங்கியல் சார்ந்த சமயமாக இருந்தது. இந்தச் சமயத்தைத் தழுவியவர்களில் பெரும்பான்மையினர் நாட்டார் தெய்வங்களை வழிபட்டு வந்த அடித்தட்டு மக்கள்தாம்.

அடித்தள மக்களுடைய சமயம் ஆரவாரம் மிக்க சமயம். இங்குச் சாமியாட்டம் உண்டு. உயிர்ப்பலி உண்டு. பொங்கல் உண்டு. நிறுவன சமய அம்மன் கோயிலுக்குச் சென்று பொங்கலிட முடியாது. ஆடு, கோழி வெட்ட முடியாது. சாமியாட முடியாது. ஆனால் சுடலைமாடன், இசக்கியம்மன் கோயில்களில் இந்த மூன்றும் இல்லையென்றால் அந்தக் கோயிலில் கொடை நடக்காமலாகிவிடும். சாமியாட்டம், உயிர்ப்பலி, பொங்கல் இந்த மூன்றும் கோயிலுக்கு முன்பகுதியில் நிகழ வேண்டும்.

கொடைவிழா ஆண்டிற்கொரு முறை அல்லது இரண்டாண்டிற்கு ஒருமுறை வரக்கூடிய ஒரு பெரிய பொழுதுபோக்கு. அங்கே கணியான் ஆட்டம் இருக்கும். வில்லுப்பாட்டு இருக்கும்.

மதுரைப் பகுதிக் கோவிலென்றால் லாவணி ஆட்டம் இருக்கும். இந்த மக்களை இவர்களின் உளவியல் நிலையில் தக்கவைத்துக் கொள்வதற்கு நாட்டார் நிகழ்த்துக் கலைகளை இங்கு (கத்தோலிக்க மக்கள் இருக்குமிடம்) கொண்டு வரவேண்டி இருக்கிறது. அந்தோனியார் பாதத்திற்குப் பொங்கல் வைக்கும் ஒரு நிலையும் உண்டு. அதேபோல் அந்தோனியார் கோயிலில் அசனம் கொடுத்தல் என்ற பெயரில் உயிர்ப்பலி கொடுப்பதும் உண்டு.

கத்தோலிக்கத்தில் விவிலியம் இரண்டாவது நிலைதான். அதைச் சாமியார்களிடம் விட்டுவிட்டார்கள். நீங்கள் இரண்டு வரியைப் படியுங்கள்; நாங்கள் கேட்டுக்கொள்கிறோம் என்று. அவர்களும் இதில் கவனமாக இருக்கிறார்கள். ஏன் என்றால் இந்தச் சடங்கியல் நிலை மாறக்கூடாது. இந்த மதத்தைத் தழுவியதால் எவற்றை இழந்தார்களோ அந்த இழப்பை ஈடுகட்டுவதற்கான ஒரு அம்சம்தான் இந்தச் சடங்குகள். சீர்திருத்தக் கிறிஸ்தவத்தில் இது இல்லாததால் இந்த நிலை இல்லை. ஆகையால்தான் வசதி குறைவான காலகட்டத்தில் கத்தோலிக்கம் அதிக மக்களை ஈர்க்க முடிந்தது. அடித்தள மக்களின் முந்தைய சமய வாழ்க்கையின் வழிபாட்டு மரபுகளை இது அப்படியே உள்வாங்கிக் கொண்டது. இதை 17ஆம் நூற்றாண்டு சேசு சபைத் தலைவர் ஒரு கடிதத்தில் குறிப்பிடுகின்றார்.

ஆலந்தலை பக்கம் ராயப்பர் பெயரில் ஒரு தேவாலயம் கட்ட முயற்சி செய்யப்பட்டது. அதன் பிறகு சில ஆண்டுகள் கழித்து அந்தோனியார் கோயில் கட்ட முயற்சி செய்தார்கள். ராயப்பர் கோவிலுக்குப் பணம் வரவில்லை. அந்தோனியார் கோவில் கட்ட நிறையப் பணம் வந்தது. ஏனென்றால், ராயப்பர் அந்தோனியாரைப் போல அற்புதங்கள் செய்பவர் அல்லர். அந்தோனியார் அடித்தள மக்களின் ஆண்டவர். அவர்கள் தொடக்கூடிய ஆண்டவன். அவர்கள் வாசகங்களினால் உரைகளினால் உணரப்படுகின்ற ஆண்டவனைவிட அவர்களால் தீண்ட முடிகிற கடவுளாக இருப்பதை மக்கள் விரும்புகின்றனர்.

இதில் இரண்டு விதமான போக்குகள் உள்ளன. சிலவற்றைக் குருக்கள் உருவாக்கினர். சிலவற்றை மக்கள் உருவாக்கினர். சில நாம் ஆராய்ச்சி செய்ய முடியாத அளவில் சேர்ந்திருக்கின்றன. ஒரு நிறுவன சமயக் கோயிலுக்கும் நாட்டார் கோயிலுக்கும் சென்று வந்தால் அவன் கையில் சுண்டல் இருக்கலாம்; பொங்கல் இருக்கலாம்; திருநீறாக இருக்கலாம்; துளசி இருக்கலாம்; வில்வ இலை இருக்கலாம்.

தேவாலயத்திற்குச் சென்று வருபவர்கள் எதைக் கொண்டு வர முடியும்? அங்கே நற்கருணையைச் சாப்பிட்டுவிட வேண்டும். கையில் கொண்டு வர முடியாது. ஏதாவது கையில் கொண்டு வர வேண்டுமே. அதற்காக நேர்ச்சைக்காக உப்பு மிளகு போட்டு அதையே கையில் எடுத்து வருவர். இரண்டு பண்பாட்டினுடைய கலப்பிற்கு இது உதாரணம்.

கடற்கரை மக்களின் வெகுஜன வழிபாட்டு மரபு ஆய்வுக்குரிய ஒன்று. உள்நாட்டுப் பகுதியில் சிறுவர்களின் விளையாட்டில் விலங்குகளுக்குத் துன்பம் செய்து மகிழ்வது, கழுதையின் வாலில் டப்பாவைக் கட்டிவிடுவது போன்றவை உண்டு. ஓணானின் வாலில் எண்ணெய்த் துணியை நன்றாகச் சுற்றி வைத்து அனுமார் லங்கா தகனம் என்று தீ வைத்துவிடுவான். அது சில நேரங்களில் கிராமங்களிலுள்ள குடிசைகளில் பட்டுக் குடிசை தீப்பற்றி எரிந்துவிடக்கூடிய அபாயம் உண்டு. உவரியில் கடற்கரைப் பகுதியில் பச்சை மட்டையில் ஒரு ஓணானைப் பிடித்து நான்கு கால்களிலும் முள்ளைக் குத்தி வைத்து மரண ஊர்வலம் நடத்தி விளையாடுவர்.

அணிலுக்கு ஏன் மூன்று கோடுகள் இருக்கின்றன. அவை ராமர் போட்ட கோடுகள். குருசு நண்டு என்ற ஒன்று உண்டு. இதன் விலங்கியல் பெயர் குருசிபெரா. இந்த நண்டின்மேல் சிலுவைக்குறி இருக்கும். போர்த்துக்கீசிய மொழியில் குருசு என்பது சிலுவையைக் குறிக்கும் சொல். குருசு நண்டு என்று பெயர் வந்ததற்கு ஒரு கதை உண்டு. சவேரியார் கடற்கரையில் வந்து இறங்கினார். அப்போது அவருடைய கையிலிருந்த சிலுவை கடலுக்குள் விழுந்துவிட்டது. அது அவருடைய அம்மா ஆசீர்வாதம் செய்து கொடுத்த சிலுவை. அதனால் அவர் வருந்திக் கொண்டிருக்கும்போது நண்டு ஒன்று சிலுவையைக் கவ்விக் கொண்டு வந்து அவர் பாதத்தில் வைத்தது. உடனே சவேரியார் அந்த நண்டை எடுத்து தன் கையால் சிலுவைக் குறியிட்டு ஆசீர்வாதம் செய்தார். அதனால் நண்டின் முதுகில் சிலுவைக்குறி தோன்றியது. இதற்கு ஒரு பாட்டு உண்டு.

நடுகடலாம் நற்குருசு

சேசு நண்டுகளாய் கொண்டுவர

திருக்கையால் ஏந்தி

சவேரியார் திருமுக்தி செய்தாராம்

இது தொழில் பாடலாக சில இடத்தில் பாடப்படும். சில நேரங்களில் தாலாட்டுப் பாடலாகவும் வரும். பட்சியின் நிழல் படுவது குழந்தைக்குக் கெடுதல். இதற்குப் பாடப்படும் பாட்டில் செபஸ்தியாரின் பெருமை பேசப்படுகிறது.

வெங்காளப் பட்சி

வரப்பெல்லாம் மேய்குதுன்னு

சிங்கார வில்லெடுத்து

செபஸ்தியார் சிறகுவை எய்தாராம்

இது தாலாட்டாகவும் பாடப்படும்.

கிறிஸ்தவர்களில் கத்தோலிக்கர்தான் முதன்முதலில் தனியாக ஒரு நாடக அரங்கை உருவாக்கினர். போர்த்துக்கீசிய நாட்டில் உள்ள நாடக அரங்கும் தமிழ்நாட்டினுடைய பாரம்பரியக் கூத்து அரங்கும் இணைந்து ஒரு அரங்கு உருவானது. இது வாசாப்பு நாடகம். வாசகம் என்று சொன்னால் உரைநடை. 'பா' என்றால் செய்யுள், வாசகம் + பா = வாசகப்பா. அது பேச்சு வழக்கில் வாசாப்பு என்று திரிந்தது. இந்த வாசாப்பு, கல்லறை வாசகப்பா இப்படி நிறைய உள்ளன. இதை உருவாக்கி வளர்த்தவர்களில் சேசு சபைக்காரர்கள் முக்கியமானவர்கள். இதை அழித்தவர்களும் அவர்கள்தாம். மதுரை பேராயராக இருந்த லியோனார்டு என்பவரும் தூத்துக்குடியில் இருந்த ரோச் என்பவரும் சேர்ந்து இதை முடித்துவிட்டார்கள். கத்தோலிக்கத்தின் இந்த அரங்கமே போய்விட்டது.

சில ஊர்களில் நாடகம் நடந்தது குறித்த வேடிக்கை வழக்காறுகள் உள்ளன. நாடகத்தில் இயேசுவாக ஒருவர் நடித்துக் கொண்டிருப்பார். திருப்பாடுகள் வரும்போது இயேசுவைச் சவுக்கு வைத்து முதுகில் ஓங்கி ஒருவன் அடிப்பான். இயேசுவாக நடித்துக்கொண்டிருப்பவர் 'சவமே மெதுவாக அடில' என்று கெட்டவார்த்தையுடன் பேசுவார்.

இன்றைக்கும் வாசகப்பா நாடகம் மீட்டெடுக்கும் நிலையில் தான் உள்ளது. அருமையான நாடகம் இது. இலங்கையில் இருந்து வந்தது. காமநாயக்கன்பட்டியில் நடந்த கல்லறை வாசகப்பா இலங்கையில் குருநகர் என்னும் கடற்கரைப் பகுதியிலிருந்து வந்தது.

மீனவ வழக்காறுகளில் அழகியல் குறைவு என்று சொல்வதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. பாடல் வகை அதிகமாக இல்லாததற்குக் காரணம் இவர்களுக்கு மீன்பிடித் தொழில் ஒன்றுதான் இருந்தது என்பதுதான். உழவன் நிலத்தை உழுதுவிட்டு மாட்டைத் தொழுவில் கட்டிக் கொண்டு கலப்பையைச் சுவரில் சாய்த்து விட்டுச் சென்றால் அதன்பிறகு மறுநாள்தான் அவனுக்கு வேலை. இவர்கள் மடியைப் பழுது பார்க்க வேண்டும். மீன் பிடித்தோம் வந்தோம் என்ற நிலை கிடையாது. இது உணவைத் தேடி வாழும் வாழ்க்கை. நான்கு நாள் மீன்பிடித்துக் கொண்டு ஐந்தாவது நாள் போகாமல் இருக்க

முடியாது. ஆகையினால் ஓய்வு குறைவான கடினமான தொழில் இது. ஆத்தாகிட்ட குடித்த பாலைக்கூடப் கடலில் வாந்தியெடுத்து வரும் நிலை கடல் தொழில்.

அம்பாப் பாடலுக்குத் தொடக்கமும் இல்லை; முடிவும் இல்லை. தொடர்ந்து பாடிக்கொண்டே இருக்க வேண்டும். அப்போது மீனவர்கள் தாங்கள் கேட்ட தாலாட்டுப் பாடலையும் சேர்த்துப்பாடி

பாலும் மடிப்பினிலே

பாலகனும் தொட்டிலிலே

சோறும் மடிப்பினிலே

சோதிடரும் தொட்டிலிலே

இது தாலாட்டுப் பாடல்.

பாலும் மைமா தொட்டிலிலே

சோறும் மைமா தொட்டிலிலே

கடைசியில், நடுவில் இரண்டு அசைச் சொல் ஏதாவது போட்டு விட்டால், தாலாட்டு அம்பாப் பாடலாக மாறிவிடும்.

இன்னொரு விஷயம். மற்ற தொழில்களில் எல்லோரும் கலந்து வேலை பார்க்கும் நிலை உண்டு. இங்கே கடலில் ஆராய்ச்சி செய்பவர்கள் வேண்டுமென்றால் எப்போதும் இருப்பார்கள். மற்ற நேரத்தில் யாரும் இருக்க மாட்டார்கள். கடல் தொழில் முழுக்க முழுக்க ஆடவர்களுக்கு உரியது. பெண்கள் கடல் தொழில் செய்வது கிடையாது. வேறு சாதியினர் வேறு மதத்தவர் பெரும்பாலும் செய்வதில்லை. ஆகவே வழக்காறுகளின் போக்கு வித்தியாசமாக இருக்கும்.

இவர்களுடைய வழக்காறுகளில் சமயத் தாக்கம் அதிகம். 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹென்ட்ரிக் அடிகளார் செத்த வீட்டில் ஒப்பாரி வைத்து

அழுவது பொருத்தமானதல்ல; அதற்குப் பதிலாக கிறிஸ்தவ மந்திரத்தைப் படிக்க வேண்டும் என்று சொன்னார். இதனால் ஒப்பாரி என்ற வடிவம் அழிந்துவிட்டது. ஒப்பாரிக்குப் பதிலாக ஒரு சமய வடிவம் சேர்க்கப்பட்டது.

இவர்களிடம் தாலாட்டு வடிவம் வழக்கில் உண்டு. இதில் அழகியல் கூறுகள் அதிகம். விவிலியம் தொகுக்கப்பட்டபோது பல பகுதிகளை நீக்கிவிட்டுத் தொகுத்திருக்கிறார்கள். சீர்திருத்தக் கிறிஸ்தவர்கள் இதைத் தமிழில் தள்ளுபடி ஆகமம் என்று சொல்வார்கள். மக்கள் பல வடிவங்களில் உருவாக்கியிருக்கிறார்கள். யூதாஸ் என்ன ஆனான்? விவிலியத்தில் இதற்கு விடை கிடையாது. ஆனால் மக்களுக்காக யூதாஸுக்கு ஏதாவது தண்டனை கொடுத்து ஆக வேண்டும். அதனால் அவனை லூசிப்பேய் வந்து இழுத்துக் கொண்டு போயிற்று. யூதாஸ், நரகத்துக்கு வா. நீதான் பொருத்தமான ஆள் என்று சொல்லிவிட்டுப் போகும். விவிலியத்தில் இல்லாத ஒரு பகுதி இது என்று சொல்வார்கள்.

இயேசு நாதர் திருவிழாக் கூட்டத்தில் காணாமல் போனது பற்றி ஒரு சின்னக் குறிப்பு நற்செய்திகளில் உண்டு. ஆனால் அது மாதா புலம்புகிறது போல் வரும். இயேசுநாதர் தச்சுத்தொழில் செய்து தாய் தகப்பனுக்கு கஞ்சி ஊற்றிய பாட்டு உண்டு.

புனிதர்களைப் பற்றி இதேமாதிரி பல பாடல்கள் உள்ளன. எங்கள் மாவட்டத்தில் (தூத்துக்குடி) பரவர்களைப் பொறுத்த வரையில் ராயப்பர் ரொம்ப முக்கியமானவர். அவர் மீன்பிடித்த கதை. புல்லு மாவு தின்ன கதை. அவரது அம்மா நரகத்தில் இருந்த கதை என்று ராயப்பரைப் பற்றி ஏராளமான கதைகள் உள்ளன. ஏன் மற்ற புனிதர்களைப் பற்றி மீனவர்களிடம் கதைகள் இல்லை? ராயப்பர் மீன்பிடிப்பவர். அவர் மீனவர் என்பதால் அவரைப் பற்றி நிறைய கதைகள், பாடல்கள் உள்ளன. அதே மாதிரி சவேரியார் என்று யாரும் சொல்லமாட்டார்கள். பலே பத்ரா, பெரிய தகப்பன் என்று சொல்வார்கள்.

தூத்துக்குடியில் தோணி என்று ஒன்று உண்டு. பாயினால் இயங்கக்கூடியது. இன்றைக்கும் தொழில் ரீதியில் பயன்படக் கூடியது இந்த ஒன்றுதான். இது 400 டன், 450 டன் எடை சுமக்கும். தோணி ஒரு பாய்மரக் கப்பல். இதில்

சவேரியார் பயணம் செய்திருக்கிறார் என்பதற்குக் குறிப்புகள் உள்ளன. இதில் 14 பாய்கள் இருக்கும். இந்தத் தோணியினுடைய தண்டல் (தலைவன்) புயல் வருவது, சுழல் காற்று வருவது ஆகியவற்றைக் குறிப்பாகத் தெரிந்துகொள்ளும் திறமையுடையவன்.

சவேரியார் ஒருநாள் தோணியில் வருகிறேன் என்று சொன்னாராம். வரும்போது இந்தத் தண்டல் சொன்னாராம் "பெரிய தகப்பன் தோணியில் வருகிறார். யாரும் தூஷிண வார்த்தைகள் பேசக்கூடாது" என்று சொல்லிவிட்டார். தோணி போய்க்கொண்டிருக்கும்போது திடீரென்று சூறாவளி வருவதற்கான அறிகுறி தோன்றியது. அதனால் பாய்களை இறக்க வேண்டும். தண்டல் கட்டளை இட்டான். ஆனால் ஆட்கள் மெதுவாக வேலை செய்தனர். சவேரியார் "என்னப்பா எல்லாரும் ஒரு மாதிரியா மெத்தனமா இருக்கிறீங்களே என்ன விஷயம்?" என்று கேட்டார். உடனே "அது ஒன்றுமில்லை. வேலை மிகவும் வேகமாக நடக்க வேண்டுமானால் தூஷிண வார்த்தைகள் சொல்லுவோம். இப்போது நீங்கள் வருவதால் தண்டல் சொல்லக்கூடாதென்று சொல்லிவிட்டார். அதனால் சொல்லவில்லை" என்றார்கள். உடனே சவேரியார் "எது வளமையோ அப்படியே செய்யுங்கள்" என்றார். அதன்பிறகு வேலைகள் வேகமாக நடந்தன. இப்போதும் அவர்கள் கெட்ட வார்த்தைகள் சொல்ல சவேரியாரே அனுமதி அளித்திருக்கிறார் என்று சொல்கிறார்கள்.

கோவாவில் கழுத்து திரும்பிய ஒரு மீன் உள்ளது. இதுபற்றி ஒரு கதை உண்டு. சவேரியார் கடற்பகுதியிலிருந்து உபதேசம் செய்து கொண்டிருந்தார். அப்போது எல்லா மீன்களும் கேட்டுக் கொண்டிருந்தன. ஒரே ஒரு மீன் மட்டும் 'ஆமா பெரிதாக சொல்ல வந்திட்டாரு' என்று கழுத்தைத் திருப்பிக் கொண்டது. அப்படியே அந்த மீனின் கழுத்து திரும்ப முடியாது ஆகிவிட்டது. இப்படி நிறைய கதைகள் உள்ளன.

இன்னொரு முக்கியமான விஷயம் என்னவென்றால் அவர்களிடம் இருக்கும் வைத்தியம். கடல்வாழ் உயிரினங்கள் குறிப்பிட்ட மீன், குறிப்பிட்ட பாசி இவற்றைக் குறிப்பிட்ட நோய்களுக்குப் பயன்படுத்தக்கூடிய செயல் இன்னும் இருக்கிறது. பிள்ளைச் சுறா என்று ஏன் பெயர் வந்தது? அந்தச் சுறாவை

அவித்துக் குழந்தைக்குப் பாலூட்டக்கூடிய தாய் சாப்பிட்டால் அவளுக்கு நன்றாகப் பால் சுரக்கும் என்பது நம்பிக்கை. அதனால் அந்தச் சுறாவுக்குப் பிள்ளைச் சுறா என்ற பெயர் வந்தது.

இவர்களிடம் நிறைய பழமொழிகள் உள்ளன. இந்த இறால் மீனைப் பிடித்தால் ரொம்ப துள்ளும். சில பேர் தலை கால் புரியாமல் துள்ளிக்கொண்டிருக்கிறான் என்று சொல்லும்போது, ரொம்ப துள்ளுகிறவனுக்கு தலையில் பீ என்பான். இறால் மீனுடைய தலையில் ஒரு பகுதி உண்டு. அது அறிவியல் ரீதியாக அதன் ஆசனப் பகுதி அல்ல. ஆனால் மக்கள் அதுனுடைய ஆசனவாய்ப் பகுதி என்று நினைக்கின்றனர். அதில் மஞ்சள் நிறத்தில் ஒரு திரவம் கசியும். அதன் உடற்கூறை முழுமையாகத் தெரியாமல், அவன் அனுபவத்தில் அந்த இறாலைப் பிடிக்கிறான். இறால் பிடிபடும்போது போராடும். உடனே ரொம்பத் துள்ளுகிறவன் தலையில் பீ என்று சொல்வர். இந்தப் பழமொழி கடற்கரையில் வழக்கில் உள்ளது.

அறிவியல் ரீதியாகவும் சில குறிப்புகள் இவர்களின் வழக்காற்றில் உள்ளன. ஒருவகை மீன் அரபிக் கடல் பகுதியிலிருந்து இடம்பெயர்ந்து வேறு பகுதியில் வந்து பிடிபடும். மலையாளம் பிறப்பு; மன்னார் இறப்பு என்று பழமொழியாக இது மாறியிருக்கிறது. இவர்களின் நாட்டார் வழக்காறுகளை எல்லாம் ஒன்றாகச் சேர்த்துத் தொகுத்து ஆவணப்படுத்த வேண்டும். இப்படிச் செய்தால் இவர்களின் இனத்தை முழுதும் புரிந்துகொள்ள முடியும்.

**முனைவர் ஞா. ஸ்டீபன்**

(மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்)

குமரி மாவட்ட மீனவர்களுடைய வழக்காறுகளில் அழகியல் உணர்வு குறைவாக இருக்கிறது என்று அ.கா. பெருமாள் சொன்னார். எனக்கு அப்படித் தோன்றவில்லை. நானும் நிறைய வழக்காறுகள் அவர்களிடமிருந்து சேகரித்து இருக்கிறேன். பெருமாள் சொன்ன கருத்து, அவருக்கு கிடைத்த கதைப்பாடலின் அடிப்படையில் சொல்லப்பட்டிருக்கலாம். உண்மையிலேயே

இவர்களின் கதைப்பாடல் அவர்களுக்கே உரிய கதைப்பாடலா என்ற சந்தேகம்கூட எனக்கு வருகிறது.

ஆனால் மற்ற வழக்காறுகளைப் பார்க்கும்போது அவ்வாறு தோன்றவில்லை. இவர்களுக்கே உரிய ஒரு அழகியல் பார்வை இருக்கிறதென்று நான் கருதுகிறேன். இதற்கு ஒரே ஒரு சான்றைச் சொல்லலாம். ஆலஞ்சிக் கோவிலில் 1980கள் பக்கத்தில் ஒரு புதிய வகை நாடகம் நடந்தது. அதாவது நடனத்தோடு இணைந்த நாடகத்தை அறிமுகம் செய்தார்கள். அந்த நேரத்தில் அந்தக் கடலோரப் பகுதியில் இருக்கிற குளச்சல், மண்டைக்காடு, குறும்பனை, மிடாலம் ஆகிய பகுதிகளில் இருக்கின்ற மீனவர்களெல்லாம் பெருவாரியாகத் திரண்டு அது ஒரு வித்தியாசமான கலை நிகழ்ச்சி என்பதால் பார்க்க வந்தார்கள். நாடகத்தைப் பார்த்த பிறகு அவர்களின் எதிர்வினை மோசமாக இருந்தது. நாடகம் எப்படி இருந்தது என்று கேட்டால் அவர்கள் வழக்கமான பாணியில் பேசினார்கள்.

"ஆலஞ்சிக் கோவில்ல கம்பன்ட கூத்துராவு. கால கால ஒயத்துறாவு. சீலைய சீலைய தூக்குறாவு" என்றார்கள். அவர்களால் அந்த நடனத்தை ரசிக்கவே முடியவில்லை. இதற்குக் காரணம் அவர்களின் அழகியல் உணர்வு வேறு விதமாக உள்ளது. மேற்கத்திய வடிவத்தை அவர்களால் சீரணித்துக்கொள்ள முடியவில்லை என்பதுதான் உண்மை.

குறிப்பாக அவர்களிடம் வழக்கில் உள்ள கரவலைப் பாடலில் அழகியல் உணர்வு நன்றாக இருக்கும். அதன் ராகம் அற்புதமாகவே இருக்கும். அலையின் ஓசைக்கு ஏற்ப ரிதமிக்காக அமையக்கூடிய பாடல்தான் கரவலைப் பாடல். அதிலும் ஏற்ற இறக்கத்தைப் பார்க்கலாம். அதற்குள் நல்ல தொழில்நுட்பம் இருப்பதைப் பார்க்கலாம்.

கடல் அலை கரைநோக்கி வரும் நேரத்தில் அந்தப் பாடலின் ஓசை உச்சத்தில் இருக்கும். ஏனென்றால் அந்த நேரத்தில் உடல் வலிமையைக் காட்ட வேண்டும். அலை திரும்பப் போகும்போது பேசாமல் நிற்பார்கள். அந்த நேரத்தில் பாடலினுடைய ஓசை கீழ் இறங்கிவிடும். ஆக அந்தப்

பாடலினுடைய ரிதமே கூடும், குறையும். இந்த ஓசையுடன்தான் கரவலைப் பாடல் அமையும். அந்தத் தொழிலினுடைய தன்மை அப்படி.

அதேபோல் அவர்களுக்கே உரிய குறிப்பிடத்தக்க சில பழமொழிகளும் சில நாட்டார் வழக்குகளும் உள்ளன. இந்த சாதிக்கே உரிய வழக்காறுகளும் உள்ளன. உதாரணமாக, மீன்பட்டா முக்குவன் கண்ணு மிதப்பு மேல. குலத்துல குறைந்தவன் கூட்டத்துக்குப் பெரியவன் (நாவிதனை சொல்வது). இதுபோல வழக்காறுகள் சில அவர்களிடம் இருப்பதைப் பார்க்கலாம். இவர்களின் அழகியல் உணர்வை நுட்பமான நிலையில் பார்க்காமல் பொதுவான நிலையில் பார்க்க வேண்டும். அப்படியானால் அவர்களின் அழகியல் உணர்வைப் புரிந்து கொள்ள முடியும்.

அவர்களிடம் தீட்டு பற்றிய நம்பிக்கை மிகக் குறைவாக இருக்கிறது. இதைக் கல்பனா ராம் எழுதுகிறார். அவர் முழுக்க முழுக்க அவரின் உதவியாளர் ஸ்டெல்லா என்பவர் கொடுத்த தகவலின் அடிப்படையில்தான் பெரும்பான்மையான கருத்தை முடிவு செய்கிறார். அவர் விரிவாகக் களஆய்வு செய்து செய்திகள் சேகரித்தது மாதிரி தெரியவில்லை. பெருமாளுக்குக் கிடைத்த தகவல்கள்கூட அவருக்குக் கிடைக்கவில்லை. அதனால் கல்பனா ராமை முன்மாதிரியாக எடுக்க வேண்டாம் என்று சொல்லுவேன்.

தீட்டு பற்றிய வழக்காறுகள் அவர்களிடமும் நிறையவே உள்ளன. உதாரணமாக, பூப்பெய்திய பெண் பதினாறு நாள் தீட்டுடையவளாகக் கருதப்படுகிறாள். இதைத் தீட்டு என்று உறுதி செய்யக் காரணம் கூற முடியும். பூப்பான பெண்ணைக் கடல் நீரால் குளிப்பாட்டும் சடங்கு உண்டு. அதேபோல் குழந்தை பிறந்த பிறகு காயலுக்கு அழைத்து செல்கிற வழக்கம் கூட உண்டு.

தீட்டு பற்றிய சிந்தனை இருப்பதால்தான் இது நடக்கிறது. தீட்டைக் கழிப்பதற்காகத்தான் இது செய்யப்படுகிறது. இதேபோல கடல்நீரைப் பல சடங்குகளில் தீட்டுக் கழிக்கும் புனித நீராகப் பயன்படுத்தும் மரபை இவர்களிடம் காணலாம்.

முக்குவர்களிடம் புழுக்கையர்கள் என்று ஒரு பிரிவு உள்ளது. அவர்களைத் தீண்டத்தகாதவர்களாக முக்குவர்கள் கருதினார்கள். ஆனால் இன்று அந்த நிலை மறைந்துவிட்டது. ஒரு சம்பவம். புதூரில் ஒரு புழுக்கையர் முக்குவருடைய கட்டிலில் தவறுதலாக உட்கார்ந்துவிட்டார். உடனே அவரை அடித்துத் துரத்திவிட்டு கட்டிலின் நார்ப்பகுதியை அறுத்துவிட்டு புதியதாகக் கட்டினார்கள். இப்படி ஒரு சம்பவம்கூடப் பதிவாகி இருக்கிறது. தீட்டு பற்றிய நம்பிக்கை அவர்களிடம் நிறையவே இருக்கிறது என்று நான் கருதுகிறேன்.

## வேதாளக் கதைப்பாடல்

உஜ்ஜெய்னி நகரத்தின் அரசன் விக்கிரம கேசரி, ஒருநாள் கொலுவில் விற்றிருந்தபோது சாந்தசீலன் என்ற முனிவன் வந்தான். அரசனை வணங்கி ஒரு மாதுளம்பழத்தைக் கொடுத்தான். அரசன் பழத்தை அரசியிடம் கொடுத்தான். அவளும் அதைப் பாதுகாப்பாய் வைத்தாள்.

முனிவன் அடிக்கடி அரசனைச் சந்தித்தான். ஒவ்வொருமுறையும் ஒரு மாதுளம்பழத்தைக் கொடுப்பான். அரசனின் மனைவி அதை வைத்துக் கொள்ளுவாள். ஒருமுறை அரசி பழத்தைக் கொண்டு செல்லும்போது குரங்கு ஒன்று அவளிடமிருந்து பழத்தைப் பறித்துக் கொண்டு மரத்தில் ஏறிவிட்டது. குரங்கு பழத்தைக் கடித்ததும் அதிலிருந்து ரத்தினங்கள் சிதறின. இதைப் பார்த்து அரசி தான் பாதுகாப்பாய் வைத்திருந்த மற்ற பழங்களை உடைத்துப் பார்த்தாள். அவற்றிலும் ரத்தினங்கள்.

அரசி இந்த விஷயத்தை அரசனிடம் சொன்னாள். மன்னன், முனிவன் இருந்த இடத்துக்குப் போய் அவருக்கு வந்தனம் சொல்லிவிட்டு "முனிவரே நீங்கள் கொடுத்த மாதுளம்பழங்களின் ரத்தினங்களைக் கொண்டு ஒரு நாட்டையே வாங்கிவிடலாமே. இவ்வளவு செல்வத்தை எனக்குத் தந்தது ஏன்? என்று கேட்டான்.

முனிவர் அரசனிடம் கூறினார்: "காட்டில் நான் வேள்வி செய்யப் போகிறேன். இந்தக் காட்டில் தெற்குத் திசையில் நூறுமுழ உயரமுள்ள முருங்கை மரத்தில் வேதாளம் ஒன்று தொங்கிக்கொண்டு கிடக்கிறது. அந்த வேதாளம் இருந்தால் வேள்வி பூர்த்தியாகும். அதை நீ பிடித்துக்கொண்டு வரவேண்டும். இந்த காரியத்தை உன்னால் செய்ய முடியும். வேள்வி முடிந்ததும் உனக்குக் காயகல்ப மருந்து தருவேன். அதுதான் உன் செயலுக்குப் பரிசு" என்றார்.

அரசன் முனிவர் சொன்னபடி காட்டிற்குப் போய் முருங்கை மரத்தில் ஏறி வேதாளத்தைப் பிடித்துக் கட்டித் தோளில் போட்டுக்கொண்டு வந்தான்.

அப்போது வேதாளம், அரசே நான் ஒரு கதை சொல்லுகிறேன் கேள். நான் சொல்லும் கதையின் புதிரை அவிழ்த்துவிட்டால் நான் கட்டவிழ்த்து ஓடிவிடுவேன். நீ பதில் சொல்லவில்லை என்றால் உன் தலை வெடித்துச் சிதறிவிடும் என்றது.

வேதாளம் ஒரு கதை சொன்னது. அரசனும் கதை முடிவில் புதிருக்கு விடை கூறினான். வேதாளம் அவன் கட்டை அவிழ்த்து விட்டு முருங்கை மரத்தில் ஏறிக்கொண்டது. மறுபடியும் அதைப் பிடித்துக் கட்டினான். அது கதை சொல்ல அவன் பதில் கூறினான். இப்படி 23 கதைகளுக்குப் பதில் சொல்லிவிட்டான். கடைசியில் 24வதாக ஒரு கதை சொன்னது வேதாளம்.

காமபுரம் என்ற நகரத்தில் அரசன் ஒருவன் இருந்தான். அவனுக்கு மனைவியும் மகளும் உண்டு. அரசனின் தவறான செய்கையால் நாட்டையும் செல்வத்தையும் இழந்து காட்டுக்குப் போக வேண்டியதாயிற்று. அப்போது மூன்று பேரையும் திருடர்கள் பிடித்துக்கொண்டனர். அரசன் அவர்களை எதிர்த்துச் சண்டை போட்டுச் செத்துப்போனான். தாயும் மகளும் விதியை நொந்தபடி காட்டுவழி நடந்தனர்.

இந்த நேரத்தில் அந்தக் காட்டில் ஒரு அரசனும் அவன் மகனும் வேட்டையாடிவிட்டு வந்தனர். அவர்கள் தாய், மகளின் காலடிச் சுவடுகளைப் பார்த்தனர். தந்தை, காலடிச் சுவடைப் பார்த்தே அதற்கு உரியவரின் வடிவத்தைக் கண்டுபிடிக்கும் வித்தை படித்தவன்.

தந்தை மகனிடம் மகனே இந்தப் பெரிய கால்சுவடுக்குரியவளை நான் மணப்பேன். சிறிய கால் சுடுக்குரியவளை நீ மணக்கலாம். இருவரும் பேரழகிகள். வா தேடிப்போவோம் என்றான்.

அப்படியே இருவரும் காட்டில் அலைந்து திரிந்து தாயையும் மகளையும் கண்டுபிடித்தனர். இருவரும் முன்பு பேசிக் கொண்டபடியே அவர்களை மணந்தும் கொண்டனர்.

"இப்படியாகத் தாயையும் மகளையும் தந்தையும் மகனும் மணந்துகொண்ட பின்பு பிறக்கும் பிள்ளைகள் தங்களுக்கு என்ன முறை சொல்லி அழைத்துக்கொள்ளுவார்கள்? சொல் அரசனே" என்று வேதாளம் கேட்டது.

விக்கிரமகேசரி திகைத்தான். மௌனமானான். உடனே வேதாளம் நமக்கு விடிவுகாலம் வந்துவிட்டது என்று நினைத்து அரசனிடம் "அரசே சாந்தசீலன் என்ற இந்த முனிவன் சகல அம்சமும் பொருந்திய உன்னைப் பலிகொடுத்து என்னைப் பிடித்து வலம்வரத் திட்டமிட்டிருக்கிறான். அதனால் உன்னை அவன் கொல்லுமுன் நீ அவனைக் கொன்றுவிடு. அதற்கு உபாயம் சொல்லுகிறேன் கேள்" என்று சொன்னது.

அரசனும் வேதாளம் சொன்னபடியே கேட்டு நடந்தான்; முனிவரைக் கொன்றான். இதனால் அவனுக்குப் பெரும் சித்தியும் கிடைத்தது. வேதாளம் விமோசனம் அடைந்தது.

இந்தக் கதைகளை எல்லாம் பாடல்களாகப்பாடி இருக்கின்றார் ராமநாதபுரம் முதுகுளத்தூர் புலவர் ஒருவர். இவரின் இயற்பெயர் கிடைக்கவில்லை. இவர் கவிக்களஞ்சியன், கவிப்பிரான் என்று அழைக்கப்படுகிறார். இவரது தந்தை கறுப்பன் என்ற பெயரை உடையவர் என்று தெரிகிறது.

இவரது காலம் பெரும்பாலும் 18ஆம் நுற்றாண்டாக இருக்கலாம். இவர் வேதாளக் கதை என்ற இந்நூலின் ஒவ்வொரு கதையின் தொடக்கத்திலும் 'முருக வணக்கம்' பாடியே தொடங்குகிறார். இவர் சிறந்த சிவபக்தர். கருணீக மரபினர்.

வேதாளம் சொல்லிய 24 கதைகளும் விக்கிரமகேசரியின் வரலாறும் இந்நூலில் 865 விருத்தப் பாடல்களாக உள்ளன. இந்த விருத்தங்கள் 16க்கு மேற்பட்ட சந்தங்களைக் கொண்டவை.

இந்நூலில் வேதியன் வேதாளமான வரலாறு, சாந்தசீலன் என்ற முனிவர் விக்கிரமகேசரியை வேதாளத்தைப் பிடித்து வருமாறு செய்தமை, வேதாளம்

சொன்ன 24 கதைகள், மன்னனால் முனிவர் கொல்லப்படுதல், வேதாளம் சாப விமோசனம் பெற்று சொர்க்கம் செல்லுதல் ஆகிய கதைகள் உள்ளன.

இந்நூலைப் பதிப்பித்த, டாக்டர் மா. இராஜமாணிக்கனாருக்குக் கிடைத்தது ஒரு ஏடுதான் (1961).

விக்கிரமாதித்தியன் உரைநடை கதையிலிருந்து வேதாளக் கதைப்பாடல் சற்று வேறுபட்டது. உரைநடை விக்கிரமாதித்யன் கதை மாந்தர்களின் பெயர்கள் இந்நூலில் வரவில்லை.

இந்நூலின் பாடல்கள் எளிமையானவை; கம்பனின் செல்வாக்குடையவர் இவ்வாசிரியர்; விக்கிரமகேசரி நாளோலக்க மண்டபத்தில் வீற்றிருக்கிறான். அவனைச் சுற்றி மன்னர்கள். பெண்கள் கவரி வீசினர். அவனை இந்திரன் என்றனர் புலவர். இதை, நூலாசிரியர்,

திண்டிறல் மன்னர் சூழத்
தெரிவையர் கவரி வீசத்
தண்டமி தோழர்கள் போற்றத்
தனிக்குடை மேனி ழற்ற
அண்டர்கேக னிவனே என்ன
அரியணை மீதி லேயோர்
மண்டபம் தன்னில் மேவி
மன்னன் வீற்றிருக்கும் காலை

என்கிறார். "தண்டலை மயில்களாட . . ." என்னும் கம்பனின் பாடல் ஓசையை இங்கு ஒப்பிடலாம்.

விக்கிரமன் நடுஇரவில் வேதாளத்தைப் பிடிக்கப் போகிறான். அப்போது வேதாளம் இருந்த நிலையை ஆசிரியர் விரிவாக வர்ணிக்கிறார். வேதாளத்தின்

எலும்பும் தோலும் வற்றிவிட்டன. அதன் கைகால்கள் தேய்ந்துவிட்டன. அறநெறி தவறும் பாவியைப் போல் அது தொங்கிக் கொண்டிருந்தது. பாடல் கீழ் வருமாறு:

தோலுடன் எலும்பு வற்றித்

துவர்க்குடல் உலர்ந்து கையும்

காலுறு நரம்புந் தேய்ந்து

கயிறென நான்று நின்று

ஞாலமேற் றருமந் தன்னை

நலிந்தபா விகளைப் போன்று

சாலவே தலைகீ ழாகத்

தளர்ந்ததுவே தாளந் தூங்கும்

இந்நூலில் நிறைய உவமைகள் வருகின்றன. நாக கன்னிகை பொய்கையில் நீராடச் சென்றாள். அப்போது ஒரு அரக்கன் அவளைப் பிடித்து விழுங்கிவிட்டான். இதை மூன்று உவமைகளால் ஆசிரியர் விளக்குகிறார். நளனைச் சனி பற்றியது போலவும், சூரியனைப் பனி மூடியது போலவும், ராகு சந்திரனைப் பிடித்தது போலவும் அரக்கன் கன்னியை விழுங்கினானாம். பாடல் இது

அந்தநள னைச்சனி அடைந்தபடி போலும்

முந்துபனி ஆதவனை மூடியது போலும்

சந்திரனை ராகுவெதிர் தாவியது போலும்

விந்தைநகர் மாதினை விழுங்கின னரக்கன்.

இந்நூலில் சிவபுராணக்கதைகளும் வாய்மொழிக் கதைகளும் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. கௌதமர் அகலிகை சாபம், முருகன் சூரன் வதை, சம்பந்தர் சமணர்களைக் கழுவேற்றியது, சிவன் திரிபுரம் எரித்தது போன்ற

புராணக் கதைகளும் முருகன் மாம்பழத்துக்காக உலகைச் சுற்றியது, சனி பிடித்தவர்கள் அதைப் போக்கச் செய்யும் உபாயம், முருகன் வேடுவப் பெண்ணை மணம் செய்த முறை எனப் பல வாய்மொழிக் கதைகளும் உவமைகளாகவும் மேற்கோளாகவும் இந்நூலில் வருவது இதன் சிறப்பு.

வாய்மொழியாக உள்ள கதைகளையும் சிவன் பெருமை பேச புராணச் சார்பு ஒற்றுமை வாய்ப்பை ஆசிரியர் வலியவே மேற்கொள்ளுவதை இந்நூலில் பரவலாகக் காணலாம்.

ஒருமுறை சிவன் பார்வதிக்குக் கதை சொல்லிக் கொண்டிருந்தான். அப்போது கோவிலுக்குப் பூசை செய்ய வந்த பூசாரி அந்தக் கதைகளை ரகசியமாகக் கேட்டுவிட்டான். அவன் அதை மனைவியிடம் சொல்லி ரகசியமாய் வைத்திரு; யாரிடமும் சொல்லிவிடாதே என்றான். அவள் தனக்கு வேண்டிய ஒரு பெண்ணிடம் அதைச் சொல்லி ரகசியமாய் வைத்திரு இக்கதைகளை என்றாள்.

இப்படி ஒருவர் மூலம் ஒருவர் சொல்ல அந்தக் கதைகள் பார்வதியிடம் வந்து சேர்ந்தன. இதனால் கோபம் கொண்ட சிவன், பிராமணனான பூசாரியை வேதாளமாகப் போ எனச் சபித்தார். அவன் தெரியாமல் நடந்துவிட்டது, சாபவிமோசனம் வேண்டும் எனக் கேட்டான்.

சிவன், உஜ்ஜெய்னி அரசனான விக்கிரமகேசரி உன்னைப் பிடிப்பான். அப்போது இந்த கதைகளைச் சொல்லு; கடைசிக் கதைக்குப் பதில் சொல்ல முடியாமல் விழிப்பான். நீ அவனை அடையாளம் கண்டுகொள். அதன் பிறகு உனக்கு விமோசனம் கிடைக்கும் என்றார். சிவன் சொன்னபடியே நடந்தது.

இந்தக் கதையைச் சொல்லும் புலவர், சிவன் புகழ் பாடும் போது வேதாளத்துக்கும் விமோசனம் என்கிறார். சைவ சார்புக் கருத்துக்களைப் பரப்ப வேதாளக் கதை இவருக்குப் பயன்பட்டது.

**உங்கள் நூலகம், அக்டோபர் 2009**

# ஆய்வு நாகரிகம்

சுமார் 28 வருடங்களுக்கு முன்பு அதாவது 1975 – 76 அளவில் கன்னியாகுமரி திருநெல்வேலி மாவட்ட எல்லையில் உள்ள ஒரு குக்கிராமத்திற்குத் தோல்பாவைக்கூத்து பார்க்கப் போயிருந்தேன். அது வித்தியாசமான அனுபவம். அப்போது நான் பார்வையாளனாகத்தான் இருந்தேன். அந்தக் கூத்தை நடத்திய கலைஞர் சமூகத்தைப் பற்றி எனக்குப் பெரிதாக ஒன்றும் தெரியாது. இதன் பிறகு தோல்பாவைக் கூத்து பற்றிப் பல்கலைக்கழக மானியக் குழுவிற்கு அறிக்கை தயாரிக்கவும் அந்தக் கலையைப் பற்றி ஒரு புத்தகம் எழுதுவதற்காகவும் தகவல்கள் சேகரிக்கத் தென்தமிழ் மாவட்டங்களில் தொடர்ந்து அலைந்தேன்.

நான் களஆய்வுக்காகத் தோல்பாவைக் கூத்து நிகழ்த்திய மண்டிகர் சாதியினரிடம் சென்ற ஆரம்ப காலத்தில் ஆய்வாளனாக மட்டும்தான் இருந்தேன். ஆனால் நாளாக நாளாக அந்தச் சாதிக்காரர்களுக்கும் எனக்கும் உள்ள உறவில் நெருக்கம் ஏற்படுவதை உணர்ந்தேன். இந்த நெருக்கம் நான் ஆய்வாளன் அல்லன் என உணரும்படியாகத் தூண்டக் கூடக் காரணமாகிவிட்டது.

சென்னையில் 1996இல் கிராமியக் கலைஞர்கள் மாநாடு நடந்தபோது தோல்பாவைக் கூத்துக் கலைஞர்கள் தனியாகச் சங்கம் வைக்க முயற்சி எடுத்தேன். இதன்பிறகு அந்தக் கலைஞர்களின் சாதியினர் எல்லோரும் திருநெல்வேலியில் கூடிய போது என்னை அவர்களின் சாதிச் சங்க ஆலோசகராக நியமித்துவிட்டனர். இந்தப் பொறுப்பின் காரணமாக நான் மண்டிகர் சாதியினருடன் பழக ஆரம்பித்த பின்னர் கிடைத்த தகவல்கள், நான் முன்பு சேகரித்தவற்றிற்குக் கொஞ்சம் மாறாகவும் இருந்தன.

ஆராய்ச்சியாளனாக அல்லாமல், அந்தச் சாதியினருக்கு வேண்டியவனாக ஆனபிறகு நான் தகவல்களைச் சேகரிக்கத் தயாரிப்புடன்தான் சென்றேன். இந்த நிலையில்தான் எனக்குச் சிக்கல் வந்தது. அவர்கள் கூறிய எல்லாத்

தகவல்களையும் நான் பதிவுசெய்தேன். ஆனால் அவற்றைக் கறுப்பு வெளுப்பில் வெளிப்படுத்தத் தயக்கம் வந்தது. மிக அண்மைக்காலமாக இவர்கள் தோல்பாவைக்கூத்து நிகழ்ச்சி நடத்துவதை விட்டுவிட்டு நடனம், பாட்டு என்று நிகழ்ச்சி நடத்த ஆரம்பித்துவிட்டனர்.

முந்திய காலங்களிலும் இவர்கள் கூட்டுக் குடும்பமாக வாழ்ந்தனர். இப்போதும் பெரும்பாலும் அப்படித்தான். இது தோல்பாவைக்கூத்து நடத்தவோ ரிக்கார்டு டான்ஸ் ஆடவோ இவர்களுக்கு வசதியாக இருக்கிறது. ஆனால் இவர்களின் இரண்டாவது காலகட்டமான தோல்பாவைக்கூத்து நிகழ்த்துதலை விட்டுவிட்ட நிலை இவர்களைப் பாதித்திருக்கிறது. இவர்களின் குடியும், தகாத உறவும் இவர்களைப் பாதிக்க ஆரம்பித்ததை நான் உணர்ந்து வருகிறேன். இது அண்மைக்காலத்தில் உருவானது. அதற்குரிய சூழ்நிலையும் எனக்குத் தெரியும். இவற்றை எல்லாம் பதிவுசெய்கின்றேன்.

இந்த இடத்தில் எனக்குச் சிக்கல் வந்தது. நான் சேகரித்த செய்திகளை எல்லாம் அப்படியே கூறலாமா? அதிலிருந்து ஒரு முடிவுக்கு வரலாமா? இந்தக் கேள்வி என் மனதில் எழுந்தது. ஆய்வாளர் தான் சேகரித்த தகவல்களை எல்லாம் அப்படியே வெளியிடுவதுதான் நேர்மை அல்லது நாகரிகம் என்று நான் நினைக்கவில்லை. அப்படி வெளியிடுவது ஆய்வின் தன்மையைப் பொறுத்தது.

சாதிகுறித்த நுட்பமான தகவல்களை வெளியிடுவது, அது குறித்த கருத்தைக் கூறுவது எதிர்வினையைக் கொடுக்கும் என்பதை இன்றைய சாதாரண வாசகனும் அறிவான். அப்படியானால் ஆய்வாளர் இச்செய்திகளை வெளியிடுவதன் மூலம் நேர்மையைத் தக்கவைத்துக்கொள்ளுவாரா இல்லையா? இதுகுறித்த ஒரு நிகழ்ச்சி எனக்கு நினைவுக்கு வருகிறது. ஆய்வாளரின் நேர்மையைக் கேள்விக்குள்ளாக்கும் செய்திதான் அது.

எனக்குத் தெரிந்த பெண் ஆய்வாளர் தோல்பாவைக்கூத்து நிகழ்த்தும் கலைஞர்களைப் பற்றி தகவல்களைத் திரட்டினார். அவர் பல்கலைக்கழகம் சாராத ஆய்வாளர்; சுற்றுப்புறச் சூழல் குறித்துச் செய்திகளைத் திரட்டி வருபவர். அவர் மண்டிகர் சாதி பற்றியும் தோல்பாவைக் கூத்தின் அழிவு பற்றியும் ஒரு பிரபல தினப் பத்திரிகைகளில் எழுதினார். அந்தக் கட்டுரை

தென்தமிழ் மாவட்டங்களில் குறிப்பாகத் திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டக் களஆய்வின் அடிப்படையில் எழுதப்பட்டது. அந்தக் கட்டுரையில் தோல்பாவைக் கூத்துக் கலைஞர்கள் விபச்சாரம் செய்கிறார்கள் என்று எழுதியிருந்தார்.

பத்திரிகைகளில் வந்த இந்தச் செய்தியால் வந்த வினை, மண்டிகர் சாதிக்காரர்கள் தங்கியிருந்த குடியிருப்பை (கன்னியாகுமரி மாவட்டம் தோவாளை வட்டம் திருமலாபுரம் என்ற ஊர்) போலீஸ் கண்காணிக்க ஆரம்பித்ததுதான். அந்தக் குடியிருப்பைச் சுற்றி இருந்த குக்கிராமங்களில் வாழ்ந்தவர்கள் அந்தச் சாதிக்காரர்களை விரட்டவும் தயாரானார்கள். இந்த அளவோடு நின்றாலும் பரவாயில்லை. மண்டிகர் சாதிப் பெண்கள் ஒப்பனைச் சாதனங்களை வியாபாரத்திற்காகக் கொண்டு சென்றபோது கூட பாதிப்பு இருந்தது.

இந்தச் சாதிக்காரர்கள் விபச்சாரம் செய்யவில்லை என்பது உண்மை. அப்படியானால் அந்தப் பெண் ஆய்வாளர் அப்படி ஏன் எழுதினார் என்று விசாரிக்க ஆரம்பித்த போதுதான் உண்மை தெரிந்தது. இவர்களிடம் இருந்த தகாத உறவையும் அவர்களைப் பற்றி பழைய புத்தகத்தில் உள்ள செய்தியையும் ஒன்றாக்கி ஆய்வாளர் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார். அதோடு அந்த ஆய்வாளர் இவர்களின் ரிக்கார்டு டான்சையும் பார்த்திருக்கிறார். ஆய்வாளர் நம்பும்படியான சூழ்நிலை இருந்திருக்கிறது. இதனால் அப்படி எழுதிவிட்டார்.

இந்த இடத்தில் ஒரு கேள்வி எழுகிறது. இந்தப் பெண் ஆய்வாளர் எழுதியது ஆய்வு நாகரிகமா? இதை ஆய்வாளரின் பண்பாக எடுத்துக்கொள்ளலாமா? இதற்குப் பதிலை நாட்டார் வழக்காற்றியல் அறிஞர் டாக்டர் தே. லூர்து எழுதிய நாட்டார் வழக்காற்றியல் களஆய்வு நூலிலிருந்து கூறமுடியும். "தகவலாளி சிலவற்றைச் சொல்லி ரகசியமாக வைத்திருக்குமாறு கூறுவான். சேகரிப்பாளன் அந்த நம்பிக்கைக்கு மாறாக நடக்கக்கூடாது" என்று கூறுகிறார் லூர்து. அவர் இதை ஆய்வு நாகரிகமாகவே கருதுகிறார்.

இந்த ஆய்வு நாகரிகம்தான் ஓர் ஆய்வாளரை மூன்றாம் பத்திரிகைக்குச் செய்தி சேகரிப்பவனிடமிருந்து வேறுபடுத்துகிறது. வாசகர் அல்லது படிப்பவரைப் பிரம்மிப்புக்கு உள்ளாக்குவதற்காக அபூர்வமான செய்திகளை எழுத்துவடிவில் ஆக்குவது நாகரிக மல்ல; அது உண்மையாக இருந்தாலும்கூட. ஒரு ஆய்வின் நோக்கம் உண்மையைக் கண்டறிவது என்பதெல்லாம் ஆய்வின் தன்மையைப் பொறுத்தது என்பதை ஆய்வாளன் உணர்ந்து கொள்ள வேண்டும். இது ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட துறை அல்லது பொருளின் தன்மை சூழலுக்கு ஏற்ப மாறும்.

நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளரையும் அறிவியல் துறை ஆய்வாளரையும் ஒப்பிடக்கூடாது. பழைய இலக்கியங்களைக் குறித்து ஆராய்கின்றவரையும் ஒப்பாரிப்படல்களைச் சேகரித்து ஆராய்கின்றவரையும் ஒப்பிடக்கூடாது. ஆய்வாளர்களின் நாகரிகம் ஒரே போக்கில் இருக்காது. நாட்டார் வழக்காற்றியல் செய்திகளைச் சேகரித்து முடிவுகளைக் கூறுவதில் உள்ள சிக்கல் அறிவியல் துறை ஆய்வாளருக்கு பெரும்பாலும் இருப்பதில்லை. எனவே ஆய்வாளரின் நாகரிகம் வரையறுக்கப்பட்டது என்று கூறமுடியாது. அது ஆய்வைப் பொறுத்தது.

ஆய்வாளரின் நாகரிகத்தை அவரது ஆய்வை வைத்துத்தான் வரையறை செய்ய முடியும். ஆய்வாளரின் பண்பைப் பொதுவான தன்மையில் இரண்டு நிலையில் அடக்கலாம். இந்தப் பகுப்பு, கருத்தை விளக்குவதற்காக உருவாக்கியதே தவிர வேறு தகவல்கள் அடிப்படையில் ஆனதல்ல. இதை,

அ) ஆய்வாளர் சேகரித்த செய்திகள் எல்லாவற்றையும் கூறுவதில் மேற்கொள்ளும் நாகரிகம்.

ஆ) ஆய்வை எழுத்துவடிவில் கொண்டு வரும்போது மேற்கொள்ள வேண்டிய பண்புகள்

என வகைப்படுத்தலாம்.

இவ்விரண்டு பண்புகளில் முதலில் உள்ளது அதன் சேகரிக்கப்பட்ட தகவல்களின் தன்மையைப் பொறுத்தது.

ஆய்வாளர் சேகரித்த தகவல்களின் அடிப்படையில் முடிவை முன்வைப்பதோ தகவல்களை அப்படியே தொகுத்துக் கூறுவதோ எதிர்வினையை ஏற்படுத்துவதற்குரிய வாய்ப்பு இன்று அதிகமாகிவிட்டது. குறிப்பாகச் சாதி, மதம் தொடர்பான கலவரம் குறித்த செய்திகளைச் சேகரிப்பதோ வெளியிடுவதோ குற்றமாகக் கருதப்படுவதும் அதனால் வரும் விளைவுகளை எச்சரிப்பதும் சகஜமாகிவிட்டது.

ஆய்வாளர் தான் சேகரித்த செய்திகள் எல்லாவற்றையும் வெளியிடக்கூடாது என்பது நாகரிகம் என்பது மட்டுமல்ல அது எழுதாத சட்டமும் ஆகிவிட்டது. கோவை மாவட்டத்தில் நடந்த ஒரு கருத்தரங்கில் ஓர் ஆய்வாளர் விடுதலைப் போராட்டத்தில் தலித் இனமக்களின் பங்கு குறித்துக் கட்டுரை படித்தார். அக்கட்டுரை, கட்டபொம்மன் கதைப்பாடல்களை முன்வைத்து எழுதப்பட்டது. அந்தக் கட்டுரைச் செய்திகளில் குறிக்கப்பட்ட சுந்தரலிங்கம் என்ற பெயர் பிரபல பத்திரிகைகளில் சிறு துணுக்காகப் பெரிதுபடுத்தப்பட்டு பின் அந்தப் பெயர் காரணமாக இரு சாதிகளுக்குள் கலவரம் வந்ததும் வரலாறு. இதனால் தமிழகத்தின் போக்குவரத்துத் துறை மட்டுமல்ல, மாவட்டங்களுக்கும் இடப்பட்ட பெயர்களும் நீக்கப்பட்டன. இவற்றிற்கெல்லாம் காரணம் ஓர் ஆராய்ச்சியின் முடிவுதான். இந்தக் கலவரங்களுக்குப்பின் நடந்த ஒரு கருத்தரங்கில் ஆய்வாளரின் ஆய்வு முடிவு முக்கியமா, நாட்டு மக்களின் அமைதி முக்கியமா என்ற கேள்வி கேட்கப்பட்டது. அப்போது பேராசிரியர் தே. லூர்து மக்களின் அமைதிக்குப் பின்தான் மற்ற எல்லாம். ஆய்வு நாகரிகமே அதுதான் என்று கூறினார்.

ஆய்வாளர் தனக்குக் கிடைத்த சுவையான அபூர்வமான தகவல்களை வெளிப்படுத்தாமல் இருத்தல் நல்லது. இது அவரின் ஆய்வு தொடர்ந்து செல்ல வசதியாக இருக்கும். நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர் ஒருவர் தமிழகத்தின் மத்திய மாவட்டப் பகுதியில் வாழ்கின்ற நாயக்கர் சமூகத்தின் ஒரு பிரிவினர் தொடர்பாகச் சேகரித்த செய்திகளை ஒரு கட்டுரையாக

வெளியிட்டார். அது தொடக்க ஆய்வுதான். அதில் அந்தச் சமூகத்தில் பெரியவர்கள் சிறுமிகளைத் திருமணம் செய்யும் நிகழ்ச்சி மேலோட்டமாகக் குறிக்கப்பட்டிருந்தது. இச்செய்தி பின்னர் பிரபல வார இதழ்களில் பெரிதுபடுத்தப்பட்டுப் புகைப்படங்களுடன் வெளிவந்த பின்னர் அந்த ஆய்வாளர் அச்சாதி குறித்த ஆய்வைத் தொடர்ந்து செய்ய முடியாமல் ஆகிவிட்டது. அவரின் ஆய்வு பாதியிலேயே நின்றது.

சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்பு ஆய்வாளர் தகவல்களைச் சேகரித்த சிக்கல்களுக்கும் இன்றைய ஆய்வாளருக்குரிய சிக்கலுக்கும் வித்தியாசம் உண்டு. முந்தைய ஆய்வாளர் களஆய்வில் கிடைத்த தகவல்களை வெளிப்படுத்துவதில் பொதுவான தடையிருக்கவில்லை. அன்றைய நிலையில் ஆய்வாளர் தகவலாளிகளின் நுட்பமான செய்திகளை அப்படியே வெளியிடுவது நேர்மையானது என்ற கருத்து இருந்தது. இன்று ஆய்வாளர்களின் அபூர்வமான தகவல்களை ஊடகங்கள் வணிக நோக்கில் கையாளுகின்றன. இதனால் இன்றைய ஆய்வாளர் தன் நேர்மையை எது எனத் தீர்மானித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

ஆய்வாளரின் இரண்டாவது நாகரிகம் ஆய்வை எழுத்து வடிவில் கொண்டுவரும்போது மேற்கொள்ளவேண்டிய பண்பு தொடர்பானது. ஆய்வாளர் தான் சேகரித்த தகவல்கள் மூலம் உருவாக்கும் கட்டுரையில் தன் நாகரிகத்தைக் காட்டுவது ஆய்வு நாகரிகம். இதைப் பின்வருமாறு வரையறை செய்யலாம்:

1. தகவல் சேகரிப்பில் நேர்மை

2. ஆய்வாளரின் பார்வையிலும், கருத்தை வெளிப் படுத்துவதிலும் உண்மை; நேர்மை.

3. பிற ஆய்வாளர்களை ஒப்புக்கொள்ளுவதிலும் மறுப்பதிலும் மேற்கோள் காட்டுவதிலும் உள்ள நேர்மை.

4. திறந்த மனதுடன் கூறும் நோக்கு.

இந்த வரையறை நாட்டார் வழக்காற்றியல் ஆய்வைப் பெருமளவில் கருத்தில் கொண்டது.

தகவல் சேகரிப்பில் உள்ள நேர்மையைப் பொதுவாகத்தான் கூற முடியும். இது அந்தத் தலைப்பு தொடர்பான விஷயங்களைப் பொறுத்தது. ஒரு ஆய்வுத்தலைப்பைத் தேர்ந்தெடுத்த பின்னர் தகவல்களைச் சேகரிக்க வினாப்பட்டியலைத் தயாரிப்பதிலிருந்தே ஆய்வாளரின் நேர்மைக்குச் சோதனை காலம் ஆரம்பித்துவிடும்.

குமரி மாவட்டத்தில் 'இந்து, கிறிஸ்தவக் கலவரத்திற்குப் பின்னர் நாட்டார் தெய்வ வழிபாட்டின் நிலை (மண்டைக்காடு கலவரத்தை முன்நிறுத்தி)' என்ற தலைப்பை ஒருவர் தேர்ந்தெடுக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவர் வினாப் பட்டியலைத் தயாரிக்கும்போது கடற்கரை மக்களின் உறவு, அடுத்த கிராமத்தில் எப்படி இருந்தது. குறிப்பாக ஆண் பெண் உறவு எப்படி என்பது குறித்த செய்திகளைத் திரட்டுவதற்குரிய கேள்விகளைச் சேர்க்க வேண்டும். மேலும் தென்மாவட்ட கடற்கரைக் கிராமங்களில் உள்ள மாதா கோவில்கள், குழந்தை ஏசு கோவில்கள் குறித்த பூர்வீகச் செய்திகளை அறிய உதவும் கேள்விகள் — புராட்டெஸ்டென்ட் கிறிஸ்தவர்கள் வந்தபின்பு கத்தோலிக்கரின் நிலை என்ன என்பது குறித்த கேள்விகள் ஆகியவற்றையும் தயாரிக்க வேண்டும். இப்படித் தயாரிப்பதில் வரும் சிக்கலை எதிர்பார்ப்பது ஆய்வாளருக்குச் சவால்தான்.

கேள்விகளைத் தயாரிப்பவர் கருதுகோளை உருவாக்க வேண்டும் என்பது ஒரு நியதி. ஆய்வாளர் கருதுகோளை உருவாக்குவதில்தான் அவரது நேர்மை வெளிப்படும். அவர் ஒருபக்கச் சார்புடையவராக இருந்தால், அதற்குத் தக்கவாறே கேள்விகளை அமைப்பார். இதனால் அவரின் களஆய்வு முடிவு மதக்கலவரம் என்றோ சாதிக்கலவரம் என்றோ முடியும்.

ஆய்வாளர் கருதுகோளை உருவாக்குவதில் தன் சொந்தப் பார்வையை வலுக்கட்டாயமாக ஒதுக்கிவைப்பதுதான் ஆய்வு நேர்மை. முன்பு குறித்த தலைப்பில் ஆய்வு செய்கின்ற ஒருவன் கலவரத்துக்குக் காரணம் இந்து அமைப்புகளின் தூண்டுதல்; கிறிஸ்தவப் பாதிரிகளின் தூண்டுதல்; அரசியல்

போக்கின் காரணம் என்பவற்றில் ஒரு முடிவைக் கருதுகோளாகக் கொண்டு வினாப் பட்டியலைத் தயாரிப்பதாக வைத்துக்கொள்வோம். அப்படியானால் அந்த கேள்விகள் ஆய்வாளரின் பார்வையில் உருவாகும்; முடிவும் அவருக்கேற்றதாக அமையும். மண்டைக்காடு கலவரம் குறித்து வந்த பல அறிக்கைகளை அன்றைய கால கட்டத்தில் அரசு புறக்கணித்ததே தயாரித்தவர்களின் நேர்மைக் குறைவைக் கணக்கிட்டதால்தான். இந்த நேர்மை வெகுஜன ஊடகங்களில் எழுதுகின்றவர்களுக்கும் வேண்டும்.

ஆய்வாளர் தன் ஆய்வு தொடர்பாகப் படித்த புத்தகங்களையும் தகவல்கள் தந்த ஆய்வாளர்களையும் மேற்கோள் காட்டுவது உண்மையான நாகரிகம். நாட்டார் வழக்காற்றியல் ஆய்வில் இந்த நாகரிகம் கட்டாயம் இருக்க வேண்டும். ஒருவர் களஆய்வில் சேகரித்த நாட்டார் வழக்காற்றுச் செய்திகளை அப்படியே எதோ ஒரு வகையில் மாற்றம் செய்து மேலை நாட்டுக் கொள்கைகளைத் திணித்து ஆய்வுக்கட்டுரையை உருவாக்கும் செய்கை நாகரிகமற்றது.

தமிழகத்தில் பல்கலைக்கழகங்களில் கடந்த 20 ஆண்டுகளுக்கு மேலாக நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன. எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., ஆய்வுகளுக்கான தலைப்புகளுக்குச் சேரிக்கப்படும் நாட்டார் வழக்காறுகள் ஆய்வேட்டுடன் பின்னிணைப்பாகக் கொடுப்பது பரவலாக உள்ளது. இவை பெரும்பாலும் வட்டார வழக்காறுகள்தாம்; இவை துல்லியமான ஆய்வுநெறிமுறையில் சேகரிக்கப்பட்டவை என்று கூற முடியாது. என்றாலும் அபூர்வமான பல தகவல்கள் சேகரிக்கப்பட்டுள்ளன. இவற்றில் பெரும் அளவின அச்சில் வரவில்லை. இந்தச் சேகரங்களைத் தமக்கு உரிமையாக்கிக் கொள்ளும் ஆய்வு இன்று பரவலாகிவிட்டது. ஆய்வாளரின் நேர்மையின்மைக்கு இதுவே எடுத்துக்காட்டாகும்.

**'ஆய்வு முறையியல்' —**

**(ப.ஆ:) ஆ. சண்முகம், எச். சித்திரபுத்திரன்**

# நேர்காணல்

பேராசிரியர் முனைவர், அ.கா. பெருமாள் நாட்டுப்புற வழக்காற்றியல் துறையில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். தென்மாவட்டங்களில் பரவலாகக் கள ஆய்வு செய்தவர். நாட்டுப்புற இயல், வட்டார வரலாறு, கோயில்கள், ஓலை ஆவணங்கள், கதைப் பாடல்கள் குறித்து 38 நூல்கள் எழுதியுள்ளார். 14 நூல்களைப் பதிப்பித்துள்ளார்.

கன்னியாகுமரி மாவட்டம் குறித்து இதுவரை பல புத்தகங்கள் வெளியாகியிருந்தாலும் 2004ஆம் ஆண்டு இவர் எழுதிய 'தென்குமரி கதை' தான் இன்று வரலாற்று ஆய்வாளர்களிடையேயும் தமிழறிஞர்களிடையேயும் அரசாலும் பாராட்டப்படும் ஒன்றாக இருக்கிறது. இந்நூலுக்காக 2004லும், 2005இல் தென்னிந்திய தோல்பாவைக்கூத்து நூலுக்காக 2005லும் தமிழக அரசால் பரிசும் விருதும் பெற்றவர். தெய்வங்கள் முளைக்கும் நிலம், கவிமணியின் இன்னொரு பக்கம், கோயில் சார்ந்த நாட்டார் கதைகள், முதலியார் ஆவணங்கள், தமிழ் இலக்கிய வரலாறு, சுண்ணாம்பு கேட்ட இசக்கி, ஆதிகேசவப்பெருமாள் ஆலயம், வேத சாட்சி தேவ சகாயம் பிள்ளை வரலாறு, காகங்களின் கதை, சனங்களின் சாமி கதைகள், நாஞ்சில் வட்டார வழக்குச் சொல்லகராதி, கர்ப்பமாய்ப் பெற்ற கன்னிகள், ஸ்ரீநாராயணகுரு வாழ்வும் வாக்கும் ஆகியன இவர் எழுதிய முக்கிய நூல்கள்.

பொதுவாகச் செய்திகளைத் திரட்ட புத்தகங்களை மட்டுமே நம்பும் வழக்கத்திலிருந்து வித்தியாசப்பட்டு கள ஆய்வுச் செய்திகள், வெளியாகாத ஆவணங்கள், கதைப்பாடல்கள் வழியும் தகவல்களைச் சேகரிப்பது இவரது ஆய்வு நெறிமுறை. இதற்காக இவர்கொண்ட பயணம் இப்போதும் தொடருகிறது. முக்கியமாகத் தான் நேரில் பலமுறை பார்த்தபிறகுதான் நாட்டார் கலைகளைப்பற்றி எழுதுவது என்னும் வழக்கத்தைக்கொண்டவர் இவர்.

'மருமக்கள்வழி மான்மியம்', 'சடங்கில் கரைந்த கலைகள்', 'சுசீந்திரம் கோயில்', 'காலம்தோறும் தொன்மம்', 'படிக்கக்கேட்ட கதைகள்' ஆகிய நூல்கள் விரைவில் வெளிவர உள்ளன.

கன்னியாகுமரி மாவட்டம், நாட்டார் வழக்காற்றியல் குறித்த ஒரு கலைக்களஞ்சியமாக அ.கா. பெருமாள் உள்ளார். நாம் அவரிடம் நேர்காணல் கண்ட இரண்டு நாட்களிலும் கன்னியாகுமரி மாவட்டம் மற்றும் நாட்டார் கலைகள் குறித்த சந்தேகங்களை மாணவர்களும் பேராசிரியர்களும் இவரிடம் தொலைபேசியில் தொடர்புகொண்டு நிவர்த்தி செய்துகொண்டிருந்ததைக் கேட்டோம்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு கல்லூரிப்பணியில் இருந்து ஓய்வு பெற்றுவிட்ட இவர் எழுதிய புத்தகங்களில் பெரும்பாலானவை பணியாற்றிய காலத்திலேயே வெளியானவை. இதற்காகக் கல்லூரி வேலை நேரத்தில் விடுமுறை எடுக்காமல் கல்லூரிப் பணி முடிந்தபின்னரும் விடுமுறை நாட்களிலும் அலைந்து தகவல்கள் சேகரித்துள்ளார். தூய சேவியர் கல்லூரி பேராசிரியர் ராமச்சந்திரன் என்பவருடன் சேர்ந்து தமிழக அரசின் நிதியுதவியுடன் நாட்டார் நிகழ்த்து கலைக்களஞ்சியம் நூலை வெளியிட்டுள்ளார். 'பதிவு செய்யப்படாத ஏராளமான விஷயங்கள் இந்த மண்ணில் புதைந்து கிடக்கின்றன. முடிந்தவரை அவற்றைத் தமிழ்கூறும் உலகுக்குக் கொண்டு சேர்க்கவேண்டும் என்பதே என்னுடைய அவா!' என்கிறார் அ.கா.பெருமாள்.

ஓய்வு பெற்றபிறகு (2006) முழுநேர ஆராய்ச்சியாளராகச் செயல்படுகிறார். இதன்பிறகு இவர் வெளியிட்டவை 6 புத்தகங்கள். பகலில் கடுமையான வெயிலும் இரவில் கடுங்குளிருமாயிருந்த மார்கழிமாத இரண்டாவது ஞாயிற்றுக்கிழமை காலையிலிருந்து மாலைவரை நாகர்கோவில் இந்துக்கல்லூரி அருகே உள்ள மரங்கள், செடிகொடிகள் நிறைந்த குளிர்ச்சியான அவரது வீடான 'ரம்யா'விலும், அவரது வீட்டிலிருந்து நான்கு கி.மீ. தொலைவில் உள்ள சொத்தவிளை கடற்கரையிலுமாகத் தீராநதி கண்ட நேர்காணல் இது.

**உங்களைப்பற்றிச் சொல்லுங்களேன் . . .**

நாகர்கோவிலிலிருந்து தெற்கே 4 கி.மீ. தொலைவில் உள்ள பறக்கை என்ற கிராமத்தில்தான் நான் பிறந்தேன். என் ஊரிலிருந்து 2 கி.மீ. தொலைவில் இருப்பது மணக்குடி கடல். பறக்கை கிராமத்தில் நிறையவே குளங்கள் உண்டு. பரந்த வயல்வெளி, பெரிய தென்னந்தோப்புகள், தோட்டங்கள் என என்னுடைய கிராமம் ரம்மியமாக இருக்கும். இப்போதும் அப்படித்தான். இங்கே 1000 ஆண்டுகள் பாரம்பரியமுடைய விஷ்ணு கோயிலுண்டு. இந்த அழகும் அமைதியும் இப்போதும் இங்கிருந்து போகவில்லை.

ஆரம்பகால பள்ளிப்படிப்பை இந்த ஊரில்தான் முடித்தேன். பறக்கை ஊரின் அருகே உள்ள சுசீந்திரம் ஊரில் உயர்நிலைப் படிப்பு. சுசீந்திரம் ஊர் 1500 வருஷம் பாரம்பரியம் உடையது. இங்கே பிரமாண்டமான தாணுமாலயன் (சிவன்) கோவில் இருக்கிறது. இந்த ஊர் நாஞ்சில் நாட்டிலேயே மலையாளக் கலாச்சாரத்தை முழுவதுமாக உட்கொண்டது.

நான் இந்த ஊர்ப் பள்ளியில் படித்த மூன்று ஆண்டுகளிலும் இந்தக் கோயிலில் பல மணி நேரங்களைச் செலவழித்திருக்கிறேன். அப்போது என் நண்பர்களாக இருந்த மலையாள பிராமணர்கள், நாயர்கள் வீடுகளுக்குப் போகும்போதும் கோயில் கலாச்சாரத்துடன் இணைந்திருந்த மலையாளச் செல்வாக்கைப் பார்த்த போதும் ஏற்பட்ட தாக்கம் இப்போதும் என்னிடம் உள்ளது.

என் அப்பா மலையாள ஆசிரியராகத் தன் வாழ்க்கையை ஆரம்பித்து நாகர்கோவில் நீதிமன்றத்தில் மலையாள ஆவணங்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் தற்காலிகப் பணியாளராக இருந்தவர். என் சிறு வயதில் என் தந்தையுடன் சுசீந்திரம் கோவில் விழா நிகழ்ச்சிகளில் பார்த்த மதப் பிரசங்கம், பாவக் கதகளி, கதாகால க்ஷேபம், கதகளி, ஓட்டம் துள்ளல், நங்கையார் கூத்து போன்றவை இன்றும் நினைவில் உள்ளன. இவை என் பிற்காலக் கலை ஊக்கத்துக்குக் காரணமாய் இருந்திருக்கலாம்.

என் குடும்பம் அடிப்படையில் நடுத்தரமானது. பட்டினி இல்லாமல்தான் என் ஆரம்பகால ஜீவிதம் நடந்திருக்கிறது. நாகர்கோவில் இந்துக்கல்லூரியில் புகுமுக வகுப்பில் அறிவியல் பாடங்களைத்தான் முதலில் படித்தேன். பி.ஏ.யில்

சமூக இயலைப் பாடமாக எடுத்தேன். ஏதோ காரணத்தால் தொடரமுடியாமல் தமிழ்ப் பாடத்திற்குப் போனேன். அப்போது முதலாண்டுத் தேர்வு கிடையாது.

முதலாண்டுக் கடைசியில்தான் பி.ஏ. தமிழுக்குப் போனேன். அந்தக் காலத்தில் எனக்குத் தமிழ்ப் பேராசிரியர்களாய் இருந்தவர்கள் எல்லோருமே ஜாம்பவான்கள். நன்னூல், யாப்பருங்கலக்காரிகை, தண்டியலங்காரம் போன்ற இலக்கணங்களை எடுத்தவர்கள் வெறுங்கையோடு வகுப்புக்கு வருவார்கள். சூத்திரங்களையும் உரைகளையும் சொல்லிப் பாடம் நடத்திய விதம் இன்றும் என் மனதில் நிழலாடுகிறது. தண்டியும் யாப்பும் எனக்குத் தளபாடம். இவை எல்லாம் இப்போது கனவு மாதிரி ஆகிவிட்டது. இவற்றைப் பயன்படுத்த முடியாத கல்லூரியில் வேலைக்குப் போனாலும் அந்த அஸ்திவாரம் மட்டும் உறுதியாக உள்ளது.

பி.ஏ. கடைசி வருடத்தில் அப்பா இறந்தார். அம்மாவுக்கு கேன்சர். கூடப்பிறந்த இரண்டு அண்ணன்கள், இரண்டு தம்பிகள், இரண்டு தங்கைகள் எனப் பெரிய குடும்பம். தடுமாறிய காலம். ஸ்தம்பிச்சுப்போய் நின்னபோதுதான் திருச்சி தினத்தந்தியில் வேலைக்குப் போனேன். ஒரு வகையில் தினத்தந்திதான் எனக்கு மொழியைக் கையாளும் இடமாக இருந்தது என்று சொல்ல முடியும். கையால் அச்சுக்கோத்து, புரூப் எடுத்த காலம் அது. இரவு ஒரு மணிக்கு டெலிபிரிண்டரில் வரும் செய்தியை அச்சுக்கோத்து புரூப் பார்த்து பிரிண்டுக்குக் கொடுக்கிற அந்த வேகமான காலகட்டம் உண்மையிலேயே சிலிர்ப்பாகத்தானிருந்தது.

தினத்தந்தியைப்பற்றி சில விமர்சனம் இருந்தாலும் மொழி விஷயத்துல உண்மையிலேயே அவங்க தரமாதான் இன்னிக்கும் இருக்காங்க. தினத்தந்தி நிறுவனர் சி.பா.ஆதித்தனார் மொழி விஷயத்துல ரொம்ப கவனம் செலுத்தினார். முடிஞ்ச வரை தமிழைச் சுத்தமா எழுதணும்கிறதுல வைராக்கியமா இருந்தார். மொழியில் பிழை போட்டால் அது பண்பாட்டுக் குறைச்சல் என்று சொல்வார். அந்தக் காலகட்டத்துல எல்லா பத்திரிகைகளும் சமஸ்கிருதம் கலந்துதான் எழுதின. தினமணியில் ஸர்வகலாசாலைன்னு வரும். தினத்தந்திதான் பல்கலைக்கழகம்னு எழுதிச்சு.

இரண்டோ, மூணோ மாசம் அங்கே வேலை பார்த்தேன். இந்த நிலையில அண்ணன் சுப்பிரமணியத்துக்கு நாகர்கோவில் இந்துக் கல்லூரியில் வேலை கிடைத்தது. உடனே அவர் 'தினத்தந்தி வேலையை விட்டுட்டு ஊருக்கு வா உன்னைப் படிக்க வைக்கிறேன்'னு சொன்னார். நான் ஊர் திரும்பினேன். எம்.ஏ. தமிழ் படிக்க முடிவு செய்து இங்கே உள்ள கல்லூரிகளில் ஏறி இறங்கினா அட்மிஷன் முடிஞ்சிருந்தது. கோழிக்கோடு பல்கலைக்கழகத்தின்கீழ் செயல்பட்ட பாலக்காடு சித்தூர் அரசு கல்லூரியில் இடம் கிடைச்சது. வருஷத்தை வீணாக்க வேண்டாம்னுட்டு அங்கே போய்ச் சேர்ந்தேன். அங்கே தமிழ்த்துறைத் தலைவராகப் பேராசிரியர் சி. ஜேசுதாசன் இருந்தார் (எழுத்தாளர் ஹெப்சிபாவின் கணவர்). சித்தூரில் எம்.ஏ. தமிழ் துவங்கி ஒரு வருஷம்தான் ஆகியிருந்தது.

அங்கே தொல்காப்பியம் பாடம் நடத்த ஆசிரியர் இல்லை. பேராசிரியர் பாடத்திட்டத்தையே மாற்றினார். தென்னிந்திய வரலாறு, இந்தியத் தத்துவம் என இரண்டு தாள்களைத் தொல்காப்பியத்துக்குப் பதிலாகச் சேர்த்தார். நான் படித்த கல்லூரியில் அப்போது வரலாறு, தத்துவம், இறையியல் பாடங்கள் இருந்தன. அதனால் அந்தத்துறை ஆசிரியர்களே அந்தப் பாடங்களை ஆங்கிலம்வழி நடத்தினார்கள். சில நாட்கள் மலையாளத்தில்கூட வகுப்பெடுத்தார்கள். கோபிநாத மேனன் என்பவர் கேரள வரலாற்றை விரிவாகச் சொல்லித்தந்தார். ஆனால் கடைசியில் தமிழில்தான் தேர்வு எழுதினேன், மிகுந்த சிபாரிசின் பேரில்! நான் எம்.ஏ. முடித்தபிறகு சுயமாகத் தொல்காப்பியம் படிச்சேன்.

நான் பாலக்காட்டுல படிக்கிறப்போ மலையாளிகள் சுமுகமாத்தான் பழகினார்கள். தமிழ்மொழியையோ தமிழையோ எந்தச் சமயத்திலும் இழிவாகவோ கிண்டலாவோ பேசியதில்லை. வடகேரளக் கிராமத்தில் இப்போதும் அந்தப் பண்பு உண்டு. அப்போது பேராசிரியர் ஜேசுதாசன் பாடம் நடத்தியமுறை வித்தியாசமானது. மற்ற தமிழ்ப் பேராசிரியர்களிடமிருந்து அவர் வேறுபட்டதே அவரது ஆங்கிலப்புலமைக்குத்தான்.

தமிழகக் கல்லூரிகளின் பாடத்திட்டத்தில் அப்போது வேறு பல பாடங்களுடன் இலக்கிய விமர்சனம் ஒன்றாக இருந்தது. அப்போது எங்களுக்குப் பாடத்திட்டத்தில் இலக்கிய விமர்சனம் தனித்தாளாக இருந்தது.

பேராசிரியர் வகுப்புக்கு வரும்போதே ஐ.எ. ரிச்சர்ட்ஸ், ஆபர்கிராம்பி, ரெனிவெல்லாக் எனப் பெரிய ஆட்களோடுதான் வருவார். Principle of Lieratury Criticism,Theory of Litereature என்ற நூற்களை வைத்துக்கொண்டு ஆங்கிலம் – தமிழ் எனக் கலந்து பாடம் நடத்துவார். உதாரணத்துக்கு ஆண்டாள், கம்பன் எனப் பாடல்களைச் சொல்லுவார்.

வகுப்பிலேயே சுந்தர ராமசாமி, புதுமைப்பித்தன் கதைகளைப் படித்துக்காட்டி விமர்சிப்பார். அந்தக் காலத்தில் (1970 – 72) தமிழகக் கல்லூரிகளில் விமர்சனம் என்றால் மு.வ.வும். அ.ச.ஞா.வும் தான். ஜேசுதாசன் சாருக்கு அவர்களைப் பிடிக்காது என்பதை வெளிப்படையாகச் சொல்லாமல், சாமர்த்தியமாக ஐ.எ. ரிச்சர்ஷலேயிருந்தும் எ.வி. சுப்பிரமணிய அய்யரின் தொனி பற்றியும் விளக்கி நகர்ந்துவிடுவார்.

நான் படித்த சித்தூர் கல்லூரிக்குப் புகழ்பெற்ற மலையாள எழுத்தாளர்கள் ஆற்றூர் ரவிவர்மா, ஓ.வி. விஜயன், அரவிந்தன் வந்தார்கள். எம்.டி. வாசுதேவன்நாயர், சச்சிதானந்தம் என்று அப்போது பேசியவர்களை தமிழ் மாணவர்கள் சந்திக்க வேண்டும் என்பதில் பேராசிரியர் சி.ஜே. கட்டாயமாக இருந்தார். ஒரு முறை வைக்கம் முகமது பஷீரைப் பார்க்க அழைத்துச்சென்றார்.

இருமொழிக் கலாச்சார, இலக்கியத்தொடர்பு இரண்டிற்கும் நல்லது. குறிப்பாகத் தமிழ் மலையாள உறவு தமிழுக்குப் புதிய பார்வையைக் கொடுக்கும் என்று பேராசிரியர் அடிக்கடி சொல்வார். கன்னியாகுமரி மாவட்டத்தில் சு.ரா., ஜெயமோகன், நாஞ்சில் நாடன், பொன்னீலன், நீல. பத்மனாபன், ஹெப்சிபா, தோப்பில் மீரான் எனத் தரமான படைப்பாளிகள் கணிசமாக இருப்பதற்கு இதுவும் ஒரு காரணமாக இருக்கலாம்.

கேரளாவின் பிரபல பாடகியான பி. லீலா எம்.ஏ மியூசிக் வகுப்பில் பேச வருவாங்க. அவங்க பாடுறதைக் கேட்கும்போது ஆச்சரியப்பட்டுப்போயிருக்கேன். நான் படிச்ச கல்லூரி பெரிய கல்லூரி ஆனதுனால நிறைய பிரபலங்கள் வந்தாங்க. அவர்களின் பேச்சு மனதுக்கு புது உத்வேகத்தைத் தந்தது. அவர்களைச் சந்தித்துப் பேச நிறைய வாய்ப்பு கிடைத்தது. இந்தப் பின்னணி பிற்காலத்தில் எனக்கு உதவியது.

**படிச்சு முடிச்சதும் என்ன பண்ணினீங்க?**

ஆரல்வாய்மொழி அண்ணா கல்லூரியில் விரிவுரையாளர் தேவைன்னு பத்திரிகையில் விளம்பரம் வந்தது. விண்ணப்பித்தேன். நேர்முகத் தேர்வு வைச்சாங்க. தேர்வானேன். உடனே வேலையில சேரச்சொல்லிட்டாங்க. இப்ப உள்ளது மாதிரி அப்ப வேலைக்கு கஷ்டம் ஒண்ணும் இல்லை. படிச்சு முடிச்சதும் வேலை கிடைச்சது சந்தோஷமா இருந்துச்சி. இருபத்தி மூணு வயசிலேயே வேலை கிடைச்சுட்டது.

**உங்களுக்கு இலக்கியத்தில் ஆர்வம் எப்படி ஏற்பட்டது.?**

இந்துக் கல்லூரியில் பி.ஏ. படிக்கிறப்ப அங்கு உள்ள நூல்நிலையம்தான் எனக்குப் பல வாசல்களைத் திறந்து வைத்தது. அங்கே இருந்த உதவி நூலகர் என் சொந்தக்காரர். என்னோட ஆர்வத்தைப் புரிஞ்சுகிட்டு எத்தனை புத்தகம் வேணும்னாலும் படிக்க எடுத்துட்டுப் போலாம்னு அனுமதி கொடுத்தாரு. அப்போது புத்தகங்களை ஒரு வெறியோட படிச்சு முடிச்சேன். சகட்டு மேனிக்கு எல்லாவிதமான புத்தகங்களையும் படிச்சேன்.

எந்தப் புத்தகத்தைப் படிச்சாலும் குறிப்பு எடுத்து வைக்கிற பழக்கம் என்னிடம் உண்டு. தொடர்ந்து படிப்பிலும் எழுத்திலும் ஈடுபடவேண்டும் என்ற எண்ணம் இருந்ததால் எல்லாத்துக்கும் குறிப்பு எடுத்து வைச்சுகிட்டேன். என்னதான் நம் மனசில் சில விஷயங்கள் பதிந்தாலும் நாட்கள் சென்றதும் மறந்து விடும். அதனால் சிறு வயசிலேயே குறிப்பு வைச்சுக்கிற பழக்கம் என்கிட்டே இருந்தது.

**எழுத்தாளர் சுந்தர ராமசாமியுடன் எப்படித் தொடர்பு ஏற்பட்டது?**

நான் எம்.ஏ. முடித்த வருஷம் அம்மாவும் இறந்தாங்க. நான் அண்ணன், தம்பி, தங்கைகளுடன் நாகர்கோவில் ராமவர்மபுரத்தில் என் மாமா அண்ணாமலைபிள்ளையின் வீட்டில் குடியேறினோம். நாங்கள் அனாதரவாய்க் கிடந்த சமயத்தில் அவர் எங்களை ஏற்றுக்கொண்டார். அவரது வீட்டின் பக்கத்தில்தான் சுந்தர ராமசாமியின் வீடு இருக்கிறது.

1972ஆம் வருஷம் ஜூன் மாதம் இறுதியில் நான் சு.ரா. வீட்டுக்குப்போனேன். கிருஷ்ணன் நம்பியின் சிறுகதைத் தொகுதியை சு.ரா.விடம் கொடுக்கும்படி பேராசிரியர் ஜேசுதாசன் சொல்லியிருந்தார். அப்போது நான் சு.ரா.வின் 'பிரசாதம்' கதைத்தொகுதியைப் படித்திருந்தேன்.

சு.ரா.வின் வீட்டிற்கு நான் போனபோது அவரது தந்தை முன் திண்ணையில் நாற்காலியில் இருந்தார். அவர் முன்னே வழுவழுப்பான சிமெண்ட் தரையில் பிறந்து சில நாட்கள் ஆன பெண் குழந்தை ஒன்று கையையும் காலையும் உதைத்துக்கொண்டு தடுக்கில் கிடந்தது. சிறிது நேரத்தில் சுந்தர ராமசாமி அங்கே வந்தார். நான் நீலக்கடல் என்று ஆரம்பிப்பதற்கு முன்பே 'ஜேசுதாசன் சார் அனுப்புனாரா; வாங்க' என்று பக்கத்து அறைக்கு என்னை அழைத்துச்சென்றார். அப்போது சு.ரா.வுக்கு வயது நாற்பத்தி ஒன்று. என்னைப்பற்றிக் கேட்டறிந்து கொண்டார்.

நான் குடியிருந்த வீட்டிற்கு நாலு வீடு தள்ளிதான் சு.ரா.வின் வீடு. அதனால் தினமும் அவரைச் சந்திப்பேன். சு.ரா. வீட்டிற்கு அப்போதெல்லாம் தமிழகத்துத் தீவிர எழுத்தாளர்கள் அடிக்கடி வருவார்கள். நான் முதலில் சு.ரா.வின் வீட்டில் நா. பார்த்தசாரதியைச் சந்தித்தேன். க.நா.சு., அப்துல் ரகுமான், சார்வாகன், தேவதச்சன், சி.சு. செல்லப்பா, வெங்கட் சாமிநாதன், அ. மாதவன், ஜி. நாகராஜன், நாஞ்சில் நாடன், கலாப்பிரியா, ராஜ நாராயணன், மீரா, வாசந்தி, அம்பை, திலகவதி, வண்ண நிலவன் முதற்கொண்டு ஜெயமோகன், மனுஷ்யபுத்திரன் வரை உள்ளவர்களை எல்லாம் சந்தித்தது சு.ரா.வின் வீட்டில்தான்.

சுந்தர ராமசாமி 'காகங்கள்' என்னும் இலக்கியக் கூட்டத்தை அவரது வீட்டில் நடத்தினார். மாதந்தோறும் நடந்த இக்கூட்டத்தில் தற்கால இலக்கியம்

மட்டுமல்ல கலை, பண்பாடு குறித்த விஷயங்களும் விவாதிக்கப்பட்டன. கவிதை விவாதம், நூல் வெளியீடு எல்லாம் அங்கே நடக்கும். வெளியூரிலிருந்து வரும் பிரபலங்கள் இங்கே வந்தால் பத்மனாபபுரம் அரண்மனையைப் பார்க்கணும்னு சொல்லுவாங்க. சு.ரா. காரில் அவர்களை அழைத்துக்கொண்டு முக்கிய சுற்றுலாத் தலங்களான திருவட்டாறு ஆதிகேசவப்பெருமாள் கோயில், பத்மனாபபுரம் அரண்மனை, மாத்தூர் தொட்டிப்பாலம், திற்பரப்பு அருவி, கன்னியாகுமரி, சுசீந்திரம் ஆகிய ஊர்களுக்குப் போவார். பெரும்பாலும் நானும் அவர்களுடன் போவேன். போகும்போது அவர்கள் நிறைய பேசுவார்கள். அவர்கள் பேச்சில் குறுக்கிடமாட்டேன். நான் எப்போதும் கவனிப்பாளனாகவே இருந்தேன். என்னை வளப்படுத்த இது உதவியிருக்கிறது.

சு.ரா. ஒரு நூலைப் படிக்கத் தேர்ந்தெடுத்தபின் அதை முழுவதும் படித்துவிட வேண்டும் என்பார். சாதாரணமாகப் பள்ளி அல்லது கல்லூரி ஆசிரியர்கள் மாணவனுக்குக் கற்பிக்காதது இது. மாணவனைத் தேர்வுக்குத் தயாரிப்பதற்கு மட்டும் சம்பளம் வாங்கிய சிரத்தையுள்ள ஆசிரியர்கள்கூட ஒரு நூலின் தேவையான பகுதிகளை மட்டுமே படித்தால்போதும் என்று கேட்ட எனக்கு சு.ரா.வின் பேச்சு வித்தியாசமாக இருந்தது. மிக ஆரம்பத்தில் ஏற்பட்ட அந்தத் தாக்கம் முக்கியம் என நினைக்கிறேன். அவரோடு உள்ள உறவு என்னைச் செம்மைப்படுத்த உதவியது. 1985 அளவில் நான் நாட்டுப்புற இயல் துறையில் தீவிரமாக ஈடுபட்டபின்பு சு.ரா.விடம் இலக்கியம் பற்றிப் பேசுவதைக் குறைத்துக்கொண்டேன்.

**நீங்கள் தற்கால இலக்கியத்தில் ஆரம்பத்தில் ஈடுபாடு கொண்டிருந்தீர்கள். அப்புறம் எப்படி ஆய்வுக்கு வில்லுப்பாட்டைத் தேர்ந்தெடுத்தீர்கள்? நாட்டாரியல் துறையில் உங்களுக்கு ஈடுபாடு ஏற்படக் காரணம் என்ன?**

எனது சொந்த ஊரான பறக்கை கிராமம் வயல்களும் குளங்களும் நிறைந்தது. செழிப்பான கிராமம். இளமைக் காலம் முழுவதும் பறக்கையிலேயே சுற்றித் திரிந்தேன். ஆண்டுதோறும் கிராமத்தில் நடக்கும் சுடலைமாடன் கோயில் விழாவிலும் வேறு நாட்டார் தெய்வங்களின் விழாவிலும் பல்வேறு கலை

நிகழ்ச்சிகள் நடைபெறும். பங்குனி, சித்திரை மாதங்களில் தோல்பாவைக்கூத்து நிகழ்ச்சி, எப்போதாவது கழைக்கூத்து என நடந்தவற்றையும் அறுவடைக்காலங்களில் கிராமத்துக்கு வந்த சித்தோசி, பாடும் பரதேசி, ராப்பாடி, சங்கரன்காளைக்காரர் போன்ற யாசகர்களின் பாடல்கள் செயல்பாடுகளையும் நேரில் பார்க்கக் கேட்க வாய்ப்பிருந்தது. இவை எனக்கு நாட்டார் வழக்காற்றில் ஈடுபாடு கொள்ளக் காரணமாய் இருந்திருக்கலாம்.

என் கிராமத்தில் பெரிய ஏரியின் கரையில் உள்ள தென்னந்தோப்பில் திருவாவடுதுறை மடம் இருக்கிறது. என் இளமைக்காலத்தில் இங்கேயே நான் தங்கினேன். இந்த மடத்தில் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த முருகலிங்கத்தம்பிரான் என்ற சாமியார் இருந்தார். அவர் சித்த வைத்தியம், ஜோதிடம் தெரிந்தவர். முக்கியமாகத் தஞ்சை மண்ணைப்பற்றி, மராட்டிய ஆட்சியில் நிகழ்ந்த திருவிழா, கலைகள் பற்றிப் பேசுவார். அவர் பேசுவது உ.வே.சா.வின் 'என் சரித்திரம்' படித்தது மாதிரி இருக்கும். அந்தச் சாமியாரைத் தேடி ஊரிலுள்ள வயதான முதியவர்கள் வருவார்கள். எல்லோருக்குமே பழைய அனுபவங்களைப் பகிர்ந்து கொள்வதில் போட்டா போட்டி நடக்கும்.

நாகேந்திரன்பிள்ளை என்ற முதியவர் இருந்தார். அப்போது (1960) அவருக்கு 85 வயதுக்குமேல் இருக்கும். நல்ல நினைவாற்றல் உடையவர். தென்திருவிதாங்கூர் கோவில்களில் தேவதாசிகள் ஆடிய நிகழ்ச்சிகள், மூலம் திருநாள் அரசர் நாஞ்சில் நாட்டுக்கு வந்தது, மகாத்மா காந்தியின் பேச்சைக்கேட்க நாகர்கோவிலுக்கு நடந்து போனது எனப் பழைய விஷயங்களை ஒழுங்குபடுத்திச் சொல்லுவார். இந்தப் பின்னணிதான் என்னை நாட்டார் வழக்காற்றியலில் ஆர்வம் உடையவனாக ஆக்கியிருக்கும் என்று நினைக்கிறேன்.

என் பிஎச்.டி. ஆய்விற்காகப் பேராசிரியர் நா. வானமாமலையைச் சந்தித்தது முக்கிய திருப்பம். என் மூத்த அண்ணனின் ஆசிரியர் என்ற உரிமையில் அவரைப் பார்க்கத் திருநெல்வேலிக்குப் போனேன். அவர் அப்போது நாட்டுப்புற

இயலில் நீ எதாவது சாதிக்க முடியும்; அதற்கு இப்போது (1980) ஆட்களும் இல்லை என்றார். நான் தேர்ந்தெடுத்த தலைப்பைக் குறித்து விவாதித்தார்.

'நாஞ்சில்நாட்டு வில்லுப்பாடல்கள்' என்னும் தலைப்பில் பிஎச்.டிக்குப் பதிவு செய்த பிறகு முழுநேர ஆய்வாளனாகச் சுற்ற ஆரம்பித்தேன். 43 வில்லிசை ஏடுகளைச் சேகரித்தேன். இவற்றில் சிலவற்றுக்கு எழுத்து வடிவமே கிடையாது. ஒலிப்பதிவுப் பெட்டியுடன் வில்லுப்பாட்டு நடக்கும் இடத்துக்குப்போய் விடிய விடிய உட்கார்ந்து பாடல்களைப் பதிவு செய்தேன். இன்னிக்குப் போல டி.வி. கம்யூட்டர்னு அன்னிக்கு எல்லாம் வீட்டில் கிடையாது. திருமணத்துக்குப் போவதும் வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் கோயிலுக்குப்போவதும்தான் மக்களின் முக்கிய பொழுதுபோக்காக இருந்தது. தவறாம கல்யாணத்துக்குப் போகும் வழக்கம் அப்போது இருந்தது. எனக்குச் சிறு வயதிலிருந்தே சினிமா பார்க்கும் வழக்கம் கிடையாது. அதனால் ஊர் சுற்றுவது, ஏடுகள் சேகரிப்பது, தகவலாளிகளைச் சந்திப்பது என்பது பொழுதுபோக்காக மாறியது.

மரபுவழி இலக்கியங்களைக் கவனித்தவர்கள், படிப்பதில் பிரசுரிப்பதில் ஆர்வம் காட்டியவர்கள், நாட்டார் வழக்காறுகளை, கதைப்பாடல்களை எந்த அளவுக்குப் புறக்கணித்தார்கள் என்பதை 80களில் நான் கள ஆய்வு செய்தபோது அறிந்தேன். எனக்குள் ஏற்பட்ட வெறிக்கு அது ஒரு காரணம். இந்தக் கால கட்டத்தில் ஆய்வு மாணவராக இருந்த ராமச்சந்திரனின் நட்பு ஏற்பட்டது.

ராமச்சந்திரன்மூலம் பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரி நாட்டார் வழக்காற்றியல் துறை அறிமுகமும் அருள்தந்தை பிரான்சிஸ் ஜெயபதி அவர்களின் நட்பும் கிடைத்த பிறகு என் ஆய்வு நெறிமுறையில் ஒழுங்கு வந்தது. அருள் தந்தை ஜெயபதி சு.ரா.வைப்போலவே என்னைப் பாதித்தவர். நாட்டார் வழக்காற்றியலின்வழி மனித சமூகத்தைப் புரிந்து கொள்ள வைத்தவரே ஜெயபதி அடிகள்தான் என்று இப்போது நினைக்கிறேன். என்னை ஆராய்ச்சியாளனாக மட்டும் நான் எப்போதும் கருதவில்லை. என்

தகவலாளிகளுடன் கொண்ட சுமுகமான உறவும் இதனால்தான் ஏற்பட்டிருக்க வேண்டும்.

இந்நேரத்தில் சங்கப்பாடல்களில் சிலவற்றை எடுத்துப் 'புதிய தமிழில் பழைய கவிதை' என்ற பெயரில் புதுக்கவிதை வடிவத்தில் கொடுத்தேன். இதன் எளிமைக்கு வரவேற்பு கிடைத்தது.

**நாட்டாரியல் என்பதற்கு உரிய துறைசார் வரையறை என்ன? நாட்டாரியலைப் பிரித்துப்பார்க்கும் அடிப்படை என்ன?**

Folklore என்னும் சொல்லைத் தமிழில் நாட்டுப்புறவியல், நாட்டாரியல், நாட்டார் வழக்காற்றியல் என்று சொல்வார்கள். Folk நாட்டார் என்றும் lore வழக்காறு என்றும் பொருள் கொள்ளலாம். தமிழகத்தில் இந்தத் துறை அறிஞரான பேராசிரியர் தெ. லூர்து உருவாக்கிய நாட்டார் வழக்காற்றியல் என்ற சொல் பொருத்தமாக உள்ளது.

Folklore என்னும் ஆங்கிலோ சாக்ஸன் சொல்லுக்கும் நாட்டார் வழக்காற்றியல் என்பதுதான் நேரடிப்பொருள். 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மேலை நாடுகளில் வரலாறு, சமூகம் போன்ற துறைகளைப்பற்றிய ஆராய்ச்சி வளர்ந்தபோது அந்தத் துறைகளின் பிரிவுகளைக் குறிக்க Popular antiquities, Popular literature, Common mythology போன்ற சொற்களைப் பயன்படுத்தினர். இந்த நிலையில் 1847 அளவில் Folklore என்ற சொல் உருவாக்கப் பட்டது.

முந்தைய கலாச்சாரங்களால் எஞ்சி நிற்கும் வழக்காறுகளையும் ஆரம்பகால வேளாண் தொழிலாளர்களின் மரபுநிலைச் செயல்பாடுகளின் எச்சத்தையும் குறிக்க இது உதவுவதால்தான் இந்த Folklore என்ற சொல் உருவாக்கப்பட்டதற்கு விளக்கம் அளித்தனர்.

நாட்டார் வழக்காறு குறித்த வரையறைகளைத் துல்லியமாகத் தருவது சிரமம்தான். வேண்டுமானால் நாட்டார் வழக்காற்று வகைமைகளை வரிசையாகப் பட்டியலிட்டு விளக்கினால் நாட்டார் வழக்காற்றியலுக்கு ஓரளவு

சரியான விளக்கம் கிடைக்கலாம். இந்த வகைமைகளின் பட்டியல்கூட மேலை நாட்டுக் கொள்கைகளைச் சாராமல் நம்முடைய மரபு சார்ந்து இருந்தால் விளக்கம் எளிதாகவும் தெளிவாகவும் இருக்கும்.

நாகரிக மக்களின் மரபுவழிப் படைப்புகளையும் பழங்குடி மக்களின் மரபுவழிப் படைப்புகளையும் நாட்டார் வழக்காற்றியலில் அடக்குவதைப் பொதுவானதாகக் கொள்ளலாம். எழுத்து வழக்கற்ற வாய்மொழி சார்ந்த பண்பாடுகளின் வெளிப்பாடுகள் எல்லாமே நாட்டார் வழக்காறுகள்தாம். இது வாய்மொழியாகப் பரப்பப்படுவது, மரபு வழியாக வந்துகொண்டிருப்பது, இதன் படைப்பாளி யார் என்றே அறிய முடியாதது, ஒரு வகையில் வாய்ப்பாட்டில் அடக்க முடிவது, திரிபடைவது. பகிர்ந்துகொள்ளப்படுவது எனச் சொல்லிக்கொண்டே போகலாம்.

முக்கியமாக நாட்டார் வழக்காற்றியல் செய்திகளைத் தொகுக்க சூழல் தேவைப்படுகிறது. ஒரு சமூகத்தின் வழக்காற்றை அதன் சூழலில் நிகழும்போது சேகரிப்பது நல்லது. அந்தச் செய்திகளின் அடிப்படையில் எடுக்கும் கருத்தாக்கங்கள் இன்னும் சிறப்பாக இருக்கும். மேலும் சமூகக் குழுக்களின் பல்வேறுபட்ட பண்பாட்டின் வேறுபாடுகளையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும்.

**முறையான தொகுப்பு இல்லாத போலிகளும் உள்ளனவே.**

போலிகள் இருக்கத்தான் செய்கின்றன. இதை ஆங்கிலத்தில் fakelore என்பார்கள். 1950 அளவில் அமெரிக்க ஆய்வாளர்கள் folklore அல்லாத ஆய்வுகளைக் குறிக்க இந்த சொல்லைப் பயன்படுத்தினர். பண்டைய இலக்கியங்கள், புராணங்கள், இதிகாசங்கள் ஆகியவற்றில் உள்ள தகவல்களை வழக்காறுகளாக மாற்றுவதும் கள ஆய்வு செய்யாமலே முந்தைய கள ஆய்வுச் செய்திகளைத் தொகுத்து முடிவுக்கு வருவது எல்லாமே போலிகளே. ஆய்வாளர்கள் மட்டுமல்ல . . . தகவலாளிகளும் போலி வழக்காறுகள் தோன்றக் காரணமாய் உள்ளனர்.

**பிற துறையிலிருந்து நாட்டார் வழக்காற்றியலை எவ்வாறு வேறுபடுத்தலாம் . . ?**

கல்வித்துறை சார்ந்த ஒரு புலம் அதனுடன் தொடர்புடைய இன்னொரு புலத்தை அல்லது வேறு புலங்கைளைச் சார்ந்து இணைந்துதான் செயல்பட முடியும் என்ற நிர்ப்பந்தம் உள்ளது. இது நாட்டார் வழக்காற்றியலுக்கும் பொருந்தும். நாட்டார் வழக்கியல்கூட உலகளாவிய நிலையில் மொழியியல், மானுடவியல், சமூகவியல், உளவியல், வரலாற்றியல் போன்ற பல்வேறு துறைகளுடன் இணைந்துதான் செயல்படுகிறது.

எனவேதான் நாட்டார் வழக்காற்றியல் தனித்துறையாகச் செயல்பட முடியாது என ஆரம்பத்திலிருந்தே சொல்லி வருகிறார்கள். இதைக் கொஞ்சம் ஆழமாகவும் நுட்பமாகவும் பார்க்கிறவர்கள் இதை இலக்கியம், மானுடவியல் ஆகிய இரண்டின் கலப்பாகக் கூறுகின்றனர். நாட்டார் வழக்காற்றியலின் ஒரு கூறு பண்பாட்டு மானுடவியல் என்னும் பழைய கருத்தை மாற்றிப் பண்பாட்டு மானுடவியலின் ஒரு கூறாகவே நாட்டார் வழக்காற்றியலைக் கருதவேண்டும் என்றும் சிலர் கூறுகின்றனர்.

நாட்டார் வழக்காற்றியலின் கருத்தாக்கத்தை முக்கியமாக மானுடவியல் பாதித்துள்ளது. நாட்டார் வழக்காற்றியலில் அழகியல் கூறுகள் கொண்ட நுட்பங்கள் உண்டு. அது இலக்கியம்

சார்ந்தது என்பதைக் கற்பித்தது மானுடவியலே. மேலும் கள ஆய்வு செய்து செய்திகளைச் சேகரித்து வழக்காறுகளை ஒழுங்குபடுத்துவதையும் அவற்றின் சூழலின் அடிப்படையில் தொகுக்கவேண்டும் என்பதையும் நாட்டார் வழக்காற்றியலாளர்களுக்கு மானிடவியலாளர்களே கற்பித்தனர்.

**நாட்டார் கலைகளில் உள்ள முக்கியமான கலைக்கூறு என்ன?**

நாட்டார் நிகழ் கலைகளில் நாடகத்தன்மை கொண்ட வடிவத்தைப் பார்க்கின்றவர்கள் உணர்வார்கள். கோயில் சடங்குக் கூறுகள் கலந்த கலைவடிவத்தில் நாட்டார் கலைகளை உணர்ந்து கொள்ளமுடியும். பெரும்பாலும் நாட்டார் தெய்வக்கோயில் விழாக்களில் சாமியாடுபவர்கள் அக்கோயில் தொடர்பான கதைகளை நிகழ்த்திக்காட்டுபவர்களாகவும் செயல்படுவார்கள்.

இங்கு கலை மாற்றப்பட்டு சடங்காக ஆகிப் பின்பு நிகழ்த்துபவனாக எண்ணச்செய்யும் செயல்பாட்டைக் காண முடியும். கர்நாடகக் கலையான யட்சகான நிகழ்ச்சி ஒன்றில், கீசக வதைக்காட்சியில் பீமன் உண்மையிலேயே கீசகனைக் கொன்றதும் தேவராட்டக்கலைஞன் சுயப்பிரக்ஞையற்று விழுவதும் கற்பனை அல்ல. ஒன்றிலிருந்து வேறு ஒன்றாக மாறும் இந்த நிலையை நாட்டார் கலைஞர்கள் உன்னதமாகக்கொள்வதால்தான் அதைத் தொழிலாக மட்டும் கருதவில்லை.

**தமிழ்நாட்டில் தமிழ்க் கல்விப்புலம் சார்ந்தவர்கள் மட்டுமே நாட்டார் வழக்காற்றியலில் ஆர்வம் காட்டுகிறார்களே . . .**

நாட்டார் வழக்காற்றியலுடன் இலக்கியம் நெருங்கிய தொடர்புகொண்டதன் காரணமாகவே இந்தியாவில் பிற மாநிலங்களிலும் இலக்கியம், மொழியியல் துறை சார்ந்தவர்கள் இத்துறையில் ஆர்வம் காட்டினர். தென்னிந்தியாவைப் பொறுத்த வரை நாட்டார் வழக்காற்றியல் துறையில் அதிக ஆர்வம் காட்டிய கர்நாடக மாநிலப் பல்கலைக்கழகங்களும் ஆய்வு நிறுவனங்களும் இலக்கியச் சார்புடையவையாக இருந்தன.

தமிழகத்திலும் இதேநிலைதான். ஜவஹர்லால் ஹண்ட் என்ற அறிஞர் இந்திய நாட்டார் வழக்காற்றியலின் காலகட்டத்தை மூன்று வகையாகப் பகுத்தார். அதில் கல்விப்புல காலகட்டமும் ஒன்று. தமிழகத்தின் பல்கலைக்கழகங்களில் எம்.பில். பிஎச்.டி பட்டங்களுக்கு நாட்டார் வழக்காற்றியல் செய்திகள் தலைப்பாக அமைய ஆரம்பித்த பின்னர் சேகரிப்புகள் அதிகரித்தன. முறையான நாட்டார் வழக்காற்றியல் அறிவுடன் இந்தக் காரியம் நடந்ததா என்பது ஒருபுறம் இருந்தாலும் பெருமளவிலான வழக்காற்றியல் செய்திகள் சேகரிக்கப்பட்டு பதிவு செய்யப்பட்டுள்ளன என்பது உண்மை.

தமிழகத்தில் தமிழ் இலக்கியம் தொடர்பானவர்கள் மட்டுமே ஆர்வம் காட்டியதற்குக் கல்விப்புலம் சார்ந்த பிற துறையினர்கூட இதில் கவனம் செலுத்தாததும் ஒரு முக்கிய காரணம் என்று கூற முடியும். ஆங்கிலப் பேராசிரியர்கள் தமிழ் இலக்கியத்தைப் பொருட்டாக எடுத்துக்கொள்ளாதது மாதிரியே இந்தத் துறையையும் கண்டுகொள்ளவில்லை.

வரலாற்றுத்துறையுடன் நாட்டார் வழக்காற்றியலுக்குத் தொடர்பிருந்தாலும் அவர்கள் இதைத் தங்களின் துறைக்கு ஆதாரமாக இருக்கும் என்று கனவிலும்கூட நினைக்கவில்லை. தற்போது கல்விப்புலம் சாராத சிலர் நாட்டார் வழக்காற்றியலைக் கவனிக்கத் துவங்கியுள்ளனர்.

**உங்களின் ஆய்வுக்களம் என்ன? எதுகுறித்தெல்லாம் நீங்கள் ஆய்வு செய்திருக்கிறீர்கள் . . ?**

என்னுடைய பிஎச்.டி ஆய்வுக்காக முதலில் நான் சேகரிக்கத் தொடங்கியது நாட்டார் தெய்வங்களைப் பற்றித்தான். ஆனால் முறைப்படி ஆராய்ச்சித் தலைப்பைப் பதிவு செய்தபின் வில்லுப் பாடல்களைக் குறித்து செய்தி சேகரிக்கத் துவங்கினேன். என் ஆய்வுப் பரப்பைத் தாண்டியே செய்தி சேகரித்தேன். கதைப்பாடல்களைத் தொகுப்பது தென்மாவட்ட சமூகத்தின் பின்புலத்துக்கு உதவும் என்பதால் அதில் கவனம் செலுத்தினேன்.

1986இல் கன்னியாகுமரி மாவட்டத்தில் கிராமியக்கலைஞர்கள் முன்னேற்ற சங்கத்தை நிறுவியதும் 1990இல் தோல்பாவைக்கூத்து நிகழ்த்தும் மண்டிகர் சாதிச்சங்கத்தை நிறுவியதும் ஆன என் முயற்சி, நாட்டார் நிகழ்த்துகலைகளைப் பற்றிய செய்தி சேகரிப்பில் திரும்பியது. தமிழ்நாடு அரசு இயலிசை நாடக மன்றத்திற்காக நானும் பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரிப் பேராசிரியர் ராமச்சந்திரனும் தமிழக நாட்டார் கலைகளைப் பற்றிய செய்திகளைச் சேகரிக்கத் தொடங்கியது என் முக்கிய அனுபவம்.

1998இல் அமலதாஸ் என்பவருடன் தமிழக அளவிலான கிராமியக்கலைஞர்கள் மாநாட்டை நடத்துவதற்குத் தமிழகம் முழுக்கக் கிராமியக்கலைஞர்களைச் சந்திக்கச் சென்றேன். இந்த அனுபவமும் செய்தி சேகரிப்பும் எனக்குப் புத்தகங்களில் கிடைக்காதவை. இவைதவிர கன்னியாகுமரி மாவட்ட அளவில் சித்தர்கள், சுதந்திரப் போராட்ட வீரர்கள், ஊர்ப் பெயர்கள் பற்றியும் 'தென்குமரியின் கதை' நூலுக்காகத் தகவல் சேகரிக்கச் சென்றதும் ஒரு அனுபவம்தான்.

**நாட்டார் வழக்காற்றியலுக்கும் செவ்விலக்கியத்துக்கும் உள்ள உறவு குறித்த நிலை என்ன? தமிழில் இது குறித்து ஆய்வு செய்யப்பட்டிருக்கிறதா?**

முந்தைய செவ்விலக்கியப் படைப்பாளிகள் நாட்டார் இலக்கியக்கூறுகளை எளிதாக உள்வாங்கிக்கொண்டு வடிவ மாற்றம் செய்திருக்கின்றனர். இதற்குத் தமிழிலக்கியங்களில் நிறைய உதாரணம் காட்ட முடியும். பெரியாழ்வார் தாலாட்டு வடிவத்தைப் பயன்படுத்தியதையும் பிற்காலத்தில் இது பிள்ளைத்தமிழ் வகையில் தனிப்பருவமாக இடம் பெற்றதையும் குறவஞ்சி, பள்ளு போன்ற சிற்றிலக்கிய வகைகளின் நாட்டார் செல்வாக்கையும் பலரும் ஆராய்ந்திருக்கின்றனர்.

பிற்காலச் சோழர் காலத்துக்கு முன்பு வழங்கிய பழமரபுக் கதைகள் பெரியபுராணத்தில் வருவதைப்போன்று பல உதாரணங்கள் உள்ளன. கூனி மந்தரைக்கு ராமனிடம் ஏற்பட்ட வெறுப்பிற்கான நிகழ்ச்சியைக் கம்பன் பெரியாழ்வாரிடமிருந்தே எடுத்துள்ளான். பெரியாழ்வாருக்கு இது வாய்மொழி மரபிலிருந்து கிடைத்திருக்க வேண்டும். தமிழகத்தின் வாய்மொழிக்கூறுகளில் கதைப்பாடல்களும் பழமரபுக்கதைகளும் பெருமளவில் சேகரிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் நாட்டார் வழக்காற்றிலிருந்து செவ்விலக்கியத்துக்குச் சென்ற வடிவங்கள் பற்றியும் இசைக் கூறுகள் பற்றியும் பெருமளவில் ஆராயப்படவில்லை.

புலவர் குழந்தை சிந்து, கண்ணி போன்ற வடிவங்களைப் பற்றிக் கொஞ்சமாவது சொல்லியிருக்கிறார். என்றாலும் அவர் அந்த வடிவங்களுக்கான உதாரணங்களைச் செவ்விலக்கியங்களிலிருந்தே பெருமளவு எடுத்துக்கொண்டிருக்கிறார். ஒரு வகையில் சொன்னால் ஆரம்பகாலத் தமிழ் இலக்கிய ஆய்வாளர்களும் வாசகர்களும் நாட்டார் வழக்காற்றின் முழுமையான வகைமைகளை அறிந்திருக்கவில்லை.

மிகச்சிறந்த வரலாற்றாசிரியர்கள்கூட தமிழக சமூக வரலாற்றை எழுதியபோது நாட்டார் வழக்காற்றைப் பயன் படுத்தவில்லை. 'மதுரை நாயக்க அரசர்களான திருமலை நாயக்கர், ராணி மங்கம்மாள் ஆகியோரைப்பற்றி வாய்மொழி மரபை

நான் கணக்கில் எடுக்காமலேயே நாயக்க வரலாற்றை எழுதினேன்' என்று அ.கி. பரந்தாமன் ஒரு கட்டுரையில் கூறியிருக்கிறார்.

தென்மாவட்டத்தில் ஒதுங்கிய பிற்காலப் பாண்டிய மன்னர்களைப் பற்றிய வரலாறு முழுமையடையாமல் இருப்பதற்கு 17, 18, 19 ஆம் நூற்றாண்டுக் கதைப்பாடல்களைப் பற்றிய அறிவு வரலாற்றாசிரியர்களுக்கு இல்லாமல் இருந்ததுதான் காரணம். கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார்கூடத் தனது பாண்டியர் வரலாறு நூலில் கதைப்பாடல்களைக் கணக்கில் எடுக்காமல் ஆராய்கிறார்.

ஆரம்பகாலத் தமிழ் அறிஞர்கள் தம் சமகாலத்தில் உள்ள பிற துறைகளையும் மேலைநாட்டுப் புதிய இலக்கியக் கொள்கை களையும் வடிவங்களையும் அறிந்தவர்களாய் இருப்பினும் அதே காலத்தில் மேலைநாடுகளில் வளர்ச்சியடைந்திருந்த நாட்டார் வழக்காற்றியலை அறிய விருப்பப்படவில்லை.

மூன்றாம்தர பழைய எழுத்துகளையும் இலக்கியங்களையும் பதிப்பிக்க எடுத்துக்கொண்ட சிரத்தை, அவற்றை அச்சில் ஏற்றிவிட வேண்டும் என்ற ஆவேசம் எல்லாம் முதல்தர நாட்டார் நிகழ்கலை வடிவங்களைப்பற்றி யோசிக்க இடம் தரவில்லை. தொல்காப்பியர் காலத்திலிருந்து தொடர்ந்து வரும் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் பரவிக்கிடக்கும் நாட்டார் வழக்காறுகள் குறிப்பாக மொழி சார்பானவை குறித்த செய்திகள் இன்னும் முழுமையாக ஆராயப்படவில்லை.

தமிழ்ப் புராண இலக்கிய மரபு எது என்பது இன்னும் வரையறுக்கப்படவில்லை. உலகம் உருவானது குறித்த — உலக அழிவு குறித்த பழமரபுத் தமிழ்ப் புராணக் கதைகள் தேடப்பட வில்லை என்று டாக்டர் தே. லூர்து கூறும் கருத்தை இங்கு யோசிக்க வேண்டும். தென் மாவட்டங்களில் கிடைத்துள்ள கதைப்பாடல்கள் சிலவற்றில் உலகத்தோற்றம் குறித்தும் உலக அழிவு குறித்தும் செய்திகள் உள்ளன. இவை அண்மையில் கிடைத்தவை ஆகும்.

**தமிழகத்தில் நாட்டாரியல் ஆய்வின் தொடக்கம் எது? முன்னோடி ஆய்வுகள் எவை? பொதுவாகத் தென்மாவட்டங்களில் இருந்து ஆய்வாளர்கள் அதிக**

**அளவில் இருப்பதற்கு தனியான காரணங்கள் உண்டா . . ?**

1835இல் வெளிவந்த Deutsche Mythologic என்னும் ஜெர்மன் நூலை அதிகாரப்பூர்வமான நாட்டார் வழக்காற்றியல் நூலாகக் கொள்கின்றனர். தமிழ்நாட்டில் மதம் பரப்புவதற்காக வந்த ஜெர்மன் இறைப்பணியாளர் பார்த்தலோமியன் சீகன்பால்கு என்பவர் தமிழக நாட்டார் தெய்வங்களைப்பற்றிய செய்திகளை 1713இல் தொகுத்திருக்கிறார்.

பெர்சிவல் பாதிரியார் 1842இல் தமிழகப் பழமொழிகளைச் சேகரித்திருக்கிறார். சார்லஸ் இ. கோவார் தென்னிந்திய நாட்டார் பாடல்களை 1871இல் வெளியிட்டார். 1869இல் நல்லதங்காள் கதை, மதுரை வீரன் கதைப்பாடல்கள் வெளிவந்தன. இதன் பிறகு ஹென்றி ஒயிட் ஹெட், எல்மோர் போன்றோர் நாட்டார் தெய்வங்களைக் குறித்து செய்திகளைச் சேகரித்தனர்.

இவர்கள் தாங்கள் தொகுத்த செய்திகளின் அடிப்படையில் தங்களின் பார்வையில் தமிழ்ச் சமூகத்தைப் பார்த்திருக்கின்றனர். இவர்களைப்போன்று மேலை நாட்டினர் சிலர் தொடர்ந்து இத்துறையில் ஈடுபட்டதற்கு தமிழ்க் கலாச்சாரத்தின்மீது கொண்ட அபிமானம் என்றோ ஆராய்ச்சி மனோபாவம் என்றோ முழுவதுமாகக் கூறிவிடமுடியாது.

தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக நாட்டார் வழக்காற்றியல் துறைத்தலைவர் டாக்டர் ஆறு. இராமநாதன், "இவர்களின் நோக்கங்கள் மதங்களைப் பரப்புதல் மற்றும் இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சியை நிலைப்படுத்திக்கொள்ளல் என்பதே; இதற்கு இவர்கள் மக்கள் மொழியையும் மக்களையும் நன்கு புரிந்துகொள்ள வேண்டியிருந்தது" என்கிறார். இவர் சொல்வதை நாம் ஏற்றுக்கொள்ளலாம்.

தென்மாவட்டங்களில் ஆரம்பகாலத்திலிருந்தே நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர்கள் உருவானதற்குத் தனியான காரணங்கள் எவையும் இருப்பதாகத் தெரியவில்லை. தென் மாவட்டங்களைச் சார்ந்த மொழியியல்துறை ஆய்வாளர்களான டாக்டர் வ.அய். சுப்பிரமணியம்,

அகஸ்தியலிங்கம், முத்துச் சண்முகம் ஆகியோர் நாட்டார் வழக்காறு, மானிடவியல் ஆகியவற்றில் ஆர்வம் காட்டினர்.

கே.பி.எஸ். ஹமீது என்பவர் Folklore of Tamilnadu என்ற தலைப்பில் (1961) ஆய்வு செய்திருக்கிறார். இவரது வழிகாட்டி வ.அய். சுப்பிரமணியம். இவர்கள் டாக்டர் தெ. லூர்து, ஏ.என். பெருமாள் ஆகிய ஆய்வாளர்களுக்கு ஆதர்சமாய் இருந்துள்ளார்கள். நாட்டார் வழக்காற்றியலுக்குப் பேரா. நா. வானமாமலையின் பங்களிப்பு அபரிமிதமானது. இவர்களில் தூத்துக்குடி ஆ. சிவசுப்பிரமணியம், என். ராமச்சந்திரன், தனஞ்செயன் எனச் சிலரைக் குறிப்பிடலாம். 1986இல் பாளையங் கோட்டை தூயசவேரியார் கல்லூரியில் நாட்டார் வழக்காற்றியல் தோன்றிய பிறகு அருள் தந்தை ஜெயபதி இதில் பொறுப்பேற்ற சமயம் ஆய்வின் வேகம் துரிதமாகியிருக்கிறது. தென்மாவட்ட ஆய்வாளர்களுக்கு இம்மையம் தேவையான உதவிகளைச் செய்து வருகிறது.

**நாட்டாரியல் ஆய்வுகள் தமிழகத்தில் தொடக்கத்தில் தொய்வுற்றிருந்ததற்குத் தனியான காரணங்கள் ஏதேனும் உண்டா?**

தமிழ்மொழி பழமையானது, கவிதை பாரம்பரியம் உடையது, இலக்கியச் செறிவுடையது என்னும் உயர்வு மனப்பான்மை நாட்டார் வழக்காற்றியலைத் தொகுக்கவும் ஆய்வு செய்யவும் ஆரம்பகாலத்தில் தடையாக இருந்தது.

தமிழர்களுக்குப் பொதுவாக ஒரு எண்ணம் உண்டு. தமிழ் மொழி சிறந்தது, உயர்ந்தது, செவ்விலக்கிய பாரம்பரியம் உள்ளது, உலகின் முதன் மொழி தமிழ். கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தது என்று தொடக்ககாலத் தமிழாசிரியர்கள் தென்னிய மொழிகளில் தமிழுக்கு முக்கியத்துவம் கொடுத்தே பேசினர். இந்த விஷயம் தமிழர்களுக்கு உயர்வு மனப்பான்மையை உருவாக்கியிருக்கிறது.

இந்த எண்ணம் வாய்மொழி மரபைப் புறக்கணித்தது. அது மட்டுமல்லாமல் செவ்விலக்கியங்களின் தொன்மையைச் சந்தேகித்தவர்களும் நீதி இலக்கியங்களில் கவித்துவம் குறைவு என்றவர்களும்கூட இக்காலத்தில்

ஒதுக்கப்பட்டிருக்கின்றனர். இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இந்த இரண்டு நிகழ்வுகளும் ஒரே போக்கில் நடந்திருக்கின்றன.

கல்விப்புலத்திற்கு வெளியே நா. முத்துசாமி போன்ற படைப்பாளிகள் நிகழ் கலைகளை உயர்த்தப் பாடுபட்டதும் நா. வானமாமலை போன்ற ஆய்வாளர்கள் வாய்மொழி மரபின் செவ்விலக்கியத்தை எழுத ஆரம்பித்ததும் பெரிய மாற்றத்தைக் கொண்டு வந்திருக்கிறது.

தமிழகத்தில் பல்கலைக்கழகங்களும் கல்லூரிகளும் பெருக ஆரம்பித்த பின்னர் எம்.ஃபில், பிஎச்.டி ஆய்வுப்பட்டங்கள் எளிதாகப் பெறலாம் என்ற சூழல் உருவானது; தமிழ்த்துறை சட்டதிட்டங்களை வெகுவாகத் தளர்த்தியது எல்லாம் ஆய்வு மாணவர்கள் நாட்டார் வழக்காற்றியல் துறையில் அதிக அளவில் ஈடுபடக் காரணமானது. இதில் ஒரு நன்மையும் ஏற்பட்டது.

குறிப்பிட்ட வட்டாரத்தைச் சார்ந்த மாணவர்கள் அந்த வட்டாரத்தின் நாட்டார் வழக்காறுகளைத் தொகுத்துக் கொடுத்தனர். வாய்மொழிக் கதைப்பாடல்களும் ஏட்டில் இருந்த கதைப்பாடல்களும் தட்டச்சுப்பிரதிகளாகவும் அச்சுப் புத்தகங்களாகவும் மாறின. இது நாட்டார் வழக்காற்றுக்குக் கிடைத்த லாபம் என்றுதான் கூறவேண்டும்.

**நாட்டார் கலைகளை கலை அனுபவத்திற்காக ரசிக்க முடியுமா?**

இலக்கியத்தையும் சாஸ்திரிய சங்கீதத்தை விமர்சிக்கும் அனுபவத்தையும் போன்றதுதான் இதுவும். கர்நாடக இசை, நாடக, இலக்கிய ஆய்வாளர்கள் எல்லோருமே ரசனையாளர்கள் என்று கூறிவிட முடியாது. இவர்களில் தொழிலுக்காகவும் பட்டத்திற்காகவும் ஆராய்ச்சி செய்பவர்கள் உண்டு. இதைப் போலத்தான் நாட்டார் கலை ஆய்வும்.

தஞ்சைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் ஒருவர் பொய்க்கால் குதிரை ஆட்டத்தைக் கற்று ஆடியிருக்கிறார். கரகாட்டத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்யப்போன பேராசிரியர் அந்தக் கலையைப் படித்து கரகாட்டக்

கலைஞனாகிவிட்டார். டாக்டர் மு. ராமசாமி ஆராய்ச்சியாளர் என்றாலும் அவர் தெருக்கூத்துக் கலைஞரும் கூட. இப்படி நிறைய உதாரணம் சொல்லலாம்.

பொதுவாக நாட்டார் நிகழ்கலைகள் வட்டாரத் தொடர்புடையவை. குறிப்பிட்ட வட்டாரத்தைச் சார்ந்தவன்தான் அந்த வட்டாரக்கலையை அனுபவிக்க முடியும். முக்கியமாக அந்தப் பண்பாட்டுடன் தன்னை இணைத்துக்கொண்டால் மட்டுமே, அதற்குத்தகுந்த மனம் இருந்தால் மட்டுமே இது சாத்தியம்.

தன்னைக் குறிப்பிட்ட பண்பாட்டிலிருந்து பிரித்துக் காட்டுவதோ அல்லது அந்தப் பண்பாட்டிலிருந்து தன்னை உயர்ந்த ஸ்தானத்தில் இருத்திக்கொள்ளுவதோ உள்ள ஆணவப்போக்கு மூளையில் வியாபித்திருந்தால் ஒன்றும் செய்ய முடியாது. இன்னொரு விஷயம். இந்த நிகழ்த்துகலைகள்கூட ஒவ்வொரு முறையும் நுட்பமான மாற்றங்களுடனும் நிகழ்த்தப்படுகின்றன.

சாஸ்திரியக் கலைஞர்கள் எல்லோருமே தரமானவர்கள் அல்லர். அவர்களில் பலர் பணம், புகழ் என்பதற்காக வந்தவர்கள். நாட்டார் கலைஞர்களில் வயிற்றுப்பிழைப்புக்காக வேறு தொழில் தெரியாமையால் வந்தவர்கள் அதிகம். இவர்களில் உன்னதமான கலைஞர்கள் இனம் காணப்பட்டுள்ளனர். நா. முத்துசாமியின் 'அன்று பூட்டிய வண்டி' புத்தகத்தைப் படித்தவருக்கு இந்த உன்னதம் தெரியும்.

**தமிழக அரசின் விருது பெற்ற தென்குமரி புத்தகம் எழுத வேண்டிய சூழல் எப்படி ஏற்பட்டது . . ? உங்கள் நூலுக்கு முன்னரும் குமரி மாவட்டம் குறித்து ஏராளமான புத்தகங்கள் வந்துள்ளனவே . . ?**

கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள நடுத்தர வயதைத் தாண்டியவர்களிடம் நீங்கள் பேசினால் கன்னியாகுமரி மாவட்டம் தமிழ்த்தாயின் வளர்ப்புக்குழந்தை, சவலைக் குழந்தை என்ற முனங்கலைக் கேட்கலாம். தமிழர்களால் மலையாளிகள் என்றும் மலையாளிகளால் தமிழ் அண்ணாச்சிகள் என்றும் பரிகசிக்கப்படும் குரலைக் கேட்டுக் கேட்டு இந்த மாவட்ட மக்கள் பழக்கப்பட்டுவிட்டனர். இத்தனைக்கும் திருவனந்தபுரத்துக்காரர்கள்

நாகர்கோவில் காய்கறிச் சந்தையையும் கோட்டாறு அரிசிக்கடைகளையும் எதிர்பார்த்துதான் சாப்பாட்டு மேஜையில் உட்காருகிறார்கள்.

கன்னியாகுமரி மாவட்டம் மிதமான சூடும் மிதமான குளிரும் உள்ள காலநிலை கொண்டது. தோட்டப்பயிர்கள் நிறைந்தது. மூன்றில் ஒரு பங்கு மலைக்காடுகளையும் சமூகக்காடுகளையும் கொண்டது. கோயம்புத்தூருக்கு அடுத்தபடியாகப் படித்தவர்கள் நிறைந்த மாவட்டம். பிரிட்டிஷ் அரசுக்குக் கீழடங்கிய இந்திய சமஸ்தானங்களில் திருவிதாங்கூருக்குத் தனியிடம் உண்டு.

சாதியக் காழ்ப்பும் கொடுமையும் எந்த அளவுக்கு வேரூன்றி இருந்ததோ அந்த அளவுக்கு அதைத் தூக்கி எறிவதிலும் முன்னணியில் நின்ற சமஸ்தானம் இது. அடிமை முறை ஒழிப்பு, தேவதாசி ஒழிப்பு, ஆலய நுழைவு போன்ற சமூக விடுதலையை ஆரவாரமின்றி நடைமுறைப்படுத்திய இடம் இது. கன்னியாகுமரி மாவட்டம் மற்ற மாவட்டங்களைப்போல் அல்ல. இந்த மாவட்டத்துக்கு அல்லல் மிகுந்த வாழ்க்கையும் உண்டு; அதன் வரலாறும் உண்டு.

வரலாற்றுப் பாரம்பரியம் மிக்க இந்த மாவட்டத்தைப் பற்றி முழுமையான வரலாற்றை எழுத வேண்டும் என்ற முயற்சியை ஆரம்பகால ஆசிரியர்கள் யாரும் மேற்கொள்ளவில்லை. டாக்டர் கே.கே. பிள்ளை, டாக்டர் எஸ். பத்மனாபன், ஜாய் ஞானதாசன், சிவ. விவேகானந்தன் உட்பட சிலர் நூல்கள் எழுதியிருக்கிறார்கள்.

கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகளில் பெரும்பாலானவை அச்சில் வந்துவிட்டன. கிறிஸ்துவப் பணியாளர்கள் இந்த மாவட்ட மக்கள் குறித்தும் நிறையவே எழுதியிருக்காங்க. ஆனால் 2000 ஆண்டுகள் வரலாறுடைய இந்த மாவட்டத்தின் வரலாற்றை ஒட்டுமொத்தப் பார்வையில் சாதாரண வாசகன் புரிந்துகொள்ளும்படியான நூல் வரவில்லையே என்ற வருத்தம் என் மனதில் நெடுநாட்களாக ஓடிக்கொண்டிருந்தது.

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு நாகர்கோவிலில் நடந்த ஒரு கருத்தரங்கில் தொல்பொருள்துறை இயக்குநராக இருந்த நடன காசிநாதன் இந்த மாவட்ட வரலாற்றை யாராவது முழுமையாக எழுத வேண்டும் என்று

வேண்டுகோள் விடுத்தபோது என் நண்பர் பூதை சொ. அண்ணாமலை, அவரது 'கைவிளக்கு' மாத இதழில் என்னை எழுதச்சொன்னார். அப்போது நான் 12 மாதங்களாகத் தொடர்ந்து எழுதியதை நாகர்கோவில் சுபா பதிப்பகம் சிறு புத்தகமாக வெளியிட்டது.

இந்தப் புத்தகத்தின் மறுபதிப்பு வெளியிட வேண்டும் என பதிப்பகத்தார் கேட்டபோது நான் விரும்பவில்லை. நான் எழுதிய இந்தச் சிறு வெளியீட்டைப் படித்த எழுத்தாளர் ஜெயமோகன் 'உங்கள் துறையான நாட்டார் வழக்கியல் சார்ந்து குமரிமாவட்ட வரலாற்றைப் பதிவு செய்யுங்கள்' என்று கேட்டுக்கொண்டார். அவருடன் இது குறித்துப் பலமுறை விவாதித்தேன். அதன்பின் மாவட்டம் தொடர்பான புத்தகங்களையும் கல்வெட்டுகளையும் தொடர்ந்து படித்தேன்.

மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளில் நாட்டுப்புற வழக்காறுகளைச் சேகரிக்கச்சென்றபோது கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் கிறிஸ்துவப் பாதிரியார்களும் கோவில் ஆவணங்களும் சொல்லாத வரலாற்றையும் தகவல்களையும் பலரிடமும் பேசியபோது அறிந்துகொள்ள முடிந்தது. எனவே குமரி மாவட்ட வரலாற்றுக்கு நாட்டார் வழக்காறுகளைப் பயன்படுத்த வேண்டும் என்ற முடிவுடன் மேலும் செய்திகளைச் சேகரித்தேன்.

பிரிட்டிஷ் காலத்தில் எழுதிய ஆரம்பகால வரலாற்றை முழுவதும் நம்பி அதை அப்படியே மொழிமாற்றம் செய்வது எவ்வளவு பெரிய தவறு என்பதை நடை முறையில் உணர்ந்தேன். குமரி மாவட்டத்தில் புதுக்கடை ஊர் அருகே உதச்சிக்கோட்டை உண்டு என்று முந்தைய ஸ்டேட் மேனுவல் தகவலை நம்பி பிற்காலத்திலும் எழுதியவர்களைப் படித்துவிட்டு நேரடியாக அந்த இடத்துக்குச் சென்றபோது அந்தக் கோட்டை தரைமட்டமாகி எந்த அடையாளமும் இல்லாமல் இருப்பதைப் பார்த்த பிறகு எல்லா இடங்களுக்கும் நேரடியாகச்சென்று தகவல்களைச் சேகரிக்க ஆரம்பித்தேன்.

நாட்டுப்புற வழக்காறுகளைச் சேகரிக்கச் சென்றபோது சுதந்திரப் போராட்ட வீரர்கள், அரசியல்வாதிகள், சந்நியாசிகள் ஆகியோரையும் சந்தித்தேன். சுதந்திரப் போராட்ட வீரர்கள் சிலரது கதை நெஞ்சைப் பதற வைத்தது.

சிலரது கதை சிரிப்பை வரவழைத்தது. கன்னியாகுமரி மாவட்டத்தைத் தமிழகத்துடன் இணைக்க வேண்டும் என்ற போராட்டம் நடைபெற்ற காலகட்டம். ஒரு ஊரில் ஒரு மனிதர் ஆட்டுக்குத் தழை பறிக்க மரத்தில் ஏறியுள்ளார். அப்போது திருவாங்கூர் போலீசார் வந்த ஜீப்பின் முன்பு இவர் ஒடித்த மரக்கிளை விழுந்துள்ளது. திருவாங்கூர் அரசுக்கு எதிராக மரக்கிளையை இவர் ஒடித்துப்போட்டார் என்று ஜீப்பில் இருந்த போலீசார் நினைத்து அவரைப் பிடித்து திருவனந்தபுரம் ஜெயிலில் போட்டுள்ளனர். இவர் ஆட்டுக்குத் தழை பறிக்க மரத்தில் ஏறியதாகக் கூறியதை போலீசார் நம்பவில்லை. சில நாட்களுக்குப்பின் விடுதலையான அவர் மொழிப்போர்த் தியாகி என்ற பட்டத்துடன் வெளியே வந்தார். அதுபோல் ஆடு மேய்த்துக்கொண்டிருந்த இருவரை ஜெயிலில் போட, அவர்களும் மொழிப்போர் தியாகியாகியுள்ளனர். இப்படி சுவையான தகவல்களும் கிடைத்தன.

குமரி மாவட்டத்தில் 68 கி.மீ. நீளமுள்ள கடற்கரைக்கு நடந்தும் பைக்கிலும் சென்று சேகரித்த தகவல்கள், பழையாறு தொடக்கத்திலிருந்து அது கடலில் சேரும் இடம் வரை பஸ்சிலும் பைக்கிலும் தனியாகச் சேகரித்த தகவல்கள் ஏராளம். எழுத்தாளர் ஜெயமோகன், நண்பர் தமிழினி வசந்தகுமார் போன்றோருடன் வட்டக்கோட்டை, உதயகிரிக்கோட்டை, சிதறால் எனப் பல இடங்களுக்கும் புகைப்படம் எடுக்கச் சென்றேன். சேகரிக்கச் சேகரிக்க மலைபோல் தகவல்கள் கிடைத்தன. அவற்றைத் தொகுத்துப் புத்தகமாக்கத் திணறித்தான் போனேன்.

வட்டார ரீதியான பண்பாட்டு வரலாற்றை நாட்டார் வழக்காற்றியலின் அடிப்படையில் எழுதுவது என்ற என் முயற்சி தான் தென்குமரியின் கதை. முடிந்த அளவு அதில் அனைத்துத் தகவல்களையும் தந்திருக்கிறேன் என நம்புகிறேன். 'தென்குமரியின் கதை' புத்தகம் எனக்கு மிகுந்த மனநிறைவைத் தந்தது.

**தென்குமரியின் கதையில் சாதி தொடர்பான முரண்பாடுகள் குறைவாக உள்ளன. குறிப்பாக மண்டைக்காடு கலவரம் பற்றி நீங்கள் அதிகம் பேசவில்லையே . . ?**

நாட்டுப்புறக் கலைகளில் வண்ணான் வண்ணாத்தி சண்டை, கல்யாண காமிக், கோனார் நாடகம் போன்ற துணைக்கலைகள் உண்டு. இந்தக் கலைகள் தங்கள் ஜாதியையும் பிற ஜாதியையும் கிண்டல் செய்து நிகழ்த்துவன. இந்தக் கிண்டல்கூட விரசமாக இருக்கும். இவற்றைப் பார்க்கின்ற பார்வையாளர்கள் இந்தக் கிண்டல்களை சாதாரணமாகவே எடுத்துக்கொண்டனர். இதெல்லாம் எழுபதின் நிகழ்வுகள். தென்மாவட்டங்களில் நிகழ்ந்த இந்தக் கலைகளின் செய்திகளைக்கூட இப்போது அச்சில் கொண்டுவர முடியாது. தனிப்பட்ட உரையாடல்களில் கூடச் சொல்லத்தயங்கிய தகவலாளிகள் உள்ளனர்.

இதுபோன்ற நிலைதான் ஆராய்ச்சியாளனுக்கும். நான் மண்டைக்காடு கலவரம் தொடர்பாகச் சேகரித்த செய்திகளை முழுவதுமாக எழுத முடியாத சூழ்நிலை இன்று ஆகிவிட்டது. எதையுமே சாதி, மதம் கண் கொண்டு பார்க்கின்ற காலகட்டம் இது. தென்குமரி நூலில் ஒரு வரியில் சொன்ன சில செய்திகளுக்காக என் சாதியைத் திட்டி, என்னைப் பழித்து நான் சார்ந்த மதத்தை விமர்சித்து வெளியிடப்பட்ட சிறு துண்டுப்பிரசுரங்கள் வெளிவந்தது உங்களுக்கே தெரியும். இந்த நிலையில் நான் எப்படி இந்தக் கலவரங்களைப்பற்றி எழுதமுடியும்? தென்குமரி கதை நூலில் சில விஷயங்களை மறைத்ததில் எனக்கும் வருத்தம்தான். . !

**தோல்பாவைக் கூத்துக் கலைஞர்கள் தொடர்பாக ஆய்வு செய்தீர்களே . . . அது பற்றிக் கூறுங்களேன்.**

நான் முதன் முதலில் என் கிராமத்தில் 1956இல் பார்த்த தோல்பாவைக்கூத்து நிகழ்ச்சியை நினைவில் வைத்து மறுபடியும் 1972இல் பார்த்தேன். பின் 1978இல் பார்வையாளனாக அல்லாமல் செய்தி சேகரிப்பாளனாகப் பார்த்தேன். அப்போது இது பற்றி தினத்தந்தி பத்திரிகையில் நான் எழுதிய கட்டுரைக்குப் பலன் கிடைத்தது. தொடர்ந்து செய்திகளைச் சேகரித்தேன்.

பல்கலைக்கழக மானியம் கிடைத்தபோது (1998) தோல் பாவைக்கூத்து தொடர்பான செய்திகளைச் சேகரிக்க தென் மாவட்டங்கள் முழுதும் பயணம் செய்தேன். அவ்வாறு சேகரித்த செய்திகளை தோல்பாவைக்கூத்து, ராமாயணத் தோல்பாவைக்கூத்து, தென்னிந்தியத் தோல்பாவைக்கூத்து,

நல்லதங்காள் கதை என்னும் நான்கு புத்தகங்களாக வெளியிட்டேன். சிறு இதழ்களிலும் குமுதம் போன்ற பெரிய இதழ்களிலும் அது பற்றி எழுதினேன். இந்தக் கலை பற்றிச் செய்தி சேகரித்தபோது ஏற்பட்ட அனுபவத்தைச் 'சுண்ணாம்பு கேட்ட இசக்கி' நூலில் விரிவாகச் சொல்லியிருக்கிறேன்.

ஆரம்ப காலத்தில் தோல்பாவைக்கூத்து நடத்திய மண்டிகர் ஜாதியினரிடம் ஆய்வாளனாக மட்டும்தான் பேசினேன். தொடர்ந்து நான் அந்த மராட்டிய சாதியினருடன் பழகிய போது உறவில் நெருக்கம் ஏற்பட்டது. சென்னையில் 1998இல் கிராமியக்கலைஞர்கள் மாநாடு நடந்தபோது தோல்பாவைக்கூத்துக் கலைஞர்களின் இழிநிலை பற்றி நான் விரிவாகப் பேசினேன். சென்னை ஜெர்மன் ஹாலில் நடந்த அந்தக்கூட்டத்தில் மண்டிகர் சாதியினர் சிலர் தங்கள் கலைக்கென்று தனிச்சங்கம் அமைக்கத் தீர்மானித்தார்கள்.

இதன்பிறகு தோல்பாவைக்கூத்துக் கலைஞர்கள் சங்கம் அமைப்பது தொடர்பான கூட்டம் என் வீட்டில் நடந்தது. இதே சங்கம் பின்னர் மராட்டிய மண்டிகர், கணிகர் சங்கமாக மாறியது. இதற்கு நானே ஆலோசகராக இருந்தேன். இதற்குப்பிறகு எனக்கு இக்கலை பற்றியும் சாதி பற்றியும் நிறையவே தகவல்கள் கிடைத்தன.

**கணிகர் சாதிப்பெண்களைப் பற்றிய செய்திகளைத் திரித்து வெளியிட்டதுபற்றி நீங்கள் ஒரு பத்திரிகையில் வேகமாகச் சாடியிருந்தீர்களே . . ?**

ஆமாம். இந்தச் சாதி ஆண், பெண் உறவு வரன்முறை கடந்து இருக்கும். இவர்களில் சிலர் வயிற்றுப் பிழைப்புக்காக மேடையில் ஆடினார்கள். இதை ஒரு பெண் ஆய்வாளர் தோல்பாவைக் கலைஞர்கள் விபச்சாரம் செய்கிறார்கள் என்று எழுதியபோது எதிர்வினையாற்றினேன். கிடைத்த தகவல்களை எல்லாம் அப்படியே எழுதுவது ஆய்வு நெறிமுறை என்று நான் நினைக்கவில்லை.

தென் மாவட்டங்களில் மிகவும் ஒடுக்கப்பட்ட சாதியைப் பற்றிய செய்திகளை நான் திரட்டச் சென்றபோது ஒரு சாதியினரிடம் தன் மனைவியைச் சொந்த சாதிக்காரனிடம் அடகு வைக்கும் பழக்கம் இருப்பதை அறிந்தேன். இது தொடர்பாக நான் சேகரித்த செய்திகளை எந்த இடத்திலும் எழுதவில்லை.

இப்போது அந்த வழக்கம் இல்லை. இது போலவே மண்டிகர் சாதியினரின் தகாத உறவு, மண உறவு குறித்த பழைய தகவல்களை அச்சில் கொண்டுவரவில்லை.

இதுபோன்ற செய்தி வெளிநாட்டுக்காரனுக்குக் கிடைத்தால் அவன் இதை மானுடவியல் தகவல்வழி பொருத்தி மொத்த இந்திய சமூகத்திற்கு எதிரான ஒரு கருத்தாக்கத்தை உருவாக்கி அதை மேலைநாடுகளில் நம்பும்படிச் செய்துவிடுவான்.

**தோல்பாவைக்கூத்து நிகழ்ச்சி பதிவு செய்யப்போனபோது பார்த்த, கேட்ட சுவாரஸ்யமான செய்தி ஒன்றைச் சொல்லுங்களேன்?**

கோபாலராவ் நிகழ்ச்சி நடத்திய அனுபவத்தை அவரது மகன் சுப்பையாராவ் சொல்லியிருக்கிறார்.

திருநெல்வேலி மாவட்டம் தென்பகுதியில் ஒரு கிராமம். கோபாலராவ் அங்கு நிகழ்ச்சி நடத்தப்போனார். ஊர்த்தலைவர் சாமித்தேவர் ஊரில் இல்லை; வேறு யாரோ சிபாரிசு செய்ய கூத்து நடத்தும் இடத்தைத் தெரிவு செய்துவிட்டார். சாமித்தேவரின் ஆட்கள் கூத்து நடத்தும்போது சிறு சிறு தொந்தரவு கொடுத்தனர். கோபால ராவுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை.

ஒருநாள் கூத்து பார்க்க சாமித்தேவர் வந்தார். அன்று ராமன் மாயமானைத் தேடும் நிகழ்ச்சி. ராமன் மானைத்தேடிக் களைத்து விட்டார். மானைக் கொன்று தோலையாவது சீதையிடம் கொடுக்கலாம் என்று தனக்குத்தானே சொல்லுகிறான். அப்போது ஈனஸ்வரத்தில் முனகல் கேட்கிறது. இராமனின் காலடியில் சப்தம்; இராமன் குனிந்து பார்க்கிறான். ஒரு தேரை. அது சொல்கிறது 'ராமா, உன் கோதண்டத்தை என் முதுகில் ஊன்றிவிட்டாயே!' என்று. இராமன் வில்லை எடுத்துவிட்டு, 'தேரையே! ராமா என நீ என்னை அழைத்துச் சொல்லலாமே; வில்லை எடுத்து விடுவேனே!' என்றான். அதற்கு தேரை, 'வேறு யாராவது வில்லை ஊன்றினால் ராமா என அழைக்கலாம். இராமனே என்னைத் துன்புறுத்தினால் யாரை அழைப்பேன் பகவானே!' என்கிறது.

இந்தச் சமயத்தில் உச்சிக்குடும்பன் என்ற தமாஷ் பாத்திரம் திரையில் தோன்றி, "ஆமா நமக்குக் கஷ்டம் வந்தா பகவானைக் கூப்பிடலாம். பகவானே கஷ்டப்படுத்தினா? யாருட்ட சொல்றது? பெரியவர் சாமித்தேவர நம்பித்தான் இந்த ஊருக்கு வந்தோம். ராமா . . . சாமி . . . தேவரே . . . ன்னு கூப்பிடுறோம். எங்க கஷ்டத்த அவர்தான் புரிஞ்சுக்கணும்" என்று சொல்லிவிட்டுச் சென்றது.

இந்த உரையாடல் பலனைக் கொடுத்தது. அதன்பிறகு கோபாலராவுக்கு சாமித்தேவரின் ஆட்களால் தொந்தரவு இல்லை.

ஒருமுறை ஒரு ஊரில் இராமனைக் காட்டுக்கு அனுப்பும் நிகழ்ச்சி நடந்துகொண்டிருந்தது. அன்று நல்ல வசூல். பரமசிவ ராவ் என்ற தோல்பாவைக்கூத்துக் கலைஞர் நிகழ்ச்சியை நடத்தினார். அவரது மனைவி கோமதிபாய் ஆர்மோனியம் வாசித்தார். முந்தையநாள் நடந்த நிகழ்ச்சியின்போது நல்ல வசூல். மனைவி கோமதிபாய் பரமசிவராவுக்குச் சரியாகப் பணம் கொடுக்கவில்லை எனத் தெரிகிறது. இந்தக் கோபம் நிகழ்ச்சியில் வெளிப்பட்டது.

பரமசிவராவ், தசரதன் கைகேயியைத் திட்டுவதுபோல் கோமதிபாயைத் திட்டுகிறார். நிகழ்ச்சியைப் பார்ப்பவர்களுக்கு தசரதன் கைகேயியைத் திட்டுவது போலிருக்கும். "பாவி கைகேயி, கணவனை மதிக்காத நீ இரந்து குடிக்கப்போகிறாய். உனக்குக் கணவனால்தான் சமூகத்தில் மதிப்பு. நீ தெருத்தெருவாய் பிச்சை எடுக்கப் போகிறாய்!" எனப் பரமசிவராவ் கைகேயியைத் திட்டுவதுபோல் மனைவியைத் திட்ட கோமதிபாய் வேதனையால் ஆர்மோனியப் பெட்டியை வைத்துவிட்டு வெளிநடப்புச் செய்கிறார். நான் சமாதானம் செய்து கோமதிபாயிடம் பேசி நிகழ்ச்சியைத் தொடரச் செய்தேன். இப்படி நிறைய சொல்ல முடியும்.

இப்படியாகத்தான் நாட்டார் கலைஞர்கள் இருந்தார்கள். நாகஸ்வரக் கலைஞர் ராஜரத்தினம்பிள்ளையிடம் இருந்த கலை ஆணவம் நாட்டார் கலைஞர்களிடம் கிடையாது. இவர்கள் வயிற்றுக்காகக் கலை நடத்தினால் எப்படித் திமிர் வரும்?

**மக்களின் வாழ்க்கைமுறை மாறி வருகிறது. தோல்பாவைக் கூத்து இன்று இல்லை என்ற நிலையே காணப்படுகிறது. அம்மன் கோயில் விழாக்களில் மட்டும் இன்று வில்லுப்பாட்டு நிகழ்ச்சி நடக்கிறது. நாட்டார் வழக்காற்றியல் கூறுகள் காலப்போக்கில் அழிந்து விடும்போல் உள்ளதே . . . இவற்றின் எதிர்காலம் எப்படி இருக்கும் என்று நினைக்கிறீர்கள் . . ?**

மாற்றம் என்பது தவிர்க்க முடியாதது. அதோடு மாற்றம் மட்டும்தான் நிலையானது. ஒன்று அழிகிறது என்றால் இன்னொன்று உருவாகிறது என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். இன்று ஏற்றம் இறைக்கும் தொழில் எங்காவது நடக்கிறதா என்ன? அது தொடர்பான பாடல்களும் அழிந்து விட்டன. காட்டில் மரம் அறுக்கும்போது பாடுவார்கள். இன்று எங்கே கையால் மரத்தை அறுக்கிறார்கள் . . ? எல்லாமே இயந்திரம் தான். பலகைகளில் டிசைன்கூட மிஷின்தான் போடுகிறது. சில வகைமைகள் மட்டும் புதிய வடிவம் பெற்று வாழ்ந்து கொண்டிருக்கும்.

நாட்டார் நிகழ்கலையின் கூறுகள் இன்றைய நவீன நாடக மரபில் வாழ்வது மாதிரி நாட்டார் வழக்காறுகள் மட்டுமல்ல. நெறிப்படுத்தப்பட்ட நம் பண்பாடுகள்கூட சமூக மாற்றத்தால் மாறத்தான் செய்கின்றன. நாட்டார் வழக்காற்றின் பாதிப்பு பண்பாட்டில் பதிவு செய்துவிட்டு மாறும் என்பது அதன் சிறப்பு. தமிழகத்தின் நாட்டார் நிகழ்த்துக்கலைகள் எல்லாம் தொடர்ந்து வாழும் என்று கூறமுடியாது.

நாட்டார் கோவில்கள் மேல்நிலையாக்கம் பெறுகின்றன. இதனால் கோயில் விழா நிகழ்ச்சிகளில் பட்டிமன்றம், சினிமா ஆடல் பாடல் நிகழ்ச்சிகள் இடம்பெறுகின்றன. நாட்டார் கலைஞர் கலைநிகழ்ச்சிகளுக்குப் பெறும் கூலி பிற கலைஞர்கள் பெறும் கூலியைவிட மிக மிகக்குறைவு. இதனால் பரம்பரையாய் இந்தக் கலையை வைத்துப் பிழைப்பு நடத்தியவர்கள் வேறு தொழிலுக்குப் போய்விட்டர்கள். அது மட்டுமல்லாமல் தமிழகத்தின் ஜாதிமுரண் கலை நிகழ்ச்சிகளின் யதார்த்தத்தைப் பாதித்துவிட்டது.

கலைநிகழ்ச்சிகளுக்குரிய ஒப்பனைச் சாதனங்களையும் பிற உபகரணங்களையும் கோவிலைச் சார்ந்தோர் கொடுத்த காலம் போய்விட்டது.

இவற்றைக் கலைஞர்களே விலைக்கு வாங்க வேண்டிய சூழல். இது நாட்டார் கலைஞர்களைச் சோர்வுறச் செய்துவிட்டது. நானும் பாளையங்கோட்டை தூயசவேரியார் கல்லூரி நாட்டார் வழக்காற்றியல்துறைப் பேராசிரியர் ராமச்சந்திரனும் தமிழ்நாடு இயலிசை நாடக மன்றத்துக்காக தமிழக நாட்டார் நிகழ்த்துக் கலைகளைப்பற்றிய செய்திகளைச் சேகரித்து ஒரு களஞ்சியம் வெளியிட்டுள்ளோம். இந்தக் கலைக்களஞ்சியத்துக்குத் தகவல் சேகரிக்கத் தமிழ்நாடு முழுக்க அலைந்தோம். தகவல் சேகரித்தோம். தொகுத்தோம். 1997இல் தகவல் சேகரித்து 2000 ஆண்டில் களஞ்சியம் வெளியான போது வாழ்ந்த கலைகளில் சில மறைந்துவிட்டன. தமிழகத்தில் 50களில் 170 அளவில் இருந்த கலைகள் இன்று 90 அளவில் ஆகிவிட்டன. 2050இல் 15 முதல் 20 கலைகள் மட்டும்தான் இருக்கும் என்று தோன்றுகிறது.

**நாட்டார் கலைகளுக்கு அரசு உதவுகிறதா . . ?**

தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம். தென்மண்டல பண்பாட்டு மையம் மற்றும் தனிப்பட்ட தொண்டு நிறுவனங்களும் உதவுகின்றன. இந்த அமைப்புகளின் உதவியால்தான் நாட்டார் கலைகள் கொஞ்சமாவது உயிர்வாழ்கின்றன.

**கன்னியாகுமரி மாவட்டம் கேரளாவுடன் இணைந்திருந்தால் இன்னும் நன்மைகள் கிடைத்திருக்கும் என்று சிலர் கூறுகிறார்களே . . . குமரி மாவட்டம் தமிழகத்துடன் இணைந்ததால் நன்மை அதிகமா? தீமை அதிகமா?**

நன்மைதான் அதிகம். இன்று கன்னியாகுமரி மாவட்டத்தில் முப்பதுக்குமேல் கல்லூரிகள் இன்ஜினீயரிங், அலோபதி, ஹோமியோபதி, நேச்சுரோபதி, பிசியோதெரபி, சித்தா மருத்துவக் கல்லூரிகள் உள்ளன. ஏராளமான தொழில் வாய்ப்புகள், பஸ் போக்குவரத்து எல்லாமே வளர்ந்திருக்கிறது. உலகின் அனைத்துப் பகுதிகளிலும் கன்னியாகுமரி மாவட்டத்து மக்கள் பணியாற்றுகின்றனர். தமிழகத்துடன் இணைந்ததால் தமிழ் மொழிப் பண்பாட்டுடனான உறவு வலுப்பெற்றது. மாவட்டத்தில் அரசின் பல்வேறு வளர்ச்சிப் பணிகள் நடந்துள்ளன.

கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள தொழிற்சாலைகளில் சில கேரளத்தைச் சேர்ந்த முதலாளிகளுக்குரியவை. அங்கே பிரச்சனை என்பதால் இங்கே வந்திருக்கிறார்கள். கேரளாவுடன் கன்னியாகுமரி இருந்திருந்தால் ரஜினிகாந்தின் கட் அவுட்டுக்குப் பாலபிஷேகம் நடத்துவது போன்ற மோசமான சினிமா ரசனையிலிருந்து விடுபட்டிருந்திருக்கலாம். மற்றபடி தமிழ்நாட்டுடன் கன்னியாகுமரி இணைந்திருப்பதால் கல்வி, தொழில், சுற்றுலா என அனைத்துத் துறைகளிலும் பலமடங்கு முன்னேறி உள்ளோம்.

**நாட்டார் வழக்காற்றியலில் இன்னும் தொடாத பகுதிகள் உண்டா?**

நாட்டார் வழக்காற்று வகைமைகளில் சுவரோவியங்கள், வாய்மொழி மருத்துவம், மரபு சார்ந்த தொழில் சார்ந்த தொழில் நுட்பங்கள் (உழவு, மீன்பிடித்தல், சுடுமண் பொருட்கள்) குறித்த தகவல்கள் இன்னும் முழுமையான அளவுக்குச் சேகரிக்கப்படவில்லை. வட்டார ரீதியான சுவரோவியங்களின் பண்பாடு 200 ஆண்டுகள் வரை எட்டும். பண்பாட்டு வரலாற்றில் தொடாத பகுதி இது. நாட்டார் இசை குறித்தும் பரவலாக ஆராயப்படவில்லை.

**பொதுவாக உங்களைப்போன்ற ஆராய்ச்சியாளர்களைச் சமூகம் கண்டுகொள்வதில்லை; அவர்கள் பணிபுரியும் இடங்களிலும் மரியாதை கிடையாது என்பது சரியா?**

என் அனுபவத்தில் இது சரிதான். நான் வேலை பார்த்த கல்லூரியில் கடைசிவரை என் உழைப்பும் ஆய்வுப்பணியும் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படவில்லை. கல்லூரி முடிந்ததும்

கையில் டேப் ரெக்கார்டருடன் வில்லுப்பாட்டு, தோல்பாவைக் கூத்து நடக்கும் இடத்துக்குச் செல்வேன். நள்ளிரவில் தகவல்களைச் சேகரித்துவிட்டு அதிகாலை வீட்டுக்குச் சென்று குளித்துத் தயாராகி மீண்டும் கல்லூரிக்குச் சென்றுவிடுவேன். தகவல் சேகரிப்பது, பதிவு செய்வது, புத்தகம் வெளியிடுவது எனப் பரபரப்பாக இருந்துள்ளேன். ஆனால் கல்லூரித் தரப்பில் இதற்குப் பெரிய அளவில் ஆதரவு ஒன்றும் கிடைக்கவில்லை.

நாட்டுப்புறவியல் என்ற என் ஆய்வையும் படிப்பையும் சக ஆசிரியர்கள் ஏளனத்துடன் பார்த்தார்கள். சில நேரங்களில் அவமானப்படுத்தவும் செய்தார்கள். அந்தக் காலத்தில் இது மனதுக்கு ஆதங்கத்தைத் தந்தது. இப்போது இதை நான் சாதாரணமாகவே எடுத்துக்கொள்கிறேன். சுந்தர ராமசாமியைக் கடைசியாகச் சந்தித்தபோது (2005), "நம்முடைய மொழி கலாச்சாரம் குறித்த தீவிர உழைப்பின் பெரும்பாலான பகுதி நிறுவனங்களுக்கு அப்பால்தான் செயல்பட்டிருக்கின்றன. உண்மையைத் தேடும் முயற்சியும் நிறுவனங்களுக்கு அப்பால்தான் நடந்திருக்கின்றன. பலருக்கு அவர்களின் இறுதிக்காலம்வரை அங்கீகாரம் கிடைக்காமல் போயிருக்கிறது. காலம்தான் அங்கீகாரம்; நிறுவனமோ தனிமனிதரோ அல்ல!" என்றார். அவரது கருத்துதான் எனது கருத்தும்.

**தற்போது கல்வெட்டியலில் அதிக ஆர்வம் காட்டி வருகிறீர்கள் போல . . ?**

ஆமாம். தமிழனின் அடையாளமே சிற்பங்கள்தாம். அதன் பிறகுதான் மற்றதெல்லாம். தமிழ்நாட்டிலுள்ள கோவில்களுக்குச்சென்று பாருங்கள். சிலைகள் ஒவ்வொன்றும் கதை சொல்லும். வடிவமைப்பின் நேர்த்தியை சிற்பங்களில்தான் காணமுடியும். ஆய்வாளர் செந்தீ நடராஜனும் நானும் சேர்ந்து `தமிழக சிற்பக் கலைக்களஞ்சியம்' தயாராக்கி வருகிறோம். இதற்காகத் தமிழ்நாட்டிலுள்ள அனைத்துக் கோயில்களிலும் சென்று சிற்பங்களை ஆய்வு செய்து புகைப்படங்கள் எடுத்துள்ளோம். ஆயிரத்துக்கு மேற்பட்ட பக்கங்களுடன் தமிழினி வெளியீடாக இந்தக் கலைக்களஞ்சியம் வெளிவர உள்ளது.

**உங்கள் நீண்டகால உழைப்பின் பலனாக எதை நீங்கள் கருதுகிறீர்கள்?**

வட்டார ரீதியிலான வழக்காறுகளைத் தொகுத்துள்ளேன். இது மக்களைப் புரிந்துகொள்ள உதவும். முரண்பாடுகளைத் தவிர்க்க உதவும். இதைக் கடந்த முப்பது ஆண்டுகளாகத் தொகுத்துப் பதிவு செய்துள்ளேன். ஆய்வாளர் செந்தீ நடராஜன் உதவியுடன் பல கல்வெட்டுகளை அடையாளம் கண்டுள்ளேன். சுவரோவியங்கள், பழைய சிற்பங்கள் என இப்படி அடையாளம் கண்டவை பல. அழிந்து போகும் நிலையிலுள்ள ஓலைச்சுவடிகளைத் தொகுத்து அவற்றை

நூல் வடிவில் கொண்டு வந்துள்ளேன். சிலவற்றைத் தமிழக அரசுக்குத் தந்துள்ளேன்.

நான் தொகுத்து வெளியிட்டுள்ள பல தகவல்களின் அடிப்படையில் தென்மாவட்டப் பண்பாட்டு வரலாற்றை எழுதமுடியும். எதிர்கால ஆய்வாளர்கள் யாராவது செய்வார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது.

**குமுதம் தீராநதி, பெப்ரவரி 2009**

**சந்திப்பு: திருவட்டாறு சிந்துகுமார்**

# பண்பாட்டு வரலாறு திரும்ப எழுதப்பட வேண்டும்

அ.கா.பெருமாள், நாட்டார் வழக்காற்றியல் அறிஞர். 66 புத்தகங்கள் இவரது பங்களிப்பு. அம்மானை வடிவத்தில் உள்ள நாட்டார் பாடல்களை உரைநடையில் எழுதியுள்ளார். வில்லுப்பாட்டு, தோல்பாவைக் கூத்து குறித்த இவர் ஆய்வுகள் முக்கியமானவை. கல்வெட்டுகள், இலக்கியங்கள் அடிப்படையில் இவர் குமரி மாவட்டத்தின் 2000 ஆண்டு வரலாற்றை எழுதியுள்ளார். ஆரல்வாய்மொழி அறிஞர் அண்ணா கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர். நாகர்கோவிலில் வசிக்கிறார். தற்போது கேரளத்தில் கண்ணகி வழிபாடு குறித்த ஆய்வில் ஈடுபட்டுள்ளார்.

**உங்கள் பின்னணி பற்றிச் சொல்லுங்கள் . . .**

நாகர்கோவிலுக்கு அருகில் உள்ள பறக்கை என் சொந்த ஊர். இளங்கலைப் படிப்பு முடியும் வரை அங்குதான் இருந்தேன். பள்ளிப் படிப்பு, பறக்கையிலும் சுசீந்திரத்திலும் படித்தேன்.

**நாட்டார் வழக்காற்றியலில் ஆர்வம் வந்தது எப்படி?**

எங்கள் வீட்டுக்கு எதிரே திருவாவடுதுறை ஆதினம் மடம் இருக்கிறது. அங்கு தஞ்சையைச் சார்ந்த முருகலிங்கத் தம்பிரான் என்ற துறவி இருந்தார். பன்னிரெண்டு வயதிலிருந்த அந்த மடத்தில் அமர்ந்து பாடப் புத்தகங்களைப் படிக்கும் பழக்கம் எனக்கு இருந்தது. அந்தத் தம்பிரானைத் தேடி வயதானவர்கள் வருவார்கள். அவர்கள் சொல்லும் தகவல்களைக் கேட்பேன். நாட்டார் வழக்காற்றியல் துறைக்கு வர ஒரு விதத்தில் இதுதான் காரணம் என நினைக்கிறேன்.

**உங்கள் முதல் ஆய்வு எது?**

1972இல் சுந்தர ராமசாமியைச் சந்தித்தேன். அவர் ஒரு நல்ல நூலகம் வைத்திருந்தார். அடியார்க்கு நல்லார் உரையை நான் முதன்முதலில் பார்த்தது அங்குதான். அவர் வீட்டில் படித்த பல புத்தகங்கள் ஆய்வுக்கான முனைப்பைத் தந்தன. முதன் முதலில் முனைவர் பட்ட ஆய்வுக்காகத் 'தமிழ் இலக்கியங்களின் காலம் பற்றி வையாபுரியாரின் கணிப்பு' என்ற தலைப்பில் ஆய்வுசெய்தேன்.

ஆனால் 'வையாபுரிப்பிள்ளை ஒரு தமிழ்த் துரோகி' என ஆய்வு நிராகரிக்கப்பட்டது. அதைப் புத்தகமாக வெளியிட்டேன். திமுக தலைவர் கருணாநிதி, குங்குமம் பத்திரிகையில், "ஒரு தமிழ்த் துரோகி குறித்து ஒரு தமிழ்ப் பேராசிரியரே எழுதுகிறாரே" என விமர்சித்திருந்தார்.

**நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுக்கு எப்போது வந்தீர்கள்?**

முதன்முதலில் நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுக் கட்டுரைகளை வெங்கட் சாமிநாதனை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த யாத்ரா இதழில்தான் எழுதினேன். சாமிநாதனின் வேண்டுதலால் இசக்கி அம்மன் வழிபாடு, கணியான் கூத்து பற்றி எழுதினேன்.

அதற்கெல்லாம் நல்ல வரவேற்பு இருந்தது. பேராசிரியர் நா. வானமாமலை பாராட்டினார். அதே காலகட்டத்தில் (1987) குமரி மாவட்ட வில்லிசைப் பாடல்கள் குறித்து ஆய்வுசெய்தேன். நாட்டார் வழக்காற்றியல் துறையில் எனது முதல் ஆய்வு அது.

**இந்த ஆய்வு எந்த விதத்தில் அவசியமானது?**

இந்தியச் சுதந்திரப் போராட்ட வரலாறு விரிவாக எழுதப்பட்டுள்ளது. ஆனால் சுதந்திரப் போராட்டம் குறித்த சாமானியனின் மனநிலை இதுவரை பதிவுசெய்யப்படவில்லை. மாறாக நாட்டுப்புறப் பாட்டுகள் இதைப் பதிவுசெய்திருக்கின்றன. 'ஐ பை அரைக்கா பக்கா நெய், வெள்ளக்காரன் கப்பலிலே தீயைக் கொளுத்தி வை' என்று ஒரு நாட்டுப்புறப் பாடல் உண்டு.

வ.உ. சிதம்பரம்பிள்ளை சுதேசிக் கப்பல் விட்டார். இதைத் தொடர்ந்து அந்தக் காலகட்டத்தில் சாமானிய மக்களிடம் உருவான ஆங்கில ஆட்சிக்கு எதிரான மனநிலையை இந்தப் பாடல் சித்திரிக்கிறது. கட்டபொம்மன் கதைப்பாடலிலும் மருது சகோரதர்கள் கதைப்பாடலிலும் இதை நீங்கள் பார்க்கலாம்.

**வழக்காற்றியலின் வகைகள் என்னென்ன?**

நாட்டார் வழக்காற்றியல் என்பது ஒரு சமுத்திரம். நாட்டார் ஓவியங்கள் இருக்கின்றன. இதை வைத்து 17, 18ஆம் நூற்றாண்டில் ஒரு கலாச்சாரத்தை நீங்கள் உருவாக்க முடியும். ஒரு பெண் அப்போது எப்படி ஆடை அணிந்திருந்தாள், சுற்றுப்புறம் எப்படி இருந்தது என்பதை இந்த ஓவியங்கள் மூலம் நாம் அறியலாம். நம் ஊர்களில் பெரும்பாலான அம்மன் கோவில்களில் சுவரின் மேல்பகுதியில் நாட்டார் ஓவியங்கள் இருந்தன. ஆனால் அதைப் பற்றிய விழிப்புணர்வு இல்லாமல் அவற்றை இடித்து கான்கிரீட் கட்டிடங்களைக் கட்டிவிட்டனர்.

**நாட்டார் கலைகளின் அழிவைத் தடுக்க என்ன செய்ய வேண்டும்?**

சில தனித்துவமான கலைகள், தனிப்பட்ட ஜாதியினர் மட்டுமே ஆடக்கூடியவை. கணியான் ஆட்டம் ஆடுபவர்களின் குழந்தைகள் படித்து வேறு வேலைக்குச் செல்ல ஆரம்பித்துவிட்டனர். அவர்களின் சமூக வளர்ச்சி இது. இதைத் தடுக்க முடியாது.

ஆனால் இன்றைக்குப் பறையாட்டத்தை அந்தச் சமூகத்தினர் தங்களின் அடையாளமாக மாற்றியிருக்கிறார்கள். பல்வேறு நிகழ்வுகளில் இன்றைக்கும் பறையாட்டம் நிகழ்த்தப்படுகிறது. இதுபோல ஒவ்வொரு சமூகமும் கலைகளைத் தங்கள் அடையாளமாக முன்னிறுத்துவதன் மூலம் இதைத் தடுக்கலாம்.

**நாட்டார் வழக்காற்றியல் செய்திகள் எந்தமாதிரியான பண்பாட்டு வரலாற்றைப் பதிவுசெய்கின்றன?**

சாமானிய மனித இயல்புகள் எல்லாம் நாட்டார் வழக்காற்றியலில் பதிவுசெய்யப்பட்டுள்ளன. மானுடவியலில் Taboo (விலக்கு) எனச் சொல்வோம். போன தலைமுறை வரை மாமியார் – மருமகன் நேர் எதிராகச் சந்தித்துக்கொள்வதோ, சகஜமாகப் பேசிக்கொள்வதோ கிடையாது.

ஆனால் அவர்களுக்கு இடையே ரகசியமான சில உறவு இருந்ததைக் கூறும் நாட்டார் பாடல்கள் உள்ளன. ஆக 'விலக்கு' எங்கு இருக்கிறதோ அங்கு ஒரு மரபு தவறிய உறவு இருந்துள்ளது என இதன் மூலம் புரிந்துகொள்ளலாம். ஆனால் இதைத் தவறு எனப் பதிவுசெய்யவில்லை. வழக்காறுகள் இயல்பென்றே சொல்கின்றன. இதற்கான சான்றைக் கொலைச்சிந்துகளில் பார்க்கலாம். ஆனால் இம்மாதிரியான வாழ்வியல் ஒரு கல்வெட்டிலும் பதிவுசெய்யப்படவில்லை.

**கல்வெட்டு அடிப்படையிலான வரலாற்றுக்கு நம்பகத்தன்மை இல்லை என்கிறீர்களா?**

அது முழுமையான வரலாறு இல்லை என்கிறேன். சொல்லப் போனால் மொத்த இந்தியாவில் கிடைத்த கல்வெட்டுகளில் மூன்றில் ஒரு பங்கு இன்னும் வெளியிடப்படவில்லை. கிடைத்த கல்வெட்டுகளின் அடிப்படையில்தான் வரலாறு எழுதப்பட்டுள்ளது. 1950களுக்குப் பிறகு வரலாற்றுத் துறையில் குறிப்பிடத் தகுந்த ஆய்வுகள் வரவில்லை.

**நாட்டார் வழக்காற்றியலை அடிப்படையாகக் கொண்டு வரலாற்றைத் திரும்ப எழுத வேண்டுமா?**

வரலாறு மீட்டுருவாக்கக் கோட்பாட்டின்படி (Historical Reconstruction Theory) நாட்டார் வழக்காற்றியலை அடிப்படையாகக் கொண்டு தமிழகத்தின் பண்பாட்டு வரலாறு திரும்ப எழுதப்பட வேண்டும். அப்படி எழுதப்படும் பட்சத்தில் ஏற்கனவே உள்ள தமிழகப் பண்பாட்டு வரலாற்றின் முகம் மாறும். சில விஷயங்கள் இன்னும் அழுத்தமும் தெளிவும் பெறும்.

**என்ன மாதிரி விஷயங்கள்?**

உதாரணமாக ரஜினிகாந்துக்கு ஏன் பாலபிஷேகம் பண்ணுகிறோம்? குஷ்புவுக்கு ஏன் கோயில் கட்டுகிறோம்? இதற்கெல்லாம் காரணத்தைப் பண்பாட்டு வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்வதன் மூலம் அறிய முடியும். கதாநாயக வழிபாடு நம்மிடம் ஆதி காலத்திலிருந்தே இருக்கிறது. கட்டபொம்மனையும் தேசிங்கு ராஜாவையும் கதைப்பாடல்கள் வழியாகக் கொண்டாடியதில் இதைப் பார்க்க முடியும்.

**கோவில் வரலாறுகளைத் தொகுத்திருக்கிறீர்கள். அதற்கு என்ன தேவை இருப்பதாக நினைக்கிறீர்கள்?**

கோவில்களைப் பற்றிச் சொல்லப்பட்ட புத்தகங்கள் பெரும்பாலும் தொன்மக் கதைகளை அடிப்படையாகக் கொண்டவை. இதை வைத்து ஜோதிடர்களும் குருக்களும் பணம் பறிக்கும் வேலைதான் செய்துகொண்டிருக்கின்றனர்.

கோவிலுக்கு எதிராகப் புத்தகங்கள் வெளிவந்துள்ளன. ஒரு கோவிலில் கலாச்சாரத்தை முன்னிறுத்தும் பல அம்சங்கள் இருக்கின்றன. இதை அடிப்படையாகக் கொண்டு புத்தகம் எழுத வேண்டும் என நினைத்தேன். ஒரு சிற்பத்தில் ஒரு புராண அல்லது சமூகக் கதை இருக்கிறது.

**தி இந்து, 19, ஜூலை 2014**

**சந்திப்பு: மண்குதிரை**



நாட்டார் வழக்காறுகளைத் தொகுத்து அவற்றில் ஏற்படும் மாற்றங்களைச் சூழலின் பின்னணியில் வைத்துப் புரிந்துகொள்ள வகை செய்வது இந்நூலின் சிறப்பு. இந்நூலினுள் அனுபவம், ஆய்வு, சந்திப்பு என்னும் மூன்று தலைப்புகளிலும் நாட்டார் வழக்காற்றுச் செய்திகளே முனைப்புடன் பதிவாகியுள்ளன. கடந்த 35 ஆண்டுகளாக இத்துறையில் தொடர்ந்து செயலாற்றிவருகிற அ.கா. பெருமாள் பல்வேறு இதழ்களில் எழுதியவற்றின் தொகுப்பு இந்நூல். கதைசொல்லிகளுக்குரிய நடையில் அறியப்படாத செய்திகளைக் கூறுவது இதன் சிறப்பு.

